# பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

## நூல் தொகுப்பு :

தொகுதி 20





டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''அரசாங்கத்தின் வேலை அரசாள்வதுதான், சட்டம் ஒழுங்கைக் காப்பதுதான் என்ற பழைய கருத்தாக்கம் ஒழிந்து, மக்களின் பொருளியல், பண்பாட்டியல் நல்வாழ்வில் ஆட்சிக்குள்ள பொறுப்பை ஒப்புக்கொள்ளும் புதிய லட்சியம் பிறந்துள்ளது. இந்தியாவில் தொழிலாளர் நலம் என்பது முக்கியமாக மாகாண அதிகாரத்துக்குட்பட்டதே. மத்தியில் இருக்கும் எங்களைப் பொறுத்தவரை, முக்கியமாக தொழிலாளர் நலச் சட்டங்களை ஒரே சீராக்குவதும், இந்தியாவுக்கு நடைமுறைப் பொருத்தமுள்ள சர்வதேசத் தொழிலாளர் நல அலுவலகத்தின் ஒப் பந்தங்களை கடைப்பிடிப்பதுமே இதற்குமுன் எங்கள் பொறுப்பாக இருந்து வந்தது. நம் சட்டங்கள் அனைத்தளாவிய தன்மை கொண்டிருந்த போதிலும் பெரும்பாலும் பணி நிலைமைகள் மற்றும் தொழில் உறவுகளுக்கு அப்பால் செல்வதில்லை. அந்த அளவுக்கு ஊதியம், தொழிலாளர் நலம் போன்ற செய்திகளில் கவனம் செலுத்துவதில்லை...

தொழிலாளர் நலத்துறை பெரும்பாலும் மாகாணம் சம்பந்தப் பட்டது என்றாலும், இதுவிஷயத்தில் சில குறிப்பிட்ட அம்சங்களை மத்திய அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வருவதற்கு இந்த அதிகாரிகளின் பணி பெரிதும் உதவும் என்று நம்பப்படுகிறது. அது மட்டுமன்று, அரசாங்கக் கொள்கையின் பிரதானக் கோட்பாடு ஒன்றை அதாவது முதலாளி, தொழிலாளி, அரசாங்கம் ஆகியோரிடையான முத்தரப்பு ஒத்துழைப்பை மேம்படுத்துவதற்கும் இவர்களது பணிதுணைபுரியும். நமது முதல் முத்தரப்பு மாநாட்டை கடந்த ஆகஸ்டு மாதம் நடத்தினோம். இந்த மாநாட்டின் நிரந்தரக்குழு டிசம்பர் மாதம் கூடும்; இத்தகைய கூட்டங் கள் எதிர்காலத்தில் அடிக்கடி நடைபெறும் என்றும், நாடு முழுவதும் நன்கு ஒருங்கிணைந்த முன்னேற்றமடைந்த ஒரு தொழிலாளர் நலக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கு இது வழிவகை செய்யும் என்றும் நம்புகிறோம்.''

*- டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்*

தொழிலாளர்களின் பொருளாதார நிலைமையை
மேம்படுத்தும் நடவடிக்கைகள்

This Volume XX in Tamil forms the third part of the English Edition Volume 10 Part III of Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1991.

முதற் பதிப்பு : நவம்பர் 2000
சக ஆண்டு, ஐப்பசி



விலை : ரூ. 40/-
நூலகப் பதிப்பு: ரூ. 115

**வெளியீட்டாளர் :**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

# ஆலோசனைக்குழு

திருமதி மேனகா காந்தி
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சு -
இணை அமைச்சர் (தனிப் பொறுப்பு)
இந்திய அரசு

டாக்டர் பிந்தேஸ்வர் பாதக், பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

கிரிஷன்லால்
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :
டாக்டர் எஸ். பெருமாள், எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

*திரு. வஸந்த் மூன்*
*மும்பை*

தமிழ் நூல் பதிப்பாளர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

மொழிபெயர்ப்பாளர்கள் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. கே. நீலகண்டன்*
*திரு. டி.எஸ். இரவீந்திரதாஸ்*
*திரு. ஏ.எஸ். மணி*

ஒப்புநோக்கியோர் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*டாக்டர் எஸ். பெருமாள்*

பிழைதிருத்த உதவி:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. கே. நீலகண்டன்*

## அணிந்துரை

மனிதர்கள் தமது ஆதிக்க பலத்தை நிலைநாட்டுவதற்கு வன்முறையை மேற்கொள்ள நேரிடுகின்றது. தமது பலத்தால் தங்களை எதிர்ப்பவர்களை வெற்றி கொண்டு ஆதிக்கத்தை நிலைநாட்டுகின்றனர். இதன் விளைவாகச் சமூகத்தில் அமைதி யின்மை ஏற்படுகின்றது. இதனாலேயே மக்கள் பலவகைப் பிரிவினராகப் பிரிந்து எண்ணற்ற சாதியினராயினர். மனிதர் கள் சிலபோது தமது அறிவுபலத்தாலும், செல்வ வளத் தாலும், அதிகார பலத்தாலும் தமது செல்வாக்கை நிலைநாட்ட முயல் கின்றனர். இதனால் சமூகத்தில் ஏழை, பணக்காரன், வசதிமிக்கவர், வசதியற்றவர், தூய்மையானவர், தூய்மை யற்றவர், அழகானவர்கள், விகாரமானவர்கள், பண்பட்ட வர்கள், பண்படாதவர்கள், உயர் சாதியினர், தாழ்ந்த சாதி யினர் என்னும் ஏற்றத்தாழ்வுகள் மலிந்தன மக்களிடையே இத்தகைய வேறுபாடுகளால் இடைவெளி உள்ளவரையில் சமூக அமைதி என்பது ஏற்பட முடியாது.

இன்றளவும் இந்திய மக்கள் நால்வகை சாதியினராக பிரிந்துள்ளனர். இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி வருண முறையின் கட்டுக்கோப்பு நெகிழ்ந்துள்ள போதிலும், வேறுபாடுகள் முழுமையாக உடைத்தெறியப்படவில்லை. ஜனநாயக நெறிகளில் நம்பிக்கையுள்ளோர் இந்த சாதி முறையை நீக்கப் பெரிதும் பாடுபட வேண்டும்.

டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம், படிப்போரைச் சிந்திக்க வைத்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் புதியதொரு சமுதாயம் அமைவதற்கு உதவக் கூடியதாகும்.

நல்வாழ்த்துக்கள்!

**மேனகா காந்தி**
(திருமதி மேனகா காந்தி)
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு
அமைச்சக இணை அமைச்சர்
(தனிப் பொறுப்பு)

புதுடில்லி

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு வெளியிட்டுள்ள டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை பத்தாவது தொகுதியின் முதல் பகுதியும், மூன்றாவது பகுதியும் தமிழில் பதினெட்டு, இருபது, இருபத்தொன்றாவது தொகுதிகளாக வெளிவருகின்றன. டாக்டர் அம்பேத்கர் அவர்கள் 1942-இல் வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக நியமனம் பெற்று, தொழிலாளர் நலத்துறையின் பொறுப் பேற்றுப் பேசிய உரைகளின் விவாதங்களின்போது அளித்த வினா-விடைகளும் இந்தத் தொகுதிகளில் இடம் பெற்றுள்ளன.

தொழிலாளர் நலன்களுக்காகவும், வசதிகளுக்காகவும் டாக்டர் அம்பேத்கர் வகுத்தளித்த சட்டங்களும் அவற்றை நிறைவேற்றுவதற்காக நடத்திய மாநாடுகளும் இன்றளவும் நின்று பயன்தரக் கூடியவையாக உள்ளன. பொருளாதார ஜனநாயகமும், அரசியல் ஜனநாயகமும் உயிரோட்ட முள்ளதாக விளங்க வேண்டுமானால் சமூக ஜனநாயகமும் அவற்றின் ஒரு அங்கமாக இருக்க வேண்டுமென்பதை டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளதை இந்தத் தொகுதிகளில் காணலாம். இந்தக் கண்ணோட்டத்தில் அவர் வகுத்தளித்த திட்டங்கள் இந்திய நாட்டுத் தொழிலாளர் வாழ்வில் அமைதியானதொரு மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன.

டாக்டர் அம்பேத்கரின் சீரிய சிந்தனைகளும், தீர்க்கதரிசன மான திட்டங்களும் மக்களைச் சென்றடைவதற்கு அவற்றைத் தமிழ் உட்பட இந்திய மொழிகளில் மொழி பெயர்த்தளிக்கும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசும், நூல் வெளியீட்டுத் திட்டத்தை நிறைவேற்றி வரும் சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகத்தின் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் நன்றிக்குரியவர்கள்.

முன் தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதிகளை யும் மிகுந்த பொறுப்புணர்வுடன் மொழி பெயர்த்துள்ள மொழிபெயர்ப்பாளர்கள் மற்றும் ஒப்புநோக்குவோர், சரிபார்ப்போர் ஆகியோர் பாராட்டுக்குரியவர்களாவர்.

**எஸ். பெருமாள்**
தமிழ் நூல் பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

# 1

## *அண்மைக்காலத்தில் தொழில் நிறுவனங்களில் நடைபெற்ற தொழிலாளர் வேலைநிறுத்தங்கள்

16. திரு.கே.சி.நியோகி: (அ) அண்மை வாரங்களில் இரும்பு - உருக்கு, நிலக்கரி, துணி போன்ற முக்கியத்தொழில் நிறுவனங்களில் தொழிலாளர் வேலைநிறுத்தங்கள் நடைபெற்றுள்ளனவா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஆ) ஆம் என்றால் இந்த வேலை நிறுத்தங்களின் முதன்மைக் கூறுகளை எடுத்தியம்புகிற வகையிலும் ஒவ்வோரிடத்தும் வேலை நிறுத்த அறிவிப்புக்கு வழிவகுத்த சிக்கல்கள், வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டவர்களின் எண்ணிக்கை, வேலைநிறுத்தம் நடைபெற்ற கால அளவு ஆகிய விவரங்களைத் தருகிற வகையிலும் மாண்புமிகு உறுப்பினர் முழுமையானதோர் அறிக்கை அளித்திடுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (அ) கடந்த ஐந்து வார காலத்தில் குறிப்பிட்ட சில முக்கியத் தொழில் நிறுவனங்கள் குறிப்பிட்ட காலம் வேலை செய்யவில்லை என்பது மெய்தான். அவற்றைப் பெயரிட்டுச் சொல்வதோ குறிப்பாகத் தனித்துக் காட்டு வதோ பொது நலனுக்கு உகந்ததன்று.

(ஆ) போர் தொடர்பான முக்கியபணிகளில் ஈடுபட்டுள்ள தொழில் நிறுவனங்களைப் பொறுத்தவரை இங்கு வேண்டப்படும் முழுத்தகவலையும் தருவது பொதுநலனுக்கு உகந்ததன்று.

2. பல இடங்களில் வேலைநிறுத்தத்துக்கும் பொருளாதாரக் குறைகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லையெனத் தெரிகிறது. ஏனைய சிலவற்றில் கூலி உயர்வு அல்லது அகவிலைப்படி உயர்வு

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 15, 1942, பக். 87-90.

போன்ற கோரிக்கைகளுக்கான சாதாரண வேலைநிறுத்தமே நடைபெற்றுள்ளது.

3. ஆமதாபாத் நகரத்தில்தான் வேலைநிறுத்தம் மிக அதிகமாய் நீண்டு சென்றது. அங்கே பொருளாதாரக் குறைகள் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆலைகள் இதுவரை மீண்டும் திறக்கப்படவில்லை. பம்பாயில் எந்த ஒரு நாளிலும் எல்லா ஆலைகளும் மூடப்படவில்லை. மூடப்பட்ட ஆலைகளிலும் கூட வேலைநிறுத்தம் குறுகிய காலத்திற்கே நீடித்தது. அங்கேயும் பொருளாதாரக் குறைகள் ஏதும் முன்வைக்கப்படவில்லை. ஆலைகள் மீண்டும் திறக்கப்பட்டு மறுபடியும் மூடப்பட்டுள்ள கோயம்புத்தூரில் பொருளாதாரக் குறைகள் ஓரளவுக்கு வெளிப்பட்டன.

4. பம்பாய், ஆமதாபாத், கோயம்புத்தூர் ஆகிய ஊர்களில் துணி ஆலைகளில் நடைபெற்ற வேலைநிறுத்தம் ஒருபுறமிருக்க, ஒவ்வொன்றிலும் ஓராயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் வேலைசெய்யும் தொழில் நிறுவனங்களில், அரசியல் அல்லாத காரணங்களுக்காக ஆகஸ்டு 9 தொடங்கி வேலைநின்றுபோயிருக்கும் நிறுவனங்களின் எண்ணிக்கை 20க்கும் குறைவு.

5. பெரும்பாலான வேலைநிறுத்தங்கள் பம்பாய், வங்காளம் ஆகிய மாகாணங்களில் நடைபெற்றன; ஆறேழு வேலைநிறுத்தங்கள் மட்டுமே வேறு இடங்களில் நடைபெற்றன.

6. வேலைநிறுத்தம் செய்தவர்கள் தொழில் நிறுவனங்களில் எவ்வித நாசவேலையையும் செய்ததாக அரசுக்குத் தகவல் இல்லை.

7. ஆகஸ்டு இரண்டாம் வாரத்திலிருந்து முற்ற முழுக்கப் பொருளாதாரக் காரணங்களுக்காகவே நடைபெற்றதாகத் தெரியவரும் வேலைநிறுத்தங்களைப் பொறுத்தவரை, இவற்றின் எண்ணிக்கை சுமார் 24. இந்தத் தொழில்நிறுவனங்களில் ஏழு மட்டுமே ஓராயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளர்கள் வேலைசெய்யக்கூடியவை.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** மூடப்பட்ட சில தொழிற்சாலைகள் அவற்றின் தொழிலாளர்களை வெளியே செல்ல அனுமதித்துவிட்டு அவர்களுக்கு அந்த நாளைக்கு சம்பளம் கொடுத்தன என்பது அரசின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முன்பே சொல்லப் பட்டதற்கு மேல் அரசிடம் திட்டவட்டமான தகவல் ஏதுமில்லை. ஆனால் மதிப்பிற்குரிய என் நண்பர் சுட்டிக்காட்டியவை அநேக மாய்ச் சில இடங்களில் நடைபெற்றிருக்கக்கூடும் எனத் தெரிகிறது.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இந்த வேலைநிறுத்தங்கள் குறிப் பிட்ட சில உறுதிமொழிகளின் பேரில் முடிந்தனவா, அல்லது அவையாகவே முடிந்தனவா, அல்லது குறிப்பிட்ட சில நிபந்தனை களின் அடிப்படையில் அரசின் துணைகொண்டு முடிக்கப்பட்டனவா என்பதை மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வினா எனக்கு விளங்கவில்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இந்த வேலை நிறுத்தங்களில் சில முடிந்து போனதாக மாண்புமிகு உறுப்பினர் சொல்லியிருக் கிறார். இப்போது நான் கேட்கிறேன்; அந்த வேலைநிறுத்தங்கள் அரசு கொடுத்த சில உறுதிமொழிகளின் அடிப்படையில் நின்று போயினவா, அல்லது தொழிலாளர்கள் தாமாகவே தம் விருப்பப் படி அவற்றைக் கைவிட் டார்களா, அல்லது ஏதேனும் நிபந்தனை களின் பேரில் இவ்வேலை நிறுத்தங்களை முடித்துக் கொண்டார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சில இடங்களில் அவர்கள் தாமாகவே வேலை நிறுத்தத்தை விலக்கிக் கொண்டார்கள்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** அரசுகொடுத்த உறுதிமொழி களின் அடிப்படையில் எந்த வேலைநிறுத்தமாவது விலக்கிக் கொள்ளப்பட்டதா என்பதையும், அந்த உறுதிமொழிகள் என்ன என்பதையும் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தொழிலாளர் களை வேலைக்குத் திரும்பச் சொல்வதற்காக எந்த இடத்திலும் அரசு உறுதிமொழியேதும் கொடுக்கவேண்டியிருந்ததாக எனக்குத் தெரியவில்லை.

**திரு.என்.எம்.ஜோஷி:** மாண்புமிகு உறுப்பினர் கூறியதன் அடிப்படையில் நான் கேட்க விரும்புவது: பம்பாய்த் தொழிலாளர் கள் முன்வைத்த கோரிக்கைகள் அரசின் பார்வைக்கு வைக்கப்

பட்டனவா? பம்பாய் கிர்ணிகாம்கார் சங்கத்தினர் ஊதியம் முதலானவை தொடர்பான தங்கள் கோரிக்கைகள் அடங்கிய ஓர் அறிக்கையை பம்பாய் அரசுக்கு அனுப்பி ஒரு மாதத்துக்கு மேலாயிற்று என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சிலகோரிக்கைகள் முன்வைக்கப்பட்டிருப்பதை அறிவேன். ஆனால் நான் வலியுறுத்திச் சொல்லவிரும்புவது என்னவென்றால் : எனக்குத் தெரிந்தவரை பம்பாயில் எங்குமே குறைகளைத் தெரிவித்து அதன் காரணமாக வேலையை நிறுத்தவில்லை.

**திரு. என்.எம்.ஜோஷி:** கிர்ணி காம்கார் சங்கத்தினர் தங்கள் கோரிக்கைகளை பம்பாய் அரசுக்கு அனுப்பினார்களா? அதன்பிறகு வேலைநிறுத்தங்கள் நடைபெற்றுள்ளன என்றால், பொருளாதாரக் கோரிக்கைகள் ஏதும் முன்வைக்கப்படவில்லை என்றோ, பொருளாதாரக் கோரிக்கைகள் ஏதும் வேலை நிறுத்தத்திற்குக் காரணமாகவில்லை என்றோ மாண்புமிகு உறுப்பினர் கூறுவதன் பொருள் என்ன? எப்படி அவர் இவ்வாறு சொல்ல வந்தார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பம்பாய் அரசிடமிருந்து எனக்கு அறிக்கை ஏதும் வரவில்லை. ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்ட தகவல் செய்தியேடுகளிலிருந்து எனக்குக் கிடைத்தது.

**திரு.என்.எம்.ஜோஷி:** பம்பாய் துணியாலைத் தொழிலாளர்களின் குறைகளைப் போக்கவும் பம்பாய் கிர்ணி காம்கார் சங்கம் முன்வைத்த கோரிக்கைகளைப் பரிசீலிக்கவும் பம்பாய் அரசு ஏதேனும் நடவடிக்கை எடுத்துள்ளதா என்பதை அவர்களிடமிருந்து விசாரித்தறியும்படி மாண்புமிகு உறுப்பினரைக் கேட்டுக்கொள்ளலாமா?

**சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:** ஆகஸ்டு 8, 9 தேதிகளுக்குப் பிறகு பம்பாய்த் துணியாலைகளில் எத்தனை வேலைநிறுத்தங்கள் நடைபெற்றன என்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்கலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மிகச் சிலவே நடைபெற்றன.

**திரு.முகமது நௌமான்:** டாட்டா இரும்பு-உருக்குக் குழுமத் தொழிலாளர்களுக்குத் தரப்படும் ஊதியம் குறித்து மாண்புமிகு

உறுப்பினரால் ஏதேனும் சொல்ல இயலுமா? அவர்களின் குறிப்பான கோரிக்கைகள் அரசுக்கு அனுப்பப்பட்டனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தகவல் ஏதும் தருவது பொதுமக்களின் நலனுக்கு உகந்தது அன்று.

**திரு.கே.சி.நியோகி:** இந்தத் தகவல் செய்தியேடுகளில் வெளியிடப்படுவதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இருக்கலாம். அரசு அதற்கு எவ்வகையிலும் பொறுப்பேற்காது.

**திரு. கே.சி.நியோகி:** அதிகாரம் பெற்ற செய்திநிறுவனங்களில் ஒன்றாகிய அசோசியேட்டெட் பிரஸ் அனுப்பியுள்ள செய்தி இது. இந்தியாவில் தேசிய அரசு அமைக்கும் சிக்கல் குறித்து வேலை நிறுத்தம் நடைபெற்றதாக இதில் கூறப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அசோசியேட்டெட் பிரஸ் அதிகாரம் பெற்ற நிறுவனம் என்று என்ன பொருளில் மதிப்பிற்குரிய உறுப்பினர் சொல்கிறார் என்பது விளங்கவில்லை.

**திரு.கே.சி. நியோகி:** மாண்புமிகு உறுப்பினர் அரசின் அறிக்கைகளைப் படிப்பதில் அக்கறை செலுத்தவில்லையோ என்று அஞ்சுகிறேன்.

**சர்தார் சாந்த் சிங்:** மகாத்மா காந்தியும் அவருடன் சேர்ந்த தொண்டர்களும் கைதுசெய்யப்பட்ட பிறகே இந்த வேலைநிறுத்தங்களெல்லாம் நடைபெற்றன என்பது உண்மைதானா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னால் திட்டவட்டமான தகவல் தர இயலாது. ஆனால் இந்த வேலைநிறுத்தங்கள் தன்னெழுச்சியாக நடைபெறவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** வேலைநிறுத்தங்கள் தொடங்கிய தேதிகளை மாண்புமிகு உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவிப்பாரா? அதிலிருந்து நாம் சிலவற்றைத் தெரிந்து கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** எங்கே? எந்த இடத்தில்?

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** டாட்டா தொழிலகத்தில்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் தகவல் ஏதும் தருவதற்குத் தயாராக இல்லை என்று முன்பே சொன்னேன். ஏனென்றால் தகவல் தருவது பொதுநலனுக்கு உகந்ததன்று.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** வேலைநிறுத்தத்துக்கான காரணங்கள் அல்லது அதுபோன்று வேறு தகவல் ஏதும் எனக்கு வேண்டியதில்லை. வேலைநிறுத்தங்கள் அறிவிக்கப்பட்ட தேதிகள் மட்டுமே தேவை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எவ்விதத் தகவல் கொடுப்பதும் பொதுநலனுக்கு உகந்ததாய் இருக்காது என்று சொல்லிவிட்டேன்.

**சர்தார் சாந்த் சிங்:** இந்த வேலைநிறுத்தங்கள் எல்லாம் மகாத்மாகாந்தி கைதுசெய்யப்பட்டபிறகு நடைபெற்றவை என்பது உண்மையா, இல்லையா? இயக்கம் எவ்வளவு மும்முரமாக நடை பெறுகிறது என்பதையும் மகாத்மாகாந்திக்கு இந்தநாட்டில் எவ் வளவு ஆதரவு உள்ளது என்பதையும் இது காட்டுவதாக அரசு நம்பு கிறதா, இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஒரு வாதமே தவிர கேள்வியாகாது.

**திரு. என்.எம்.ஜோஷி:** ஜாம்ஷெட்பூரில் நடைபெற்ற வேலைநிறுத்தம் முடிந்துவிட்டதா என்று நான் கேட்கலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முடிந்துவிட்டது என்றே நம்புகிறேன்.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):** அடுத்த வினா.

# 2

## *இந்திய மண்ணியல் மதிப்பாய்வுக் கழகத்தின் பயன்பாட்டுப் பிரிவினது செயல்திட்டம்

*17. திரு.கே.சி.நியோகி: (அ)* இந்திய மண்ணியல் ஆய்வுக் கழகத்தில் புதிதாகத் தொடங்கியுள்ள பயன்பாட்டுப் பிரிவின் செயற்பாடுகள் குறித்து விவரமான வேலைத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவிப்பாரா?

*(ஆ)* இத்தகைய செயற்பாடுகளின் வீச்செல்லைக்குள் இப்போது என்னென்ன கனிமப் பொருட்களை சேர்க்கத் திட்டம்?

*(இ)* இப்பிரிவானது பொறுக்கி எடுத்த சில கனிமப் பொருட்கள் தொடர்பாக நிபுணர்களின் துணைகொண்டு முன்னோடிப் பணியாற்றுவதிலேயே தொடக்கத்தில் அக்கறை செலுத்தும் என்பதும், அதேபோது இறுதியில் அவற்றை எடுக்கும் பொறுப்பைப் பொருத்தமான வணிக நிறுவனங்களிடம் ஒப்படைத்துவிடும் என்பதும் உண்மைதானா?

*(ஈ)* இப்பிரிவின் கவனத்துக்குரிய கனிமப் பொருட்களில் பெட்ரோலியம் சேர்க்கப்பட்டுள்ளதா?

*(உ)* இந்தப் பிரிவின் குறிக்கோளை அடைவதற்காக இது வரை நடைமுறையில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் என்ன? எந்தெந்த கனிமப் பொருட்கள் தொடர்பாகவும், எந்தெந்த வல்லுநர்களின் துணைகொண்டும், என்ன இறுதிக் குறிக்கோளைக் கருத்தில் கொண்டும் இத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டன?

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி* III, *செப்டம்பர் 1, 1942, பக். 90-93.*

(ஊ) பயன்பாட்டுப் பிரிவின் முயற்சிகள் வணிகத் துறையுடன் இணைந்த அறிவியல், தொழில்துறை ஆராய்ச்சி மற்றும் பயன்பாடு தொடர்பான அமைப்புகளின் நடவடிக்கைகளுடன் ஒருங்கிணைக்கப்படுகின்றனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அ. (ஆம்). ஆனால் குறிப்பிட்ட ஒரு கனிமப்பொருளுக்கு அவசரத் தேவை ஏற்படும் இடத்து இந்தச் செயல்திட்டம் மாறுதலுக்கு உட்பட்டதே.

(ஆ) போர் நோக்கங்களுக்கு தேவைப்படுகிற எல்லாக் கனிமப் பொருட்களும் - இந்தியாவில் இவற்றைச் செப்பமிடுவதற்கு நியாய மான வாய்ப்புகள் இருக்க வேண்டும். கந்தகம், மைக்கா, டங்ஸ்டன் அல்லது ஒல்ஃப்ராம் ஆகியவையும் ஈயம், துத்தநாகம், தாமிரம், காரீயம் போன்ற இரும்பல்லாத உலோகங்களும் இந்த கனிமப் பொருட்களில் அடங்கும்.

(இ) பயன்பாட்டுப் பிரிவானது வல்லுநர்களின் துணை கொண்டு படிவுகள் இருப்பதை மெய்ப்பிக்கும்; சிறுவீதத்தில் சுரங்கம் தோண்டும் பணிகளை மேற்கொள்ளும். காய்ச்சி உருக்குதல் போன்ற வற்றுக்கு பரிசோதனை அடிப்படையிலும் முன்னோடியாகவும் ஆலைகளை இயக்குவதும் இந்தப்பணிகளில் ஒன்றாய் இருக்கக் கூடும். வணிக நிறுவனங்கள்தான் உற்பத்தி மேற்கொள்ளமுடியும் என்று தெளிவாய்த் தெரியவருகிற கட்டம்வரை இந்தப்பணிகள் தொடரும். அந்தக் கட்டத்தில் வணிகஅடிப்படையிலான வளர்ச்சியை ஊக்கப்படுத்த வேண்டும் என்பது இப்போதுள்ள நோக்கமாகும் (போருக்கான பொருளுற்பத்தியை தொய்வின்றித் தொடர வேண்டிய தேவைக்கும், அந்தந்த நேர்வின் சூழ்நிலைகளுக்கும் உட்பட்டதாகும் இது.)

(ஈ) இப்போதைய செயல்திட்டத்தின்படி, இல்லை.

(உ) பயன்பாட்டுப் பிரிவானது விரைவில் ஈயம், துத்தநாகம் ஆகியவற்றை உற்பத்தி செய்யப்பெறும் சாத்தியப்பாட்டை ஆராய்வதற்கு ஏற்கனவே நடவடிக்கைகள் எடுத்துள்ளது. இந்தியாவிலேயே மிகவும் நம்பிக்கை அளிக்கக்கூடிய ஈய-துத்தநாகச் சுரங்கங்கள் உதய்ப்பூர் சமஸ்தானத்தில் ஜாவாரில் இருப்பதாகத் தெரிகிறது. இந்திய அரசு பர்மாவில் உள்ள மாவுச்சி சுரங்கங்களின் காலஞ்சென்ற பொதுமேலாளர் திரு.டபிள்யூ, பி.கோவெனை அனுப்பி மேவார்

அரசுடன் பேச்சுவார்த்தை நடத்தியது. தனியார் நிறுவனம் ஒன்றின் கையிலிருந்த சுரங்கக் குத்தகையை இழப்பீடு கொடுத்து நீக்கம் செய்ய வைத்து, மேவார் அரசிடமிருந்து கனிம ஆய்வு உரிமம் பெற்றது. பணிகளுக்கான பொறுப்பு திரு. கோவெனிடம் ஒப்படைக் கப்பட்டது. அவர் 1942 மே இறுதியில் வேலை தொடங்கினார். பணிகள் இரு கட்டங்களாக திட்டமிடப் பெற்றுள்ளன: 1. விவர மான கள ஆய்வு, ஆழத்துளையிடும் பணிகள்: இவற்றையடுத்து 2. படிவுகளைத் தோண்டுதல், சுரங்கம் வேலைக்குரியது என்பதை துளையிடும் பணிகள் நிறுவிய உடனே முன்னோடியான தாதுப் பொருள் சுத்திகரிப்பு ஆலையும் உருக்காலையும் நிறுவுதல். இதுவரை மண்ணியல் ஆய்வு அமைப்பு கண்டுள்ள முன்னேற்றத்தின் விளை வாக, கனிமப்பொருளின் பயனுடைமை குறித்து எதிர்பார்க்கப் பட்டதை விடவும் விரைவாகவே தகவல் பெறுவது சாத்தியமாகும் என்று நம்பப்படுகிறது. துளையிடும் கருவிகள் போன்ற வகையில் திரு. கோவெனுக்கு தேவைப்பட்ட இயந்திர சாதனங்களில் பெரும் பாலானவை வந்து சேர்ந்து விட்டன. சுரங்கப் பொறியாளர்கள் இருவரும், இயந்திரப் பொறியாளர் ஒருவரும் உலோகவியலாளர் இருவரும் நில ஆய்வாளர்கள் மூவரும் திரு. கோவெனுக்கு உதவி யாக நியமிக்கப்பட்டுள்ளனர்.

அணைந்துபோன கோயி-சுல்தான் எரிமலையில் இருக்கும் கந்தகப்படிவுகளை தோண்டிஎடுக்கும் பணியை பயன்பாட்டுப் பிரிவு வழங்கல் துறையில் இருந்து எடுத்துக்கொண்டுள்ளது. இந்திய மண்ணியல் ஆய்வமைப்பைச் சேர்ந்த கண்காணிப்பு மண்ணிய லாளரின் பொறுப்பில் இப்பணிகள் ஒப்படைக்கப்பட்டன.

பயன்பாட்டு கிளையானது மைக்கா உற்பத்திக்கு ஊக்க மளிக்கவும் முயற்சி செய்து வருகிறது. இந்திய மண்ணியல் ஆய் வமைப்பைச் சேர்ந்த கண்காணிப்பு மண்ணியலாளர் ஒருவரிடம் புதிதாய் அமைக்கப்பட்ட மைக்கா உற்பத்திப்பிரிவின் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டுள்ளது. உற்பத்தியை அதிகப்படுத்துவதற்குத் தேவையானவற்றை பெறுவதில் மைக்கா சுரங்க உற்பத்தியாளர் களுக்கு இயன்ற உதவியனைத்தும் வழங்குவது இக்கிளையின் பணி யாக இருக்கும்.

ஓல்ஃப்ராம், தாமிரம் முதலானவை தொடர்பாக ஆய்வுப் பணிகளையும் பயன்பாட்டுக்கிளை தன்பொறுப்பில் எடுத்துள்ளது. காரீயம் தொடர்பான சாத்தியப்பாடு அவசரப் பரிசீலனையில் உள்ளது.

போர் முயற்சிக்குத் தேவைப்படும் கனிமப் பொருட்கள் தொடர்பாக இந்தியாவை இயன்றவரை தன்னிறைவு பெறச் செய்வதே இறுதியான நோக்கம்.

(ஊ) ஆம். அறிவியல், தொழில்துறை ஆராய்ச்சி இயக்குனரும் வணிகத்துறையின் முதுநிலை அதிகாரி ஒருவரும் இந்தக் கிளைக்கு உதவுவதற்காக அமைக்கப்பட்டுள்ள ஆலோசனைக் குழுவின் உறுப் பினர்கள் ஆவார்கள்.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** மாண்புமிகு உறுப்பினர் குறிப்பிட்ட சிலவகைத் தொழில்நுட்ப ஊழியர்களைச் சொன்னார். அவர்களனைவரும் பர்மாவிலிருந்து அகற்றப்பட்ட பிரிட்டிஷ் அதிகாரிகளா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கேள்வியின் இந்தப் பகுதிக்கான எனது விடையில் குறிப்பிடப்பெற்ற இரு சுரங்கப் பொறியாளர்களைப் பொறுத்தவரையில் தகவல் இதுதான். திரு. சுமித் , திரு.ரோபாட்டம் ஆகியோரே சுரங்கப் பொறியாளர்களாக அமர்த்தப்பட்ட இருவர்.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** இவர்களைனைவரும் பர்மாவிலிருந்து வருகின்றார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவர்கள் பர்மாவிலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள். இவர்களின் கீழே பயிற்சி பெறும் இருவர் உள்ளனர்; இருவரும் இந்தியர்கள். இயந்திரப் பொறியாளராக இருப்பவர் திரு.சிம்ஸ். அவரும் வெளியேற்றப்பட்டவர் தான், உலோகவியல் வல்லுநர்களில் ஒருவர் நாராயணன் என்ற இந்தியர், மற்றொருவர் திரு.பிளமிங். கந்தகத்துக்கு மூன்று ஆய்வாளர்கள் உள்ளனர். அவர்கள் அனைவரும் இந்தியர்கள். பர்மாவிலிருந்து வெளியேற்றப்பட்ட இவர்களை நாம் அமர்த்த வேண்டிய காரணம் என்னவென்றால், இவர்களுக்கு மட்டுமே ஈயம் மற்றும் துத்தநாகம் தொடர்பாக சுரங்கம் தோண்டுவது குறித்து ஏதோ ஓரளவு தெரிந்திருந்தது. இவர்கள் அனைவரும் மாவுச்சி சுரங்கங்களிலிருந்து எடுக்கப்பட்டவர்கள். பர்மாவில் உள்ள மாவுச்சி சுரங்கங்கள்தான் ஈயம் மற்றும் துத்தநாகத்துக்கென்று இருப்பவை என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் அறிந்திருக்கக்கூடும். வேறு எங்கிருந்தும் வல்லுனர் எவரும் நமக்கில்லை. எனது துறையின்

கொள்கை இதுதான்: முதலாவதாக ஈயம் மற்றும் துத்தநாக சுரங்கத் தொழிலில் அனுபவம் வாய்ந்த ஐரோப்பியர்களை அமர்த்தும் தேவையை தவிர்க்கவியலாது. அதேபோது ஐரோப்பியர் ஒருவரை அமர்த்தும் இடங்களிலெல்லாம் அவரின்கீழ் பயிற்சி பெறுவதற்கென இந்தியர் ஒருவரையும் அமர்த்த வேண்டும். ஐரோப்பியர் வெளியேறும்போது இந்தியர் துறைப் பொறுப்பு ஏற்கக்கூடிய நிலையில் இருப்பார்.

*பண்டித லட்சுமி காந்த மைத்ரா:* திரு.கோவென் 1942 மே முடிவில்தான் வேலை தொடங்கினார் என்றும், துத்தநாகம், ஈயம் ஆகிய இந்த இரும்பல்லாத உலோகங்களை பொறுத்தவரை பிரிட்டிஷ் அதிகாரிகளை அமர்த்துவது தவிர்க்க முடியாதது என்றும் மாண்புமிகு உறுப்பினர் சற்றுமுன் சொன்னார். இந்தச் சுரங்கங்களை ஆய்வு செய்ய வேண்டுமென எப்போது இந்திய அரசுக்கு தோன்றியது? பர்மா வீழ்ந்த பிறகா? வேலையிலிருந்து தூக்கியெறியப் பட்ட இந்த கனவான்களுக்கு வழிவகை செய்து கொடுப்பதற்காகவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த வினாவிற்கு என்னால் விடை தர இயலாது.

*பண்டித லட்சுமி காந்த மைத்ரா:* இந்தச் சுரங்கங்களை இந்தியாவில் செயல்படுத்த வேண்டுமென இந்திய அரசு முதலில் மனங்கொண்டது எப்போது? இவ்வளவு காலமும் அது என்ன செய்து கொண்டிருந்தது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* வெளியிலிருந்து வரக்கூடிய எதற்கும் தொடர்பில்லாமல் முற்றிலும் தன்னியல்பாகவே இது நிகழ்ந்திருக்கக்கூடும்.

*சர்தார் சாந்த்சிங்:* போர் முயற்சிக்கு வழிவகை செய்வதற்காக இந்த சுரங்கங்களை செயல்படுத்துவது அவசியம் என்று கருதப்பட்டதா? அல்லது பர்மாவிலிருந்து வெளியேறிவந்த இவர்களுக்கு ஏதாவது வேலை கொடுக்க வேண்டும் என்பதற்காகவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை, இது உறுதி. பர்மாவிலிருந்து கிடைக்கும் வளங்கள் நின்றுவிட்டநிலையில் சொந்த செல்வாதாரங்களை பயன்படுத்துவது இந்திய அரசுக்கு அவசியமாயிற்று.

திரு. கே.சி. நியோகி: கேள்வியின் (ஈ) பிரிவு தொடர்பாக, தற்போது கனிமப் பொருட்களில் பெட்ரோலியம் சேர்க்கப்பட வில்லையென்று மாண்புமிகு நண்பர் குறிப்பிட்டார். துறையின் விருப்புரிமை என்றமுறையில் செயல் திட்டத்தில் இருந்து பெட்ரோ லியம் விலக்கி வைத்துள்ளதா, அல்லது இந்தியாவில் பெட்ரோ லியத்துறை வளர்ச்சியை அரசு வேறு ஏதேனும் நிறுவனத்திடம் ஒப்படைத்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லவே இல்லை. இப்போதைக்குச் செயல்திட்டத்தில் அதனைச் சேர்க்க வில்லை என்பதே என் விடை. செயல்திட்டத்தில் இருந்து அறவே அதனை விலக்கி வைப்பதாக இது பொருள்படாது.

திரு. கே.சி. நியோகி: ஏறத்தாழ அப்படித்தான் ஜூலை - 6 ஆம் நாள் டாக்டர் ஃபாக்ஸ் பேசினார். அந்தப் பேச்சின் ஒரு பகுதியை நேற்று நான் குறிப்பிட்டேன் என்று நான் கூறுவதைக் கேட்டு மாண்புமிகு உறுப்பினர் வியப்படைவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என் மதிப்பிற் குரிய நண்பருக்கு நான் சொல்லிக்கொள்ள விரும்புவதெல்லாம், இந்திய அரசின் கொள்கையை டாக்டர் ஃபாக்ஸ் தீர்மானிப்பதில்லை.

திரு. கே.சி.நியோகி: ஆனால் எப்படியும் டாக்டர் ஃபாக்ஸ் உண்மையே பேசுவார் என்று எதிர்பார்க்கலாம். இருக்கட்டும். இன்னொரு சிறுகேள்வி கேட்கலாமா? உதய்ப்பூர் சமஸ்தானத்தில் ஒரு தனியாருக்கு ஏற்கனவே வழங்கப்பட்டுவிட்ட ஈய மற்றும் துத்தநாகச் சுரங்கங்கள் தொடர்பான குத்தகையை நீக்கம் செய்வதற்கு உதய்ப்பூர் தர்பாரை இணங்க வைத்தாக வேண்டுமென்று மாண்பு மிகு நண்பர் குறிப்பிட்டார். உதய்ப்பூர் தர்பார் இந்தக் குத்தகையை நீக்கம்செய்து உதவும்படி செய்வதற்கு முன், அரசுத்துறை மேற் கொள்ள விரும்பிய நடவடிக்கைகள் எவையானாலும் அவற்றை மேற்கொள்வதற்கு அந்தத் தனியார் தரப்போடு உடன்பாடு காண அரசு முயற்சியேதும் செய்து பார்த்ததா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த வினாவிற்கு முன்னறிவிப்புத் தேவை.

# 3

# இந்தியாவுக்குத் திரும்பிய 'பெவின் பயிற்சியாளர்களும், அவர்களின் வேலைவாய்ப்பும்

*23. திரு.கோவிந்த் வி.தேஷ்முக்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் இந்தியாவுக்கு எத்தனை 'பெவின் பயிற்சியாளர்''கள் திரும்பியுள்ளார்கள் என்பதையும், அவர்கள் அனைவருக்கும் வேலை கிடைத்துள்ளதா என்பதையும் சொல்வாரா? வேலை கிடைக்கவில்லை என்றால், அவர்களின் வேலையின்மைக்கான காரணங்கள் என்ன? அவர்களில் யாரேனும் தொழிற்சங்கங்களில் எவ்வகையிலேனும் பற்கேற்கிறார்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* 149 பெவின் பயிற்சியாளர்கள் இந்தியாவிற்குத் திரும்பியிருக்கிறார்கள். இவர்களில் 26 பேர் செப்டம்பர் 5ல்தான் வந்துசேர்ந்தார்கள். இப்போது அவர்களைத் தேர்வுக்குழுமம் பரிசோதித்து வருகிறது. எஞ்சியுள்ள 123 பேரில் 105 பேருக்கு 145 விழுக்காடு சராசரி சம்பள உயர்வுடன் வேலை தரப்பட்டுள்ளது. மீதமுள்ள 18 பேரில் ஜூலை இறுதியில் வந்துசேர்ந்த 9 பயிற்சியாளர்கள் குறிப்பிட்ட பொறுப்புகளுக்கு ஒதுக்கப்பட்டுள்ளனர். அவர்கள் வெகுவிரைவில் நியமனம் செய்யப்படுவார்கள். ஆலைப்பணி செய்ய விரும்பாத இருவர் இந்திய இராணுவத்தில் ஒருவரும் இந்திய விமானப்படையில் ஒருவருமாக அவசர கால ஆணயங்களுக்குப் பரீசிலிக்கப்பட்டு வருகிறார்கள். மூவர் தமக்கு வழங்கப்பட்ட பொறுப்புகளை ஏற்க மறுத்து விட்டார்கள். அவர்களுக்கு வேறு வேலை தேடும் முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. ஒருவர் கூடுதலான ஊதியத்துடன் பழைய வேலைக்கே திருப்பி அனுப்பப்படுகிறார். ஒருவர் பயிற்சிமையத்தில் பற்றவைப்பு ஆசிரியராக அமர்த்தபெறும் நோக்குடன் பரிசோதனைக்கு உட்பட்டு வருகிறார். ஒருவருக்குப் பணியிடம் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆனால் இப்போது அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசி ஆள்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 15, 1942, பக். 112-113.

பயிற்சியை முடிக்காமலேயே தவறான நடத்தைக்காக இங்கிலாந்திலிருந்து திருப்பி அனுப்பப்பட்டவர்.

பயிற்சிக்குச் சென்று திரும்பி வந்தவர்கள் யாரேனும் தொழிற் சங்க விவகாரங்களில் பங்கேற்கிறார்களா என்பதை இவ்வளவு சீக்கிரம் சொல்ல இயலாது.

**திரு. கோவிந்த் வி.தேஷ்முக்:** அவர்கள் தொழிற்சங்க இயக்கங்களில் பங்கேற்பது அவர்களது வேலையின்மைக்குக் காரணம் இல்லையா? என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அப்படிக் கருதவில்லை. பயிற்சிபெற்றவர்களிடையே வேலையின்மை நிலவுவதற்கான எவ்விதச் சான்றும் என் கண்ணிற்படவில்லை.

**திரு. கோவிந்த் வி.தேஷ்முக்:** எல்லா 'பெவின் பயிற்சியாளர்களுக்கும்' வேலை கிடைத்து விட்டதா' என்பது என் வினா. திரும்பி வந்துவிட்ட எல்லா 'பெவின் பயிற்சியாளர்களுக்கும் வேலை கிடைக்கவில்லை. சிலர் சோதிக்கப்பட்டு வருகிறார்கள், சிலர் வேலையில் அமர்த்தப்பட்டுள்ளார்கள், சிலர் அவர்களின் பழைய வேலைகளுக்குத் திருப்பி அனுப்பப்படுகிறார்கள் என்பது விடை. அவர்கள் வேலையற்று இருப்பதற்குத் தொழிற்சங்க நடவடிக்கைகளில் அக்கறை காட்டுவது எவ்வகையிலேனும் காரணமாகுமா என்பது நான் கேட்க விரும்பும் கேள்வி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை என்று உறுதியாக நம்புகிறேன்.

**திரு.கோவிந்த் வி.தேஷ்முக்:** 'பெவின் பயிற்சியாளர்' களில் ஒருவர் எவ்வகையில் தவறாக நடந்துகொண்டார் என்று அவருக்கெதிராக குற்றச்சாட்டுக் கூறப்பட்டது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போது என்னிடம் தகவல் இல்லை. முன்னறிவிப்பு தேவை.

திரு. கோவிந்த் வி.தேஷ்முக்: இதற்கும் அவரது தொழிலாளர் நலச் செயற்பாடுகளுக்கும் தொடர்பேதும் உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த இளைஞரின் வாய்ப்புகளை நான் கெடுக்க விரும்பவில்லை.

திரு.கோவிந்த் வி.தேஷ்முக்: தவறாக நடந்து கொண்டார் என்று இந்த இளைஞருக்கெதிராக குற்றம்சாட்டப்பட்டபோது, அந்தத் தவறான நடத்தை என்ன என்பது பற்றி விசாரித்தறிவது விவேகம் என்று அரசு கருதவில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: எவ்வகைத் தவறான நடத்தைக்காக அவர் மீதான குற்றச்சாட்டு மெய்ப்பிக்கப் பட்டது என்பதுபற்றி அரசுக்குத் தகவல் தெரிந்திருக்கும் என்பதில் எனக்கு ஐயமில்லை. இப்போது என்னிடம் விவரமில்லை. முன்னறி விப்புத் தேவை.

டாக்டர் சர். ஜியாவுத்தீன் அகமது: 'பெவின் பயிற்சி யாளர்கள்'' உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பிரச்சினையின் இந்த அம்சம் குறித்துத் தொழிலாளர் நலத்துறை ஆராய்ந்து வருகிறது.

திரு. கோவிந்த வி.தேஷ்முக்: ''பெவின் பயிற்சியாளர்கள்'' இங்கிலாந்தில் சரியான பயிற்சி பெற்ற பிறகே இந்தியா திரும்பு கிறார்கள் என்பதைக் கருத்தில் கொண்டால், அவர்களை மறுபடியும் சோதிக்க வேண்டிய அவசியம் ஏது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவர்கள் பயிற்சிபெற்றவர்கள் என்று இந்திய அரசு சொல்வதை அவர்களை வேலைக்கு அமர்த்துபவர்களில் பெரும்பாலோர் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். வேலைக்கு அமர்த்துகிறவர் தன்னிடம் வேலை பெறுகிறவர் சரிவரப் பயிற்சி பெற்றவர் என்று மனநிறைவு கொள்ள விரும்புவார். அவர் அப்படிச் செய்வதை நாம் தடை செய்ய முடியாது.

# 4

## *தொழிலாளர்களின் ஊதியங்கள் குறைப்பு

27. திரு.அமேந்திர நாத் சட்டோபாத்தியாயா: (அ) உணவுப் பொருள், துணிமணிகள் ஆகியவற்றின் விலைவாசியிலும் பொது வான வாழ்க்கைச் செலவிலும் ஏற்பட்டுள்ள ஏற்றத்துடன் ஒப்பிடும் போது ஊதிய வீழ்ச்சியின் விகிதாசாரத்தைச் சரிநுட்பமாக அறிந்துள் ளாரா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா? ஆம் என்றால் அந்த விகிதாசாரம் எவ்வளவு?

(ஆ) ரயில்வேத் தொழிலாளர்களுக்கு வழங்கப்படும் கிராக்கிப் படியும் போர்க்கால சிறப்பூதியங்களும் (போனஸ்) ஊதிய விகித வீழ்ச்சியை சரிக்கட்டக் கூடியதாக இல்லை என்பதே உண்மையல்லவா?

(இ) இந்த வினாவின் (ஆ) பகுதிக்கு ஆம் என்பதே விடை யானால், ரயில்வே தொழிலாளர்களின் ஊதியவிகிதத்தை மறு பரிசீலனை செய்வதற்கும் அவர்களது ஊதியத்தைப் போதுமான அளவு உயர்த்துவதற்கும் மாண்புமிகு உறுப்பினர் எண்ணியுள்ளாரா?

(ஈ) ரயில்வே தொழிலாளர்களின் இப்போதைய வருமானத் துக்கு இணையான விலைகளில் உணவும் துணிமணிகளும் அவர் களுக்கு வழங்குவதற்காக பண்டகசாலைகள் அமைத்திடவும், இந்த ஏற்பாடு நிறைவு தருமானால் அதையே ஒரு நிரந்தர வழி முறையாகத் தொடர்ந்திடவும் அரசு எண்ணியுள்ளதா?

(உ) இந்தியாவில் அரசுக் கட்டுப்பாட்டில் உள்ள ரயில்வேக் களிலும் தனியார் ரயில்வேக்களிலும் (அதாவது கம்பெனி நிர்வாகத் தில்உள்ள ரயில்வேக்களும் மற்றும் தனியார் சமஸ்தான ரயில்வேக் களும்) துணி ஆலைகளிலும், சணல் ஆலைகளிலும், இரும்பு உருக்குத் தொழிற்சாலைகளிலும் தொழிலாளர்களுக்குத் தரப்படும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 15, 1942, பக். 115-17.

ஊதியத்தையும் வாரத்தில் அவர்களின் வேலைநேரம் ஆகியவற்றை யும் ஒப்பிட்டுக் காட்டும் அறிக்கை ஒன்றை மாண்புமிகு உறுப் பினர் அருள்கூர்ந்து அளித்திடுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) வாழ்க்கைச் செலவுகள் இந்திய நாடெங்கும் ஒரே விகிதத்தில் உயர்ந்திடவில்லை. ஒரு சில பெருநகரங்களுக்கு மட்டுமே நம்பத்தக்க வாழ்க்கைச் செலவு குறியீட்டெண்கள் உள்ளன. ஒரே மையத்திலேயே கூட வெவ்வேறு வகை ஊழியர்களுக்கு ஊதிய விகிதங்கள் கணிசமாய் மாறுபடுகின் றன. ஒரே இடத்தில் ஆனாலும் வெவ்வேறு இடங்களில் ஆனாலும் ஊதிய விகிதங்கள் சீரற்ற முறையில் ஏறி இறங்கி அலைவுறுகின் றன. இந்தக் காரணிகளைக் கருத்தில் கொண்டால், மதிப்பிற்குரிய உறுப்பினர் தொடுத்திருக்கும் வினாவிற்கு விடையளிக்க இயலாது. நம்பத்தக்க வாழ்க்கைச்செலவு குறியீட்டெண் கிடைக்கும்படியான ஓர் இடத்தில் ஏதேனும் ஒரு குறிப்பான வகை ஊழியர்கள் தொடர் பாக அவர் தகவல் வேண்டினால், அதைத் தர முயல்வேன்.

(ஆ) இது உண்மையன்று. அகவிலைப்படியானது கீழ்நிலை களில் அதிகரித்த வாழ்க்கைச் செலவுக்கு முழுமையாக ஈடுகொடுக் கிறது என்று நம்புகிறேன். உயர்நிலைகளில் வேண்டுமானால் மென் மேலும் குறைந்து செல்லும் அளவிலேயே இவ்விதம் ஈடுகொடுக் கிறது எனலாம்.

(இ) இந்தக் கேள்விக்கு இடமேயில்லை. ஆனால் அண்மைக் காலத்தில் அனைத்திந்திய ரயில்வே தொழிலாளர் கூட்டமைப்புடன் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் அகவிலைப்படி கணிசமான அளவுக்கு உயர்த்தப்பட்டது என்பதைச் சொல்லிக் கொள்வேன். இப்போது மேலும் ஒருமுறை மாற்றியமைப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை.

(ஈ) அவசியம் என்று நிர்வாகம் கருதும்போது அனேக ரயில்வேக்கள் தானியக்கடைகள் திறந்துள்ளன, திறந்தும் வருகின் றன. இந்தக் கடைகளில் வழங்கப்படும் சரக்குகள் மாகாண அரசுகளால் நிர்ணயிக்கப்பட்ட கட்டுப்பாட்டு விலைகளுக்கு மேற் படாமல் விற்கப்படுகின்றன. இந்தக் கடைகளை அவற்றுக்கான அவசியம் உள்ளவரை போர்க்காலத்தில் தொடர்ந்து நடத்த எண்ண மிடப்பட்டுள்ளது. ரயில்வேக்களில் இதுவரை துணிக்கடை ஏதும் திறக்கப்படவில்லை.

(உ) இப்படி விரிந்த அளவில் ஒப்புநோக்குவதற்கு அடிப்படையேதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஒவ்வொரு தொழிற்சாலையும் தனித்திறன் படைத்த தொழிலாளர்களை அமர்த்திக் கொள்கிறது. எனவே, ஒப்புநோக்குவது கடினம்.

திரு. முகமது நௌமான்: 1939 க்குப் பிறகு விலை உயரவே இல்லை என்பது அரசின் வாதமா? இதனை மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது அரசின் வாதமன்று. அரசு சொல்வதெல்லாம் விலை உயர்வு ஒரே சீராக இல்லை என்பதே.

திரு. முகமது நௌமான்: குறைந்தபட்சத்தை எடுத்துக் கொண்டால் விலை உயர்வு ஓரளவுக்கு ஒரே சீராகத்தான் உள்ளது. எல்லாச் சரக்குகளின் விலையும் குறைந்தபட்சம் 50 விழுக்காடு உயர்ந்திருப்பதை அரசு ஏற்றுக்கொள்ளத் தயாரில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விலை உயர்ந்துள்ளது என்று நான் சொல்லத்தயார். ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினர் சொல்லக்கூடிய அளவுக்கு அத்தனை விழுக்காடு உயர்ந்திருப்பதாக என்னால் சொல்ல முடியாது.

திரு. முகமது நௌமான்: விலைஉயர்வு தொடர்பாக நான் சொல்வது சரிதானா என்பதை அரசு விசாரணை நடத்திக் கண்டுபிடிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விசாரணைகள் நடத்துவதாக நான் உறுதியளிக்கமுடியாது. அதற்குக் கூடுதல் ஆட்களும் நேரமும் தேவைப்படும். இது அரசினால் இயலாமற் போகலாம்.

திரு. முகமது நௌமான்: மூன்றாண்டு காலம் கழிந்து விட்டதால் அரசிடம் இந்தத் தகவல் இருந்திருக்க வேண்டும்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒரு கருத்தை வெளியிடுகிறார்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: இந்த வினாவில் குறிப்பிடப்பட்ட அகவிலைப்படி இந்திய அரசின் ஏனைய துறைகளுக்கும், குறிப்பாக அஞ்சலக துறைக்கும் விஸ்தரிக்கப்படுமா என்று கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த வினாவை அதற்குரிய துறையிடம் கேட்க வேண்டும்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது : இந்த வினா ரயில்வேக்கள் குறித்தது, ஆனால் என் மாண்புமிகு நண்பர் இவ்வினாவை தொழிலாளர் நலத்துறை குறித்த ஒன்றாக எடுத்துக்கொண்டுள்ளார். ரயில்வேக்கள் தொடர்பாகக் குறிப்பிடப்பட்ட வேலைநிலைமைகள் ஏனையத் துறைகளில் உள்ள வேலை நிலைமைகளுக்கும் பொருந்துமாறு செய்யப்படுமா? என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்திய அரசில் பணியாற்றும் அனைத்து ஊழியர்களுக்கும் தரப்படும் அகவிலைப் படி அதிகரித்திருப்பதாக நினைக்கிறேன்.

திரு. முகமது நௌமான்: வினாவின் (ஈ) பகுதியைப் பொருத்தவரை இப்போது சரக்குகள் விற்கப்படும் கட்டுப்பாட்டு விலைகளையும் 1939 மற்றும் 1940 இல் அவை விற்கப்பட்டுவந்த விலைகளையும் ஒப்புநோக்குவதற்கு அரசு முயற்சி ஏதும் செய்துள்ளதா? என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இப்படி விழுக்காட்டு வகையில் ஒப்புநோக்கிட கிஞ்சிற்றும் தேவையில்லை.

திரு. முகமது நௌமான்: இல்லையேல் எவ்வளவு சதவீதம் அகவிலைப்படி கொடுக்க வேண்டும் என்று உங்களுக்குத் தெரியாது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அதிகரிப்பு ஏற்பட்டுள்ளது என்பதைத் தெரிந்துகொள்வதே அரசின் நோக்கங்களுக்குப் போதுமானது. அதைத் தெரிந்துகொண்டால் படியை உயர்த்துவதா வேண்டாமா என்பதை பரிசீல்னை செய்யலாம்.

காஜி முகமது அகமது காஸ்மி: விலை உயர்வு மிகக் குறைந்த அளவில் ஏற்பட்டுள்ள இடங்கள் எவை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 5

# *சிவில் முன்னணிப் படைப்பிரிவுகளில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவம்

*ராவ் பகதூர் என். சிவராஜ்:* (அ) வெவ்வேறு மாகாணங்களில் எத்தனை முன்னணி படைப்பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள் கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஆ) இந்தப்படை அணிகளிலும் அதிகாரிகள் என்ற நிலையிலும் ஷெட்யூல்டு வகுப்பினர் எந்த அளவுக்கு பிரதிநிதித்துவம் பெற்றுள்ளனர்?

(இ) ஷெட்யூல்டு வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம் இல்லையென்றால், அதற்கான காரணங்களை அவர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஈ) அவர்களுக்கு சரியான பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்வதற்கு அரசு எடுக்க எண்ணியுள்ள நடவடிக்கைகள் என்ன?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (அ) முதலாவதாக சிவில் முன்னணிப் படைகளில் பன்னிரெண்டு பிரிவுகளுக்கு ஒப்புதல் தரப்பட்டுள்ளது. அவையாவன:

வங்காளம் -3, சென்னை - 2, பீகார் - 1, பம்பாய் - 1, மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் - 1, வடமேற்கு எல்லை மாகாணம் - 1, ஒரிசா - 1, பஞ்சாப் -1, ஐக்கிய மாகாணங்கள் - 1.

இந்தப் படைப் பிரிவுகளில் பெரும்பாலானவை இன்னமும் அமைக்கப்பட்டுவரும் நிலையில் உள்ளன. ஏழு கூடுதல் படைப் பிரிவுகளுக்கு அண்மையில் ஒப்புதல் தரப்பட்டது. அவையாவன:

வங்காளம் - 3, பம்பாய் - 1, மத்திய மாகாணங்கள் - 1, சென்னை - 2

இவற்றுக்கான ஆட்சேர்ப்பு இப்போது தொடங்கியுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 15, 1942, பக். 385-86.

ஆ. இப்போதுள்ள நிலையில் சிவில் முன்னணிப் படைப் பிரிவுகளில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவம் பின்வருமாறு:

| | |
|---|---|
| வங்காளம் | 2 விழுக்காடு |
| பம்பாய் | 10.5 விழுக்காடு |
| மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் | 26 விழுக்காடு |
| பஞ்சாப் | 32 விழுக்காடு |
| ஐக்கிய மாகாணங்கள் | 20 விழுக்காடு |

சென்னை விவரம் தெரியவில்லை.

வடமேற்கு எல்லை மாகாணம் — அனைவரும் முகமதியர்

மேலும் ஆட்கள் சேர்க்கப்படும்போது இந்த விவரங்கள் ஏற்ற இறக்கத்துக்கு உட்பட்டவை.

இப்போதைய நிலையில் தகவல் கிடைத்துள்ளவரை அதிகாரிகளில் ஒரே ஒருவர் மட்டுமே ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவர் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளார்.

(இ) 1942 ஆம் ஆண்டின் அவசரச் சட்டம் எண் X என்பதன் படி சிவில் முன்னணிப் படைப் பிரிவுகளை அமைக்கும் பணி மாகாண அரசுகளிடம் ஒப்படைக்கப்பட்டது. ஆகவே தத்தமது படையலகுகளின் இயைபு குறித்து முடிவு செய்யும் பொறுப்பு அவ்வரசுகளைச் சாரும்.

(ஈ) இந்திய அரசானது எதிர்கால ஆட்சேர்ப்பில் ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு இருக்க வேண்டிய விழுக்காடு தொடர்பாக அனைத்து மாகாண அரசுகளுக்கும் எழுதியது. அதிகாரிகள், ஆட்கள் ஆகிய இருவகையிலும் அந்தந்த மாகாணத்தில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் விழுக்காட்டின் அளவுக்கு இடம் தரப்படவேண்டும் என்றும், இந்த விழுக்காடு முன்னரே அடையப் படாதவிடத்து அடுத்தடுத்த படைப்பிரிவுகளுக்கான ஆட்சேர்ப்பில் சரிசெய்யப்பட வேண்டும் என்றும் அது கட்டளையிட்டுள்ளது.

திரு. என்.எம்.ஜோஷி: இந்த சிவில் முன்னோடிப் படைப் பிரிவுகளின் பணி என்ன என்று நான் கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சிவில் முன்னணிப் படைப் பிரிவுகளின் பணி ஏறத்தாழ தீயணைப்புப் படையின் வேலையை ஒத்தது. விமானத் தாக்குதல் நிகழ்ந்து, உடைமை அளிக்கப்படும் போது சிவில் முன்னணிப் படைப்பிரிவுகள் செயலில் இறங்கி மீட்புப்பணி செய்திடும்.

# 6

## *ஒப்பந்தக்காரர்கள் தங்கள் ஊழியர்களுக்குத் தரவேண்டிய ஊதியம் முதலானவை தொடர்பாக வகுத்துரைக்கப்பட்ட அரசு நிபந்தனைகள்

*ராவ் பகதூர் என். சிவராஜ்:* மேலைநாடுகளில் ஒப்பந்தக் காரர்கள் தங்கள் ஊழியர்களுக்கு ஊதியம் கொடுப்பது தொடர் பாகவும் பிற நன்மைகள் செய்வது தொடர்பாகவும் கடைப்பிடிக்க வேண்டிய நிபந்தனைகள் வகுத்துரைக்கப்பட்டுள்ளன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா? ஆம் என்றால், இந்திய அரசு இந்தியாவில் ஒப்பந்தக்காரர்களுக்கு இப்படி நிபந்தனைகள் ஏதும் வகுத்துரைத்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம். குறிப்பிட்ட சில மேலைநாடுகளில் ஒப்பந்தக்காரர்கள், வேலை நேரங்கள், ஊதியங்கள், பொதுவாக வேலை நிலைமைகள் போன்றவை சம்பந்த மாக சில விதிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று கோரப் பட்டிருக்கிறார்கள். மத்தியப் பொதுப்பணித்துறை ஒப்பந்தக்காரர் கள் தன் தொழிலாளர்களுக்கு அண்டைப்புறத்தில் அதேபோன்ற வேலைக்குத் தரப்படுவதற்குக் குறையாத ஊதியம் கொடுக்க வேண்டும் என்று இந்திய அரசு நிர்ணயித்துள்ளது.

*ராவ் பகதூர் என். சிவராஜ்:* ஒப்பந்தத்தில் இந்த விதியைச் செயலாக்க அரசு முயற்சிகள் ஏதும் செய்திருக்குமானால் அவை என்ன?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 22, 1942, பக். 386.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னால் உடனே சொல்ல இயலாது. ஆனால் விசாரித்தறிந்து மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு தெரியப்படுத்துவேன்.

**திரு. என்.எம். ஜோஷி:** நியாயமான வேலை நிலைமைகள் தொடர்பாக ஒப்பந்தக்காரர்களுக்கு விதிக்கப்படும் இந்த நிபந்தனை இந்திய அரசின் ஏனைய துறைகளுக்கும் பொருந்துமா? எடுத்துக்காட்டாக வழங்கீடுத் துறையின் ஒப்பந்தக்காரர்களுக்குப் பொருந்துமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய நண்பர் எனக்கு முன்னறிவிப்புக் கொடுப்பாரானால் விசாரித்து அறிவேன்.

**திரு. என்.எம்.ஜோஷி:** என் வினா அரசாங்க ஒப்பந்தங்கள் எடுக்கும் ஒப்பந்தக்காரர்களைப் பற்றியது, பொதுப்பணித்துறை தொடர்பானது மட்டுமல்ல. மாண்புமிகு உறுப்பினர் பொதுப்பணித் துறைக்காக மட்டுமே விடையளித்தார். அவர் இந்திய அரசுக்காகவும் விடையளித்திருக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த வினா வழங்கீடு துறை நோக்கி கேட்கப்பட்டிருக்க வேண்டும்.

**திரு. என்.எம். ஜோஷி:** ஒரு மையமான இந்திய அரசு உள்ளதா, அல்லது பத்துப் பன்னிரெண்டு உறுப்பினர்களாகப் பிரிந்த இந்திய அரசுதான் உள்ளதா? என்று கேட்க விரும்புகிறேன்.

**திரு. தலைவர்:** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): வினாக்கள் அவற்றுக்குத் தொடர்புடைய துறைகளிடம் கேட்கப்பட வேண்டும் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் அறிவார்.

# 7

## *பிரிட்டனில் பயிற்சி பெறுவதற்காக இந்தியாவிலிருந்து தெரிந்தெடுக்கப் பட்ட பெவின் பயிற்சியாளர்கள்

*சர் ஜியாவுத்தீன் அகமது:* (அ) பிரிட்டனில் பயிற்சி பெறுவதற்கு இந்திய அரசாங்கம் தெரிந்தெடுத்த பெவின் பயிற்சி யாளர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா? எத்தனைக் குழுக்களாக அவர்கள் அனுப்பப்பட்டனர்? இந்தக் குழு ஒவ்வொன்றிலும் (i) முஸ்லீம்கள், (ii) ஷெட்யூல்டு வகுப்பினர் எத்தனை பேர் இடம்பெற்றிருந்தனர்?

(ஆ) தெரிந்தெடுப்பதற்கு அரசு குறித்துரைத்த குறைந்த பட்ச தகுதிகள் எவை? அவர்கள் அனைவரும் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் உடல் உழைப்பாளர்களாக இருந்தவர்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* (அ) பிரிட்டனில் பயிற்சிபெறுவதற்காக இதுவரை 304 பெவின் பயிற்சிமாணவர் கள் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். உள்ளபடியே இதுவரை ஐந்து அணிகள் அனுப்பி வைக்கப்பட்டுள்ளன. ஒன்றில் 54பேரும், நான்கில் ஒவ்வொன்றுக்கும் 50 பேர் வீதமும் இடம்பெற்றனர். ஏற் கனவே அனுப்பி வைக்கப்பட்ட ஐந்து அணிகளோடு இப்போது தெரிந்தெடுக்கப்பட்டுள்ள ஆறாவது அணியின் வகுப்புவாரி இயைபையும் காட்டும் விதத்தில் ஓர் அட்டவணை கீழே தரப்படு கிறது. அனுப்பிவைக்கப்பட்ட 304 பேரில் 50பேர் முஸ்லீம்கள் என்பதை இது காட்டுகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 15, 1942, பக் 455-56.

| | 1-வது | 2-வது | 3-வது | 4-வது | 5-வது | 6-வது | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| இந்துக்கள் | 21 | 25 | 27 | 29 | 26 | 34 | 162 |
| முஸ்லீம்கள் | 13 | 9 | 8 | 8 | 8 | 4 | 50 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | 4 | 5 | 4 | 3 | 7 | 3 | 26 |
| இந்தியக் கிறித்துவர்கள் | 4 | 7 | 6 | 8 | 4 | 4 | 33 |
| பார்சிகள் | 6 | 3 | 3 | 3 | 1 | 3 | 19 |
| சீக்கியர்கள் | 2 | 1 | 2 | 3 | 4 | 2 | 14 |
| | 50 | 50 | 50 | 54 | 50 | 50 | 304 |

முதல் 5 அணிகளில் ஷெட்யூல்டு வகுப்புப் பயிற்சி மாணவர் களின் எண்ணிக்கை தொடர்பாக தகவல் ஏதும் கிட்டவில்லை. 6 ஆவது அணி தொடர்பான விவரங்களுக்காகக் காத்திருக்கிறோம்.

(ஆ) தேவைப்படும் குறைந்தபட்ச தகுதிகள் பின்வருமாறு:

1. இளம் வயதினராகவும் ஆரோக்கியமானவர்களாகவும் இருக்க வேண்டும், ஆனால் பதினெட்டு வயதுக்கு குறைவாக இருக்கக் கூடாது;

2. அறிவு நுட்பம் வாய்ந்தவர்களாகவும், படிக்கவும் எழுதவும் எளிய கணக்கீடுகள் செய்யவும் வல்லவர்களாகவும், கைலாவகம் உடையவர்களாகவும், பிறர் சொல்வதைப் புரிந்துகொள்வதற்கும் பிறருக்குத் தங்களை புரியவைத்துக் கொள்வதற்கும் போதிய ஆங்கில அறிவு பெற்றவர்களாகவும் இருக்க வேண்டும்.

3. பொறியியல் தொழில்நுட்பப் பிரிவுகளில் ஒன்றை சேர்ந்த வர்களாக இருக்க வேண்டும்.

4. குறைந்தபட்சம் மூன்றாண்டுக் காலம் தொழிற்சாலை யில் வேலைசெய்த அனுபவம் பெற்றவர்களாகவும், தங்கள் அறிவு நுட்பத்திற்கும் தகவமையும் திறனிற்கும் நிரூபணம் இருக்க வேண்டும்.

5. மருத்துவநோக்கில் உடல்தகுதி வாய்ந்தவர்களாகவும் காசநோயின் அறிகுறிகள் ஏதும் இம்மியளவும் இல்லாதவர்களாகவும் இருக்க வேண்டும்.

முதல் இரு அணிகளில் ஒரு வரம்புக்குட்பட்ட எண்ணிக்கையிலான மாணவர்கள் சேர்க்கப்பட்டார்கள். ஆனால் அதன் பிறகு இத்திட்டத்தில் தொழிலாளர் வகுப்புகளை சேர்ந்தவர்களை மட்டுமே சேர்த்துக் கொள்வதென முடிவுசெய்யப்பட்டது. அதுமுதல் இவ்விதி செயலாக்கப்பட்டுள்ளது.

*சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:* இந்த இளைஞர்களில் சிலருக்கு வேலை கிடைக்கவில்லை என்பது உண்மையல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எனக்குக் கிடைத்துள்ள தகவல் என்னவென்றால் மிகப் பலருக்கு வேலை கிடைத்துள்ளது.

*பாபு பைஜ்நாத் பஜோரியா:* எத்தனை பேர் திரும்பியுள்ளனர்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* 149 பேர் திரும்பியிருப்பதாக நம்புகிறேன்.

*பாபு பைஜ்நாத் பஜோரியா:* மாண்புமிகு உறுப்பினர் அறிவு நுட்பம் என்று குறிப்பிட்டாரே, அதற்குப் பரிசோதனை என்ன?

*சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:* இந்தப் பயிற்சியாளர்களில் சிலருக்கு அவர்கள் இந்தப் பயிற்சிக்குப் போகும்முன் ஈட்டிக் கொண்டிருந்ததை விட குறைந்த ஊதியம் தருவதாகதச் சொல்லியிருப்பது உண்மையல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எனக்குத் தெரிந்த வரை, இல்லை.

*சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:* எத்தனை பேருக்கு வேலை கிடைக்கவில்லை என்பதை மாண்புமிகு உறுப்பினர் விசாரித்தறிவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எனக்குத் தெரிந்த வரை மிகச் சிலருக்கே வேலை கிடைக்கவில்லை.

*திரு. ஜமுனாதாஸ் எம். மேத்தா:* வேலைவாய்ப்புக்கு உத்தரவாதம் கொடுத்து அவர்கள் அனுப்பி வைக்கப்பட்டார்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* வேலை வாய்ப்புக்கு உத்தரவாதம் ஏதும் அளிக்கப்படவில்லை.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* போர் தொடர்பான தொழில்நுட்ப வல்லுநர்களாக பயிற்சி பெறுவதற்குப் பெவின் பயிற்சியாளர்களை அமர்த்துவது குறித்து அரசு பரிசீலிக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அம்பேத்கர் அதை நான் பரிசீலிப்பேன்.

# 8

## *பெவின் திட்டத்தில் ஷெட்யூல்டு வகுப்பு இளைஞர்களைச் சேர்த்துக் கொள்ளுதல்

*ராவ் பகதூர் என். சிவராஜ்:* (அ) பெவின் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்ட ஷெட்யூல்டு வகுப்பு இளைஞர்களின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள் கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஆ) இந்த வகுப்பினர் போதிய பிரதிநிதித்துவம் பெறச் செய்திட அரசு எடுக்க எண்ணியுள்ள நடவடிக்கைகள் என்ன?

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:* (அ) முதல் ஐந்து அணிகள் தொடர்பாக விவரங்கள் ஏதும் வைத்துக்கொள்ளவில்லை. விரைவில் பயணம் புறப்படப்போகும் ஆறாவது அணி குறித்து விவரங்கள் திரட்டப்பட்டு வருகின்றன. வருங்காலத்தில் அனைத்து அணிகள் பற்றியும் புள்ளி விவரங்கள் திரட்டி வைக்கப்படும்.

(ஆ) இத்திட்டத்தின்படி பயிற்சிக்குப் போட்டியிடுகிறவர்கள் தேசியப் பணித் தீர்ப்பாயங்களால் தெரிந்தெடுக்கப்படுகிறார்கள். இவ்வாறு தெரிந்தெடுக்கும்போது ஷெட்யூல்டு வகுப்புகளைச் சேர்ந்த அதிகாரி அல்லாத செல்வாக்கு படைத்தோரையும், குறிப்பாக உள்ளூர் சட்டமன்ற உறுப்பினர்களையும் தீர்ப்பாயத்துடன் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று அரசு இந்தத் தீர்ப்பாயங்களின் தலைவர்களுக்குத் தெரியப்படுத்தியுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1942 செப்டம்பர் 23 பக். 457

# 9

# *மத்திய பொதுப்பணித் துறையின் ஒப்புதல் பெற்ற ஒப்பந்தக்காரர்கள்

*ராவ் பகதூர் என். சிவராஜ்:* மத்தியப் பொதுப்பணித் துறையின் ஒப்புதல் பெற்ற பட்டியலில் வகைவாரியாக இடம்பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்களின் மொத்த எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா?

ஆ. இவர்களில் எத்தனைபேர் ஷெட்யூல்டு வகுப்புகளைச் சேர்ந்தவர்கள்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மத்தியப் பொதுப்பணித்துறையின் ஒப்புதல் பெற்ற பட்டியலில் வகைவாரியாக இடம்பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்களின் மொத்த எண்ணிக்கை கீழே தரப்படுகிறது:

| | |
|---|---|
| 1. கட்டட ஒப்பந்தக்காரர்கள்: | |
| வகை I (வரம்பு இல்லை) | 115 |
| வகை II (ரூ.50,000த்திற்கு கீழ்) | 236 |
| வகை III (ரூ.20,000த்திற்கு கீழ்) | 620 |
| மொத்தம் | 971 |
| 2. மின்சார ஒப்பந்தக்காரர்கள் : | |
| வகை I (ரூ.20,000த்திற்கு மேல்) | 28 |
| வகை II (ரூ.20,000த்திற்கு கீழ்) | 42 |
| மொத்தம் | 70 |
| தட்டுமுட்டுப் பொருட்கள் மற்றும் சுகாதார ஒப்பந்தக்காரர்கள் (வகைப்படுத்தல் இல்லை) | 130 |

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1942, செப்டம்பர் 23, பக். 458

(ஆ) தகவல் ஏதும் கிடைக்கவில்லை என்பது வருந்தத்திற் குரியதே. இந்துக்களின் பெயர்களையும் ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவர்களின் பெயர்களையும் வேறுபடுத்தி அறியமுடியவில்லை என்பதே காரணம். மேலும் ஒப்பந்தக்காரர்களிடம் அவர்களின் வகுப்பு குறித்து விசாரிக்கும் வழக்கமில்லை.

ராவ் பகதூர் என்.சிவராஜ்: மாண்புமிகு உறுப்பினரது விடையின் கடைசிப் பகுதியைப் பொருத்தவரை, தேவையான விசா ரணைகளை மேற்கொண்டு இவ் விஷயம் குறித்து முழுத் தகவல் பெறுவாரா?

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்: பெறுவேன்.

பாபு பைஜ்நாத் பஜோரியா: அரசு வகுப்பு அடிப்படை யில் ஒப்பந்தக்காரர்களை அமர்த்துகிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தகவல் கேட்கும் ஒரு வினாவிற்கு விடையளித்துக் கொண்டிருக்கிறேன், அவ்வளவு தான்.

பாபு பைஜ்நாத் பஜோரியா: என் வினாவிற்கு விடை வேண்டும். இத்தனை முஸ்லீம்கள், இத்தனை ஐரோப்பியர்கள், இத்தனை ஷெட்யூல்டு வகுப்பினர் என்று வகுப்பு அடிப்படையில் ஒப்பந்தக்காரர்கள் அமர்த்துவது அரசின் நோக்கமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இப்போது இந்தக் கேள்விக்கே இடமில்லை. நான் தகவல் மட்டுமே தருகிறேன்.

பண்டித லட்சுமி காந்த மைத்ரா: கட்டடப் பொருட்களும் வகுப்பு அடிப்படையில் உற்பத்தி மற்றும் கொள்முதல் செய்யப்படு கின்றனவா?

(விடை இல்லை)

# 10

## *ஊதிய வழங்கீடு சட்டத்தின்படி கூட்டரசு ரயில்வேக்களின் ஊழியர்களால் அல்லது அவர்கள் சார்பில் தரப்படும் விண்ணப்பங்கள்

1. திரு. முகமது அஸார் அலி: 1936 ஆம் ஆண்டின் ஊதிய வழங்கீடுச் சட்டத்தின்படி அமர்த்தப்பெற்ற அதிகாரிகளிடம் 1937 ஏப்ரல் 1க்கும் 1942 ஆகஸ்டு 31க்கும் இடையே கூட்டரசு ரயில் வேக்களின் ஊழியர்களால் அல்லது அவர்கள் சார்பில் தரப்பட்ட விண்ணப்பங்கள், அவற்றின் பின்வரும் விவரங்கள் அடங்கிய ஓர் அறிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து இந்தப் பேரவையில் வைத்திடுவாரா?

(அ) விண்ணப்ப எண்;

(ஆ) தரப்பினரின் விவரங்கள் அதாவது பெயர் மற்றும் முகவரி;

(இ) விண்ணப்பத்தில் தெரிவிக்கப்பட்டுள்ள குறைகள்;

(ஈ) கோரப்படும் துயர்தணிப்பின் அளவு;

(உ) அதிகாரி கண்ட முடிவுகள், மற்றும் அதிகாரியின் தகுதிகள்;

(ஊ) மேல்முறையீடு செய்யப்பட்டிருந்தால், மேல்முறை யீட்டு நீதிமன்றத்தின் முழு விவரத்துடன் மேல்முறை யீட்டின் முடிவு;

(எ) மறு ஆய்வு வேண்டப்பட்டிருந்தால், மறு ஆய்வு நீதி மன்றம் பற்றிய விவரங்களோடு மறு ஆய்வின் முடிவு.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கேட்கப்பட் டுள்ள தகவல் உடனே கிடைக்கக் கூடியதில்லை. அதனைத் திரட்டு வதற்கு தேவைப்படும் அவகாசமும் உழைப்பும் போர்க்காலத்தில் நியாயப்படுத்தக் கூடியவை அல்ல.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1942 செப்படம்பர் 24, பக். 507

# 11

## *டில்லி மாகாணத்துக்கு ஊதிய வழங்கீடு விதிகளின்படி அழைப்பாணைக் கட்டணம்

2. திரு. முகமது அஸார் அலி: 1938 ஆம் ஆண்டின் ஊதிய வழங்கீடு (கூட்டரசு ரயில்வேக்கள்) விதிகளின் விதி, 18, 1936 ஆம் ஆண்டின் ஐக்கிய மாகாணங்களின் ஊதியவழங்கீடு விதி 21, 1937 ஆம் ஆண்டின் டில்லி மாகாண ஊதிய வழங்கீடு விதி 21 ஆகியவற்றை சுட்டி, அதிகார அமைப்பினாலும் டில்லி மாகாணத் துக்கென குறித்துரைக்கப்படும் நீதிமன்றமும் எதிர்தரப்பை ஆணை யிட்டு அழைப்பதற்கான அழைப்பாணைக் கட்டணத்தின் தொகை யினை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள் கூர்ந்து தெரிவித்திடுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: குறிப்பிடப் பட்ட விதிகளின்படி எதிர்தரப்புக்கு முன்னறிவிப்புகள் விடுத்திட அழைப்பாணைக் கட்டணம் ஏதும் விதிக்க இயலாது என்று அரசுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது.

# 12

## +அச்சு மற்றும் எழுதுபொருள் அலுவலகத்தில் அரசிதழ் பதிவுபெற்ற முஸ்லீம் அதிகாரிகள் பற்றாக்குறை

23 சர் அப்துல் ஹலிம் குல்நாவி: (அ) இந்திய அரசின் அச்சு மற்றும் எழுதுபொருள் அலுவலகத்தில் அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகள் எத்தனைபேர் உள்ளனர் என்பதை மாண்புமிகு தொழி

★ மத்திய சட்டமன்றம் விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 24, 1942, பக். 507.

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 11, 1943 பக்.71

லாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா? அவர்களிடையே முஸ்லீம்கள் யாரேனும் உண்டா? இல்லையென்றால், ஏன் இல்லை?

(ஆ) அண்மையில் மத்திய எழுதுபொருள் அலுவலகத்தில் இரண்டாம் உதவிக் கட்டுப்பாட்டு அதிகாரி ஒருவரின் காலியிடம் வங்காளத்தைச் சேர்ந்த இந்துவாகிய சார்துணை ஆட்சியர் ஒருவரால் நிரப்பப்பட்டது என்பதும், முஸ்லீம் போட்டியாளர்களின் நியாயமான உரிமைக் கோரிக்கைகளை புறந்தள்ளியும், முஸ்லீம் பதவி அமர்த்தங்களுக்கு ஒரு விகிதாசாரத்தைக் காத்து வருவது தொடர்பான அரசுச் சுற்றறிக்கையை மீறியுமே இவ்வாறு செய்யப்பட்டது என்பதும் உண்மைதானா?

(இ) முஸ்லீம்களின் நலன் காக்க வேண்டி அரசிதழ் பதிவு பெற்ற முஸ்லீம் அதிகாரிகளின் இப்போதுள்ள விகிதத்தை அதிகப் படுத்துவதற்கு ஏதேனும் முயற்சிகள் எடுக்க அரசு எண்ணியுள்ளதா?

(ஈ) மைய எழுதுபொருள் அலுவலகத்தில் ஒரு துணைக் கட்டுப்பாட்டு அதிகாரிப் பதவியையும் மற்றொரு கண்காணிப்பாளர் பதவியையும் தோற்றுவிக்க அரசு எண்ணியிருப்பது உண்மைதானா? ஆம் என்றால், இந்த நியமனங்களை அரசு அருள்கூர்ந்து முஸ்லீம்களுக்கு ஒதுக்கித்தருமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (அ) மதிப்பிற்குரிய உறுப்பினர் எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை முழுவதையும் சுட்டுவதாகக் கொண்டால், அரசிதழ் பதிவுபெற்ற அதிகாரிகளின் எண்ணிக்கை 24. இப்போது இவற்றில் இரு பதவிகளை முஸ்லீம்கள் வகிக்கின்றனர். வினாவின் இறுதிப் பகுதி இங்கு எழவில்லை.

(ஆ) ஆம். இரண்டாம் பகுதிக்கான விடை 'இல்லை' என்பதே.

(இ) எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறையில் அரசிதழ் பதிவு பெற்றப் பதவிகள் அனைத்தும் தேர்வுநிலைப் பதவிகள் ஆகும். இந்தப் பதவிகளுக்கான நியமனங்கள் இப்போதுள்ள விதிகளின்படி தகுதிகளின் அடிப்படையில் தேர்ந்தெடுப்பதன் மூலம் செய்யப் படுகின்றன. இத்தகைய பதவிகளுக்கு முஸ்லீம்களின் விகிதத்தை உயர்த்துவதாக உறுதி அளிப்பது அந்த விதிகளுக்கு ஒத்துவராது.

(ஈ.) மத்திய எழுதுபொருள் அலுவலகத்தில் உதவிக் கட்டுப் பாட்டு அதிகாரியின் பதவி எதையும் கூடுதலாகத் தோற்றுவிக்கும் எண்ணம் இல்லை. அந்தப் பதவிக்கென மூன்று மாதத்துக்கு குறை வான காலத்துக்கு தற்காலிக அடிப்படையில் ஒரு கண்காணிப்பாளர் பதவிக்கு அண்மையில் ஒப்புதல் தரப்பட்டுள்ளது. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் தொடர்பான ஆணைகள் இவ்வளவு குறைந்த காலத் திற்கான தற்காலிகக் காலி இடங்களை நிரப்புவதற்கு பொருந்த மாட்டா. ஆகவே வினாவில் குறிப்பிட்ட பதவி ஒரு முஸ்லீமுக்கென ஒதுக்கீடு செய்யப்பட மாட்டாது.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இந்த அதிகாரிகளைத் தேர்ந் தெடுப்பது அரசுப்பணித் தேர்வாணையமா, அல்லது உயரதிகாரி களேதாமா? என்பதை மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு தேவை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** நியமனங்கள் பதவி உயர்வின் வாயிலாகச் செய்யப்படுகின்றனவா? என்பதையும், பதவி உயர்வைப் பொருத்தவரை ஆட்சேர்ப்புகள் நடைபெறுவது வகுப்பு அடிப் படையிலா? இல்லையா? என்பதையும் மாண்புமிகு உறுப்பின ரிடமிருந்து அறிய விரும்புகின்றேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வகுப்புவாரி விகிதாசாரம் பதவி உயர்வுகளுக்குப் பொருந்தாது.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** ஆகவே இந்நேர்வில் அதிகாரி கள் பதவி உயர்வின் வாயிலாக எடுக்கப்படுகிறார்களா? என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

# 13

## *கல்கத்தா மத்திய எழுதுபொருள் அலுவலகம் முதலானவற்றில் முஸ்லீம்கள் பற்றாக்குறை

24. சர். அப்துல் ஹலிம் குஸ்நாவி : (அ) கல்கத்தாவிலுள்ள மத்திய எழுதுபொருள் அலுவலகத்திலும், கல்கத்தா அச்சகத்திலும், மத்தியப் படிவங்கள் பண்டக சாலையிலும் எத்தனை கண்காணிப்பாளர்களும் தலைமை உதவியாளர்களும் பணியில் இருக்கிறார்கள் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள் கூர்ந்து தெரிவித்திடுவாரா? இந்த நியமனங்களில் முஸ்லீம்களுக்குள்ள விகிதாசாரம் என்ன?

(ஆ) கல்கத்தாவில் இடம்பெற்றுள்ள மைய எழுதுபொருள் அலுவலகம், கல்கத்தா அச்சகம், மத்திய படிவங்கள் பண்டகசாலை ஆகியவற்றில் தனித்தனியே ஒவ்வொன்றிலும் பணியாற்றும் உதவியாளர்கள் மற்றும் எழுத்தர்களின் மொத்தத் தொகை என்ன?

(இ) ஒவ்வோர் அலுவலகத்திலும் ஒவ்வொரு பணிப் பிரிவிலும் முஸ்லீம்களுக்கு உள்ள விகிதப் பங்கு என்ன?

(ஈ) மேற்கண்ட மூன்று அலுவலகங்கள் ஒவ்வொன்றிலும் புதிதாக எத்தனை உதவியாளர் பதவிகள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன? அவற்றில் எத்தனை இடங்கள் முஸ்லீம்களால் நிரப்பப்பட்டன?

(உ) பணியிலிருக்கும் முஸ்லீம்களின் எண்ணிக்கை அரசுச் சுற்றறிக்கையில் நிர்ணயித்துக் கூறப்பட்டிருக்கும் விகிதங்களுக்கு

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள் தொகுதி I, 1943 பிப்ரவரி 11, 1943 பக்.72

இணக்கமாக இல்லையென்றால் நிலைமையை சரிசெய்ய எம் முயற்சியும் செய்யப்படாதது ஏன்?

(ஊ) குறைந்தபட்ச கல்வித் தகுதிகளும் சொற்ப அலுவலக அனுபவமும் பெற்ற இளநிலை இந்து எழுத்தர்கள் சிலர் இந்த ஆண்டில் மத்திய எழுதுபொருள் அலுவலகத்தில் உதவியாளர் நிலைக்கு உயர்த்தப்பட்டனர், இதன் மூலம் முதுநிலை முஸ்லீம் எழுத்தர்களின் உரிமைகள் புறக்கணிக்கப்பட்டன என்பது உண்மைதானா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ), (ஆ), (இ), (ஈ) கோரப்பட்ட தகவல் அடங்கிய ஓர் அறிக்கை அவையின் அறிவிப்புப் பலகையில் வைக்கப்படுகிறது.

(உ) அரசுச் சுற்றறிக்கை நேரடி ஆள்சேர்ப்புக்குப் பொருந்தும், அது கடைபிடிக்கப்படுகிறது. சரிசெய்தல் என்ற கேள்விக்கே இடமில்லை.

(ஊ) இல்லை. உதவியாளர் பதவிகள் தகுதி அடிப்படையில் தேர்ந்தெடுப்பதன் மூலம் நிரப்பப்படுவதால் முதுநிலையாளர்களை புறக்கணிக்கும் கேள்விக்கு இடமில்லை.

மத்திய எழுதுபொருள் அலுவலகம், மத்தியப் படிவங்கள் பண்டக சாலை, கல்கத்தா அச்சகம் ஆகியவற்றில் பணியில் இருக்கும் உதவி யாளர்களை மற்றும் எழுத்தாளர்களின் எண்ணிக்கை, இந்த வகை இனங்களில் முஸ்லீம்களுக்குள்ள விகிதப்பங்கு, போர் காரணமாக தோற்றுவிக்கப்பட்ட உதவியாளர் பதவிகளின் எண்ணிக்கை ஆகிய வற்றைக் காட்டும் அறிக்கை.

(அ) கண்காணிப்பாளர் இருவர், தலைமை உதவியாளர்கள் பதின்மர். இவர்களில் யாரும் முஸ்லீம் இல்லை.

(ஆ), (இ).

| உதவியாளர்கள் | எண்ணிக்கை | முஸ்லீம்களின் விகிதப் பங்கு சதவீதம் |
|---|---|---|
| மத்திய எழுதுபொருள் அலுவலகம் | 31 | 9.7 |
| மத்தியப் படிவங்கள் பண்டகசாலை | 13 | 7.7 |
| கல்கத்தா அச்சகம் | 5 | இல்லை |
| **எழுத்தர்கள்** | | |
| மத்திய எழுதுபொருள் அலுவலகம் | 329 | 19.1 |
| மத்திய படிவங்கள் பண்டகசாலை | 166 | 21.1 |
| கல்கத்தா அச்சகம் | 49 | 20.4 |

| ஈ. | போரினால் தோற்றுவிக்கப் பட்ட உதவி யாளர் பதவிகள் | முஸ்லீம்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| மத்திய எழுதுபொருள் அலுவலகம் | 13, இதில் நிரப்பட்டவை 11 | 1 |
| மத்திய படிவங்கள் பண்டகசாலை | 9 (இதுவரை எதுவும் நிரப்பப் படவில்லை) | .... |
| கல்கத்தா அச்சகம் | இல்லை | இல்லை |

குறிப்பு:

மத்திய எழுதுபொருள் அலுவலகம் என்ற இனத்துக்கு நேராகத் தரப்பட்டுள்ள எண் விவரங்களில் எழுதுபொருள் பண்டகசாலைக் கிளை யில் வேலைசெய்யும் உதவியாளர்கள் மற்றும் எழுத்தர்களின் எண் ணிக்கையும் அடங்கும். இந்தக் கிளையில் வகுப்புவாரி ஆணைகள் 1942 ஜுன் 18 முதல் செயல்படுத்தப்பட்டன.

# 14

## *மத்திய எழுதுபொருள் அலுவலகத்தின் வேலை நேரம்

25. சர் அப்துல் ஹலிம் குஸ்நாவி: (அ) மத்திய எழுது பொருள் அலுவலகத்தின் வேலைநேரம் முப்பது நிமிடம் நீட்டப் பட்டிருப்பது உண்மைதானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஆ) சென்ற ரம்ஜானின் போது மத்திய எழுதுபொருள் அலுவலகத்தின் முஸ்லீம் ஊழியர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த முப்பது நிமிடச் சலுகை மறுக்கப்பட்டது உண்மைதானா? ஆம். என்றால் ஏன்?

(இ) மத்திய எழுதுபொருள் அலுவலகத்தின் குறிப்பிட்ட சில கிளைகளில் வேலைநேரம் மேலும் அறுபது நிமிடம் நீட்டிக்கப் பட்டது உண்மைதானா? ஆம் என்றால், அந்தக் கிளைகளின் ஊழியர்களுக்கு கூடுதல் நேரத்திற்கென மிகைநேரப்படி வழங்க அரசு சித்தமாக உள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) ஆம். இந்தச் சலுகை முன்பு ஸ்தல அரசாங்க ஆணை களை ஒட்டி வழங்கப்பட்டது. வேலைமுடியும் நேரம் முந்திவிட் டதைக் கருதி வங்காள அரசு இச்சலுகையைத் திரும்பப் பெற்றுக் கொண்டதால் 1942ல் அது மறுக்கப்பட்டது.

(இ) ஆம். இது ஒரு குறுகிய காலத்துக்கான தற்காலிக நட வடிக்கை. பாதுகாப்புத்துறை வழங்கல்கள் தொடர்பான வேலை நெருக்குதலை சமாளிப்பதற்காக, குறிப்பிட்ட சில கிளைகளின் ஊழியர்கள் கூடுதலாக ஒரு மணிநேரம் அலுவலகத்தில் இருக்கு மாறு கோரப்பட்டனர். தொழில்துறை அல்லாத ஊழியர்களுக்கு இப்படிப்பட்ட கூடுதல் மிகை நேரப்படி கொடுக்கும் வழக்கம் இல்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள் தொகுதி I, 1943, பிப்ரவரி 11, பக்.72-73

# 15

## *தொழிலாளர்களுக்கு குறைவான அகவிலைப்படி வழங்குவது தொடர்பான அறிவிப்பு

திரு. தலைவர்: (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அடுத்த வினாவும் திரு.ஜமுனாதாஸ் மேத்தாவின் பெயரில் உள்ளது. அவர் அவசர பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த ஒரு குறிப்பிட்ட செய்தி குறித்து விவாதிக்க விரும்புகிறார். அதாவது இந்திய அரசிடம் வேலை செய்கிற சுமார் 3 லட்சம் தொழிலாளர்களிடையே ஏற்பட்டுள்ள மிகக் கடுமையான அதிருப்தி குறித்து விவாதிக்க விரும்புகிறார். அந்தத் தொழிலாளர்களுக்கு அகவிலைப்படியாக அரை குறையான சொற்பத் தொகை ஒன்றை அறிவித்துள்ள இந்திய அரசு அவ்வாறு அறிவிப்பதற்குமுன் முறையே அத்தொழிலாளர்களின் தொழிற்சங்கங்களை கலந்துகொள்ளத் தவறியதுதான் அதிருப்திக்குக் காரணமாம்.

இந்த அறிவிப்பு எப்போது செய்யப்பட்டது?

**திரு. ஜமுனாதாஸ் எம்.மேத்தா:** இந்த ஆண்டு ஜனவரி 23 ஆம் நாள்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): சென்ற கூட்டத் தொடருக்குப் பிறகா?

**திரு. ஜமுனா தாஸ் எம்.மேத்தா:** ஆம் அய்யா.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): இத்துறைக்குப் பொறுப்பு வகிக்கும் உறுப்பினர் யார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): தொழிற்சங்கங்களைக் கலந்து கொள்ளத்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 12, 1943 பக்.169

தவறியது அவசரப் பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த விஷயம் என்று நான் நினைக்கவில்லை.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது திட்டவட்டமான விஷயம் அல்ல. ஏனென்றால் எதனாலும் அரசாங்கத்திற்கு எவ்விதக் கடப்பாடும் விதிக்கப்பட்டிருக்கவில்லை.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தங்கள் பதில் தகுதிப்படியான பதிலாக இருக்கலாம். இந்த அறிவிப்பு ஜனவரி 23 ஆம் நாள் செய்யப்பட்டது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அப்படித்தான்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): 3 லட்சம் தொழிலாளர்களிடையே பெரிதும் மனவருத்தம் ஏற்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இது ஒருவகையில் பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த செய்திதான் என்று தெரிகிறது. தீர்மானம் முறையானதே என்று தீர்ப்பு கூறுகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தத் தீர்மானத்துக்கு என் எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): எதிர்ப்பு தெரிவிக்கப்பட்டிருப்பதால் தீர்மானத்துக்கு அனுமதி வழங்கப்படுவதை ஆதரிப்பவர்கள் தத்தமது இடங்களில் எழுந்து நிற்பீர்களா?

(25 க்கு மேற்பட்ட உறுப்பினர்கள் எழுந்து நின்றனர்.)

அனுமதி வழங்கப்படுவதை 25க்குக் குறையாத உறுப்பினர்கள் ஆதரிப்பதால் இந்தத் தீர்மானத்தை மாலை 4 மணிக்கு அல்லது நிகழ்ச்சி நிரலில் உள்ள வேலை முன்னதாக முடிந்து விட்டால் அதற்கு முன்பே எடுத்துக் கொள்ளப்படும். இதுதான் அவையின் விருப்பமெனக் கொள்கிறேன்.

# 16

## *தொழிலாளர்களின் ஊதிய உயர்வு விதிமுறையை மேம்படுத்துதல்

*டாக்டர் சர் ஜியவுத்தீன் அகமது:* (அ) தொழிலாளர்களின் ஊதியம் எந்த விதிமுறையைக் கொண்டு நிர்ணயம் செய்யப்படு கிறது என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து உரைத்திடுவாரா?

(ஆ) ஒரு ரூபாயின் வாங்கும் திறன் பதினாறு அணாவி லிருந்து ஆறு அணாவாக குறைந்திருப்பதைக் கருத்தில் கொண்டு, தொழிலாளர்களின் அன்றாட ஊதியத்தை அதற்கேற்ற விகிதத் தில் உயர்த்திட இந்திய அரசு நடவடிக்கை ஏதும் எடுத்துள்ளதா? இல்லை என்றால் ஏன் இல்லை?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஊதியப் பிரச்சினை என்பது பொதுவாக வேலை கொடுப்பவருக்கும் தொழி லாளர்களுக்கும் இடையிலான ஒப்பந்தத்தை பொருத்தது.

(ஆ) வாங்கும் சக்தி குறைவதால் ஏற்படும் வாழ்க்கைச் செலவு உயர்வு, இந்திய நாடெங்கும் ஒரே சீராக இல்லை.

ஊதியத்தை உயர்த்தும்படி செய்வதற்கோ குறிப்பாக அக விலைப்படி ஏதும் வழங்குவதற்கோ இந்திய அரசு நடவடிக்கை எடுக்கவில்லை. இதற்கான காரணங்கள் பின்வருமாறு:

(1) சட்டப்படி குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயம் செய்யும் கொள்கையை அரசு இதுவரை ஏற்றுக் கொள்ளவில்லை. எந்த ஒன்றையும் கட்டாயப்படுத்தி செயலாக்குவதற்கு முன் இந்த விஷயத்தைக் கருதிப் பார்க்க வேண்டும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 14, 1943 பக்.267-68

(2) உள்ளபடியான வாழ்க்கைச் செலவை அளவிடுவதற்கு இந்தியாவெங்கிலுமான நம்பத்தக்க குறியீட்டு எண்கள் எதுவுமில்லை. ஆதலால் குறிப்பான அகவிலைப்படி ஏதும் குறித்துரைக்க முடியாது.

(3) வாழ்க்கைச் செலவிலான உயர்வு ஒரே சீராக இல்லாத நிலையில், எல்லா மாகாணங்களுக்கும் பொருந்தும்படியான ஒரு கொள்கையை மத்தியிலிருந்து வகுத்து விதிக்க முடியாது. மாநிலங்களில் பலவாறான நிலைமைகள் நிலவுவதை கருத்தில் கொண்டாக வேண்டும்.

தொழிலாளர் நல ஆணையர்கள் அமர்த்தப்பட்டிருப்பதும், போர்க்காலத்தில் நேரிடக்கூடிய பூசல்களைப் பொருத்து இந்தியப் பாதுகாப்புவிதிகளின்படி நடுவர் தீர்ப்புக்குச் செய்யப்பட்டுள்ள வழி வகையும் தொழிலாளர்களுக்கு நியாயமான வேலை நிலைமைகளை உறுதி செய்வதற்காக அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் ஆகும்.

**திரு. என்.எம்.ஜோஷி:** குறைந்தபட்ச ஊதியம் நிர்ணயம் செய்வதற்கு அரசு எப்போது சட்டமியற்றும் முயற்சியில் இறங்க எண்ணியுள்ளது என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்:** போர்க்காலத்தில் இப்படி எந்தச் சட்டத்தையும் இயற்ற இயலாது.

**திரு. என்.எம். ஜோஷி:** இவ்வகைச் சட்டம் இயற்றும் முயற்சிக்கு போர்க்காலத்தால் தோற்றுவிக்கப்படும் இடர்ப்பாடு என்ன என்று கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது ஒரு சர்ச்சைக்குரிய சட்டம்.

**திரு. ஹுசைன்பாய் ஏ. லால்ஜி:** வாழ்க்கைச் செலவையோ குறியீட்டு எண்ணையோ கண்டுபிடிப்பதற்கு முயற்சி ஏதும் செய்யப்பட்டதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குறியீட்டு எண்கள் கணக்கிடப்படும் மாகாணம் ஒன்றே ஒன்றுதான், அதாவது பம்பாய் மட்டும்தான்.

*திரு. என்.எம்.ஜோஷி:* வேலை நிறுத்தங்களுக்கும் கதவடைப்புகளுக்கும் தடை விதிக்கிற சட்டம் என்பது பூசலைத் தோற்றுவிக்கும் ஒரு நடவடிக்கை ஆகும் என்பதை அரசு உணர்ந்துள்ளதா? போர்க்காலத்தில் பூசலை அவசியமாகவே தோற்றுவிப்பது போர் முயற்சிக்கு நல்லதுதானா என்று கேட்க விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கேள்வியின் அடிப்படைக் கருத்து சரியென்று நான் கருதவில்லை.

*திரு. என்.எம்.ஜோஷி:* அடிப்படைக் கருத்தின் எந்தப் பகுதி சரி என்று கேட்க விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* சட்டப் புத்தகத்தில் ஒரு சட்டத்தை எழுதிவைத்திருப்பதாலேயே, மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறுவதுபோல் பூசல்களுக்கு வழி ஏற்படும் என்ற கட்டாயம் ஒன்றும் இல்லை.

*திரு. என்.எம். ஜோஷி:* அரசு இதை உணரவில்லையா என்று கேட்க விரும்புகிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* இப்படிக் கேட்பது வாதம் புரிவதாகும்.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* 2,00,000 க்கு மேற்பட்ட மக்கள் தொகை கொண்ட பெருநகரங்களின் விலைக் குறியீட்டு எண்ணைக் கண்டறிய அரசு முயற்சி எடுக்குமா என்னும் இந்தத் தகவல் நமக்கு முக்கியமானது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அரசு புள்ளி விவரங்கள் திரட்டுவதற்கு உதவும்படியான ஒரு சட்டம் நமக்கு இல்லையென்றால், இந்தியாவெங்கும் குறியீட்டு எண்கள் தயாரிக்கச் செய்திட இயலாது.

*திரு. என்.எம்.ஜோஷி:* அரசு புள்ளிவிவரங்கள் திரட்டுவதற்கு உதவும்படியான மத்திய சட்டமன்றத்தின் சட்டம் ஒன்று இருப்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா என்று கேட்க விரும்புகிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* அடுத்த வினா.

# 17

## *ஆலைத் தொழிலாளர்களிடையே அதிருப்தி

87. டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: (அ) பெருத்த லாபம் ஈட்டிவரும் முதலாளிகள் தங்கள் தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வின் வடிவில் உரிய பங்கு அளிக்காததால் ஆலைத் தொழிலாளர்களிடையே பெரும் அதிருப்தி நிலவுவது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு தெரியுமா?

(ஆ) யாருடைய உழைப்பைக் கொண்டு இலாபம் பெறப்படுகிறதோ அவர்களுக்கு அந்த இலாபத்தில் ஒரு பங்கை முதலாளிகள் வழங்கும்படி செய்வதற்கு மாண்புமிகு உறுப்பினர் என்ன நடவடிக்கை எடுத்துள்ளார்?

(இ) ஆலைத் தொழிலாளர்களிடம் காணப்படும் அமைதியின்மைக்கு அரசியல் உணர்வைக் காட்டிலும் அவர்களை வைத்து வேலைவாங்குபவர்களின் பொருளாதார நெருக்குதலே காரணம் என்பது மாண்புமிகு உறுப்பினருக்கு தெரியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இப்போது போல் விலைவாசி உயர்ந்து செல்லும் நிலையிலும், இலாபம் கிடைக்கும் நிலைமையிலும், தொழிலாளர்கள் ஊதிய உயர்வு கோருவதில் வியப்பில்லை. இத்தகைய கோரிக்கைகள் முன்வைக்கப்படுவது அரசுக்குத் தெரியும்.

(ஆ) தொழில்துறை அடையும் இலாபத்தில் ஒரு கணிசப் பங்கு மிகை இலாபவரியின் உருவில் அரசுக்கு போய்ச் சேருகிறது. முதலாளிகளுக்குக் கிடைக்கும் பங்கிலிருந்து, அவர்களில் பலர் போனஸ் வழங்குகிறார்கள். மேற்குரிய நோக்கத்திற்காக அரசு நடவடிக்கை ஏதும் எடுப்பது இப்போது அவசியம் என கருதவில்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாவதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 14, 1943, பக்.268

(இ) வினா விளங்கவில்லை.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: தங்கள் ஊழியர்களுக்ககு போனஸ் கொடுக்கும் தொழிற்சாலைகளின் பெயர்களை அரசு தெரிந்து கொண்டதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், தெரிந்து கொண்டோம். மாண்புமிகு உறுப்பினருக்கு அந்தத் தகவல் வேண்டு மென்றால் தரலாம்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: இந்தத் தொழிற்சாலை கள் அனைத்தும் இவ்விதம் போனஸ் கொடுக்கின்றனவா, அல்லது அவற்றில் சில மட்டும்தானா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய என் நண்பர் இவ்வினாவை எழுதிக் கொடுப்பாரானால், என்னால் அதுகுறித்து விவரமான தகவல் சேகரித்துத் தரமுடியும்.

# 18

## *ஒரு தொழிலாளியின் குடும்ப வரவு செலவுத் திட்டம்

88. டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: (அ) நாள் ஒன்றுக்கு எட்டணா சம்பாதித்து, இயல்பாக 6 பேர் அடங்கிய தன் குடும் பத்தைக் காப்பாற்ற வேண்டிய நிலையிலிருக்கும் ஒரு தொழிலாளி யின் 1943 ஆம் ஆண்டுக்கான இயல்பான குடும்ப வரவு செலவுத் திட்டத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள் கூர்ந்து அவையில் முன் வைத்திடுவாரா?

(ஆ) இத்தகைய குடும்பம் ஒன்று உட்கொள்ளும் தானிய அளவு என்ன? அதற்குத் தரவேண்டிய விலை என்ன?

(இ) தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்தி வேலை

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 14, 1943 பக். 268-69.

வாங்குவோர் அந்தத் தொழிலாளர்களுக்கு உணவு கொடுப்பதற்காக எடுத்துள்ள நடவடிக்கை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தொழிலாளிக்கு இந்தியாவெங்கும் பொருந்தும்படி ஒரே சீரான வரவு செலவுத்திட்டம் என்று எதுவுமில்லை. எந்த ஒரு பகுதிக்கென்றும் **1943** ஆம் ஆண்டுக்கான குடும்ப வரவு செலவுத் திட்ட விவரங்கள் ஏதும் வழங்க இயலாமைக்கு வருந்துகிறோம். மதிப்பிற்குரிய உறுப்பினர் விரும்பினால், முன் சென்ற சில ஆண்டுகளில் பம்பாயில் குடும்ப வரவு செலவுத் திட்டங்களின் புள்ளிவிவரங்களை வழங்க முடியும்.

(ஆ) புள்ளி விவரங்கள் இல்லாத நிலையில் ஒரு தொழிலாளியின் குடும்பம் உட்கொள்ளும் தானிய அளவு என்ன என்பதை கூற இயலாது. உணவு விலைகளும் பகுதிக்கு பகுதி மாறுபடும்.

(இ) முதலாளிகள் பலர் தானியக் கடைகள் அல்லது உணவு விடுதிகள் திறந்துள்ளார்கள். இது மிகவும் விரும்பத்தக்கது என்று இந்திய அரசு முதன்மையான அனைத்திந்திய தொழில் நிர்வாகிகள் சங்கங்களுக்கு அறிவுறுத்தியுள்ளது. இத்துடன் இணைக்கப்பட்டுள்ள அறிக்கை இதுவரை இந்திய அரசுக்கு கிடைத்துள்ள தகவலின் சுருக்கத்தைத் தருகிறது.

## அறிக்கை

(இது கடைசியாகக் கிடைத்துள்ள தகவலே தவிர, நாளது வரையிலானதன்று)

**சென்னை:** 33 தொழிற்சாலைகளில் தானியக் கடைகள் உள்ளன. அவற்றில் 13 தொழில் நிர்வாகிகளால் திறக்கப்பட்டவை, 18 தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்களால் திறக்கப்பட்டவை, இவற்றில் பலவற்றுக்குத் தொழில் நிர்வாகிகளின் உதவி உள்ளது.

50 தொழிற்சாலைகளில் நிர்வாகிகள் நெருக்கடி நிலைக்கென இன்றியமையா உணவுப்பண்டங்களை சேம இருப்பில் வைத் துள்ளனர்; 6 தொழிற்சாலைகளில் நெருக்கடியின்போது தொழிலாளர்களுக்கு சமைத்த உணவு வழங்குவதற்கும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

இரு தொழிற்சாலைகளில் தொழிலாளர்களுக்காக நிர்வாகிகள் உணவு விடுதிகள் நடத்துகின்றனர்.

*வங்காளம்:* 146 தொழிற்சாலைகளில் தானியக்கடைகள் உள்ளன, அவற்றில் நெருக்கடி கால சேம இருப்புகளும் உள்ளன. இவை தவிர 35 தொழிற் சாலைகள் நெருக்கடி கால தானிய இருப்புகளை மட்டும் வைத்துள்ளன. நெருக் கடியின்போது சமைத்த உணவு வழங்குவதற்கான ஏற்பாடுகள் 73 தொழிற்சாலை களில் உள்ளன.

*பம்பாய் / பஞ்சாப்:* விவரமான தகவல் கிடைக்கவில்லை. ஆனால் பல தொழில் நிர்வாகிகள் தானியக் கடைகள் திறந்திருப்பதாகவும், இயன்றவரை நெருக்கடி கால தானிய இருப்புகள் வைத்துக் கொள்ள ஏற்பாடுகள் செய்திருப்ப தாகவும் தெரிகிறது.

*பீகார் :* முன்னணியில் இருப்பவர்கள் உட்பட 7 தொழில் அதிபர்கள் தங்கள் தொழிலாளர்களுக்காக தானியக்கடைகள் திறந் துள்ளார்கள். இயன்றவரை நெருக்கடி கால உணவு தானிய இருப் புக்களும் வைத்துள்ளார்கள். பிரபலமான ஒரு நிர்வாகி தானியக்கடைகள் நடத்துவதற்காக கூட்டுறவு தொழிலாளர் சங்கத் துக்கு மூலதனம் கொடுத்துள்ளார். இருப்பு வைப்பதற்கு குறைந்த வாடகையில் இடமும் கொடுத்துள்ளார்.

*ஐக்கிய மாகாணங்கள்:* பெரிய கான்பூர் தொழிற்சாலைகள் அனைத் திலும் தானியக்கடைகள் உள்ளன. இயன்றவரை நெருக்கடி கால சேம இருப்பு களும் உள்ளன.

*மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்:* தொழிலதிபர்கள் சுமார் 14 தானியக் கடைகள் திறந்துள்ளனர். ஒருவர் இப்படி ஒரு கடை திறந்திட தொழிற் சங்கத்திற்கு உதவி வருகிறார். சுமார் 7 முக்கிய தொழிலதிபர்களும், கூட்டுறவுச் சங்கத்தினரும் நெருக்கடிக்கென உணவு தானியங்கள் சேமித்து வைக்கும் ஏற்பாடுகள் செய்துள்ளனர் அல்லது செய்து வருகின்றனர்.

*சிந்து:* கராச்சியிலும் (சிந்து) ஹைதராபாத்திலும் 7 முன்னணித் தொழி லதிபர்கள் தானியக்கடைகள் திறந்துள்ளனர்.

அனைத்து இன்றிமையாத தொழில்களின் அதிபர்களும் நெருக்கடி காலத்துக்கென சமைக்கும் ஏற்பாடுகளுடன் கூடிய உணவுப் பண்ட இருப்பு களை தொழிற்சாலை வளாகத்திற்குள் வைத்துக்கொள்ளுமாறு கூறப்பட்டுள் ளது. முக்கியத் தொழிலதிபர்கள் அவ்வாறே செய்துள்ளார்கள்.

கராச்சியில் முன்னணி நிறுவனம் ஒன்று அதன் ஊழியர்களுக்குச் சமைத்த உணவும் பாலும் வழங்குவதற்கான உணவு நிலையம் அமைத்துள்ளது.

*அசாம்:* ஆலைத் தொழிலதிபர்கள் தொழிலாளர்களுக்கெனத் தானியக் கடைகள் திறந்தும் இன்னபிற வழிகளிலும் உணவுப் பண்டங்கள் வழங்குவதற்குப் போதிய ஏற்பாடுகள் செய்துள்ளனர்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** ஏழைகளுக்கென விலைகள் நிர்ணயிப்பதில் தொழிலாளர் நலத்துறைக்கு பங்கேதும் உண்டா என்று அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை.

# 19

## *தொழிலாளர்களுக்கு இன்றியமையாப் பண்டங்கள் கிடைக்கச் செய்வதற்கான நடவடிக்கைகள்

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* (அ) தொழிலாளர்களின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்களை, குறிப்பாக உணவுப் பொருட்களை கிடைக்கச் செய்து அவர்களின் நலன் காத்திடத் தொழிலாளர் நலத்துறை என்ன நடவடிக்கை எடுத்துள்ளது என்பதை அத்துறைக்கான மாண்புமிகு உறுப்பினர் அருள்கூர்ந்து உரைத்திடுவாரா? எந்த நடவடிக்கையையும் எடுக்கவில்லையென்றால் அது ஏன்?

(ஆ) ஏழைகள் அவர்கள் பெறும் ஊதியத்துக்கு கட்டுப்படியாகக்கூடிய விலைகளில் போதிய உணவுப்பொருள் பெறுவதை உறுதி செய்திட மாண்புமிகு உறுப்பினர் எடுக்க எண்ணியுள்ள நடவடிக்கைகள் என்ன? எதுவும் இல்லையென்றால், ஏன்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மற்றும் (ஆ). இந்தப் பிரச்சினை கடந்த சில காலமாகவே அரசின் கவனத்தில் இருந்துதான் வருகிறது. இப்போது உணவுத் துறையில் அது பரிசீலிக்கப்பட்டு வருகிறது. இன்றியமையாத் தொழில்களில் ஈடுபட்டுள்ள ஆலைத் தொழிலாளர்கள் உட்பட இன்றியமையா சிவில் ஊழியர்களுக்கு பொருள் வழங்கலில் முன்னுரிமை அளிக்குமாறு மாகாண அரசுகளுக்கு கட்டளையிடப்பட்டுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 14, 1943, பக்.269.

# 20

## *தொழிலாளர்களின் பொருளாதார நிலைமையை மேம்படுத்தும் நடவடிக்கைகள்

90. டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: (அ) தொழிலாளர் களின் பொருளாதார நிலைமையை மேம்படுத்துவதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளார் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அருள்கூர்ந்து தெரிவித்திடுவாரா?

(ஆ) தொழிலாளர்களின் நலன்களை அவர் எவ்விதம் பாது காக்க எண்ணியுள்ளார்?

(இ) தொழிலாளர் சங்கங்களைத் திருத்தி அமைக்கவும் அவை தம் சொந்த நலன்களை காத்துக் கொள்ளும்படி செய்யவும் அவர் எண்ணி உள்ளாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) சட்டத்துறை, ஆட்சித்துறை இரண்டிலுமே எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளின் வாயிலாக அரசானது தொழிலாளர்களுக்கு நியாயமான நிலைமை களை உறுதி செய்ய முயன்றுள்ளது. பத்திரிகையாளர்களை நான் சந்தித்தபோது வெளியிடப்பட்டப் பத்திரிகைக் குறிப்பின் பிரதி ஒன்று மதிப்பிற்குரிய உறுப்பினரின் தகவலுக்காக இணைத்துத் தரப் பட்டுள்ளது. நிலைமையை சீர் செய்வதற்கான வழிவகைகளை அதிலிருந்து ஓரளவு தெரிந்து கொள்ளலாம். இதற்கு மேல் சில குறிப்பிட்ட விஷயங்கள் குறித்து விவரமான தகவல் ஏதும் வேண்டு மென்று மதிப்பிற்குரிய உறுப்பினர் விருப்பப்பட்டால், அது அவருக்கு வழங்கப்படும்.

(ஆ) இதற்கு ஏற்கனவே (அ) பிரிவில் விடையளித்தாயிற்று.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 16, பக். 270-71.

(இ) தொழிற்சங்கங்களை திருத்தி அமைப்பது அரசின் வேலையன்று.

## *போர்க்கால இந்தியாவில் தொழிலாளர் நலம்

*உதவித் தொழிலாளர் நல அலுவலர்கள் பலர் அமர்த்தப் பட்டிருப்பதையும், அவர்கள் விரைவில் முக்கியத் தொழிற் பகுதிகளுக்கு அனுப்பப்பட இருப்பதையும் கருத்தில் கொண்டு போர்க்கால இந்தியாவில் தொழிலாளர் நலமேம்பாட்டிற் காக செய்யப்பட்டு வருவதை கணக்கெடுத்துப் பார்க்கலாம்.*

*அரசாங்கத்தின் வேலை அரசாள்வதுதான், சட்டம் ஒழுங்கைக் காப்பதுதான் என்ற பழைய கருத்தாக்கம் ஒழிந்து, மக்களின் பொருளியல், பண்பாட்டியல் நல்வாழ்வில் ஆட்சிக்குள்ள பொறுப்பை ஒப்புக்கொள்ளும் புதிய லட்சியம் பிறந்துள்ளது. இந்தியாவில் தொழிலாளர் நலம் என்பது முக்கியமாக மாகாண அதிகாரத்துக்குட்பட்டதே, மத்தியில் இருக்கும் எங்களைப் பொறுத்தவரை, முக்கியமாக தொழிலாளர் நலச் சட்டங்களை ஒரே சீராக்குவதும், இந்தியாவுக்கு நடைமுறைப் பொருத்த முள்ள சர்வதேசத் தொழிலாளர் நல அலுவலகத்தின் ஒப் பந்தங்களை கடைப்பிடிப்பதுமே இதற்குமுன் எங்கள் பொறுப் பாக இருந்து வந்தது. நம் சட்டங்கள் அனைத்தளாவிய தன்மை கொண்டிருந்த போதிலும் பெரும்பாலும் பணி நிலைமைகள் மற்றும் தொழில் உறவுகளுக்கு அப்பால் செல்வதில்லை. அந்த அளவுக்கு ஊதியம், தொழிலாளர் நலம் போன்ற செய்திகளில் கவனம் செலுத்துவதில்லை.*

*போர்க்காலத்தில் தொழிலாளர் உரிமைகளை ஓரளவுக்குக் கட்டுப்படுத்துவது உற்பத்தியின் தொடர்ச்சியை உறுதிசெய் வதற்கு அவசியமாகும். ஆனால் அந்த அவசியமான கட்டுப் பாடுகளை செயல்படுத்தும்போதே எங்களால் தொழிலாளர் களுக்கு சில பெரிய நன்மைகளும் செய்துதர முடிந்துள்ளது. இவ்வாறு இன்றியமையாப் பணிகள் பராமரிப்பு அவசரச்*

---

★ மேலது, பத்திரிகைக் குறிப்பு, 1942 அக்டோபர் 30, (மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த அறிக்கையின் சுருக்கம்).

*சட்டத்தின்படி தொழிலாளர்கள் வேலையை விட்டுச் செல்லக் கூடாது. அதேபோது இந்த அவசரச் சட்டம் இன்றியமையாத் தொழில்களில் வேலைசெய்யும் ஆட்களுக்கு நியாயமான வேலை நிலைமைகளை உறுதிசெய்கிறது. தொழில் நுட்பப் பணியாளர்களை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்வதற்கு வழிவகைசெய்யவேண்டியிருந்தது. ஆனால் இங்கேயும் அவர்களின் நியாயமான பணி நிலைமைகளை உறுதி செய்வதற்குச் சட்டத்தில் வழிவகை செய்யப்பட்டது. அவ்வாறே அறிவிப்பு இல்லாத வேலைநிறுத்தங்கள் சட்ட விரோத மாக்கப்பட்டுள்ளபோதே, நடுவர் தீர்ப்புக்கு விடுவ தற்கும் போதிய வழிவகை செய்யப்பட்டுள்ளது. இத்தகைய நடுவர் தீர்ப்பின் முடிவுகளை செயலாக்குவதற்கும் அதிகாரம் தரப்பட்டுள்ளது.*

*ஆகவே தொழிலாளர்களுக்கு சில கட்டுப்பாடுகள் விதிக்கப் பட்டுள்ள அதேசமயம் நியாயமான வேலை நிலைமைகளை உறுதிசெய்யும் அரசின் அதிகாரங்கள் வளர்ந்துள்ளன. இதன் தாக்கம் நிலைத்து நீடிக்க வாய்ப்பு உள்ளது.*

*இங்கு மற்றொரு விஷயத்தையும் சுட்டிக்காட்ட வேண் டும்; அதாவது யுத்தத்தில் பல தீய விளைவுகளும் பல நல்ல விளைவுகளும் ஏற்பட்டுள்ளன. நல்ல விளைவுகளில் தொழி லாளர் நலத்துறையின் பயிற்சித்திட்டங்களையும், தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களை மேற்பயிற்சி பெறுவதற்கு இங்கி லாந்துக்கு அனுப்பும் நூதன அனுபவத்தையும் இவ்வகையில் இங்கு முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். இவ்விதம் பயிற்சி பெற்றவர்கள் பெவின் இளைஞர்கள் எனப்படுகின்றனர். பெவின் பயிற்சித் திட்டப்படி இந்தியத் தொழிலாளர்கள் இங்கிலாந்தில் பயிற்சிபெறுவதால்தான் இவர்கள் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர். இவர்கள் இங்கிலாந்தில் தங்கியிருந்த போது, பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கத்தின் நிலைமை களையும் அவர்களது அமைப்புகளையும் பற்றித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றனர்; அதுமட்டுமன்றி, அங்கு பயிற்சிபெற்ற காரணத்தால் அவர்கள் தங்களது பழைய ஊதி யத்தைப்போல் தற்போது சராசரியாக இரண்டரை மடங்கு அதிகஊதியம் பெறுகின்றனர். 1943 ஜூன் மாதத்திற்குள்*

இந்தியாவில் 70,000 தொழிலாளர்களை தேர்ச்சிபெற்ற தொழிலாளர்களாகப் பயிற்றுவிக்கும் திட்டம் இன்னும் அதிக பலனை அளிக்கக்கூடும்; ஏனென்றால் நாட்டின் பயிற்சி பெற்ற தொழிலாளர்களின் எண்ணிக்கை இவ்விதம் பெருமளவுக்கு அதிகரிப்பது யுத்தப் பிற்காலத்தில் இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரியும்.

நமது புதிய தொழிலாளர் சேமநல அமைப்பை எடுத்துக் கொண்டால், என்னுடைய சகாவான மாண்புமிகு சர் பிரோஸ் கான் நூன் ஒரு மிகச்சிறந்த தொழிலாளர் நல ஆலோசகரைத் தேர்ந்தெடுத்துள்ளார்; இது இந்த இலாகா புதிய ஊக்கத்தையும் உத்வேகத்தையும் பெறும் என்பதை எடுத்துக்காட்டுகிறது. அந்த ஆலோசகர் வேறுயாருமல்ல. திரு.ஆர்.எஸ். நிம்பகர்தான் அவர். திரு.நிம்ப்கர் தம் வாழ்நாள்முழுதும் ஒரு தேர்ந்த, தெளிந்த தொழிலாளர் தலைவராக இருந்து வருபவர்; தொழிலாளர்களின் நலன்களுக்காக பன்முறை சிறை ஏகியவர்; இந்தியாவின் மிகப்பெரிய தொழிற்சங்கங்களின் ஒன்று பம்பாய் கிர்ணி காம்கார் தொழிற்சங்கமாகும். இதில் அவர் ஆற்றிய அரும்பெரும்பணி தொழிலாளர்களை அணிதிரட்டுவதில் அவருக்குள்ள நேர்நிகரற்ற திறமையை எடுத்துக்காட்டுவதாக இருந்தது. பம்பாய் மாநகராட்சியின் உறுப்பினராக இருந்து தமது நகரத்துக்கு அவர் ஆற்றிவரும் தொண்டும் போற்றுதற்குரியது. இதுவன்றி, சர் பிரோஸ் கான் நூன் தலைமையில் சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டில் பங்கு கொண்ட இந்தியப் பிரதிநிதிகள் குழுவிலும் அவர் ஓர் உறுப்பினராக இருந்தவர். இத்தகைய பல சிறப்புகள் பெற்றவரை தற்போது ஓர் அரசு அலுவராகப் பெற்றிருப்பது நமது நற்பேறு என்றே கூறவேண்டும்; அவரது சேவையை நாம் பெருமளவுக்குப் பயன்படுத்திக் கொள்வோம் என்பதை நீங்கள் உறுதியாக நம்பலாம். திரு.நிம்ப்கருக்கு உதவியாக இதுவரை ஏழு துணைத் தொழிலாளர் நல அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருப்பதிலிருந்தே அவரது பணியின் சிறப்பினைத் தெரிந்து கொள்ளலாம். கடந்த மூன்று அல்லது நான்கு தினங்களாகவே இந்தப் புதிய தொழிலாளர்நல அதிகாரிகள் டில்லியில் தொழிலாளர் நல இலாகாவில் தங்கி, தாங்கள் ஆற்றவேண்டிய பணியைப் பற்றி பரிச்யம் செய்துகொண்டு வருகின்றனர். கூடியவிரை

*வில் எட்டாவது ஓர் அதிகாரி நியமிக்கப்படுவார் என எதிர் பார்க்கப்படுகிறது. விரைவிலேயே இவர்கள் அனைவரும் பல்வேறு பகுதிகளுக்கு அனுப்பப்படுவர்; அங்கு அவர்கள் மத்திய அரசாங்கத்தின் சார்பில் தொழிலாளர்களுடன் தொடர்பு களைப் பராமரித்து வருவார்கள். அவர்களது பணி இருவகைப் பட்டது. ஒன்று, இந்தியாவின் பல்வேறு பிரதேசங்களில் உள்ள தொழிலாளர்களின் நிலைமைகளையும், அவர்களது உணர்வு களையும், குறிப்பாக அவர்களுக்குள்ள மனக்குறைகளையும் மத்திய அரசாங்கத்துக்குத் தெரிவிப்பது; இரண்டு, தொழி லாளர் பிரச்சினைகளில் மத்திய அரசின் கொள்கையைத் தொழிலாளர்களுக்கு எடுத்துரைப்பது. ஏ.ஆர்.பி. ஏற்பாடு களை உயர் திறனுக்கு உயர்த்துவதில் தொழிலாளர்களின் ஒத்துழைப்பை நாடிப்பெறுவதிலும் அவர்கள் உதவ முடியும்.*

*தொழிலாளர் நலத்துறை பெரும்பாலும் மாகாணம் சம்பந்தப் பட்டது என்றாலும், இதுவிஷயத்தில் சில குறிப்பிட்ட அம்சங் களை மத்திய அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரு வதற்கு இந்த அதிகாரிகளின் பணிபெரிதும் உதவும் என்று நம்பப்படுகிறது. அதுமட்டுமன்று, அரசாங்கக் கொள்கையின் பிரதானக் கோட்பாடு ஒன்றை அதாவது முதலாளி, தொழிலாளி, அரசாங்கம் ஆகியோரிடையான முத்தரப்பு ஒத்துழைப்பை மேம்படுத்துவதற்கும் இவர்களது பணிதுணைபுரியும். நமது முதல் முத்தரப்பு மாநாட்டை கடந்த ஆகஸ்டு மாதம் நடத்தி னோம். இந்த மாநாட்டின் நிரந்தரக்குழு டிசம்பர் மாதம் கூடும்; இத்தகைய கூட்டங்கள் எதிர்காலத்தில் அடிக்கடி நடைபெறும் என்றும், நாடு முழுவதும் நன்கு ஒருங்கிணைந்த முன்னேற்றமடைந்த ஒரு தொழிலாளர் நலக் கொள்கையைக் கடைப்பிடிப்பதற்கு இது வழிவகை செய்யும் என்றும் நம்பு கிறோம்.*

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** கேள்வியின் பகுதி (இ) யைப் பொறுத்தவரையில், இது சம்பந்தமாக ஏதேனும் சட்டம் இயற்றும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா என்று அறிய விரும்பு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், உண்டு.

# 21

## * மத்தியப் பொதுப்பணித்துறையில் பொறியாளர்கள் நியமனத்தின் வகுப்புவாரி இயைபு

*100. மௌல்வி முகமது அப்துல் கனி:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தருவதற்கு முன்வருவாரா:

(அ) கடந்த 3 ஆண்டுகளில் ஒவ்வொரு மாகாணத்தின் பொதுப்பணித் துறையிலிருந்து மத்தியப் பொதுப்பணித் துறையின் பொறியியல் பிரிவுக்குத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்யப்பட்ட அதிகாரிகளின் எண்ணிக்கையும், அவர்கள் எந்த இனங்களையும் வகுப்புகளையும் சேர்ந்தவர்கள் என்ற விவரங்களும்;

(ஆ) இத்தகைய தேர்வுகள் மற்றும் நியமனங்கள் விஷயத்தில் பின்பற்றப்பட்ட விதிமுறைகள்;

(இ) பணிநியமனங்களின் வகுப்புவாரி இயைபு சம்பந்தமான 1934 ஆம் வருட உள்துறை தீர்மானம் இத்தகைய நியமனங்களுக்குப் பொருந்துமா;

(ஈ) மேலே கூறிய 'இ' பகுதிக்கான பதில் எதிர்மறையாக இருக்குமானால் அதற்கான காரணமும், இது சம்பந்தமாக அரசாங்கம் பிறப்பித்த ஆணையும்;

(உ) மத்தியப் பொதுப்பணித் துறையின் பொறியியல் பிரிவிலுள்ள மொத்த அதிகாரிகளும், இவர்களில் முஸ்லீம்கள் மற்றும் சீக்கிய அதிகாரிகளின் எண்ணிக்கை விவரமும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஒவ்வொரு பிரிவையும் சேர்ந்த அதிகாரிகள் பற்றிய விவரங்களைச் சேகரிப்பதற்கு நிறைய நேரமும் மிகுந்த முயற்சியும் தேவைப்படும், யுத்த காலத்தில் இவ்வாறு செய்வது நியாயமல்ல, உகந்ததுமல்ல என்று

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943 பிப்ரவரி 16, பக். 279.

அரசாங்கம் கருதுகிறது. எனினும் ஒரு விவரத்தை மட்டும் இங்கு என்னால் கூறமுடியும். அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகளின் எண்ணிக்கை 83. இவர்களின் இனவிவரம் வருமாறு. ஐந்து பேர் ஐரோப்பியர்கள், மற்றவர்கள் இந்தியர்கள். இந்தியர்களின் வகுப்புவாரி விவரம்: இந்துக்கள் 61, முஸ்லீம்கள் 10, சீக்கியர்கள் 2, ஏனையோர் 10.

(ஆ) நிரந்தர அடிப்படையில் மேற்கொள்ளப்பட்ட மூன்று நியமனங்களைப் பொறுத்தவரையில், சமஷ்டி அரசுப்பணி ஆணையத்தைக் கலந்தாலோசித்தும், அரசுப் பணிகளில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் சம்பந்தமாக உள்துறையின் 1934 ஆம் வருடத் தீர்மானத்தை அனுசரித்தும் அதிகாரிகளின் நியமனம் மேற்கொள்ளப்பட்டது. ஏனைய நியமனங்கள் யாவும் தற்காலிகமானவை; சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சில குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றும் பொருட்டு மாகாண அரசாங்கங்களிடமிருந்து இரவலாகப் பெறப்பட்டவர்கள். இது விஷயத்தில், இந்திய அரசாங்கத்தின் அவ்வப் போதைய தேவைகளைக் கருத்தில்கொண்டு மாகாண அரசாங்கங்களே தகுந்த அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்து இந்திய அரசாங்கத்தின் பொறுப்பில் ஒப்படைக்கின்றன.

(இ) கேள்வி (ஆ) வுக்கு அளிக்கப்பட்டுள்ள பதிலில் குறிப்பிடப்பட்டிருக்கும் தற்காலிக நியமனங்களைப் பொறுத்தவரையில் விதிமுறைகள் ஏதும் இல்லை. ஆனால் மேலேகூறிய நிரந்தர நியமனங்கள் சம்பந்தமாக சில விதிமுறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன.

(ஈ) ஒரு குறிப்பிட்ட காலத்திற்குச் சில பணிகளைச் செய்வதற்கு அனுப்பப்பட்டு, பின்னர் அப்பணிமுடிந்ததும், தமது பழைய பதவிகளுக்குத் திரும்புவோருக்கு உள்துறையின் 1934 ஆம் வருடத் தீர்மானம் பொருந்தாது.

(உ) அரசிதழ் பதிவுபெற்ற மொத்த அதிகாரிகள் 174 பேர், இவர்களில் 18 பேர் முஸ்லீம்கள், 8 பேர் சீக்கியர்கள், அரசிதழ் பதிவு பெறாத ஊழியர்கள் சம்பந்தப்பட்ட புள்ளிவிவரங்களை உடனடியாகச் சேகரித்துத் தர இயலவில்லை.

மௌல்வி முகமது அப்துல் கனி: மத்தியப் பொதுப்பணித் துறைக்கு பீகார் பொதுப்பணித் துறையிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட அதிகாரிகள் எத்தனைபேர் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: இதற்கு எனக்கு முன்னறிவிப்பு தேவை.

# 22

## *மைக்கா ஏற்றுமதி விஷயத்தில் ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்துக்கும் அமெரிக்க மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனத்துக்குமுள்ள ஏகபோக உரிமை

*104. பாபு பைஜ்நாத் பஜோரியா:* (அ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனமும், அமெரிக்க மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனமும் மட்டுமே மைக்காவை ஏற்றுமதி செய்யமுடியும், வேறு எந்த நிறுவனமும் இந்தியாவுக்கு வெளியே மைக்காவை ஏற்றுமதி செய்ய அனுமதிக்கப்படுவதில்லை என்பது உண்மையா?

(ஆ) எனது மேலே குறிப்பிடப்பட்டக் கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலானால், மைக்காவை ஏகபோகமாக ஏற்றுமதி செய்யும் உரிமை மேலே கூறப்பட்ட அயல்நாடு நிறுவனங்களுக்கு என்ன காரணங்களுக்காக, எத்தகைய நிபந்தனைகளின் பேரில் வழங்கப் பட்டது?

(இ) ஏற்றுமதி சம்பந்தப்பட்ட இத்தகைய கட்டுப்பாடுகளின் விளைவாக இந்த நிறுவனங்கள் மைக்காவை இந்தியாவில் மிகக் குறைந்த விலைக்கு வாங்கி, அதனை அமெரிக்காவிலும் ஏனைய நேசநாடுகளிலும் மிக அதிகவிலைக்கு விற்று அபரிதமாக லாபம் ஈட்டி வருவதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(ஈ.) இந்த நிறுவனங்கள் அரசுநிறுவனங்களா அல்லது தனியார் நிறுவனங்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 16, 1943, பக்கங்கள் 281-282.

*(ஆ) இங்கு இந்தக் கேள்வி எழவில்லை.*

*(இ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் வாங்கும் மைக்காவின் விலைகள், இந்திய அரசாங்கத்தின் ஒப்புதலுடன் முன்கூட்டியே நிர்ணயிக்கப்படுகின்றன. இந்த விலைகள் நியாயமான அளவில் இருப்பதாகவே இந்திய அரசாங்கம் கருதுகிறது. இந்த நிறுவனம் செயல்படத் தொடங்குவதற்கு முன்னர் நிலவிய விலைகளை விட அதிகவிலைக்கே அது மைக்காவைக் கொள்முதல் செய்கிறது. தவிரவும் விற்பனைக்கு ஏற்ற தரமுள்ள எல்லா வகையான பயனுள்ள மைக்காவையும் அது கொள்முதல் செய்கிறது. இதற்கு முன்னர் சந்தையில் அறவே விலைபோகாத மைக்காவும் இதிலடங்கும். மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனத்தைப் பொறுத்தவரை அது தற்போது இந்தியாவில் மைக்கா கொள்முதல் செய்வதில்லை. இந்திய அரசாங்கத்துடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களின்படி, 1940-42ல் அது ஓரளவு மைக்காவை கொள்முதல் செய்தது. 1941ல் இந்தியாவில் மைக்கா உற்பத்தி கணிசமாக அதிகரித்ததற்கு இந்தக் கொள்முதல்களே பெரும்பாலும் காரணமாகும். அது தந்த விலைகள் நியாயமானவையாகவும், நேர்மையானவையாகவும் இருந்தன. ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனமோ அல்லது மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனமோ லாபநோக்கம் கொண்ட நிறுவனங்கள் அல்ல.*

*(உ) ஜாய்ண்ட் மைக்கா நிறுவனம் ஓர் அரசு நிறுவனம். பிரிட்டிஷ் அரசாங்கத்தாலும் அமெரிக்க அரசாங்கத்தாலும் நியமிக்கப்பட்ட மூன்று பிரிட்டிஷ் உறுப்பினர்களையும் மூன்று அமெரிக்க உறுப்பினர்களையும் அது கொண்டுள்ளது. பிரிட்டிஷ் உறுப்பினர்களில் ஒருவர் அதன் தலைவராக இருந்து வருகிறார். ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் பிரிட்டிஷ் வழங்கீடு துறைக்காகவும் மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனம் அமெரிக்காவுக்காகவும் மைக்காவை கொள்முதல் செய்கின்றன. மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனம் ஒரு கூட்டுரிமைக் கழகமாகும்; கூட்டுரிமைக் கழக நிதி மறுசீரமைப்புச் சட்டத்தின்படி அமெரிக்க மறுசீரமைப்பு நிதிக் கூட்டுரிமை கழகத்தால் தோற்றுவிக்கப்பட்டு அமெரிக்க அரசாங்கத்தால் இது முறைப்படி ஒழுங்கமைக்கப்பட்டுள்ளது.*

பாபு பைஜ்நாத் பஜோரியா: எனது கேள்வியின் (அ) பகுதிக்கு மாண்புமிகு உறுப்பினர் 'இல்லை'' என்று கூறினார். இந்தியாவிலிருந்து மைக்கா ஏற்றுமதி செய்வதற்கு இதர நிறுவனங் களும் அனுமதிக்கப்படுகின்றன என்று இதற்குப் பொருளா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதற்கான விடையை அடுத்த கேள்விக்கான பதிலில் மதிப்பிற்குரிய என் னுடைய நண்பர் காணலாம்.

பாபு பைஜ்நாத் பஜோரியா: என் கேள்வியின் (அ) பகுதிக்கு 'இல்லை' என்று நீங்கள்தான் ஏற்கனவே கூறிவிட்டீர்களே.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம்.

பாபு பைஜ்நாத் பஜோரியா: அப்படியானால் இந்தியா விலிருந்து மைக்கா ஏற்றுமதி செய்ய இதர நிறுவனங்களும் அனு மதிக்கப்படும் என்றுதானே இதற்குப் பொருள்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதற்கு எந்தவிதத் தடையும் இல்லை. ஆனால் சில குறிப்பிட்ட நிபந்தனைகள் இருக் கின்றன.

பாபு பைஜ்நாத் பஜோரியா: (இ) பகுதியைப் பொறுத்த வரை, ஜாய்ண்ட் மைக்கா மிஷன் மைக்காவின் தரத்தை அதிகரித்து விலையைக் குறைத்துவிட்டது என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை. இதற்கான பதிலையும் அடுத்த கேள்விக்கான பதிலில் காணலாம்.

# 23

# *பெரும் எண்ணிக்கையிலான இந்தியத் தொழிலாளர்கள் வேலையின்றித் தவிப்பதைத் தடுப்பதற்கான திட்டம்

@103. *திரு.கோவிந்த் வி.தேஷ்முக்:* இந்தியத் தொழிலாளர்கள் பெரும் எண்ணிக்கையில் வேலையின்றித் தவிப்பதைத் தடுப்பதற்கும், வாழ்க்கைக்கான அத்திவாசியப் பொருள்கள் இல்லாக் குறையிலிருந்து அவர்கள் விடுபடுவதற்கும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் திட்டம் ஏதும் வகுத்திருக்கிறாரா? அவ்வாறு திட்டம் ஏதும் இருந்தால் அது என்ன திட்டம் என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* பெரும் எண்ணிக்கையிலான தொழிலாளர்கள் வேலையின்றி அல்லலுறுவதைத் தவிர்ப்பதற்குத் திட்டம் ஏதும் வகுக்கப்படவில்லை.

யுத்தகாலத்தில் வேலைவாய்ப்பு மிகப் பெருமளவில் அதிகரித்திருக்கிறது. யுத்தப் பிற்கால நிலைமைகளைப் பொறுத்தவரையில், வணிகத்துறையில் நியமிக்கப்பட்டிருக்கும் மறுசீரமைப்புக் குழு இவற்றில் கவனம் செலுத்தும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, பிப்ரவரி 16, 1943, பக். 281.

@ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாதபோது, இந்தப் பதில் அளிக்கப்பட்டது.

# 24

## *ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்துக்கும் அமெரிக்காவின் மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனத்துக்கும் மைக்கா ஏற்றுமதியில் ஏகபோக உரிமை

105. பாபு பைஜ்நாத் பஜோரியா: (அ) இந்த நாட்டிலிருந்து மைக்கா ஏற்றுமதிப் பொறுப்பை ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் ஏற்றுக்கொண்டபோது, இந்திய மைக்கா முழுவதையும் கொள்முதல் செய்வதாக அந்த நிறுவனம் உறுதி கூறியதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) மேலே கூறிய கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலானால் இந்த உறுதிமொழி செயல்படுத்தும்படியாகப் பார்த்துக்கொள்ள அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்து வருகிறது?

(இ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் பட்டியலில் குறிப்பிடப்படும் சில வகைப்பிரிவுகளைச் சேர்ந்த மைக்காவை மட்டுமே வாங்குகிறது என்பதும், பிளக்கப்பட்ட மைக்கா தகடுகள், மைக்கா பாளங்கள் போன்ற இதர வகைப் பிரிவுகளையும் இன்னும் சொல்லப்போனால் பட்டியல் இடப்பட்ட சில குறிப்பிட்ட வகைப் பிரிவுகளைக் கூட அது கொள்முதல் செய்யமறுக்கிறது என்பதும், இதனால் இவ்வகையான மைக்கா விற்பனையாகாமல் இந்திய வணிகர்களிடம் தேங்கிக் கிடக்கிறது என்பதும் மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஈ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் கொள்முதல் செய்யாத மைக்கா வகைகளின் கையிருப்புகளை இத்தொழில் துறை விற்பனை செய்வதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது?

(உ) அமெரிக்காவுக்கும் இதர நேசநாடுகளுக்கும் மைக்காவை

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943, செப்டம்பர் 16 பக். 282-83.

ஏற்றுமதி செய்வதற்கு தனியார் நிறுவனங்களை அனுமதிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா? இல்லையென்றால், அது ஏன்?

(ஊ) மைக்காக் கொள்முதலும் ஏற்றுமதியும் ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்தின் கையில்இருப்பதால் மைக்காவை தனித்தனி தகடுகளாகப் பிளக்கும் தொழில் பெருமளவுக்கு நசித்து விட்டது என்பதும், இதனால் எண்ணற்ற தொழிற்சாலைகள் மூடப் பட்டும், வீட்டிலேயே மைக்காவை தகடுகளாகப் பிளக்கும் தொழில் முடங்கிப்போயும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை யிழந்து தவிக்கிறார்கள் என்பதும் அரசாங்கத்துக்குத் தெரியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்த நாட்டி லிருந்து மைக்காவை ஏற்றுமதி செய்யும் முழு உரிமை ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்துக்கு வழங்கப்படவில்லை. ஆனால் விற்பனைக்கேற்றவையும், வழக்கமாக அங்கீகரிக்கப்பட்ட வாணிகத் தரங்களுக்கு ஏற்ப செப்பம் செய்யப்பட்டவையுமான அனைத்து மைக்காவையும் கொள்முதல் செய்வதற்கு அது ஒப்புக்கொண் டுள்ளது.

(ஆ) இந்த நிறுவனம் தான் அளித்த வாக்குறுதியை நிறை வேற்றவில்லை என்று அரசாங்கம் கருதுவதற்கு எந்த முகாந்தரமும் இல்லை.

(இ) பட்டியலிடப்பட்ட சில குறிப்பிட்ட வகை மைக்காவை மட்டுமே இந்த நிறுவனம் வாங்குகிறது; மற்ற வகைகளைச் சேர்ந்த மைக்கா ஐக்கிய நாடுகளில் விற்பனையாக மாட்டா. ஆயினும், இவ் வகை மைக்காவை நடுநிலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம்; அரசாங்கம் பிறப்பித்திருக்கும் பொதுவான ஆணைகளுக்கு இவை முரண்பாடாக இருக்கக்கூடாது. மிஷனின் தரங்களுக்கு ஏற்புடைய தான குறிப்பிட்டமைக்கா வகைகளை கொள்முதல் செய்வதற்கு மிஷன் ஒருபோதும் மறுப்பதில்லை. பட்டியலிட்ட தரங்களைச் சேர்ந்த மைக்காவகைகள் விற்பனையாகாமல் ஏராளமாக கையிருப் பில் உள்ளதா என்பது அரசாங்கத்துக்குத் தெரியாது.

(ஈ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் கொள்முதல் செய்யாத மைக்கா ரகங்களை ஐக்கியநாடுகளில் விற்பனை செய்ய இயலாது. எனவே, இத்தகைய கையிருப்புகளை விற்றுத் தீர்ப்பதற்கு இத்தொழில்துறைக்கு உதவ அரசாங்கம் எத்தகைய நடவடிக்கை

களும் மேற்கொள்ளவில்லை. நடுநிலைமை நாடுகளில் இத்தகைய கையிருப்புகள் விற்பனையாகாத பட்சத்தில் இவற்றை ஏற்றுமதி செய்வதற்கு உரிமங்கள் வழங்குவதில் அரசாங்கத்துக்கு எந்த ஆட்சேபமும் இல்லை; ஆனால் அரசாங்கத்தின் பொதுவான ஆணைகளுக்கு இவை முரண்பட்டதாக இருக்கக்கூடாது.

(உ) தனியார் நிறுவனங்கள் மைக்கா ஏற்றுமதி செய்வது எவ்வகையிலும் தடைசெய்யப்படவில்லை. எனினும், தனியார் நிறுவனங்களால் இறக்குமதி செய்யப்படும் மைக்காவை ஐக்கிய நாடுகள் வாங்குவதில்லை; ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்தில் கொள்முதல் செய்யப்பட்டு இறக்குமதியாகும் மைக்காவை மட்டுமே அவை வாங்குகின்றன. இந்தியாவில் மைக்கா தொழில் துறை உற்பத்தி செய்யும் விற்பனைக்கு ஏற்ற எல்லா மைக்காவுமே ஐக்கிய நாடுகளுக்குத் தேவைப்படுகின்றன. ஐக்கிய நாடுகளுக்கு மைக்கா விற்பனை ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் மூலமே நடைபெறுகிறது; ஸ்தலத்தில் ஒரே ஓர் அமைப்பு கொள்முதல் செய்வதே ஐக்கிய நாடுகளுக்குத் தற்போது தேவையான மிகப் பெருமளவிலான மைக்காவை மிகவிரைவாகவும், மிக எளிதாகவும் பெறுவதற்கான உகந்த மார்க்கம் என இந்திய அரசாங்கம் உட்பட ஐக்கிய நாடுகள் கருதுவதே இதற்குக் காரணம்.

(ஊ) ஐக்கிய நாடுகளிடம் ஏற்கனவே மைக்கா தகடுகள் கணிசமான அளவுக்குக் கையிருப்பில் உள்ளன; தற்போது இந்நாடுகளுக்கு மைக்கா பாளங்கள்தான் பிரதானமாகத் தேவைப்படுகின்றன. எனினும் சுரங்கத்திலிருந்து பிரித்தெடுக்கப்படும் எல்லா வகையான மைக்காவையுமே மிஷன் தொடர்ந்து வாங்கி வருகிறது. ஆனால் நாள்பட்ட கையிருப்பிலுள்ள மைக்காவையோ, ஐக்கிய நாடுகளில் விற்பனையாகாத மைக்காவையோ அது வாங்குவதில்லை. ஆயினும் இத்தகைய மைக்கா நடுநிலைமை நாடுகளில் விற்பனையாகக்கூடும்; அரசாங்கம் பிறப்பிக்கும் பொதுவான ஆணைகளுக்கு இது முரண்பட்டதாக இருத்தலாகாது. வீட்டிலேயே மைக்காவைப் பிளக்கும் பலகேந்திரங்கள் அநேகமாக மூடப்பட்டிருக்கக்கூடும் என்றாலும் இது சம்பந்தப்பட்ட தொழிற்சாலைகள் எவையும் மூடப்பட்டதாக அரசாங்கத்துக்குத் தகவல் இல்லை.

பாபு பைஜ்நாத் பஜோரியா: கேள்வி (அ) சம்பந்தமாக மீண்டும் ஒன்றைக் கூற விரும்புகிறேன்: இதர மைக்கா வகைகளுக்கு அமெரிக்காவில் கிராக்கி இருக்கிறது என்றும், ஆனால் அவற்றை

ஏற்றுமதி செய்ய அனுமதிக்கப்படுவதில்லை என்றும் கூறப்படு வதைப் பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* அது எனக்குத் தெரியாது.

*பாபு பைஜ்நாத் பஜோரியா:* இது குறித்து விசாரிப்பீர்களா? இந்த மிஷன் கொள்முதல் செய்யவிரும்பாத மைக்கா ரகங்களுக்கு அமெரிக்காவில் கிராக்கி இருக்குமானால், இத்தகைய ரகங்களை அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்ய தனியார் நிறுவனங்கள் அனு மதிக்கப்படவேண்டும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* விசாரிக்கிறேன்.

# 25

## *மைக்கா ரகங்களுக்கு ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் விலைகளை நிர்ணயித்தல்

106. *பாபு பைஜ்நாத் பஜோரியா:* (அ) பல்வேறு மைக்கா ரகங்களுக்கு சம்பந்தப்பட்ட தொழில்துறையின் பிரதிநிதிகளைக் கலந்தாலோசிக்காமல் ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் விலை களை நிர்ணயித்து வருவது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) மெட்டல் ரிசர்வ் நிறுவனம் இந்தியாவின் மண்ணியல் ஆய்வுக் கழகத்தின் இயக்குநர் மூலம் மைக்கா வாங்கிவருகிறது; இதனுடன் ஒப்பிடும்போது, ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் மைக்காவின் தரங்களைப் பெருமளவுக்கு உயர்த்திவிட்டது என் பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) தற்போதைய சந்தை விலைகளிலிருந்து ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் தனது கொள்முதல் விலைகளை 10

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1943, பக். 283.

*சதவீதம் முதல் 30 சதம் வரை குறைத்துவிட்டது என்பதும், வேறு வழியில்லாத நிலையில் அந்த நிறுவனத்தின் இந்த விலைகளுக்கே தமது உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்ய தொழிற்சாலைகள் நிர்ப்பந்திக்கப்படுகின்றன என்பதும் அரசாங்கத்துக்குத் தெரியுமா?*

*(ஈ) மேலே கூறியவாறு விலைகள் குறைக்கப்படுவதை இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டு விட்டது என்பது உண்மையா?*

*(உ) வெவ்வேறு தரங்களைக் கொண்ட மைக்காவின் விலைகளை நிர்ணயிக்கும் விஷயத்தில் ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனத்துக்கு ஆலோசனை கூறுவதற்கு சுரங்க முதலாளிகள் மற்றும் ஆலை உரிமையாளர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவை நியமிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா? இல்லையென்றால், ஏன்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) பல்வேறு தரங்கள் கொண்ட மைக்காவின் விலைகளை நிர்ணயிப்பதற்கு முன்னர் பீகாரிலும், சென்னையிலும் தனிப்பட்ட நிறுவனங்களின் பிரதிநிதிகள் உட்பட மைக்காத் தொழில் துறையை ஜாய்ண்ட் மைக்கா மிஷன் கலந்தாலோசிக்கவே செய்கிறது.*

*(ஆ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் தரங்களை கணிசமான அளவுக்கு உயர்த்தவில்லை. எனினும் சில சந்தர்ப்பங்களில் சிறிதளவு தரங்களை உயர்த்தியிருக்கிறது; அதேசமயம் பிளப்புகளிலும் தகடுகளிலும் எத்தகைய மாற்றங்களும் செய்யவில்லை. தரம் உயர்த்தப்படும்போது விகிதாசார அடிப்படையிலேயே விலை அதிகரிக்கப்படுகிறது. இந்த நிறுவனம் இத்துறையில் ஈடுபடுவதற்கு முன்னர் இருந்த தரமும் விலையும் 100 என்று வைத்துக்கொண்டால், இப்போது அது உயர்த்திய தரம் 105 ஆகவும், விலை 110 ஆகவுமே இருக்கிறது. மெட்டல்ஸ் ரிசர்வ் நிறுவனம் இந்தியாவின் மண்ணியல் ஆய்வுக் கழகத்தின் இயக்குநர் மூலம் மைக்கா வாங்கும் போது அதன் படித்தரங்களின் வீச்சு குறுகிய அளவிலேயே உள்ளது; ஆனால் ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் வாங்கும் மைக்காவின் படித்தரங்களின் வீச்சோ மிகப் பரந்த அளவில் அமைந்துள்ளது.*

*(இ) ஜாய்ண்ட் மைக்கா மிஷன் நிறுவனம் தனது கொள் முதல் விலைகளை 10 முதல் 30 சதவிகிதம் குறைக்கவில்லை.*

(ஈ) இக்கேள்வி இங்கு எழவில்லை.

(உ) இல்லை. மைக்காத் தொழில்துறையின் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்த பிறகே, இந்திய அரசாங்கத்தின் அனுமதியுடனேயே மிஷன் தருவதற்கு முன்வரும் விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. அவை நியாயமான விலைகள் என்பதே இந்திய அரசாங்கத்தின் கருத்து. எனவே, ஆலோசனைக்குழு எதுவும் அமைப்பது அவசியமில்லை என்று இந்திய அரசாங்கம் அபிப்பிராயப்படுகிறது.

பாபு பைஜ்நாத் பஜோரியா: சுரங்க முதலாளிகள் மற்றும் தொழிற்சாலை அதிபர்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவை அமைப்பதில் அரசாங்கத்துக்கு என்ன ஆட்சேபம் இருக்கமுடியும்? இவ்வாறு செய்வது மைக்கா கொள்முதல் விஷயத்தில் அரசாங்கத்தின் கைகளையும் மைக்கா மிஷன் நிறுவனத்தின் கைகளையும் பலப்படுத்தவே செய்யும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மைக்காத் தொழில்துறையின் பிரதிநிதிகளைக் கலந்தாலோசித்த பிறகே மைக்கா மிஷன் கொள்முதல் விலைகளை நிர்ணயிக்கிறது என்று நான் ஏற்கெனவே கூறியதே இக்கேள்விக்கு என் பதிலாகும்.

பாபு பைஜ்நாத் பஜோரியா: இது சரியானது என நான் கருதவில்லை.

# 26

## *ரயில்வே ஊழியர்களுக்கு ஊதியங்கள் அளிப்பதில் முறைகேடுகள்

109. திரு. லால்சந்த் நாவல்ராய்: (அ) 1936 ஆம் வருட ஊதிய வழங்கீடு சட்டம் IV இந்தியாவில் ரயில்வே துறையில் எப்போது முதல் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து தெரிவிப்பாரா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1943, பக். 285.

*(ஆ) ரயில்வே ஊழியர்களுக்கு ஊதியங்களை வழங்குவதில் பல முறைகேடுகள் நடைபெற்றிருப்பது தொழிலாளர் நலத்துறை கண்காணிப்பாளர்களின் கவனத்துக்கு வந்தது என்பது உண்மையா?*

*(இ) ரயில்வேக்களின் சமரச அதிகாரியும், மேலே கூறிய சட்டத்தின்படி கண்காணிப்பாளராக உள்ள ரயில்வே தொழிலாளர் களின் மேற்பார்வையாளரும் இந்த ஒழுங்கீனங்களை ரயில்வே நிர்வாகத்தின் கவனத்துக்குக் கொணடுவரவும், இவற்றிற்கு நிவா ரணம் தேடவும் பொதுவாக முயல்கிறார் என்பது உண்மையா?*

*(ஈ) காலதாமதமாக ஊதியங்கள் வழங்கப்படுவது போன்ற பல சம்பவங்கள் நடைபெறுகின்றன என்பதும், சம்பள வழங்கீடு சட்டத்தின் விதிகள் மீறப்படும்போது அதனால் பாதிக்கப்படும் ஊழியர்களுக்கு நிவாரணம் அளிக்கப்படவேண்டும் என்பதும் உண்மை இல்லையா? இவ்வாறு நிகழாதபடி என்ன நடவடிக்கை கள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன? எத்தகைய நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படவில்லை என்றால் அது ஏன்?*

*(உ) ரயில்வேத் தொழிலாளர்களுக்கு சம்பளம் வழங்குபவர் களுக்கு அல்லது நிர்வாகத்துக்கு எதிராக ஏதேனும் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளனவா? அவ்வாறு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டிருந்தால் அவைபற்றிய விவரங்களை மாண்புமிகு உறுப்பினர் அவையின் முன்வைப்பாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மார்ச் 28, 1937.*

*(ஆ) ஆம்*

*(இ) சம்பளங்கள் வழங்குவதில் கண்டுபிடிக்கப்படும் ஒழுங் கீனங்கள் இவை போன்ற தவறுகள் மீண்டும் நிகழாதபடி தடுப் பதற்காக ரயில்வே நிர்வாகத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப் படுகின்றன.*

*(ஈ) இந்த சட்டத்தின் 15(3) பிரிவின்படி நிவாரணம் அளிக்க முடியும். ஆனால் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட குறைபாடுகளை நிர்வாக நடவடிக்கை மூலம் களைவது எப்போதுமே சாத்தியமாக இருப்பதால் வழக்குகள் எவையும் தொடர்வதில்லை.*

(உ) வழக்குகள் பதிவு செய்யப்படவில்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: சம்பளங்கள் ஏன் தாமதமாக வழங்கப்படுகின்றன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒரு பிரம் மாண்டமான நிர்வாகத்தில் இத்தகைய தாமதங்கள் ஏற்படுவது இயல்பு.

திரு. லால்சந்த் நாவல்ராய்: தாமதமாக சம்பளங்கள் வழங்கப்படும்போது நிர்வாகம் என்ன செய்கிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: உரிய காலத்தில் சம்பளங்கள் வழங்கும்படிப் பார்த்துக் கொள்கிறது.

திரு. லால்சந்த் நாவல்ராய்: சம்பளங்கள் உரிய காலத் தில் வழங்கும்படி மட்டுமே பார்த்துக்கொள்கிறதா அல்லது வேறு ஏதேனும் செய்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நிர்வாகம் வேறு என்ன செய்ய வேண்டும் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் எதிர் பார்க்கிறார்?

திரு. லால்சந்த் நாவல்ராய்: இவ்வாறு மீண்டும் நிகழ்வதைத் தவிர்ப்பதற்கு அரசாங்கம் என்ன செய்கிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இத்தகைய தாம தங்களைத் தவிர்ப்பதற்கு அவர்கள் முயற்சி எடுத்துக்கொள்வார்கள் என்பதில் எனக்கு எத்தகைய ஐயமும் இல்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: அவர்கள் என்னதான் செய் கிறார்கள்?

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்: எனக்கு எதுவும் தெரியாது. இதற்கான பதிலைப் பெறமதிப்பிற்குரிய உறுப்பினர் விரும்பினால் அதற்குரிய கேள்வியைக் கேட்க வேண்டும்.

திரு. லால்சந்த் நாவல்ராய்: இத்தகைய தவறுகள் திரும் பவும் நிகழாதவாறும், உரிய எச்சரிக்கைகள் தருமாறும் மாண்பு மிகு உறுப்பினர் நிர்வாகத்துக்கு எடுத்துரைப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நிச்சயமாக அவ்வாறு செய்வேன்.

# 27

## *கயா நவாதியில் விமான நிலையங்கள் கட்டுவதற்கு கூடுதல் வீதங்களில் செய்துகொள்ளப்பட்ட ஒப்பந்தங்கள்

@143. திரு.கே.சி. நியோகி: (அ) சில குறிப்பிட்ட விமான நிலையங்களை மிக அதிகச் செலவில் நிர்மாணிப்பதற்கு மத்தியப் பொதுப் பணித்துறையின் தலைமைப் பொறியாளர் ஆரம்பத்தில் ஒப்புதலளித்தார் என்பதும், இதற்கு எதிராக மாகாணப் பொதுப் பணித் துறையினர் ஆட்சேபங்களை எழுப்பினார்கள் என்பதும் உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா?

(ஆ) இத்தகைய ஆட்சேபங்களின் விளைவாக, இந்தச் செலவு வீதங்களைப் பரிசீலிப்பதற்கு ஒரு குழு நியமிக்கப்பட்டது என்பதும், தலைமைப் பொறியாளர் ஒப்புதலளித்த வீதங்களை இந்தக்குழு சுமார் மூன்றிலொரு பங்காகக் குறைத்தது என்பதும் உண்மையா?

(இ) ஒப்பந்தக்காரர்களும் இந்த வீதங்களைக் குறைப்பதற்கு ஒப்புக்கொண்டார்கள் என்பதும், ஆரம்பத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்ட வீதங்கள் மிகமிக அதிகம் என்பதை இது மெய்ப்பிப்பதாக உள்ளது என்பதும் உண்மையா?

(ஈ) மேலே கண்ட கேள்விக்கான பதில் 'ஆம்' என்பதாக இருந்தால், ஆரம்பத்தில் ஒப்புதளிக்கப்பட்ட வீதங்களுக்குப் பொறுப் பாக இருந்த தலைமைப் பொறியாளர் மீது எத்தகைய நட வடிக்கை மேற்கொள்ள அரசாங்கம் உத்தேசித்துள்ளது?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1943, பக்கங்கள் 417-18

★ இந்தக் கேள்விக்கான பதில் கேள்விகேட்டவர் அவையில் இல்லாதபோது சமர்ப்பிக்கப் பட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) சம்பந்தப் பட்ட விமான நிலையங்களைக் கட்டுவதற்காகும் செலவினங்கள் குறித்து மேலாண்மைப் பொறியாளர் மூலம் நிர்வாகப் பொறியாளர் முன்வைத்த பிரேரணைகளைத் தலைமைப் பொறியாளர் ஏற்றுக் கொண்டார். இந்த வீதங்கள் மிக அதிகம் என்பதில் ஐயமில்லை. ஆனால் வேலை தொடங்கிய காலத்தில், இத்தகைய பரிமாணங் களைக் கொண்ட பணியைக் குறைந்த செலவில் செய்வதற்கு நம்பக மாக ஒப்பந்தக்காரர்கள் கிடைக்கவில்லை. இந்த வீதங்கள் மிக வரம்பு மீறியவை என்று முறையீடுகொண்ட ஓர் அறிக்கை பிராந்திய ஆணையர் மூலம் கிடைக்கப் பெற்றது.*

*(ஆ) மற்றும் (இ) ஸ்தல அதிகாரிகளிடமிருந்து எத்தகைய ஆட்சேபங்களும் வருவதற்கு ஏறத்தாழ ஒரு மாதத்திற்கு முன்னரே இதுகுறித்து ஒரு விசாரணையை மேற்கொள்ளும்படி மேலாண்மைப் பொறியாளருக்குத் தலைமைப் பொறியாளர் ஆணை பிறப்பித்தார்; அதுமட்டுமன்றி, மேற்கொண்டு விசாரணை செய்வதற்குத் தமது உதவியாளரையும் ஆலோசகரையும் அனுப்பி வைத்தார். இதன் விளைவாக வீதங்கள் ஓரளவு குறைக்கப்பட்டன. ஆனால் முந்திய வீதங்களில் மூன்றிலொரு பங்காக அவை குறைக்கப்படவில்லை. சில பணிகள் சம்பந்தமாக ஒப்பந்தக்காரர்கள் வீதங்களை எவ் வகையிலும் குறைக்கவில்லை; எனினும் பிரதான ஓடுபாதை சம்பந்த மாக 15 சதவீதமும், சாதாரண கட்டிடங்கள் விஷயத்தில் 50 சத வீதமும், பிரத்தியேகக் கட்டிடங்கள் சம்பந்தமாக 30 முதல் 60 சத வீதமும் குறைக்க ஒப்புக்கொண்டனர். ஆனால் குடியிருப்புக் கட்டி டங்கள் விஷயத்தில் குறைந்த வீதங்களுக்கு இணங்க ஒப்பந்தக் காரர் மறுத்து விட்டார்; இதன்பேரில் அந்த ஒப்பந்தப்பணி அவரிட மிருந்து திரும்பப் பெறப்பட்டு குறைந்த வீதங்களுக்கு ஒப்புக் கொண்ட மற்றொரு குத்தகைதாரருக்குத் தரப்பட்டது.*

*(ஈ) தலைமைப் பொறியாளர் மீது நடவடிக்கை எடுக்க எந்த முகாந்திரமுமில்லை.*

# 28

## *புதுடில்லி கன்டோன்மெண்டில் இறங்குதளங்களைக் கட்டுவதற்கான பணிகளுக்கு அதிக ஒப்பந்த வீதங்கள்

+144. திரு.கே.சி. நியோகி: (அ) புதுடில்லி புதிய கண்டோன் மெண்டில் இறங்குதளங்களைக் கட்டுவதற்கான பணிகள் முதலில் உயர் ஒப்பந்த வீதங்களுக்கு ஒப்புதலளிக்கப்பட்டன என்பதும், ஆனால் பின்னர் அவை குறைக்கப்பட்டனவென்பதும், இந்தக் குறைக்கப்பட்ட வீதங்களில் ஒப்பந்தக்காரர்கள் தற்போது இப்பணி களைச் செய்துவருகின்றனர் என்பதும் உண்மையா என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரிடமிருந்து அறிய விரும்பு கிறேன்.

(ஆ) மேலே கண்ட எனது கேள்விக்கான பதில் 'ஆம்' என்ப தாக இருந்தால், ஆரம்பத்தில் ஏன் இவ்வளவு உயர்வீதங்கள், எவரது ஆணையின் பேரில் அங்கீகரிக்கப்பட்டன?

(இ) இத்தகைய நிலைமை ஏற்படுவதற்கு பொறுப்பான அதிகாரிகள்மீது என்ன நடவடிக்கை எடுக்க அரசாங்கம் உத்தேசித் துள்ளது?

(ஈ) இத்தகைய பணிகளை நிறைவேற்றுவதில் இவை போன்ற நிகழ்ச்சிகள் திரும்பவும் நடைபெறாதிருக்கவும், கடுமை யான சிக்கனத்தைக் கடைப்பிடிக்கவும் இந்திய அரசாங்கம் எப்படிப் பட்ட முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளை எடுத்துள்ளது அல்லது எடுக்கப் போகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ) புதுடில்லி புதிய கண்டோன்மெண்டில் இறங்குதளம் கட்டுவது சம்பந்தமான பணியில் மூன்றுவேலைகள் நிறைவேற்றப்பட்டுள் ளன; 1. இறங்குதளம், 2. குடியிருப்புக் கட்டிடங்கள், 3. தொழில்நுட்ப அலுவலகங்களுக்கான கட்டிடங்கள் ஆகியவை கட்டி முடிக்கப்பட் டுள்ளன. 1 மற்றும் 2 சம்பந்தமான பதில் 'இல்லை' என்பதாகும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1943, பக்கம் 118

+ இந்தக் கேள்விக்கான பதில் கேள்வி கேட்டவர் அவையில் இல்லாத நிலைமையில் சமர்ப்பிக்கப்பட்டது.

(3) ஆவதைப் பொறுத்த வரையில் வேலை மானத் திட்ட விவரங்களில் மாற்றம் செய்யப்பட்டதன் விளைவாக ஒப்பந்த வீதங்கள் சிறிதளவு குறைந்துள்ளன.

(இ) மற்றும் (ஈ) இங்கு இவை எழவில்லை.

# 29

## *இந்திய ரயில்வேக்கள் சட்டத்தின் VIஏ பிரிவை நடைமுறைப்படுத்துவது சம்பந்தமான ஒழுங்கீனங்கள்

146. திரு.என்.எம். ஜோஷி (திரு.லால்சந்த் நாவல்ராய் சார்பில்): (அ) 1930 ஆம் வருட இந்திய ரயில்வேக்கள் (திருத்த) சட்டம் XIV எப்போது நடைமுறைக்கு வந்தது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் திருவுளங் கொண்டு கூறுவாரா?

(ஆ) இந்திய ரயில்வேக்கள் சட்டம் VI ஏ பிரிவை செயல் படுத்துவதில் ரயில்வேக்களில் பழைய முறைகேடுகள் தொடர்ந்து நடைபெற்று வருவதாக ரயில்வேக்களின் சமரச அதிகாரியும், மேலே கூறிய சட்டத்தின்படி கண்காணிப்பாளராக உள்ள ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளரும் சமர்ப்பித்த அறிக்கைகளிலிருந்து தெரியவந்துள்ளது என்பது உண்மையா?

(இ) மேலே கூறிய கேள்விக்கான பதில் 'ஆம்' என்பதனால், இத்தகைய ஒழுங்கீனங்களுக்கு முடிவு கட்டுவதற்கு ரயில்வேக்களின் சமரச அதிகாரியும், ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளரும் 1930 ஆம் வருட இந்திய ரயில்வேக்கள் (திருத்த) சட்டத்தில் கண்டுள்ள தண்டிக்கும் விதிகளை எப்போதாயினும் பயன் படுத்தியது உண்டா? அவ்வாறு பயன்படுத்தியிருந்தால் அது சம்பந்தப்பட்ட விவரங்கள் அடங்கிய அறிக்கை ஒன்றை மாண்புமிகு உறுப்பினர் இந்த அவையில் சமர்ப்பிப்பாரா?

(ஈ) மேலே கூறிய 'இ' யின் முதல்பகுதிக்கான பதில் 'இல்லை' என்பதானால், சட்டத்திலுள்ள தண்டிக்கும் விதிகளைச் செயல்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1943, பக்கங்கள் 420 - 421

படுத்தாதற்கான காரணங்களை மாண்புமிகு உறுப்பினர் அருள் கூர்ந்து கூறுவாரா?

(உ) இப்போதேனும் அவ்வாறு செய்ய உத்தேசம் உண்டா? இல்லையென்றால் அதற்குக் காரணம் யாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1930ஆம் வருட இந்திய ரயில்வேக்கள் (திருத்த) சட்டத்தின் முதல் பிரிவு 1930 மார்ச் 26 ஆம் தேதி நடைமுறைக்கு வந்தது. இரண்டாவது பிரிவு வெவ்வேறு ரயில்வேக்களில் பின்கண்ட தேதிகளில் அமலுக்கு வந்தது:

வடமேற்கு மற்றும் கிழக்கு இந்திய ரயில்வேக்கள் - ஏப்ரல் 1, 1931.

மாபெரும் இந்தியத் தீபகற்ப மற்றும் கிழக்குவங்க (தற்போது வங்க மற்றும் அசாம்) ரயில்வேக்கள் - ஏப்ரல் 1, 1932.

பம்பாய், பரோடா மற்றும் மத்திய இந்தியா, மதராஸ் மற்றும் தெற்கு மகாராஷ்டிர ரயில்வேக்கள் - நவம்பர் 1, 1935.

வங்க மற்றும் வடமேற்கு (தற்போது அயோத்தி, திர்குத்) ரயில்வேக்கள் - அக்டோபர் 1, 1937.

தென்னிந்திய மற்றும் ரோகிகுண்ட், குமான் (தற்போது அயோத்தி, திர்குத்தின் பகுதி) ரயில்வேக்கள் - ஏப்ரல் 1, 1940.

வங்காள, நாக்பூர் மற்றும் அசாம் வங்காள ( தற்போது வங்காள மற்றும் அசாமின் பகுதி) ரயில்வேக்கள் - ஜனவரி 1, 1941.

(ஆ) ஆம்.

(இ) இல்லை.

(உ) மற்றும் (ஊ) நிர்வாக நடவடிக்கைகள் மூலம் சீர்கேடுகளைக் களைவது எப்போதும் சாத்தியமாக இருந்து வருவதால் சட்டத்தின் தண்டிக்கும் விதிகளைப் பிரயோகிக்கவேண்டிய அவசியம் இல்லை.

# 30

## *ரயில்வே சமரச அதிகாரியின் நடவடிக்கைகளது செயற்களம்

*147. திரு.என்.எம்.ஜோஷி (திரு.லால்சந்த் நாவல்ராயின் சார்பில்): ரயில்வேக்களின் சமரச அதிகாரி பதவி தோற்றுவிக்கப் பட்டதும் கல்கத்தாவைத் தலைமை அலுவலகமாகக் கொண்ட பல ரயில்வேக்களிடையே சமரச நடவடிக்கைகளை மேற்கொள்ளும் பொருட்டு அந்த அதிகாரி கல்கத்தாவுக்கு மாற்றப்பட்டது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் தயைகூர்ந்து கூறுவாரா?*

*(ஆ) ரயில்வே சமரச அதிகாரி மற்றும் ரயில்வே தொழி லாளர்களின் கண்காணிப்பாளரின் அலுவலகம் தற்போது லாகூருக்கு மாற்றப்பட்டிருப்பது உண்மையா? அவரது சமரச நடவடிக்கை களின் களம் கல்கத்தாவைத் தலைமைச் செயலகமாகக் கொண்ட பல்வேறு ரயில்வேக்களா, லாகூரிலுள்ள வடமேற்கு ரயில்வேயா, அல்லது லாகூர் மற்றும் கல்கத்தா ஆகிய இரு நகரங்களையும் தலைமை செயலகங்களாகக் கொண்ட ரயில்வேக்களா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *(அ) ஆம்.*

*(ஆ) ரயில்வே சமரச அதிகாரி மற்றும் ரயில்வே தொழி லாளர்களின் கண்காணிப்பாளரின் தலைமைச்செயலகம் முற்றிலும் தற்காலிகமாகவே லாகூருக்கு மாற்றப்பட்டுள்ளது; இந்த பதவிக்குப் புதிதாக ஒருவர் நியமிக்கப்படவிருப்பதாலும், லாகூரைத் தலைமை அலுவலுகமாகக் கொண்ட ரயில்வே தொழிலாளர்களின் துணை மேலாளர் ரயில்வேக்களின் சமரச அதிகாரி மற்றும் ரயில்வே தொழி லாளர்களின் மேற்பார்வையாளர் பதவியைக் கூடுதலாக வகித்து வருவதாலுமே இவ்வாறு செய்யப்பட்டுள்ளது. இந்தப் பதவிக்கு புதியவர் ஒருவர் நியமிக்கப்பட்டதைத் தொடர்ந்து தலைமை அலுவலகம் தற்போது மீண்டும் கல்கத்தாவுக்கு மாற்றப்பட்டுள்ளது.*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1943, பக்கம் 421.*

திரு. என்.எம். ஜோஷி: ரயில்வே சமரச அதிகாரியின் செயற்பாட்டை கல்கத்தாவிலுள்ள தலைமை அலுவலகத்துக்கும் அப்பால் இதர இடங்களுக்கும் விஸ்தரிக்கும் விஷயத்தை அரசாங்கம் பரிசீலிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், இந்த விஷயத்தைப் பரிசீலிப்பேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): இந்த இரு கேள்விகளுக்கான முன்னறிவிப்பை தந்துள்ள திரு.லால்சந்த் நாவல் ராய் இந்தக் கேள்விகளை தமது சார்பில் கேட்கும்படி திரு. என்.எம். ஜோஷிக்கு அதிகாரம் அளிக்கவில்லை என்றாலும் இவற்றை அனு மதித்தேன். மதிப்பிற்குரிய அந்த உறுப்பினர் பெயரில் ஒரு கேள்வி பதிவுசெய்யப்பட்டிருந்தால் அவர் அதிகாரம் வழங்கினாலொழிய இன்னொரு உறுப்பினர் அவர் சார்பில் அந்தக் கேள்வியைக் கேட்க முடியாது என்பதுதான் பொதுவாகக் கடைப்பிடிக்கப்பட்டுவரும் நடைமுறையாகும். எனினும் தற்போதைய விசேட சந்தர்ப்ப சூழ்நிலைமைகளைக் கருதி இக்கேள்விகளைக் கேட்பதற்கு திரு. ஜோஷியை அனுமதித்தேன்.

# 31

## *பகைவனது விமானத் தாக்குதல்களுக்கு ஆளானோரைச் சார்ந்திருப்போருக்கு உதவி

*183. திரு.எச்.ஏ. சத்தார் எச்.எஸ்ஸாக் சேட்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட தகவல் களை வழங்குவாரா?

(அ) இந்தியாவில் பகைவனது விமானத் தாக்குதல்களின் விளைவாக கொல்லப்பட்ட அல்லது காயமடைந்தோரின் வழித் தோன்றல்களுக்கும் அவர்களைச் சார்ந்திருப்போருக்கும் உதவு வதற்கு செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள்;

(ஆ) விமானத் தாக்குதல் நடைபெற்றுமுடிந்த உடனேயே இத்தகைய உதவி ஏற்பாடுகள் நடைமுறைக்கு வருமா அல்லது விமானத் தாக்குதலுக்கு உள்ளானோரை சார்ந்திருப்போருக்கு உதவி கிடைக்கு முன்னர் விண்ணப்பங்கள் செய்தல், விசாரணை களுக்கு உட்படுதல் போன்ற சம்பிரதாயங்களை அவர்கள் நிறை வேற்ற வேண்டுமா;

(இ) இந்தியாவில் கல்கத்தாவிலும் ஏனைய இடங்களி லும் பகைவனது விமானத் தாக்குதல்களால் பாதிக்கப்பட்ட மக்க ளுக்கு குறிப்பாக ஏழை எளிய மக்களுக்குப் பின்கண்ட வகைக்கு உதவி வழங்கப்பட்ட விவரங்கள் யாவை?

I. மரமணமடைந்தவர்களை அடக்கம் செய்தல்,
II. காயமடைந்தவர்களுக்கு சிகிச்சை அளித்தல்,
III. ஜீவனோபார்வத்தை இழந்தவர்கள்,
IV. அவர்களுக்கு மறுவாழ்வளித்தல்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ). பகைவனது விமானத் தாக்குதலால் காயமடைந்தவர்களுக்கும்,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 24, 1943, பக்கம் 556.

இந்த தாக்குதல்களில் கொல்லப்பட்டவர்களைச் சார்ந்திருப்போருக்கும் நிவாரணம் அளிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது; போர்க் காயங்கள் அவசரச் சட்டத்தின்படி அரசாங்கம் தயாரித்துள்ள போர்க் காயங்கள் திட்டத்தில் இதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

நிவாரணம் கோருவதற்கு விண்ணப்பிப்பது தவிர்க்கமுடியாதது இயல்பே; ஆனால் இதற்கான நடைமுறை கூடியமட்டும் விரைவானதாகவும், சிக்கலற்றதாகவும் ஆக்கப்பட்டிருக்கிறது. சம்பந்தப்பட்டவர் தானே விண்ணப்பிக்க இயலாதவராக இருந்தால் அவர் சார்பில் மற்றவர்கள் விண்ணப்பிக்க வகை செய்யப்பட்டுள்ளது.

காயமடைந்தவர்களுக்கு அல்லது மரணமடைந்தவர்களுக்கு கிடைக்கவேண்டிய நிவாரணத்தை எதிர்பார்த்து ஒவ்வொருவர் விஷயத்திலும் 50 ரூபாய் வரை தொழிற்சாலை அதிபர்கள் முன்பணம் வழங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

போர்க்காயங்கள் அவசரச்சட்டத்தின்படி தயாரிக்கப்பட்ட திட்டமும் அதன் விதிமுறைகளும் அடங்கிய பிரசுரத்தின் ஒரு பிரதி அவையின் நூலகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

(ஆ) (i) மற்றும் (ii) இவை மாகாண சர்க்கார்களின் பொறுப்பு சம்பந்தப்பட்ட விஷயங்கள். இவை எவ்வாறு செயல்படுத்தப்படுகின்றன என்பது குறித்த விவரங்கள் இந்திய அரசாங்கத்திடம் இல்லை. குண்டுவீச்சால் இறந்தவர்களின் சடலங்களை எவ்வாறு அடக்கம் செய்வது, காயமடைந்தவர்களுக்கு எவ்விதம் சிகிச்சை அளிப்பது என்பது குறித்து இந்திய அரசாங்கம் முழு ஆலோசனை வழங்கியுள்ளது; இது சம்பந்தமாகப் பரிந்துரைக்கப்பட்ட திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. இந்தத் திட்டங்கள் யாவும் நன்கு நடைமுறைப்படுத்தப்பட்டு வருவதாக மாகாண அரசாங்கங்களிடமிருந்து மத்திய அரசாங்கத்துக்குத் தகவல் வந்துள்ளது. இத்திட்டங்கள் திறம்பட நிறைவேற்றப்படவில்லை என்ற குற்றச்சாட்டுகளோ, முறையீடுகளோ இந்திய அரசாங்கத்துக்கு வரவில்லை.

(iii) மற்றும் (iv) இந்த விஷயங்கள் குறித்த விரிவான தகவல்கள் எவையும் இந்திய அரசாங்கத்திடம் இல்லை. இதுவரை விமானத் தாக்குதல்களின் வீச்சு குறைந்த அளவிலேயே இருக்கிறது; குண்டு வீசப்பட்ட எந்தப் பிரதேசத்திலும் அசாதாரணமான நிலைமை

எதுவும் எழவில்லை என்பதை இந்திய அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ள தகவல்கள் கூறுகின்றன. போர்க்காயங்கள் திட்டப்படி பலர் விஷயத்தில் நிவாரணம் அளிக்கப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. சிலரது விஷயம் பரிசீலனையில் உள்ளது.

திரு.எச்.ஏ.சத்தார் எச்.எஸ்லாக் சேட்: (ஆ) பகுதியைப் பொறுத்தவரையில், தாமதம்குறித்து உண்மையில் எத்தகைய முறையீடுகளும் வரவில்லை என்று மாண்புமிகு என்னுடைய நண்பர் திருப்தியடைந்துள்ளாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதுபற்றி எனக்கு எத்தகைய முறையீடுகளும் வரவில்லை.

# 32

## *நான்காவது தொழிலாளர் மாநாட்டு நடவடிக்கைகள் மற்றும் தொழிலாளர் நிலைக்குழுக் கூட்டங்கள் ஆகியவற்றின் தொகுப்புகள்

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்டவற்றின் ஒவ்வொரு பிரதியையும்+ அவை முன் சமர்ப்பிக்கிறேன்.

(1) 1942 ஆகஸ்டு 7 ஆம் தேதி நடைபெற்ற நான்காவது தொழிலாளர் மாநாட்டு (முதலாவது முத்தரப்பு மாநாடு) நடவடிக்கைகளின் தொகுப்பு.

(2) 1942 நவம்பர் 30 ஆம் தேதியும் டிசம்பர் 1 ஆம் தேதியும் நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழுவின் முதல் கூட்ட நடவடிக்கைகளின் தொகுப்பு.

(3) 1943 ஜனவரி 25 ஆம் தேதி நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழுவின் இரண்டாவது கூட்ட நடவடிக்கைகளின் தொகுப்பு.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1943, பக்கம் 603.

+ இவை இந்த விவாதங்களில் சேர்க்கப்படவில்லை, ஆனால் இவை ஒவ்வொன்றின் பிரதியும் அவையின் நூலகத்தில் வைக்கப்பட்டது.

# 33

## *பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசம், ஷாதரா மற்றும் டில்லியில் வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டுச் சட்டத்தை நடைமுறைப்படுத்துவது குறித்து

211. திரு. முகமது அஸார் அலி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைக் கூறுவாறா?

(அ) டில்லியிலுள்ள தொழில்துறை, வாணிக நிறுவனங்களிலும், அரசு அலுவலகங்களிலும் பணிபுரியும் ஊழியர்களில் பெரும்பாலோர் பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசத்திலும், ஷாதராவிலும், டில்லியிலும் வசித்து வருகிறார்கள் என்பது உண்மையா?

(ஆ) இந்த ஊழியர்களில் பெரும்பாலோர் குறைந்த சம்பளம் பெறுபவர்கள் என்பதும், பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசம், சிவில் நிலையம், டில்லி மற்றும் வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டுச் சட்டம் நடைமுறையிலுள்ள புதிதாக விரிவடைந்த தாரியாகஞ்ச், கரோல் பாக், டில்லி முதலான பகுதிகளைச் சேர்ந்தவர்களைவிட இவர்கள் எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிறார்கள் என்பது உண்மையா?

(இ) இது உண்மையானால் வீட்டுவாடகைக் கட்டுப்பாடுச் சட்டத்தைப் பிரகடனப்பட்ட பிரதேசம், ஷாதரா, டில்லி ஆகிய இடங்களுக்கு விஸ்தரிக்காமல் இருப்பதற்குக் காரணங்கள் என்ன?

(ஈ) பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசம், ஷாதரா, டில்லி ஆகியவற்றுக்கு உட்பட்ட பகுதிகளிலுள்ள குடியிருப்புக் கட்டிடங்கள் விஷயத்தில் வாடகைக் கட்டுப்பாட்டுச் சட்டத்தை நடைமுறைப்படுத்தும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா, அத்தகைய உத்தேசம் ஏதும் இல்லை என்றால் அது ஏன்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1943, பக்கம் 603.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) மதிப்பிற்குரிய உறுப்பினரிடமிருந்து இந்த விவரங்களை எல்லாம் தெரிந்து கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

(இ) மற்றும் (ஈ) 1939 ஆம் வருட புதுடில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவை இந்தப் பகுதிகளில் அமல்படுத்துவது நிர்வாக ரீதியில் நடைமுறை சாத்தியமல்ல; எனினும் பஞ்சாப் நகர்ப்புற வீட்டுவாடகைக் கட்டுப்பாடு சட்டம் இப்பகுதிகளுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

திரு. லால்சந்த் நாவல்ராய்: 1939 ஆம் வருட புதுடில்லி வீட்டுவாடகைக் கட்டுப்பாடு உத்தரவை செயல்படுத்தாமல் இருப்பதற்கு என்ன காரணம்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒன்று மற்றொன்றை விட மிக அவசரமாக இருப்பதே இதற்குக் காரணம்.

# 34

## *புதுடில்லியில் வீட்டுவாடகைக் கட்டுப்பாடு சம்பந்தப்பட்ட வழக்குகள்

+228. கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிரச்சா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

(அ) 1942ல் புதுடில்லியில், வீடுகளில் வாடகைக்கு குடியிருக்கும் உரிமையை விஸ்தரிப்பது சம்பந்தமாக வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரி எத்தனை வழக்குகளை முடிவு செய்தார்?

(ஆ) வீட்டுச் சொந்தக்காரர்கள் வீடுகள் தங்கள் சொந்த உபயோகத்துக்கு வேண்டுமென விண்ணப்பித்துக் கொண்டது உண்டா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கங்கள் 660-661

+ இந்தக் கேள்விக்கான பதில் அவையில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அப்போது அவையில் இல்லை.

(இ) மேற்கண்ட கேள்விக்கு 'ஆம்' என்பது, பதிலானால் வீட்டுச் சொந்தக்காரர்களிடமிருந்து வந்த விண்ணப்பங்களில் எத்தனை விண்ணப்பங்கள் நிராகரிக்கப்பட்டன? எத்தனை விண்ணப் பங்கள் ஏற்கப்பட்டன?

(ஈ) இத்தகைய விண்ணப்பங்களை நிராகரிக்கும் விஷயத் தில் வீட்டுச் சொந்தக்காரர்களின்பால் கடுமையானப் போக்குக் கடைப்பிடிக்கப்பட்டது என்பதும், வீட்டுவாடகைக் கட்டுப்பாடு உத்தரவின் நோக்கத்துக்கே இது முரண்பாடானது என்பதும் உண்மையா? இது உண்மையாயின் இத்தகைய நிகழ்வுகள் பற்றி விசாரிக்கும் வீட்டு வாடகைக் கட்டுப்பாடு அதிகாரியின் முடிவு களை அவசியமானால் மாற்றும் உத்தேசம் தொழிலாளர் நலத் துறை உறுப்பினருக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தாங்கள் கேட்ட தகவல்கள் தற்போது கைவசம் இல்லை, இத்தகவல்களைத் திரட்டு வதற்கு நிறைய அவகாசமும் முயற்சியும் தேவைப்படும், போர் நடை பெற்றுவரும் சமயத்தில் இப்பணியில் ஈடுபடுவது உசிதமானதாகத் தோன்றவில்லை.

# 35

## *புதுடில்லியில் வீட்டு வாடகைக் கட்டுப்பாடு சம்பந்தப்பட்ட வழக்குகள்

**+229. கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிரச்சா:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் திருவுளங்கொண்டு பின்வரும் விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) 1942ல் புதுடில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாடு அதிகாரி புதுடில்லியில் எத்தனை வீடுகளின் வாடகையை நிர்ணயம் செய்தார்?

(ஆ) வீட்டுச் சொந்தக்காரர்களால் எத்தனை ஆட்சேபங் கள் தாக்கல் செய்யப்பட்டன?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கங்கள் 660-661

+ இந்தக் கேள்விக்கான பதில் அவையில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அப்போது அவையில் இல்லை.

(இ) ஏனைய சந்தர்ப்பங்களில் வீட்டுச் சொந்தக்காரர்கள் ஏன் அழைக்கப்படவில்லை?

(ஈ) மேலே குறிப்பிடப்பட்ட வீட்டுச் சொந்தக்காரர்களை அழைத்து விசாரிக்கும்படி வீட்டுவாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரிக்கு மாண்புமிகு உறுப்பினர் ஆணையிடுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 534. (ஆ) மற்றும் (இ) நீங்கள் கேட்ட தகவல்கள் கைவசம் இல்லை. இவற்றைச் சேகரிப்பதற்கு நிறைய அவகாசமும் முயற்சியும் தேவைப்படும். யுத்தம் நடைபெற்றுவரும் சமயத்தில் இத்தகைய பணியில் ஈடுபடுவது உகந்ததல்ல.

(ஈ) வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரி தாம் முடிவு கூறவேண்டிய விஷயங்களை முறையாகத் தீர்மானிக்கும் பொருட்டு அவசியம் நேரிடும்போதெல்லாம் வீட்டுச் சொந்தக்காரரர்களை அழைத்து அவர்களுடன் உரிய முறையில் பேச்சுவார்த்தைகள் நடத்து கிறார். எனவே, அவருக்கு விசேட ஆணைகள் எவற்றையும் பிறப்பிக்க வேண்டிய அவசியம் இல்லை.

# 36

## *புதுடில்லியில் வீட்டு வாடகைக் கட்டுப்பாடு சம்பந்தப்பட்ட வழக்குகள்

**+230. கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரிடமிருந்து கீழ்க்கண்ட விவரங்களை எதிர்பார்க்கிறேன்:

(அ) புதுடில்லியில் 1942ஆம் ஆண்டின்போது குடியிருப்பு உரிமைகளை விஸ்தரிக்கக்கோரும் வழக்குகளை முந்திய வீட்டு வாடகைக் கட்டுப்பாடு அதிகாரி திரு.ஜோன்ஸ் விசாரித்தார் என்பதும், அவருக்குப் பிறகுவந்த அதிகாரி சம்பந்தப்பட்டவர்களை விசாரிக்காமலேயே தீர்ப்புகள் வழங்கினார் என்பதும் உண்மையா? இது உண்மையானால் இப்படிப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை எவ்வளவு?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கம் 661.

(ஆ) இத்தகைய வழக்குகளைத் திரும்பவும் விசாரிப்பதற்காக ஓர் அதிகாரியை நியமிக்கும் உத்தேசம் உண்டா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* (அ) இல்லை; கேள்வியின் பிந்திய பகுதி இங்கு எழவில்லை.

(ஆ) இப்பிரச்சினை எழவில்லை.

# 37

## *பஞ்சாப் வீட்டு வாடகைக் கட்டுப்பாடுகள் சட்டத்தை டில்லி மாகாணம் முழுவதற்கும் விஸ்தரித்தல்

+**231 கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிரச்சா:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்கு அன்புகூர்ந்து பதிலளிப்பாரா?

(அ) பஞ்சாப் வீட்டு வாடகைக் கட்டுப்பாடுகள் சட்டம் டில்லி மாகாணத்தின் சில பகுதிகளில் செயல்படுத்தப்படுகிறதா?

(ஆ) வாடகைக் கட்டுப்பாடு உத்தரவு அமலிலுள்ள பிரதேசங்கள் இந்தச் சட்டத்தின் செயற்பாட்டிலிருந்து விலக்கி வைக்கப்பட்டுள்ளனவா?

(இ) வாடகைக் கட்டுப்பாட்டு உத்தரவைத் திரும்பப் பெற்றுக் கொண்டு, மேலே கூறிய சட்டத்தை இப்பிரதேசங்களுக்கும் விஸ்தரிக்கும்படி அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறும் உத்தேசம் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மற்றும் (ஆ) ஆம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கம் 661.

+ இந்தக் கேள்விக்கான பதில்சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அவையில் இல்லை.

(இ) இல்லை. ஒரு வீட்டின் நியாயமான வாடகையைத் துரிதமாக நிர்ணயிப்பதற்கு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவு வ்ழி வகை செய்கிறது; ஆனால் இந்த ஏற்பாடு பஞ்சாப் சட்டத்தில் இல்லை. எனவே, வாடகைக் கட்டுப்பாடு உத்தரவைத் திரும்பப் பெறுவதற்கு நியாயமான காரணம் எதையும் நான் காணவில்லை.

## *சிம்லாவில் வீட்டு வாடகைக் கட்டுப்பாடு

*கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிரச்சா: (அ) இந்திய அரசாங்கத்தின் சிவில் இலாகாக்கள் டில்லியிலேயே இருக்க வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டதால் சிம்லாவில் உள்ள தனியார் கட்டிடங்களின் வாடகைகள் 1940ல் பெருமளவுக்குக் குறைக்கப் பட்டன என்பதும், இதனால் இந்த ஆண்டில் ஏராளமான கட்டிடங் கள் காலியாகக் கிடந்தன அல்லது சம்பந்தப்பட்ட வீட்டுச் சொந்தக் காரர்கள் அவற்றை மிகக்குறைந்த வாடகைக்கு விட்டனர் என்பதும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா? அவ்வாறு தெரியுமாயின், வாடகைக்கட்டுப்பாடு உத்தரவின்படி அந்த ஆண்டுக்கான வாடகைகளை அடிப்படையான வாடகை களாக நிர்ணயிக்காதிருக்கும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா?

(ஆ) கட்டிடங்களைப் பழுதுபார்ப்பதற்கு ஆகும் செலவு மிகவும் உயர்ந்து விட்டது என்பதும், ஒருபுதிய சட்டத்தின்படி பஞ்சாப் அரசாங்கம் வீடுகளின் மீது புதிதாக 71/2 சதவீத வரி விதித் துள்ளது என்பதும் மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

(இ) சம்பந்தப்பட்ட அரசாங்கத்தால் ஏதேனும் ஒரு வகை யில் விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் காரணமாக சிம்லாவிலுள்ள வீட்டுச் சொந்தக்காரர்கள் பொருளாதார ரீதியில் மிகுந்த அவதிக் கும் கஷ்டநஷ்டங்களுக்கும் உள்ளாகியிருக்கின்றனர் என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கம் 662.

+ *இந்தக் கேள்விக்கான பதில் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அவையில் இல்லை.

(ஈ) 1939 ஆம் வருட வாடகையை அடிப்படை வாடகையாகவும், அத்துடன் பழுதுபார்ப்புச் செலவுகள் மேன்மேலும் அதிகரித்து வருவதைக் கருதி 25 சதவீதம் கூட்டி வாடகையை நிர்ணயிக்கும் வகையில் சிம்லாவுக்கு வீட்டுவாடகைக் கட்டுப்பாடு உத்தரவை மாற்றவோ அல்லது வாடகைக் கட்டுப்பாடு உத்தரவைத் திரும்பப் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக பஞ்சாப் வாடகைக் கட்டுப்பாடுகள் சட்டத்தை நடைமுறைப்படுத்தவோ மாண்புமிகு உறுப்பினர் உத்தேசித்துள்ளாரா? இத்தகைய உத்தேசம் ஏதும் இல்லை என்றால், அதற்குக் காரணம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1940 ஆரம்பத்தில் வாடகைகள் 1939ல் இருந்ததை விடக் குறைவாக இருந்தன; 1939ல் வீட்டுச் சொந்தக்காரர்கள் வாடகைகளை நேர்மையற்ற முறையில் வரம்புமீறி உயர்த்தினர். இது எப்படியிருப்பினும் 1940ல் மிகக்குறைந்த வாடகைக்கு வீடுகள் விடப்பட்டதாகக் கூற முடியாது. மாறாக, 1940 ஆம் வருட வாடகைகளை நியாயமான வாடகைகளாகவே இந்திய அரசாங்கம் கருதிற்று; இதன் காரணமாக வாடகைக் கட்டுப்பாடு உத்தரவுக்கு இதனை அடிப்படை வாடகையாக அது எடுத்துக்கொண்டது.

(ஆ) ஆம்.

(இ) அரசாங்கம் விதித்தக் கட்டுப்பாடுகளினால் வீட்டுச் சொந்தக்காரர்கள் பொருளாதார ரீதியில் எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை. ஆனால் அவர்கள் தங்கள் வீடுகளை வைத்து நியாயமற்ற முறையில் அளவுக்கு அதிகமாக ஆதாயம் பெறமுடியாதபடித் தடுக்கப்பட்டனர்.

(ஈ) இல்லை. வாடகைக் கட்டுப்பாடு உத்தரவு வீட்டு வாடகைகள் சம்பந்தமாக துரிதமாக முடிவு எடுப்பதை நோக்கமாகக் கொண்ட ஓர் அவசரகால நடவடிக்கை. இதற்குப் பதில் பஞ்சாப் நகர்ப்புற வீட்டுவாடகைக் கட்டுப்பாடு சட்டம் செயல்படுமானால் குடித்தனக்காரர்கள் சிவில் நீதிமன்றங்களில்தான் நிவாரணம் பெற வேண்டியிருக்கும்; இதற்கு அதிக செலவு பிடிப்பதோடு தீர்ப்பு கிடைப்பதற்கு நீண்ட காலமும் ஆகும்.

# 38

## *மத்திய அரசு ஊழியர்களின் குடியிருப்புகளை ஸ்தல பள்ளிக்கூடங்களின் அலுவலர்கள் போன்றோர்க்கு ஒதுக்குதல்

*+234. திரு.முகமது அஸார் அலி:* (அ) மத்திய அரசு ஊழியர்களுக்கென்று பொதுப்பணித் துறையினர் பிரத்தியேகமாகக் கட்டிய குடியிருப்புகள் ஸ்தல பள்ளிக்கூடங்களிலும் நீதிமன்றங்களிலும் பணிபுரியும் அலுவலர்களுக்கு ஒதுக்கப்பட்டன; அதிலும் அரசாங்கத்தின் சில குறிப்பிட்ட இலாக்காக்களைச் சேர்ந்த பணியாளர்களைப் புறக்கணித்துவிட்டு இவ்வாறு செய்யப்பட்டது. இவையெல்லாம் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு தெரியுமா?

(ஆ) கொழுத்த சம்பளங்கள் பெற்று அரசாங்க வருவாய்க்கு மிகுந்த இழப்பை ஏற்படுத்தி வருபவர்களும், "தனிப் பெருமைக்குரியவை'' எனப் பெயர் பெற்ற அலுவலகங்களைச் சேர்ந்தவர்களுமான முற்றிலும் தற்காலிகப் பணியாளர்களுக்கு இது விஷயத்தில் தனிச் சலுகை அளிக்கப்பட்டு வருவதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) இதே இலாகாவைச் சேர்ந்த உடனொத்த அலுவலகங்கள் வேறுபட்டமுறையில் நடத்தப்பட்டுவருகின்றன என்பது உண்மையா?

(ஈ) ரயில்வே கணக்குத் தீர்ப்பு அலுவலகம் அனாமதேய

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 2, 1943, பக்கம் 663.

+ இந்தக் கேள்விக்கான பதில் சட்டமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அவையில் இல்லை.

மான ஒன்றாக நடத்தப்பட்டு வந்ததும், ஆனால் இப்போது முடிவு மாற்றப்பட்டு விட்டது என்பதும் உண்மையா?

(உ) நிலைமையை மறுபரிசீலனை செய்து, அனைத்து மத்திய அரசு அலுவலகங்களையும் ஒரே மாதிரியாக நடத்த நடவடிக்கை எடுக்கும் எண்ணம் ஏதும் மாண்புமிகு உறுப்பினருக்கு இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மத்திய அரசாங்கத்தையும், புதுடில்லியிலும் டில்லியிலும் அலுவலகங்கள் உள்ள டில்லி நிர்வாகத்தையும் சேர்ந்த ஊழியர்களுக்காகக் கட்டப்பட்டவை இந்தக் குடியிருப்புகள்; பள்ளிக்கூடங்களிலும் நீதிமன்றங்களிலும் பணிபுரியும் ஊழியர்கள் போன்றோருக்கும் இவற்றை ஒதுக்கித் தரலாம்.

(ஆ) இந்த விதிகளின் செயல்பாடுகள் மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டது போன்ற விளைவுகளை ஏற்படுத்தியிருக்கக் கூடும் என்பதை நான் ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

(இ) இந்தக் குடியிருப்பு வசதிகள் பெறுவதற்கு உரிமையுள்ள அலுவலகங்கள் சம்பந்தப்பட்ட விதிகளுக்குச் சற்றுப் பரந்த அர்த்தம் கொள்ளப்பட்டதன் விளைவாய் சில முறைகேடுகள் நடந்திருப்பது சாத்தியம்.

(ஈ) ஆம்.

(உ) எந்த ஒரு குறிப்பிட்ட அலுவலக விஷயத்தையும் என் கவனத்திற்குக் கொண்டு வந்தால் அதைப் பரிசீலிக்கத் தயாராக இருக்கிறேன்; ஆனால் எதையும் பொதுவான முறையில் கூற வேண்டாம்.

# 39

## *டில்லியில் அரசாங்கம் கட்டுக் குத்தகைக்கு எடுத்துள்ள தனியார் வீடுகள்

252. சர்தார் சாந்த்சிங்: (1) புதுடில்லி, பிரகடனப்படுத்தப் பட்ட பிரதேசம், கரோல்பாக், தாரியா கஞ்ச் போன்ற டில்லியின் பல்வேறு பகுதிகளில் அரசாங்கம் கட்டுக்குத்தகைக்கு எடுத்துள்ள தனியார் வீடுகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தனித்தனியாகக் கூறுவாரா?

(2) ஒவ்வொரு பகுதியிலும் முதல் வீடும் கடைசி வீடும் எப்போது குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன?

(3) எல்லா வீடுகளும் குளிர்காலம் தொடங்குவதற்கு முன்னர் குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன என்பது உண்மையா? இது உண்மை இல்லை என்றால், குளிர்காலம் தொடங்கிய பிறகு எத்தனை வீடுகள் குத்தகைக்கு எடுக்கப்பட்டன?

(4) இந்த வீடுகளுக்கு எந்த அடிப்படையில் அரசாங்கம் வாடகை தந்தது? ஒதுக்கீடு நோக்கத்திற்காக வீடுகள் எவ்விதம் வகை பிரிக்கப்பட்டன? அந்த வகைப்படுத்தலுக்கு இணங்க அவை எவ்வாறு ஒதுக்கீடு செய்யப்பட்டன?

(5) கீழ்வகைப்பட்ட வீடுகளைப் பெறுவதற்குத் தகுதி பெற்றவர்களில் எத்தனை பேருக்கு மேல்வகைப்பட்ட வீடுகள் ஒதுக்கப் பட்டன?

(6) இந்த வீடுகளுக்கான வாடகை எவ்வாறு நிர்ணயிக்கப் படுகிறது?

(7) இந்த வாடகை அவர்களது சம்பளத்தில் 10 சதவீதத்துக்கு மேல் செல்லக்கூடாது என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவதாங்கள், தொகுதி I, மார்ச் 8, 1943, பக்கங்கள் 811-12.

(8) 1942-43 ஆம் ஆண்டுகளில் ஒவ்வொரு பகுதியிலும் முதல் வீட்டிலும் கடைசி வீட்டிலும் எப்போது குடிவந்தார்கள்?

(9) பலவீடுகள் இன்னமும் காலியாக இருக்கின்றன என்பது உண்மையா?

(10) குடித்தனக்காரர்கள் செலுத்திய உண்மையான வாடகைக்கும் வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அளிக்கப்பட்ட தொகைக்கும் இடையேயான வித்தியாசம் காரணமாக அரசாங்கத்துக்கு ஏற்பட்ட நட்டம் எவ்வளவு?

(11) மாதக் கணக்கில் வீடுகள் காலியாக இருந்ததால் அரசாங்கத்துக்கு எவ்வளவு நட்டம் ஏற்பட்டது?

(12) வீடுகளுக்கு எந்த அளவுக்கு கிராக்கி உள்ளது என்பதை அரசாங்கம் அறிந்திருக்கவில்லையா?

(13) சில சந்தர்ப்பங்களில் வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு வழங்கப்பட்ட வாடகை அவர்கள் தங்கள் வீடுகளை அரசாங்கத்துக் குத்தகைக்கு முன்னர் வாங்கிவந்த வாடகையைவிட மிக அதிகம் என்பது உண்மையா? இது உண்மையானால் இந்த நட்டத்திற்கு யார் பொறுப்பு? இதற்குப் பொறுப்பான அதிகாரிகள்மீது என்ன நடவடிக்கை மேற்கொள்ள அரசாங்கம் எண்ணியுள்ளது?

(14) அடுத்த ஆண்டு அரசாங்கம் என்ன செய்யவிருக்கிறது?

(15) மேலும் அதிக வீடுகளை அவர்கள் குத்தகைக்கு எடுக்கும் அவசியம் ஏற்படுமா? அல்லது ஏற்கனவே குத்தகைக்கு எடுக்கப்பட்ட வீடுகளில் சிலவற்றை விடுவிப்பார்களா?

(16) கடந்த காலத்தில் வீடுகளைக் குத்தகைக்கு எடுப்பதில் அதிகாரிகளின் கவனக்குறைவாலும் அலட்சிப் போக்காலும், தகுந்த மதிப்பீட்டுத் தகவல்களைப் பெறாததாலும் அரசாங்கத்துக்குத் தேவையற்ற நட்டம் ஏற்பட்டிருக்கக்கூடும் என்ற ஐயப்பாட்டை அகற்றுவதற்கு ஒரு விசாரணைக் குழுவை அமைக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (1) மற்றும் (2) நீங்கள் கேட்ட தகவல்கள் அடங்கிய ஓர் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

(3) இல்லை. குளிர்காலம் தொடங்கிய பிறகு நாற்பத்தாறு வீடுகள் குத்தகைக்கு எடுக்கப்பட்டன.

(4) 1939 ஆம் வருட புதுடில்லி வாடகைக் கட்டுப்பாட்டு உத்தரவில் நிர்ணயிக்கப்பட்டுள்ளபடி அரசாங்கம் 'நியாயமான வாடகை'' யைச் செலுத்திற்று.

மனைவிமார்களையும் குழந்தைகளையும் கொண்ட அதிகாரிகள், மனைவிமார்களை மட்டுமே கொண்ட அதிகாரிகள் என வகை பிரிக்கப்பட்டு அவர்களுக்குரிய வீடுகள் அதிக சம்பளம் வாங்குபவர்களுக்கு அதிக வாடகை என்ற அடிப்படையில் ஒதுக்கப்பட்டன. எழுத்தர்கள் விஷயத்தில் வீடுகள் இவ்வாறு வகை பிரிக்கப்படாமல் மேலே கூறிய கோட்பாட்டின் அடிப்படையில் ஒதுக்கப்பட்டன.

(5) எவையும் இல்லை. இவ்வகைப்பட்ட முறையில் வீடுகள் பிரிக்கப்படவில்லை. ஆனால் அதிக சம்பளம் வாங்கும் அதிகாரிக்கு அதிக வாடகையுள்ள குடியிருப்பு என்ற கோட்பாடே வீடுகளை ஒதுக்குவதில் எப்போதும் பின்பற்றப்பட்டது.

(6) விதிமுறைகளின்படி வாடகை நிர்ணயிக்கப்பட்டது; வருவாயில் பத்து சதவீதம் அல்லது முழு வாடகை இவற்றில் எது குறைவோ அது வீடுகள் ஒதுக்கப்பட்டவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டது.

(7) ஆம்; வருவாயில் பத்து சதவிகிதம், சம்பளத்தில் அல்ல.

(8), (10) (11) தாங்கள் கேட்ட தகவல்கள் தற்போது கைவசம் இல்லை. அவற்றைச் சேகரிப்பதற்கு நிறைய அவகாசமும் முயற்சியும் தேவைப் படும். யுத்த காலத்தில் இத்தகைய பணியில் ஈடுபடுவது உகந்ததல்ல. ஒரு பெரிய குடியிருப்புத் தொகுதியில் எல்லா வீடுகளும் எப்போதும் நிரம்பியிருப்பது சாத்தியமல்ல. வீடுகள் அவ்வப்போது காலி செய்யப்படுவதாலும், பத்து சதவிகித விதி நடைமுறையிலிருந்து வருவதாலும் ஓரளவு நட்டம் ஏற்படவே செய்யும்.

(9) புதுடில்லியிலும் தாரியாகஞ்சிலும் குத்தகை வீடுகளில் எவையும் காலியாக இல்லை. கரோல்பாக்கில் அதிகாரிகளுக்கான நான்கு குடியிருப்புகளும் எழுத்தர்களுக்கான மூன்று குடியிருப்புகளும் மட்டுமே காலியாக உள்ளன.

(12) அரசாங்கம் முற்றிலும் அறியும்.

(13) வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரியால் நிர்ணயிக்கப்பட்ட வாடகைகளே செலுத்தப்பட்டன. ஏற்கெனவே குத்தகைக்கு எடுக்கப்பட்ட வீடுகளைப் பொறுத்தவரையில், இந்த வாடகைகள் முன்னர் வழங்கப்பட்ட வாடகைககளை விடக் கூடுதலாக இல்லை. கேள்வியின் பிந்திய பகுதி இங்கு எழவில்லை.

(14) மற்றும் (15) ஒரு திட்டவட்டமான பதிலளிக்கும் வகையில் அரசாங்கம் இல்லை. அநேகமாக அரசாங்கத்துக்கு அதிக வீடுகள் தேவைப்படக்கூடும்.

(16) இல்லை. இந்தக் கேள்வியின் இதர பகுதிகளுக்கு நான் அளித்துள்ள பதிலைக் கருத்திற் கொண்டு பார்க்கும்போது இது அவசியம் என்று தோன்றவில்லை.

## தகவல் அறிக்கை

| | | |
|---|---|---|
| (அ) புதுடில்லிப் பகுதி | .... | 122 பங்களாக்களும் குடியிருப்புகளும். |
| பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசம் | .... | 8 பங்களாக்கள். |
| கரோல்பாக் | .... | 143 குடியிருப்புகள் (எழுத்தர்கள் குடியிருப்பதற்கு வசதியானவை உட்பட). |
| தாரியாகஞ்ச் | .... | 34 குடியிருப்புகள் (எழுத்தர்கள் வசிப்பதற்கு மட்டும்). |

| | |
|---|---|
| முதல் வீடு குத்தகைக்கு எடுக்கப்பட்ட நாள் | கடைசி வீடு குத்தகைக்கு எடுக்கப்பட்ட நாள். |

| | | | |
|---|---|---|---|
| (ஆ) புதுடில்லி | ... | 1.4.41 | 2.2.43 |
| பிரகடனப்படுத்தப்பட்ட பிரதேசம் | ... | 1.6.41 | 31.12.42 |
| கரோல் பாக் | ... | 7.7.42. | 15.1.43 |
| தாரியாகஞ்ச் | ... | 15.8.42 | 25.10.42 |

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* சில வீடுகள் ஏன் காலியாக இருக்கின்றன என்பதை நான் அறிந்து கொள்ளலாமா; அதிகாரிகளுக்கும் எழுத்தர்களுக்கும் அவை தேவையில்லையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதற்கு ஏதேனும் தற்காலிகக் காரணம் இருக்கக்கூடும். தற்போதைக்கு அது என்னவென்று நான் அறியேன்.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* எழுத்தர்கள் அல்லது அதிகாரிகளுக்கு அதிக வீடுகள் தேவைப்படுகின்றனவா, இல்லையா? இந்தத் தேவையை உங்களால் முழு அளவுக்குப் பூர்த்தி செய்ய முடியுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்புத் தேவை.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* அதிகாரிகளும் மற்றவர்களும் தங்கியிருப்பதற்கு அரசாங்கம் ஏராளமான கூடாரங்களும் ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது என்பது உண்மை அல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* உண்மைதான்.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* வீடுகள் போதிய எண்ணிக்கையில் கிடைக்கவில்லை என்பதை இது காட்டுகிறதல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம்.

# 40

## *புதுடில்லியில் ஒருங்கிணைந்த 'சி'' வகை குடியிருப்புகளை மேம்படுத்துதல்

*279. சர்தார் சாந்த் சிங்: (அ) 1940 மார்ச் 18 ஆம் தேதி கேட்கப்* பட்ட நட்சத்திரக்குறியிட்ட 437 ஆம் எண் கேள்வியின் (ஊ) பகுதிக்கு அளித்த பதில் சம்பந்தமாக ஒன்று கேட்க விரும்புகிறேன்; புது டில்லியிலுள்ள பழம்பாணி 'சி' வகை குடியிருப்புகளில் எத்தகைய அபிவிருத்திகள் செய்ய வேண்டுமென்று குடியிருப்போர் சங்கங்கள் மூலமோ அல்லது இத்தகைய குடியிருப்புகளைச் சேர்ந்த தனி நபர்கள் மூலமோ அரசாங்கத்துக்கு வந்துள்ள முறையீடுகளில் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) ஒவ்வொரு குடியிருப்பிலும் செய்ய வேண்டிய மாற்றங் களுக்கும், கூடுதலாக சேர்ப்பதற்கும் எவ்வளவு செலவு பிடிக்கும்?

(இ) 1940ல் புதுடில்லியில் எழுத்தர்கள் அல்லது அதிகாரி களின் குடியிருப்புகளில் ஏதேனும் கூடுதல் வசதிகளோ அல்லது மாற்றங்களோ செய்யப்பட்டிருக்கின்றவா? அவ்வாறு செய்யப்பட் டிருந்தால் இத்தகைய கூடுதல் வசதிகள் எவ்வகையான குடியிருப்பு களில் செய்யப்பட்டிருக்கின்றன?

(ஈ) வெவ்வேறு வகையைச் சேர்ந்த ஒவ்வொரு குடியிருப் பினும் புதிய வசதிகள் செய்துதருவதற்கு அல்லது மாற்றங்கள் செய் வதற்கு செலவான தொகை எவ்வளவு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இது சம்பந்த மான விவரங்கள் அடங்கிய ஓர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப் பட்டுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கம் 969.

(ஆ) மற்றும் (ஈ). இது சம்பந்தமான விவரங்கள் தற்போது கைவசமில்லை; இவற்றை சேகரிப்பதற்கு நிறைய அவகாசமும் முயற்சியும் தேவைப்படும்; போர்நடைபெற்றுவரும் சமயத்தில் இப்பணியில் ஈடுபடுவது முறையாகாது. (இ) ஆம். ''ஏ'', ''பி'', ''சி'', ''டி'', ''இ'', வகை குடியிருப்புகளில் புதிய வசதிகளும் மாற்றங் களும் செய்யப்படும்.

## தகவல் அறிக்கை

(i) சமையலறை, குளியலறை, சேமிப்பு அறைகள் ஆகியவை இப்போதுள்ள இடங்களிலிருந்து அகற்றப்பட்டு, மலசலம் கழிப் பிடத்துக்கும் குளியல் அறைக்கும் இடையே உள்ள முற்றத்தின் திறந்தவெளியில் அவை கட்டப்படும்; எல்லா மூன்று அறைகளுக்கு முன்னாலும் ஒரு நீண்ட தாழ்வாரம் அமைக்கப்படும்.

(ii) ஒவ்வோர் அறையிலும் உள் தாழ்வாரத்தை ஒட்டி சன்னல் அமைத்து நல்ல காற்றோற்றத்திற்கு ஏற்பாடு செய்யப்படும்.

(iii) முதல் அறையின் வெளி நுழைவாயிலை அடுத்து ஒரு சன்னல் அமைக்கப்படும்.

(iv) அறையில் வெளிவராந்தாவுக்குச் செல்லும் கடைக் கோடியிலுள்ள இடைவெளியில் ஒரு வாயில் கட்டப்படும்.

(v) மற்றுமொரு தண்ணீர்க் குழாய் அமைக்கப்படும்.

(vi) வேலையாள் தங்கும் அறை கட்டப்படும்.

(vii) சன்னலுடன் கூடிய ஒரு கூடுதல் குளியல் அறை அமைக்கப்படும்.

(viii) எல்லா அறைகளிலும் காற்றோட்டப் பலகணிகள் அமைக்கப்படும்; கூரையில் தற்போது காணப்படும் புழைகள் அடைக்கப்படும்.

(ix) தடுப்புகள் இல்லாத அனைத்து அறைகளிலும் மரத் தடுப்புகள் நிறுவப்படும்.

(x) எல்லா அறைகளிலும் சுவர்களில் நிலையடுக்குகள் கட்டப்படும்.

(xi) உள்தாழ்வாரம் விஸ்தரிக்கப்படும்.

# 41

## *புதுடில்லியில் ஒருங்கிணைந்த 'சி' வகை குடியிருப்புகளை மேம்படுத்துதல்

*280.* சர்தார் சாந்த் சிங்: புதுடில்லியில் பழைய பாணியில் கட்டப்பட்டிருக்கும் 'சி' வகை குடியிருப்பு ஒவ்வொன்றிலும் பின்கண்ட மாற்றங்கள் செய்வதற்கு என்ன செலவாகும் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து கூறுவாரா?

i. முன்புற அறையில் ஒரு சன்னல் அமைத்தல்;

ii. இதர வகை குடியிருப்புகளைப் போன்றே எல்லா மூன்று அறைகளிலும் காற்றோற்றச் சாளரங்கள் அமைத்தல்;

iii. முற்றம் முழுவதிலும் நேர்த்தியாக தளமிடுதல்;

iv. சமையலறையில் மற்றொரு சன்னல் அமைத்தல்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: ஒரு குடியிருப்புக்கு ரூ. 415 செலவாகும்.

# 42

## +புதுடில்லியில் 'சி' வகை குடியிருப்புகளை மேம்படுத்துதல்

*281.* சர்தார் சாந்த் சிங்: (அ) புதுடில்லி டி.ஐ.இஜட் பகுதியில் உள்ள எல்லா ''டி'' வகை பழம்பாணிக் குடியிருப்புகளிலும் 1940 அல்லது 1941ல் முற்றத்தில் முழு அளவுக்கு நேர்த்தியாகத் தளம் பரவப்பட்டது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மனமுவந்து கூறுவாரா?

(ஆ) இந்த மாற்றம் செய்யப்பட்ட இவ்வகை குடியிருப்புகள் மற்றும் ஏனைய குடியிருப்புகளின் எண்ணிக்கை எவ்வளவு?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கங்கள் 967-70.

+ மேற்படி தொகுதி, பக். 970.

(இ) இந்த 'டி' வகை குடியிருப்புகளுக்கு மத்தியில் அமைந்துள்ள ஒன்றிணைந்த 'சி'' வகை குடியிருப்புகள் எத்தனை?

(ஈ) இந்த ஒன்றிணைந்த எல்லா 'சி'' வகை குடியிருப்புகளிலும் நேர்த்தியாக தளமிட எவ்வளவு செலவாகும்?

(உ) எல்லா 'டி'' வகை குடியிருப்புகளிலும் இந்த மாற்றங்களைச் செய்வதற்கு எவ்வளவு செலவாயிற்று?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*

(அ) ஆம்

(ஆ) 1079

(இ) 60

(ஈ) தற்போதைய விலைவாசியில் ரூ.13,500

(உ) ரூ. 29,415

# 43

## *புதுடில்லியில் ஒன்றிணைந்த 'சி' வகை குடியிருப்புகளை மேற்பார்வையிடுதல்

282. *சர்தார் சாந்த் சிங்:* நட்சத்திரக்குறியிட்ட 438 ஆம் எண் கேள்வியின் இரண்டு துணைக் கேள்விக்கு 1940 மார்ச் 18 ஆம் தேதி அளிக்கப்பட்ட பதிலில் புதுடில்லியில் உள்ள ஒருங்கிணைந்த 'சி'' வகை குடியிருப்புகளை மேற்பார்வையிடுவதாக அப்போதைய தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் வாக்குறுதி அளித்திருந்தார்; அதன்படி அவர் இக்குடியிருப்புகளை மேற்பார்வையிட்டாரா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை அமைச்சர் கூறுவாரா? அவ்வாறு மேற்பார்வையிட்டிருந்தால் இந்த விஷயம் குறித்த அவரது அறிக்கையை அவையின் முன்வைக்கும் உத்தேசம் மாண்புமிகு உறுப்பினருக்கு இருக்கிறதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை, எனவே, கேள்வியின் பிந்திய பகுதி இங்கு எழவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கம் 970.

# 44

## *புதுடில்லியில் உள்ள பழம்பாணி 'டி'' வகை குடியிருப்புகளை மேம்படுத்துதல்

*283. சர்தார் சாந்த் சிங்:* (அ) புதுடில்லியில் டி.ஐ.இஜட் பகுதியில் பழம்பாணி 'டி'' வகை குடியிருப்புகளுக்கு உள்ளே இருக்கும் இடைவழிக்கூடங்கள் கூரையிடப்படும்போது, அதன் இருபுறமும் இரு அறைகளின் சுவர்களில் அமைக்கப்பட்டுள்ள காற்றோட்ட சாளரங்கள் கண்ணாடியில் செய்யப்பட்டவையாக இருந்தால் மூடவும் திறக்கவும் வசதியாக இருக்கும் என்று யோசனை கூறப்பட்டதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) கண்ணாடி வகை சாளரங்கள் ஆரோக்கியத்துக்கு கேடு விளைவிக்கும் என்று புதுடில்லி சுகாதார அதிகாரி ஆட்சேபித்ததன் பேரில் அவற்றிற்குப் பதிலாக மெல்லிய கம்பி வலை சாளரங்கள் அமைக்கப்பட்டன என்பது உண்மையா?

(இ) விறகு முதலிய எரிபொருள்களைச் சேமித்து வைப்பதற்காக இந்தக் குடியிருப்புகளில் குளியல் அறைக்கும் கழிப்பிடத்துக்கும் இடையே உள்ள திறந்த பகுதியை மூடுவதற்கு யோசனை தெரிவிக்கப்பட்டது என்பது உண்மையா?

(ஈ) இவ்வாறு மூடுவதையும் புதுடில்லி சுகாதார இலாகா ஆட்சேபித்தது என்பதும் உண்மையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஆம்.

(ஆ) இல்லை.

(இ) ஆம்.

(ஈ) இல்லை.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : சர்தார் சாந்த் சிங்கின் இதர கேள்விகளுக்கான பதில்கள் அவையில் வைக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கங்கள் 970.

# 45

## *புதுடில்லியில் உள்ள ஒருங்கிணைந்த 'சி'' வகை குடியிருப்புகளை மேற்பார்வையிடுதல்

*284. +சர்தார் சாந்த் சிங்: புதுடில்லியிலுள்ள எல்லாக் குடியிருப்புகளையும் மேற்பார்வையிடுவதற்கும், எல்லாக் குடியிருப்புகளிலும் முறையான காற்றோட்ட வசதி செய்துதரப்பட்டிருக்கிறதா என்பதைச் சரிபார்ப்பதற்கும் புதுடில்லி சுகாதார அதிகாரி என்றேனும் அழைக்கப்பட்டாரா என்பதை கல்வித்துறை செயலாளர் கூறுவாரா?*

*(ஆ) முந்திய கேள்விக்கு 'ஆம்' என்று பதில் இருக்குமானால் புதுடில்லி டி.ஐ.இஜட் பகுதியிலுள்ள ஒருங்கிணைந்த 'சி'வகை குடியிருப்புகளை இந்த அதிகாரி என்றேனும் பார்வையிட்டாரா?*

*(இ) அவ்வாறு அந்த அதிகாரி பார்வையிட்டிருந்தால், இக் குடியிருப்புகளிலுள்ள அறைகள் படுக்கையறை போன்றவற்றுக்கு ஏற்றவையாக உள்ளனவா, இல்லையா என்பது குறித்து புதுடில்லி நகரசபைக் குழுவுக்கோ அல்லது இந்திய அரசாங்கத்துக்கோ அறிக்கை ஏதும் சமர்ப்பித்தாரா? அவ்வாறு சமர்ப்பித்திருந்தால் அந்த அறிக்கை அவையின் முன்வைக்கப்படுமா? எந்த அறிக்கையும் சமர்ப்பிக்கப்படவில்லை என்றால் அது ஏன்?*

*(ஈ) சுகாதார அதிகாரி இந்தக் குடியிருப்புகளை மேற்பார்வையிட என்றும் அழைக்கப்படவில்லை என்றால், அவ்வாறு அவர் அழைக்கப்படாததற்குக் காரணங்கள் என்ன? கூடிய விரைவில் இந்தக் குடியிருப்புகளை மேற்பார்வையிடுவதற்கு ஆணைகள் பிறப்பிக்க அவர் தயாராக இருக்கிறாரா? இல்லை என்றால், அது ஏன்?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *(அ) இல்லை*

*(ஆ) மற்றும் (இ) இக்கேள்விகள் எழவில்லை.*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கங்கள் 970-71.

\+ கேள்வி கேட்பவருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் தீர்ந்துவிட்டதால் இந்தக் கேள்விக்கான பதில் அவை முன்வைக்கப்பட்டது.

(ஈ) இந்தக் குடியிருப்புகள் கட்டப்படுவதற்கு முன்னர் அவற்றின் திட்ட உருவரைப் படங்கள் நகரசபைக் குழுவால் அங்கீகரிக்கப்பட்டன; எனவே, சுகாதார அதிகாரி இவற்றை மேற்பார்வையிடுவது அவசியம் என்று அரசாங்கம் கருதவில்லை. எனினும் இக் குடியிருப்புகளை சுகாதார அதிகாரி மேற்பார்வையிடுவதற்கு ஏற்பாடு செய்து வருகிறேன்.

# 46

## *புதுடில்லியில் ஒருங்கிணைந்த 'சி'' வகை குடியிருப்புகள் வழங்கப்பட்டவர்கள் அவற்றை மாற்றிக்கொள்ளும் வசதி

285. +சர்தார் சாந்த் சிங்: அ. புதுடில்லியில் மாத், இப்பட்சன், ரீடிங் சாலைகளில் ஒருங்கிணைந்த 'சி'' வகை குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டவர்கள் ஹாவ்லாக் சதுக்கம், பைர்ட் சாலை, மார்க்கெட் சாலை, இர்வின் சாலை முதலிய இடங்களிலுள்ள வழக்கமான ''சி'' வகை குடியிருப்புகள் கிடைக்கும்போது விண்ணப்பத்தின் பேரில் அவற்றுக்கு சட்டப்படி மாற்றிக் கொள்ள சென்ற ஆண்டு வரை அனுமதிக்கப்பட்டார்கள் என்பது உண்மையா?

(ஆ) ஒன்றிணைந்த 'சி'' வகை குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டபோது அவற்றிற்குப் பதிலாக வழக்கமான 'சி'' வகை குடியிருப்புகளைத் தங்களுக்கு ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்ட வர்களுக்கு அத்தகைய குடியிருப்புகளை ஒதுக்குவதற்கு ஆன நீண்டகாலம் எவ்வளவு?

(இ) இத்தகைய ஒருங்கிணைந்த குடியிருப்புகள் தற்போது ஒதுக்கப்பட்டவர்கள் இந்த ஆண்டு அவற்றை சட்டப்படி மாற்றிக் கொள்ள அனுமதிக்கப்படுவார்களா? இல்லையென்றால், அது ஏன்?

(ஈ) வேலையிலிருந்து ஓய்வு பெறுதல், உயர்வகை குடியிருப்புகள் பெறுதல் போன்ற ஏதேனும் சில காரணங்களால் தற்போதைய ஒதுக்கீட்டாளர்கள் இந்த ஆண்டு காலி செய்ய வேண்டியுள்ள மேலே

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கம் 971.

கூறிய சதுக்கங்களிலும் சாலைகளிலுமுள்ள வழக்கமான 'சி'' வகையைச் சேர்ந்த குடியிருப்புகளின் எண்ணிக்கை எவ்வளவு?

(உ) குறைந்தபட்சம் இந்த ஒருங்கிணைந்த 'சி' வகை குடியிருப்புகளில் குடியிருப்பவர்கள் விரும்பினால் அவற்றை மாற்றிக்கொள்வதற்கு சட்டப்படி அனுமதிக்கப்படுவார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) நீங்கள் கேட்ட தகவல்கள் கைவசம் இல்லை, அவற்றைச் சேகரிப்பதற்கு நீண்ட அவகாசமும் முயற்சியும் தேவைப் படும். யுத்த காலத்தில் இப்பணியில் ஈடுபடுவது உசிதமல்ல.

(இ) மற்றும் (உ). கூடிய விரைவில் இதனை அனுமதிப் பதற்கு விதிகள் மாற்றப்பட்டு வருகின்றன.

(ஈ) வருகிற கோடைகாலத்துக்கும் குளிர் காலத்துக்குமான எல்லா விண்ணப்பங்களும் வந்துசேரும்வரை இந்தத் தகவலைத் தர இயலாது.

# 47

## *போர்க்காயங்கள் (ஈட்டுதிய காப்பீட்டு) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, போர்க்காயங்களுக்கு உள்ளாகும் தொழிலாளர்களுக்கு நட்டஈடு தரும் கடமைப் பொறுப்பை தொழி லதிபர்கள் மீது சுமத்தவும், இத்தகைய கடமைப்பொறுப்பு சம்பந்த மாக தொழிலதிபர்களுக்குக் காப்பீட்டுக்கு வகை செய்யவுமான ஒரு மசோதாவை அவையில் முன்மொழிய அனுமதி விழைகிறேன்.

திரு.தலைவர்: (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தீர்மானம் இதுதான்:

''போர்க்காயங்களுக்கு உள்ளாகும் தொழிலாளர்களுக்கு நட்டஈடு தரும் கடமைப்பொறுப்பை தொழிலதிபர்கள் மீது சுமத்தவும், இத்தகைய கடமைப் பொறுப்பு சம்பந்தமாக

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கம் 976.

தொழிலதிபர்களுக்குக் காப்பீட்டுக்கு வகை செய்யவுமான மசோதாவை தாக்கல் செய்ய அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்கப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, மசோதாவை முன்மொழிகிறேன்.

# 48

## *டில்லியில் பலதொழில் நுணுக்கப் பயிற்சி நிலையத்தின் தொழில்நுட்பப் பயிற்சிமையத்தில் போதனாசிரியர்கள் முதலானோர் வேலைநீக்கம்

311. **மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:** (அ) 1942 மார்ச் 25 ஆம் தேதி நட்சத்திரக் குறியிடப்படாத கேள்வி எண் 75க்கு அளிக்கப்பட்ட பதிலின் (இ) பகுதியைக் கருத்திற்கொண்டு, தேர்ச்சி பெற்ற நிபுணர்கள் மிகவும் பற்றாக்குறையாக இருக்கும்போது, டில்லி பல-தொழில் நுணுக்கப் பயிற்சி நிலையத்தின் தொழில் நுட்பப் பயிற்சி மையத்தைச் சேர்ந்த போதனாசிரியர்களும், உதவி போதனா சிரியர்களும் அடிக்கடி வேலைநீக்கம் செய்யப்படுவதற்கான காரணத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) எத்தகைய காரணமும் கூறாமல் சில முஸ்லீம்கள் பணியிலிருந்து நீக்கப்பட்டார்கள் என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அ. 1942 ஏப்ரல் 1 முதல் பதினான்கு போதனாசிரியர்கள் வேலைநீக்கம் செய்யப்பட்டிருக்கின்றனர். இவர்களில் 13 பேர் திறமையின்மைக்காகவும், ஒருவர் அரசியல் நடவடிக்கைகளுக்காகவும் பணிநீக்கம் செய்யப்பட்டனர்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 11, 1943, பக்கம் 971.

# 49

## [1]புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் நூல் கட்டுமானப் பிரிவு (பைண்டிங்) ஊழியர்களின் குறைகள்

*312. காஜி முகமது அகமது காஸ்மி: (அ) புதுடில்லியிலுள்ள இந்திய அரசாங்க அச்சகத்தின் அச்சக ஊழியர்கள் அனைவரும் 1942 டிசம்பர் 1,2 தேதிகளில் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டார்கள் என்றும், அவற்றில் கோரிக்கைகள் முன்வைக்கப்பட்டன என்றும், அவற்றில் ஒன்று பைண்டிங் தொழிலாளர்களின் வருடாந்திர ஊதிய உயர்வு பற்றியது என்றும் கூறப்படுகிறது. மேலும், பைண்டிங் தொழிலாளர்களின் மாதச் சம்பளம் ரூ.30லிருந்து ஆரம்பித்து 20 ஆண்டுகளுக்குள் அதிகபட்ச சம்பளவீதம் மாதம் ரூ.75 ஐ எட்ட வேண்டுமென்று கோரப்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. இவை எல்லாம் உண்மை எனவும் சொல்லப்படுகிறது. இவை எல்லாம் உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா?*

*(ஆ) வருடாந்தர ஊதிய உயர்வு கோரி பைண்டிங் பிரிவு 1927 முதல் அலுவல் குழுவிடம் கோரிக்கைகள் முன்வைத்து வருகிறது என்பதும், சட்டமன்றத்திலும் இது சம்பந்தமாக கேள்விகள் கேட்கப்பட்டு வருகின்றன என்பதும், அச்சுத் தொழிலாளர் சங்கமும் இதுகுறித்து கோரிக்கை மனு சமர்ப்பித்திருக்கிறது என்பதும் உண்மையா, இல்லையா?*

*(இ) கடந்த 15-20 ஆண்டுகளாகவே அச்சுத்தொழிலாளர்கள் ஒரு குறிப்பிட்ட தொகையையே ஊதியமாகப் பெற்று வருகிறார்கள் என்பதும் வீட்டு வாடகை, கூட்டுறவுச் சங்கக் கடன் போன்ற வழக்கமானப் பிடித்தங்கள் போக அவர்கள் மாதம் 10 முதல் 12 ரூபாய்தான் பெற்றுவருகிறார்கள் என்பதும், இதனைக் கொண்டு வாழ்க்கை நடத்த முடியாமல் அவர்கள் பெரிதும் வாதனையும் வேதனையும் பட்டு வருகிறார்கள் என்பதும் உண்மையா, இல்லையா?*

*(ஈ) 1942 நவம்பரில் பைண்டிங் தொழிலாளர் சங்கம் தொழிலாளர் நலத்துறைச் செயலாளரிடம் ஒருகோரிக்கை மனுவைச் சமர்ப்*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 16, 1943, பக்கம் 1121

பித்தார்கள் என்பதும், வருடாந்தர ஊதிய உயர்வு அமலுக்கு வரும் வரை பைண்டிங் தொழிலாளர்களை 25 வருட கால சேவைக்கு முன்னர் ஓய்வுபெறச் செய்யக்கூடாது என்றும், இதன்மூலம் தங்களுக்கு ஓரளவு நிவாரணம் கிடைக்கும் என்றும் அந்த மனுவில் குறிப்பிட்டிருந்தார்கள் என்பதும் உண்மையா?

(உ) 20 வருடகாலம் சேவை செய்யும் வரை பைண்டிங் தொழிலாளர்களை பணியில் வைத்திருக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம், மேற்பார்வையிடும் பணியாளர்களையும் வேறு சில ஊழியர்களையும் தவிர்த்து இதர எல்லோரும் வேலைநிறுத்தம் செய்தார்கள். பைண்டிங் பிரிவில் சேவைகால அடிப்படையிலான ஊதிய விகிதத்தை நடைமுறைக்குக் கொண்டுவரும் விஷயம் பரிசீலனையில் உள்ளது.

(ஆ) ஆம்.

(இ) இல்லை.

(ஈ) இல்லை. அச்சுத் தொழிலாளர் சங்கம் 1942 நவம்பரில் ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தது. ஆனால் அதில் நீங்கள் குறிப்பிட்ட கோரிக்கைகள் எவையும் முன்வைக்கப்படவில்லை.

(உ) இல்லை. எந்த ஓர் ஊழியரும் 55 வயதை எட்டும் வரை ஓய்வுபெறத் தேவையில்லை.

# 50

## *புதுடில்லி இந்திய அரசாங்கத்தின் பைண்டிங் பிரிவு ஊழியர்களின் குறைகள்

313. @குவாஜி முகமது அகமது காஸ்மி: (அ) புதுடில்லியிலுள்ள இந்திய அரசாங்க அச்சகத்தின் பைண்டிங் பிரிவில் பணி

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 16, 1943, பக்கம் 1121

@ இந்தக் கேள்விக்கான பதில் அவையில் சமர்ப்பிக்கப்பட்டது

புரியும் சிலர் மாதம் 30 ரூபாய் ஊதியம் பெறுகின்றனர் என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நல்த்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) இவர்களது சேவைகாலத்தை அலுவலகம் தவறாகக் குறைத்துவிட்டது என்பதும், இதுவரை அதைச் சரிசெய்யவில்லை என்பதும், இதனால் ஆண்டுக்கணக்காக அவர்கள் மாதம் ரூ.30தான் ஊதியமாகப் பெற்று வருகிறார்கள் என்பதும், அதேசமயம் குறைந்த சேவை காலமுள்ளவர்கள் அதிகம் ஊதியம் பெற்று வருகிறார்கள் என்பதும், உதாரணமாக மாதம் 22 ரூபாயும் 25 ரூபாயும் பெற்று வந்தவர்கள் தற்போது 40 ரூபாயும் 45 ரூபாயும் பெற்றுவருகிறார்கள் என்பதும் உண்மையா?

(இ) சேவைக் காலம் ரத்து செய்யப்பட்டவர்கள் தங்களது கடந்த சேவைக் காலத்தை தற்போதைய சேவைக் காலத்துடன் சேர்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு கணக்குத் தணிக்கை அதிகாரியிடம் விண்ணப்பம் சமர்ப்பித்திருக்கிறார்கள் என்பது உண்மையா?

(ஈ) சேவை காலம் ரத்து செய்யப்பட்டவர்களுக்கு அதனை மீட்டுத்தர அரசாங்கம் தயாராக இருக்கிறதா? அவ்வாறு தயாராக இருக்குமானால், அவர்களுக்குப் பதிலாக நியமிக்கப்பட்டவர்களை விடவும் மேம்பட்ட நிலைக்கு அவர்களை உயர்த்துவது சாத்தியமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:**

(அ) ஆம்.

(ஆ) குற்றம் பொறுத்து மன்னித்தல் என்பது இடைமுறிவுக்கு முந்திய காலத்தை இடைமுறிவுக்குப் பிறகு பெறக்கூடிய ஊதியத்தை நிர்ணயிப்பதற்கான சேவைக் காலமாகக் கணக்கிடுவதைக் குறிக்கவில்லை; இதுவிஷயத்தில் எந்தத் தவறும் இழைக்கப்படவில்லை.

(இ) இல்லை.

(ஈ) இப்பிரச்சினை எழவில்லை.

# 51

## *மத்தியப் பொதுப்பணித் துறையில் முஸ்லீம் பொறியாளர்கள் முதலானோர் மிகக் குறைந்த எண்ணிக்கையில் இருத்தல்

*319. கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா: (அ)* சாலை போடுதல், விமான தளங்கள் கட்டுதல் உட்பட மத்திய பொதுப் பணித் துறையில் பணிபுரியும் மேலாண்மை பொறியாளர்கள், நிர்வாகப் பொறி யாளர்கள், சப்-டிவிஷனல் அதிகாரிகள்(அரசிதழ் பதிவு பெற்ற வர்கள், பதிவு பெறாதவர்கள்) போன்றோரின் எண்ணிக்கையை மாண் புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் வகுப்புவாரியாக அளிப் பாரா?

ஆ. மேலே கூறிய ஒவ்வொரு பணிப் பிரிவிலும் முஸ்லீம் கள் குறைந்த அளவு பிரதிநிதித்துவமே பெற்றிருக்கிறார்கள் என்பது உண்மையா? முஸ்லீம்களின் இந்தக் குறைந்த அளவுப் பிரதிநிதித் துவத்தை ஈடுசெய்ய அரசாங்கம் என்ன செய்ய உத்தேசித்துள்ளது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ)* இது சம்பந்த மான தகவல் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

(ஆ) ஆம். முஸ்லீம்கள் குறைந்த பிரதிநிதித்துவம் பெற்றிருப் பதற்கு ஒருமுக்கிய காரணம் உண்டு; விமான தளங்கள் கட்டும் பணி மிக அவசரமானதாகவும் முக்கியமானதாகவும் இருந்தது; மிகுந்த அனுபவமும் தேர்ச்சியும்பெற்ற அதிகாரிகள் இதற்கு பெரும் எண்ணிக்கையில் தேவைப்பட்டனர். இந்தியாவுக்கு ஜப்பானிய அபாயம் மேன்மேலும் அதிகரித்து வந்த நிலைமையில், மிகக் குறைந்த அவகாசத்தில் இந்த அதிகாரிகள் தேவைப்பட்டனர்; கண் டிப்பான வகுப்புவாரி அடிப்படையில் நியமனங்கள் செய்வதாக இருந்தால் மிகுந்த காலதாமதம் ஏற்படும்; இது நாட்டின் பாதுகாப் புக்கு மிகப்பெரும் தீங்கை விளைவிக்கும், வகுப்புவாரி அடிப் படையைப் புறக்கணித்துவிட்டு செய்யப்பட்ட இந்த நியமனங்கள் யாவும் தற்காலிகமானவையே; இப்போதைய அவசர நிலைமை முடிவுக்கு வந்ததும் இந்த ஒழுங்கு முறையின்மை சரிசெய்யப்படும்.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, பக்கங்கள் 1124-25.

# தகவல் அறிக்கை

| அதிகாரிகள் வகிக்கும் பதவியின் பெயர் | ஐரோப்பியர்கள் | ஆங்கிலோ-இந்தியர்கள் | இந்துக்கள் | முஸ்லீம்கள் | சீக்கியர்கள் | இந்தியக் கிறித்தவர்கள் | பார்சிகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. மேலாண்மை பொறியாளர்கள் | 5 | ... | 3 | ... | 2 | ... | ... | 10 |
| 2. நிர்வாகப் பொறியாளர்கள் | 12 | 4 | 35 | 5 | 1 | 5 | .. | 62 |
| 3. சப்டிவிஷனல் அதிகாரிகள் அரசிதழ் பதிவு பெற்றவர்கள் (உதவி நிர்வாகப் பொறியாளர்கள்) | 1 | 5 | 25 | 6 | 2 | 4 | ... | 43 |
| 4. சப்டிவிஷனல் அதிகாரிகள் அரசிதழ் பதிவு பெற்றவர்கள் (தற்காலிக அதிகாரிகள்) | .. | 4 | 43 | 4 | 3 | .. | 1 | 55 |
| 5. சப்டிவிஷனல் அதிகாரிகள் (அரசிதழ் பதிவு பெறாதவர்கள்) | ... | 3 | 124 | 23 | 22 | 1 | .. | 173 |

*மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:* அவசர நியமனங் கள் செய்யப்படும்போது துர்ப்பாக்கியசாலிகளான முஸ்லீம்கள் தான் பாதிக்கப்பட வேண்டுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* முஸ்லீம்கள் மட்டுமே துர்ப்பாக்கியசாலிகளான சமூகத்தினர் அல்ல; இதே மாதிரி பாதிக்கப்பட்ட இதர பல சமூகத்தினரும் இருக்கின்றனர்.

*மௌல்வி முகமது அப்துல் கனி:* மாகாணங்களில் தகுதி யானவர்கள் கிடைப்பார்களேயானால் அவர்களிடமிருந்து முஸ்லீம் அதிகாரிகளை நியமிக்க அரசாங்கம் எண்ணியுள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம்.

*திரு. ஜமுனாதாஸ் எம். மேத்தா:* வகுப்புவாரிப் பிரதிநிதித் துவம் மீண்டும் செயல்படுத்தப்படும்போது, ஏற்கனவே நியமனம் செய்யப்பட்டவர்கள் வேலைநீக்கம் செய்யப்படுவார்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவர்கள் எல்லாம் தற்காலிகமாக நியமிக்கப்பட்டவர்கள்.

*திரு. ஜமுனாதாஸ் மேத்தா:* அப்படியானால் அவர்கள் வேலை நீக்கம் செய்யப்படுவார்கள்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* அவர்கள் தற்காலிக மாக நியமிக்கப்பட்டவர்கள். எனவே, வேலை நீக்கப் பிரச்சினை இங்கு எழவில்லை.

கேள்வி கேட்ட பிறகும் திரு. ஜமுனாதாஸ் மேத்தா நின்று கொண்டிருந்தார்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* மதிப்பிற்குரிய உறுப்பினர் கேள்விகேட்டு முடிந்ததும் தமது இருக்கையில் அமர்வது தான் முறை.

*திரு.ஜமுனாதாஸ் எம்.மேத்தா:* மற்றொரு கேள்வி கேட்க விரும்புகிறேன், ஐயா, நெருக்கடி சமயத்தில் கைகொடுத்து உதவ வந்தவர்களைத் தண்டிக்க விரும்புகிறீர்கள், அப்படித்தானே?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த நியமனங்கள் தற்காலிகமானவை. எனவே, வேலையை விட்டு விலக்கும் பிரச்சினை இங்கு எழவில்லை.

*கான் பகதூர் ஷேக் பஸில் - இ- ஹக் பிரச்சா:* இந்தத் தற்காலிக நியமனங்கள் எவ்வளவு காலம் நீடித்திருக்கும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதனை அறுதியிட்டு உறுதியாகக் கூறமுடியாது.

*கான் பகதூர் ஷேக் பஸில் - இ- ஹக் பிரச்சா:* மூன்று மாதங்களுக்கும் அதற்கு அதிகமான காலத்திற்குமான எந்த நியமனமும் பல்வேறு சமூகங்களுக்கும் நிர்ணயிக்கப்பட்டிருக்கும் விகிதாசாரங்களைக் கருத்திற்கொண்டு செய்யப்பட வேண்டுமென்று அரசாங்கம் நிறைவேற்றியுள்ள தீர்மானத்திலோ அல்லது அது வகுத்துள்ள விதிகளிலோ கூறப்படவில்லையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* எல்லாம் அவசர நிலையைப் பொறுத்துள்ளது.

# 52

## *புதிய துணை எஸ்டேட் அதிகாரிகளும் எஸ்டேட் அதிகாரியின் உதவியாளர்களும்

*320. கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா:* (அ) கடந்த இரண்டு ஆண்டுகளில் புதிதாக உருவாக்கப்பட்ட துணை எஸ்டேட் அதிகாரிகள் மற்றும் எஸ்டேட் அதிகாரியின் உதவியாளர்களின் பணியிடங்கள் எத்தனை என்பதை தொழிலாளர்கள் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா?

(ஆ) இந்தப் பணியிடங்களில் எவையேனும் முஸ்லீம்களுக்குத் தரப்பட்டிருக்கின்றனவா? இல்லையெனின், ஏன் தரப்படவில்லை?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 16, 1943, பக்கம் 1125.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) துணை எஸ்டேட் அதிகாரிகளின் எண்ணிக்கை - மூன்று; எஸ்டேட் அதிகாரி யின் உதவியாளர்கள் எண்ணிக்கை ஒன்று.

(ஆ) இல்லை.

மூன்று பணியிடங்கள் தலைமைப் பொறியாளர் அலுவல கத்தைச் சேர்ந்த கண்காணிப்பாளர் மத்தியிலிருந்து தேர்வு மூலமும் பதவி உயர்வு மூலமும் நிரப்பப்பட்டன. இப்பணியிடங்களுக்கு ஆளெடுக்கும் வழக்கமான நடைமுறை இதுதான். தகுதிவாய்ந்த முஸ்லீம் கண்காணிப்பாளர் எவரும் கிடைக்கவில்லை. பர்மா பொதுப் பணியிலிருந்து தற்காலிகமாக அனுப்பப்பட்ட ஓர் அதிகாரி யைக் கொண்டு நான்காவது பணியிடம் நிரப்பப்பட்டது.

**கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா:** இந்தப் பணி. யிடங்கள் நிரப்பப்பட்டபோது திரு.கரீம் பக்ஷ் பதவியில் மிகவும் முற்பட்டவராக இருந்தார் என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்புத் தேவை.

**கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா:** திருவாளர்கள் பிரௌன், கிராண்ட், எல்லிஸ், பிராங்க்- ஹர்ஸ்ட் ஆகியோர் கண் காணிப்பாளர் பதவிகளை வகித்து வந்தார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக் கும் முன்னறிவிப்புத் தேவை.

**திரு. முகமது நௌமான்:** ஏனையோர் திறமையானவர்களா இல்லையா என்பதை அறிய எல்லாவிதமான விசாரணைகளும் மேற்கொள்ளப்பட்டனவா என்பதை அறிய விரும்புகிறேன்; மேலும், எடுத்ததெற்கெல்லாம் முன்னறிவிப்பு தேவை என்று மாண்புமிகு உறுப்பினர் கூறுகிறார்; முஸ்லீம் எவரும் தகுதி வாய்ந்தவராக இல்லையென்றால் அதற்கான முறையான பதில்களோடு அவர் இங்கு வந்திருக்க வேண்டும் இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முறையான

விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டிருக்கும் என்பதில் எனக்கு எந்த ஐயமும் இல்லை.

திரு. முகமது நௌமான்: ஆனால் இது விஷயத்தில் மாண்புமிகு உறுப்பினர் எத்தகைய தகவலும் தரவில்லையே?

திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): இது ஒரு கேள்வியாகாது. அடுத்த கேள்வி.

# 53

## *விமானதளப் பணிகள் சம்பந்தமான ஒப்பந்தங்கள்

321. கான் பகதூர் ஷேக் பஸில் - இ - ஹக் பிரச்சா: விமான தளப் பணிகள் விஷயத்தில் ஒப்பந்தப்புள்ளிகள் கேளாமல், தனிப் பட்டமுறையில் பேச்சுவார்த்தைகள் நடத்தி ஒப்பந்தங்கள் செய்து கொள்ளும் நடைமுறையை அரசாங்கம் கடைப்பிடித்து வருவது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினரிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

(ஆ) 1942 ஆம் ஆண்டில் தனிப்பட்ட பேச்சுவார்த்தைகள் மூலம் வழங்கப்பட்ட ஒப்பந்தப் பணிகளின் மொத்த மதிப்பு எவ் வளவு?

(இ) தனிப்பட்ட பேச்சுவார்த்தைகள் மூலம் முஸ்லீம் ஒப் பந்தக்காரர்களுக்கு வழங்கப்பட்ட ஒப்பந்தப் பணிகளின் மதிப்பு எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் கேட்ட தகவல்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன; விரைவில் அவையின் முன்வைக்கப்படும்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 16, 1943, பக்கம் 1125.

# 54

## *புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் பைண்டிங் இலாகா ஊழியர்களின் குறைகள்

338. குவாஜி முகமது அகமது காஸ்மி: (அ) புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் பைண்டிங் இலாகா ஊழியர்களுக்கு வருடாந்தர ஊதிய உயர்வு அளிக்கப்படாததால், மற்ற இலாகாக்களில் பணியிடங்கள் காலியாகும்போது அங்கு மாறுவதற்கு அவர்கள் விரும்புவதாகவும், ஆனால் அவர்களுடைய விண்ணப்பங்கள் உரிய இடங்களுக்கு அனுப்பி வைக்கப்படவில்லை என்றும் கூறப் படுவது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) சிலர் விஷயத்தில் ஒரு சோதனை மேற்கொள்ளப் பட்டது என்றும், அதில் அவர்கள் வெற்றிபெற்றார்கள் என்றும், எனினும் இன்றுவரை அவர்கள் காலியாக உள்ள இடங்களில் பணியிலமர்த்தப்படவில்லை என்றும் கூறப்படுவது உண்மையா, இல்லையா?

(இ) பைண்டிங் இலாகாவில் வருடாந்தர ஊதிய உயர்வு நடைமுறைப்படுத்தப்படும்வரை, ஏற்கெனவே அந்த இலாகாவில் பணியாற்றிவரும் ஊழியர்களில் சிறந்தவர்களுக்கு வெளியாரை விட முன்னுரிமை அளித்து பிற இலாகாக்களில் காலியாக உள்ள பணி இடங்களில் அவர்களை அமர்த்த வேண்டுமென்று நிர்வாகியைப் பன்முறை கேட்டுக்கொண்ட போதிலும், அவர் இந்த வேண்டுகோள்களை எல்லாம் செவிமடுக்கவில்லை என்பது உண்மையா, இல்லையா?

(ஈ) தேர்வில் வெற்றி பெற்றவர்கள் பாதிக்கப்படாமல் இருக்கும் பொருட்டு, அச்சு எழுத்துக்களைப் பிரித்துத் தனித்தனி அறைகளில் போடும் இலாகாவில் அவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 20, 1943, பக்கம் 1269

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) இல்லை. தொழில்துறை ஊழியர்களை ஒரு தொழில்பிரிவிலிருந்து இன்னொரு பிரிவுக்கு மாற்றுவது 1940 ஆம்வருட தேசியப்பணித்துறை (தொழில்நுட்ப ஊழியர்) அவசரச் சட்டத்துக்கு உட்பட்டது.

விமானப்படையில் சேவை செய்ய கடந்த ஜனவரியில் மனு செய்த பண்டகசாலை ஊழியரின் விண்ணப்பம் உரிய இடத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டது.

(ஆ) 1941 ஆம் ஆண்டில் நடைபெற்ற தேர்வில் பங்குகொண்ட ஒரு பண்டகசாலை ஊழியர் எழுத்துப் பிரிப்பாளர் பணிக்குத் தகுதி பெற்றார். இத்தகைய தகுதி பெற்ற பலர் ஏற்கனவே இருந்ததாலும், எழுத்துப் பிரிப்புப் பணி பண்டகசாலை ஊழியரின் பதவி உயர்வுக்கு உரியது அல்லாததாலும், அந்தப் பண்டகசாலை ஊழியர் காலியான இடத்துக்கு நியமிக்கப்படவில்லை.

(இ) இந்தக் கேள்வியின் முதல் பகுதிக்கு 'இல்லை' என்பது தான் பதில். இரண்டாவது பகுதி இங்கு எழவில்லை.

(ஈ) வெற்றி பெற்ற வேட்பாளர்கள் எழுத்துப் பிரிப்புப் பணியிடங்களுக்கு விதிமுறைகளின்படி பரிசீலிக்கப்படுவார்கள்.

*குவாஜி முகமது அகமது காஸ்மி:* கேள்வியின் (ஈ) பகுதிக்கு அளிக்கப்பட்ட பதிலைப் பொறுத்தவரையில், தேர்வில் வெற்றி பெற்றவர்களின் துல்லியமான நிலை என்ன என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் முன்னர் குறிப்பிட்டதுபோல் ஏற்கனவே தகுதியான வேட்பாளர்கள் பலர் இருக்கின்றனர்.

*குவாஜி முகமது அகமது காஸ்மி:* எனினும் தேர்வில் வெற்றி பெற்றவர்களைப் பொறுத்தவரையில், அவர்களது கோரிக்கைகள் பரிசீலிக்கப்படுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நிச்சயமாக:

# 55

## * புதுடில்லியிலுள்ள இந்திய அரசாங்க அச்சகத்தின் பைண்டிங் இலாகாவில் தேர்வுநிலை பணியிடங்கள்

339. குவாஜி முகமது அகமத் காஸ்மி: அ. புதுடில்லியிலுள்ள இந்திய அரசாங்க அச்சகத்தின் ஏறத்தாழ எல்லா இலாகாக் களிலும் தேர்வுநிலை பணியிடங்கள் அறிவிக்கப்பட்டிருக்கும் போது, பைண்டிங் இலாகாவுக்கு மட்டும் ஏன் இத்தகைய தேர்வு நிலை பணியிடங்கள் வழங்கப்படவில்லை என்பதை அன்புகூர்ந்து தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) பைண்டிங் இலாகாவில் இதற்கு முன்னர் 50 அல்லது 60 பேர் இருந்தனர்; அவர்களது பணியை மேற்பார்ப்பதற்கு ஒரு போர்மனும், ஜமேதாரும், நூல்கட்டுமானப் பரிசோதகரும் இருந் தனர். ஆனால் இப்போது இந்த இலாகாவில் பணியாற்றும் ஊழி யர்களின் எண்ணிக்கை 135 ஆக அதிகரித்திருக்கும்போது, அவர் களின் பணிகளை மேற்பார்ப்பதற்கு முன்போல மூன்றுபேரே இருக் கின்றனர் என்பது உண்மையா, இல்லையா?

(இ) பைண்டிங் இலாகாவை இரு பிரிவுகளாகப் பிரிக்கவும், மேலும் ஒரு போர்மனையும், ஜமேதாரையும், பரிசோதகரையும் நியமிக்கவும் அரசாங்கம் முன்வருமா?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) அச்சகத்தின் பைண்டிங் இலாகாவில் தேர்வுநிலை பணியிடம் ஒன்றும், பண்டகசாலை போர்மன் பணியிடம் ஒன்றும் இருக்கின்றன.

(ஆ) பைண்டிங் இலாகாவில் முன்பு அறுபது ஊழியர்கள்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 20, 1943, பக்கங்கள் 1269.

இருந்தனர்; பைண்டிங் பண்டகசாலை போர்மன் என்ற ஒரே ஒரு கண்காணிப்பாளர் பணியிடம் மட்டுமே இருந்தது. இதே இலாகா வில் தற்போது போர்க்காலப் பணியிடங்கள் இருபது உட்பட 107 பணியிடங்கள் உள்ளன; அதுமட்டுமல்ல கண்காணிப்பாளர் அந்தஸ்தில் மூன்று பேர் இருந்து வருகின்றனர்.

(இ) இல்லை.

குவாஜி முகமது அகமது காஸ்மி: மாண்புமிகு உறுப்பினரது பதிலை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஊழியர்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கிறது என்று நான் கூறியதை அவர் ஏற்றுக் கொள்கிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். பைண்டிங் இலாகாவில் இப்போது ஊழியர்களின் எண்ணிக்கை 107 ஆக அதிகரித் திருக்கிறது என்று கூறினேன்.

குவாஜி முகமது அகமது காஸ்மி: குறைந்த சம்பளம் வாங்கும் ஊழியர்களின் எண்ணிக்கை அதிகரித்திருக்கும் நிலைமை யில் கண்காணிப்பாளர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பது உசித மானது என்பதை மாண்புமிகு உறுப்பினர் பரிசீலிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதனைப் பரி சீலிப்பேன்.

# 56

## [1]புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் அச்சு எந்திர இலாகாவில் பணிபுரியும் அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்களின் குறைகள்

340. குவாஜி முகமது அகமது காஸ்மி: (அ) புதுடில்லி, இந்திய அரசாங்க அச்சகத்தின் அச்சு எந்திர இலாகாவில் பலர் அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்களாகவும், மற்றும் சம்பள அடிப் படையில் பணிபரியும் தொழிலாளர்களாகவும் வேலைக்கு அமர்த்தப் பட்டுள்ளனர் என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 20, 1943, பக்கம் 1270.

(ஆ) அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்கள் அனைவருக்கும் ஒரே அளவு வேலை தரப்படுவதில்லை என்றும், இதனால் சிலர் மற்றவர்களை விட அதிகம் ஊதியம் பெறுகிறார்கள் என்பது உண்மையா?

(இ) வேலை தருவதில் அதிகாரிகள் பாரபட்சம் காட்டுகிறார்கள் என்பதும், இதனால் மிகவும் ஏற்றத்தாழ்வான முறையில் ஊதியம் விநியோகிப்படுகிறது என்பதும், இதன் காரணமாக அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்கள் குறைந்த ஊதியமே பெறுகிறார்கள் என்பதும், அவர்களது தேவைகளுக்கும் அவர்களுடைய குடும்பங்களைப் பராமரிப்பதற்கும் அது போதுமானதாக இருப்பதில்லை என்பதும் உண்மையா?

(ஈ) அனைவருக்கும் சம அளவில் வேலை தந்து, மாத இறுதியில் அனைவரும் ஏறத்தாழ ஒரே மாதிரியான ஊதியம் பெறுவதைச் சாத்தியமாக்கி, அவர்களது குறைகளைக் களைவது பற்றிப் பரிசீலிக்க அரசாங்கம் முன்வருமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இந்தக் கேள்வியின் முதல் பகுதிக்கு 'இல்லை'' என்பதே பதில். இரண்டாவது பகுதி இங்கு எழவில்லை.

(இ) இல்லை.

(ஈ) உண்மையில் இவ்வாறுதான் செய்யப்படுகிறது. ஆனால் சமமான வேலைக்கு சமமான ஊதியம் கிடைக்கும் என்று சொல்ல முடியாது. 1941 பிப்ரவரி 17 ஆம் தேதிய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 85-இன் (இ) பகுதிக்கு அளிக்கப்பட்ட பதிலை இந்தச் சந்தர்ப்பத்தில் மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

குவாஜி முகமது அகமது காஸ்மி: வேலைக்கு அமர்த்தப்பட்டவர்களுக்கு அளிக்கப்படும் வேலையின் அளவுக்குச் சமமான ஊதியம் தரப்படுவதில்லை என்ற குற்றச்சாட்டைப் பற்றி மாண்புமிகு உறுப்பினர் விசாரணை நடத்தினாரா என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விசாரணை நடத்தப்பட்டதை அடிப்படையாகக் கொண்டே பதிலளித்திருக்கிறேன்.

# 57

## *புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் பணிமுறைகள் குழுவுக்கு வருடாந்தரம் நடைபெறும் தேர்தல்

*341. குவாஜி முகமது அகமது காஸ்மி: (அ) புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் பணிமுறைகள் குழுவுக்கு ஏப்ரல் 8 ஆம் தேதி நடைபெற்ற வருடாந்தரத் தேர்தல் முறையாக, நேர்மையாக நடத்தப்படவில்லை என்று கூறப்படுவது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா?*

*(ஆ) வாக்காளர் ஒருவர்பின் ஒருவராக அழைக்கப்படாமல் வாக்குகள் பெறப்படும் இடத்தில் அவர்கள் ஒரே கூட்டமாக குழுமி யிருந்தனர் என்பது உண்மையா?*

*(இ) சம்பந்தப்பட்ட எழுத்தரைச் சுற்றிலும் வாக்காளர் குழுமி யிருக்காமல், வாக்களிக்க அழைக்கப்படுபவர்கள் மட்டும் அங்கு வருவதற்கு அரசாங்கம் முறையான ஏற்பாடுகளைச் செய்யுமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) இல்லை.*

*குவாஜி முகமது அகமது காஸ்மி: வாக்காளர்கள் அழைத்து வரப்பட்ட சமயத்தில் தேர்தல் அதிகாரிகளிடம் தெரிவிக்கப்பட்ட முறையீடுகளைப் பற்றி மாண்புமிகு உறுப்பினர் விசாரணை நடத்தினாரா? என்னுடைய கேள்வியில் குறிப்பிட்டிருந்த அதே முறையீடுகள்தான் இவை என்பதை நிச்சயித்துக் கொண்டாரா?*

*மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்: இல்லை, அவசியம் ஏற்பட்டால் இத்தகைய விசாரணை நடத்த ஏற்பாடு செய்கிறேன்.*

*குவாஜி முகமது அகமது காஸ்மி: நான் கேள்வியை முன் வைத்து விட்டேன்; கூறப்பட்டுள்ள புகார்கள் உண்மையானவையா என்பது பற்றி மாண்புமிகு உறுப்பினர் ஒரு விசாரணைக்கு உத்தர விடுவாரா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவ்வாறே செய் கிறேன்.*

---

*★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, 20 மார்ச், பக்கம் 1270 - 71.*

# 58

## *வங்கம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் நிலக்கரி உற்பத்தி வீழ்ச்சி

349. திரு.கே.சி. நியோகி: வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் முந்தைய ஆண்டுகளுடன் ஒப்பிடும்போது 1942 ஆம் ஆண்டில் நிலக்கரி உற்பத்தி பெருமளவுக்குக் குறைந்து விட்டது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா? இது உண்மை யாயின் 1939, 1940 மற்றும் 1941 ஆம் ஆண்டுகளின் உற்பத்தியோடு ஒப்பிடும்போது இந்த வீழ்ச்சியின் தனித்தனியான சதவீதம் எவ் வளவு? உற்பத்தியில் ஏற்பட்ட இந்தக் குறைவுக்கு என்ன காரணம்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை. வங்காளம், பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் 1942 ஆம் ஆண்டு நிலக்கரி உற்பத்தி 1939 ஆம் ஆண்டு உற்பத்தியை விடவும் பெருமளவுக்கு அதிகமாக இருந்தது. இவ்வகையில் 1940 ஆம் ஆண்டே இதுவரை உச்ச ஆண்டாக இருந்து வருகிறது. இந்த ஆண்டுடன் ஒப்பிடும் போது சிறிதளவு குறைந்தது; 1942ல் மேலும் ஓரளவு உற்பத்தி சரிவு கண்டது. 1940 ஆம் ஆண்டு உற்பத்தியுடன் ஒப்பிடுகையில் மொத்த உற்பத்தி வீழ்ச்சி ஒரு சதவீதத்துக்கும் குறைவேயாகும்.

உற்பத்தி வீழ்ச்சி மிகச் சிறிய அளவிலேயே இருந்ததால் இதற் கான காரணத்தைக் கண்டறிய விரிவான விசாரணை எதுவும் மேற் கொள்ளப்படவில்லை.

திரு. கே.சி. நியோகி: இந்த விஷயம் குறித்து தொழில் முனைவோர் தரப்பிலிருந்து இந்திய அரசாங்கத்துக்கு ஏதேனும் புகார் வந்ததா, இந்த வீழ்ச்சி என்ன குறைபாட்டால் ஏற்பட்டிருக்கக்கூடும் என்று அவர்கள் கருத்து ஏதும் தெரிவித்தார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்தமாக இதுவரை எனக்கு எந்தத் தகவலும் இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 20, 1943, பக்கம் 1276.

# 59

## *மத்தியப் பொதுப்பணித்துறையின் ஒப்பந்தக்காரர்கள் பட்டியலில் இடம்பெறுவதற்கான அடிப்படை விதி

*417. திரு.அனங்க மோகன் தாம்:* மத்தியப் பொதுப்பணித் துறையின் ஒப்பந்தக்காரர்கள் பட்டியலில் இடம்பெறுவதற்கான அடிப்படை விதி என்ன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து கூறுவாரா? இவ்வாரு சேருவதற்குக் கட்டணம் ஏதேனும் உண்டா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஒப்பந்தக்காரர் களின் நிதிநிலைமை, ஏற்கனவே அவர்கள் செய்துள்ள பணியின் தரம், அனுபவம் போன்றவற்றை எல்லாம் கருத்திற்கொண்டு அவர் களைப் பட்டியலில் சேர்க்கும் விஷயம் முடிவு செய்யப்படுகிறது. நிறுவனங்களைப் பொறுத்தவரையில், 1932 ஆம் வருட இந்தியக் கூட்டுப்பாங்காண்மைச் சட்டப்படி அவை பதிவு செய்யப்பட் டிருக்க வேண்டும் என்ற முக்கிய நிபந்தனை விதிக்கப்படுகிறது. கேள்வியின் பிந்திய பகுதிக்கு ''இல்லை'' என்பதே பதிலாகும்.

# 60

## +மத்தியப் பொதுப்பணித்துறை அலுவலகங்களிலும் கீழ்நிலை பொறியியல் பணித்துறைகளிலும் முஸ்லீம்கள்

*418. மௌல்வி முகமது அப்துல் கனி:* மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களை தயைகூர்ந்து வழங்குவாரா:

(அ) மத்தியப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த அலுவல கங்களிலும் கீழ்நிலை பொறியியல் பணித்துறைகளிலும் உள்ள

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கம் 1582.

\+ மேற்படி அதே தொகுதி, பக். 1582

முதல் நிலை இரண்டாம்நிலை அதிகாரிகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

ஆ. மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் பதவிகள் ஒவ்வொன்றிலுமுள்ள முஸ்லீம்களின் எண்ணிக்கை யாது? இப் பதவிகளில் முஸ்லீம் களின் எண்ணிக்கை குறைவாக இருந்தால், அதனை நிவர்த்திக்க என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (அ) முதல்நிலை அதிகாரிகள் - 122; இரண்டாம் நிலை அதிகாரிகள் - 63. கீழ்நிலை பொறியியல் பணித்துறை - 1179.

(ஆ) முதல் வகுப்பு அதிகாரிகள் - 14. இரண்டாம் வகுப்பு அதிகாரிகள் - 4. கீழ்நிலை பொறியியல் பணித்துறை - 202.

(இ) 1943 மார்ச் 16 ஆம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 319-ன் (ஆ) பகுதிக்கு அளிக்கப்பட்ட பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

# 61

## *மத்தியப் பொதுப்பணித்துறையின் பொறியியல் பிரிவில் உத்தேச ஆட்குறைப்புத் திட்டம்

419. **மௌல்வி முகமது அப்துல் கனி:** மத்தியப் பொதுப் பணித்துறையின் பொறியியல் பிரிவில் ஆட்குறைப்புத் திட்டத்தை நடைமுறைப்படுத்தும் உத்தேசம் உண்டா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து தெரிவிப்பாரா? அத்தகைய உத்தேசம் ஏதும் இருக்குமானால், மொத்த எண்ணிக்கையில் 25 சதவீதத்துக்கும் குறைவாக உள்ள முஸ்லீம் ஊழியர்கள் பாதிக்கப்படுவார்கள் அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தற்போதைக்கு இல்லை. கேள்வியின் இரண்டாம் பகுதி இங்கு எழவில்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கம் 1582.

# 62

## *கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்திலுள்ள முஸ்லீம் லைனோ ஆபரேட்டர்கள், மோனோ ஆபரேட்டர்கள் முதலியோர்

42. ஹாஜி சௌதுரி முகமது இஸ்மாயில் கான்: (அ) கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தில் பணியாற்றும் லைனோ ஆபரேட்டர்கள், மோனோ ஆபரேட்டர்கள், மோனோ கேஸ்டர்கள், அச்சுப் படிவம் தயாரிப்பவர்கள் போன்றோரின் எண்ணிக்கை எவ்வளவு, இவர்களில் முஸ்லீம்கள் எத்தனைபேர் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) கடந்த மூன்று ஆண்டுகளில் இந்தப் பணியிடங்களுக்கு செய்யப்பட்ட மொத்த நியமனங்கள் எவ்வளவு? இந்த ஒவ்வொரு பணியிடத்துக்கும் எத்தனை முஸ்லீம்கள் நியமிக்கப்பட்டனர்?

(இ) இந்தப் பணியிடங்களுக்கு முஸ்லீம்களை நியமிக்க என்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?

(ஈ) கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தில் நிரந்தரமாகவும், தற்காலிகமாகவும் பணிபுரிந்துவரும் எழுத்தர்கள், பிழை திருத்த உதவியாளர்கள் போன்றோரின் வகுப்புவாரியான பட்டியலை மாண்புமிகு உறுப்பினர் அவையில் சமர்ப்பிக்க முன்வருவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ), (ஆ) மற்றும் (ஈ) உங்கள் விருப்பப்படியே அவையில் பட்டியல் சமர்ப்பிக்கப்படுகிறது.

(இ) பணியிடங்களில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, பக்கம் 1582.

சம்பந்தமான ஆணைகள் இந்திய அரசாங்க அச்சகத்தில் பின்பற்றப் படுகின்றன.

தகவல் அறிக்கை

| பணியிடம் (நிரந்தரமானது) | | எண்ணிக்கை | முஸ்லீம்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| லைனோ ஆபரேட்டர்கள் | ... | 6 | 2 |
| மோனோ ஆபரேட்டர்கள் | ... | 6 | 1 |
| மோனோ கேஸ்டர்கள் | ... | 10 | |
| அச்சுருப் படிவம் தயாரிப்பவர்கள்: | | | |
| நிரந்தரம் | ... | 12 | இல்லை |
| தற்காலிகம் | ... | 10 | இல்லை |

கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தில் 1940, 1941, 1942 ஆம் ஆண்டுகளில் லைனோ ஆபரேட்டர்கள், மோனோ ஆபரேட்டர்கள், மோனோ காஸ்டர்கள், அச்சுருப்படிவம் தயாரிப்பவர்கள் ஆகிய பணியிடங்களுக்கு செய்யப்பட்ட நியமனங்களின் மொத்த எண்ணிக்கையைக் காட்டும் விவரப் பட்டியல்

| பணியிடம் (நிரந்தரம்) | நியமனங்கள் | | |
|---|---|---|---|
| | 1940 | 1941 | 1942 |
| லைனோ ஆபரேட்டர்கள் | இல்லை | இல்லை | இல்லை |
| மோனோ ஆபரேட்டர்கள் | இல்லை | இல்லை | இல்லை |
| மோனோ காஸ்டர்கள் | இல்லை | 1 (இந்து) | இல்லை |
| அச்சுருப்படிவம் தயாரிப்பவர்கள் (நிரந்தரம் மற்றும் தற்காலிகம்) | இல்லை | இல்லை | இல்லை |

**கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தில் எழுத்தர்கள் மற்றும் பிழைதிருத்த உதவுபவர்களின் (நிரந்தரம் மற்றும் தற்காலிகம்) வகுப்புவாரி இயைபைக் காட்டும் விவரப் பட்டியல்**

| | மொத்த எண்ணிக்கை | இந்துக்கள் | | முஸ்லீம்கள் | ஆங்கிலோ-இந்தியர்கள் | இந்தியக் கிறித்தவர்கள் |
|---|---|---|---|---|---|---|
| | | ஷெட்யூல்டு வகுப்பினர் அல்லாதவர்கள் | ஷெட்யூல்டு வகுப்பினர் | | | |
| எழுத்தர்கள்(கணக்கிடுபவர்கள், நேரப்பதிவாளர்கள் நீங்கலாக): | | | | | | |
| நிரந்தரம் | 43 | 31 | 1 | 10 | 1 | இல்லை |
| தற்காலிகம் | 7 | 5 | இல்லை | 1 | இல்லை | 1 |
| பிழை திருத்த உதவுபவர்கள் | | | | | | |
| நிரந்தரம் | 34 | 23 | இல்லை | 5 | 2 | இல்லை |
| தற்காலிகம் | 4 | 3 | இல்லை | 1 | இல்லை | இல்லை |
| குறிப்பிட்ட காலத்துக்கு வேலைக்கு அமர்த்தப் பட்டவர்கள் | 5 | 2 | இல்லை | 2 | இல்லை | 1 |

# 63

## *மத்தியப் பொதுப்பணித் துறையில் முஸ்லீம் நிர்வாகப் பொறியாளர்கள்

421. மௌல்வி முகமது அப்துல் கனி: கடந்த இரண்டு ஆண்டுகளில் பல்வேறு மாகாணங்களிலிருந்து எத்தனை நிர்வாகப் பொறியாளர்கள் மத்தியப் பொதுப்பணித் துறையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர், இவர்களில் எத்தனைப் பேர் முஸ்லீம்கள் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இருபத்திரெண்டு பேர், இவர்களில் இருவர் முஸ்லீம்கள். ஒரு முஸ்லீம் உட்பட மூவர் பழைய பதவிக்கே திருப்பி அனுப்பப்பட்டனர்.

# 64

## +புதுடில்லியில் உள்ள தற்காலிகக் கட்டிடங்கள்

422. சர் எஃப்.இ. ஜேம்ஸ்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தருவாரா:

(அ) கன்னாட்பிளேசில் சில தற்காலிகக் கட்டிடங்கள் கட்டப் பட்டு வந்தபோது, இந்தக் கட்டிடங்கள் யுத்தம் முடிவடைந்த உட

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, பக்கம் 1583.

+ அதே தொகுதி, பக். 1583

னேயே இடிக்கப்பட்டுவிடும் என்று அக்கட்டிடங்களுக்கு அருகில் அறிவிப்பு செய்யப்பட்டிருந்தது மாண்புமிகு உறுப்பினரின் கவனத் துக்குக் கொண்டுவரப்பட்டதா?

(ஆ) க்யூன்ஸ்வே அருகில் கட்டப்பட்டிருக்கும் தற்காலிக கட்டிடங்களுக்கும் இதே கதிதான் நேருமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) அனைத்துக் கட்டிடங்களும் தற்காலிகக் கட்டிடங் களாகவே கட்டப்பட்டிருக்கின்றன. யுத்தம் முடிவடைந்ததும் கூடிய விரைவில் அவற்றை இடித்துவிட வேண்டும் என்பதே நோக்கம். எனினும் இறுதி முடிவு இன்னும் மேற்கொள்ளப்படவில்லை.

**சர் எஃப்.இ.ஜேம்ஸ்:** யுத்தம் முடிவடைந்த உடனேயே என்பதற்கும் யுத்தம் முடிவடைந்ததும் 'கூடிய விரைவில்' என்ப தற்குமுள்ள வேறுபாட்டை மாண்புமிகு உறுப்பினர் விளக்குவாரா? ஏனென்றால் கன்னாட் பிளேசிலுள்ள சில கட்டிடங்களில், 'யுத்தம் முடிவடைந்ததும் இடிக்கப்பட்டுவிடும்' என்று அறிவிப்புப் பலகை கள் காணப்படுகின்றன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த அறிவிப்புப் பலகைகள் எத்தகைய வேறுபாட்டையும் காட்டுவதாக நான் நினைக்கவில்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இந்தக் கட்டிடங்கள் ஏன் இடிக்கப்பட வேண்டும்? அவற்றை வேறு ஏதேனும் காரியங் களுக்குப் பயன்படுத்தலாம் அல்லவா?

**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏற்கனவே கூறியதுபோல் இது விஷயத்தில் இறுதிமுடிவு எதுவும் எடுக்கப் படவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, பக்கம் 1583.

# 65

## *தொழிலாளர் நலத்துறையின் மேற்பார்வையிலுள்ள அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவில் முஸ்லீம் அதிகாரிகள் இடம்பெறாமை

423. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: தொழிலாளர் நலத்துறையின் கீழுள்ள அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவின் கட்டுப்பாட்டு அதிகாரி, எழுதுபொருள் பிரிவின் துணைக் கட்டுப்பாட்டு அதிகாரி, எழுதுபொருள் பிரிவின் உதவிக்கட்டுப் பாட்டு அதிகாரி, அச்சகக் கிளையின் கண்காணிப்பாளர் இவர்கள் அனைவரும் முஸ்லீம் அல்லாதவர்களா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? அவ்வாறாயின், இந்தப் பதவிகளில் முஸ்லீம்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள அரசாங்கம் உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தொழிலாளர் நலத்துறையைச் சேர்ந்த எழுதுபொருள் மற்றும் அச்சகக் கிளைக்குத் தற்போது கண்காணிப்பாளராக இருப்பவர் ஒரு முஸ்லீம் என்பதைத் தவிர மற்றபடி உங்களது கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்பதே பதிலாகும். கேள்வியில் குறிப்பிடப்பட்டிருக்கும் எல்லாப் பணியிடங்களும் பொதுவாக தகுதியின் அடிப்படையிலேயே நிரப்பப்படுகின்றன; தேர்வுநிலைப் பணியிடங்களுக்கு பதவி உயர்வு அளிக்கும் விஷயத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ விதிகள் பொருந்த மாட்டா. வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ அடிப்படையில் செய்யப்படும் நியமனங்கள் விஷயத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ விதிகள் பின்பற்றப்படுகின்றன. இது தவிர வேறு எந்த நடவடிக்கைகளும் எடுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று அரசாங்கம் கருதுகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, பக்கம் 1583.

மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: ஒரே தகுதியுள்ள இரண்டு வேட்பாளர்கள் களத்தில் இருக்கும்போது ஒரு முஸ்லீம் 50 ரூபாய் மாதச் சம்பளத்திலும், ஒரு முஸ்லீம் - அல்லாதவர் 200 ரூபாய் மாதச் சம்பளத்திலும் நியமிக்கப்பட்டனர் என்பது உண்மையா என்பதை மாண்புமிகு உறுப்பினரிடம் கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதுபற்றி எனக்குத் தகவல் ஏதும் இல்லை.

மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர் : அன்புகூர்ந்து இதுபற்றி விசாரணை செய்வீர்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விசாரணை செய்கிறேன்.

# 66

## *தொழிலாளர் நலத்துறையின் மேற்பார்வையிலுள்ள அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவில் முஸ்லீம் அதிகாரிகள் இடம்பெறாமை

424. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: (அ) கல்கத்தா அச்சகமற்றும் எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகம், மத்திய எழுதுபொருள் அலுவலகம், மத்தியப் பிரசுரக் கிளை, மற்றும் பல்வேறு இந்திய அரசாங்க அச்சகங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் அரசிதழ் பதிவுபெற்ற முஸ்லீம் அதிகாரிகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) அச்சக, எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகத்தில் அது தொடங்கிய காலம் முதலே உதவி கட்டுப்பாட்டு அதிகாரி பதவியை வங்காளி இந்துக்களோ அல்லது கிறித்தவர்களோதான் வகித்து வந்திருக்கின்றனர், இந்த நியமனத்துக்கு

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கம் 1584.

ஒரு முஸ்லீம் ஒருபோதும் பரிசீலிக்கப்பட்டதில்லை என்பது உண்மையா? இது உண்மையானால், இது ஏன்?

**மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்:** இரண்டு. ஒன்று கல்கத்தா அச்சுருப்படிவ அச்சகத்தில், மற்றொன்று புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில்.

(ஆ) கேள்வியின் முதல் பகுதிக்கான விடை 'இல்லை' என்பதாகும். இரண்டாவது பகுதியைப் பொறுத்தவரையில், இந்தப் பணியிடம் பதவிஉயர்வு மூலம் நிரப்பப்படுகிறது, நேரடி ஆளெடுப்பு மூலமல்ல என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்தப் பணியிடத்துக்குப் பரிசீலிப்பதற்குத் தகுதிவாய்ந்த அனுபவமிகுந்த எந்த முஸ்லீமும் எப்போதும் கிடைத்ததில்லை.

**மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:** இது சம்பந்தமாக மாண்புமிகு உறுப்பினரிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன். மாதம் ரூ.50 சம்பளத்துக்கு நியமிக்கப்பட்ட முஸ்லீம் பதவி உயர்வுக்கு வாய்ப்பில்லாதது கண்டு வங்காளத்துக்கு மாற்றுதல் வாங்கிக் கொண்டுசென்று இப்போது மாதம் 225 ரூபாய் சம்பளம் பெறுகிறார் என்பதும், 200 ரூபாய் சம்பளத்துக்கு நியமிக்கப்பட்டவர் தற்போது 350 ரூபாய் சம்பளம் பெற்று வருகிறார் என்பதும், ஆனால் அதேசமயம் ஏற்கனவே மிகுந்த அனுபவம் பெற்றவரும் அத்தோடு 250 ரூபாய் சம்பளம் வாங்கிவருபவருமான ஒரு முஸ்லீம்மின் கோரிக்கை புறக்கணிக்கப்பட்டு வருகிறது என்பதும் உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுகுறித்து எனக்குத் தகவல் ஏதுமில்லை, எனினும் மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் விரும்பினால் இதுபற்றி விசாரிக்கிறேன்.

**மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:** அன்புகூர்ந்து இதுபற்றி விசாரிப்பீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக.

# 67

## *தொழிலாளர் நலத்துறையின் மேற்பார்வையிலுள்ள அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவில் முஸ்லீம் அதிகாரிகள் இடம்பெறாமை

*425. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களைத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்:

(அ) பல்வேறு இந்திய அரசாங்க அச்சகங்களில் தற்போது உதவி நிர்வாகிகளாக எத்தனைபேர் பணியாற்றுகின்றனர்? இவர்களில் முஸ்லீம்கள் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) தொழிலாளர் நலத்துறையின் அச்சகப் பிரிவிலும் அச்சக மற்றும் எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகத்தின் நிர்வாகக் கிளையிலும் பணிபுரியும் முஸ்லீம் உதவியாளர்கள் மற்றும் எழுத்தர்களின் எண்ணிக்கை எவ்வளவு? இதனைத் தனித் தனியாக கூறுவீர்களா?

(இ) அச்சக மற்றும் எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகத்திலும், பிரசுரப் பிரிவிலும் எத்தனை முஸ்லீம் கண்காணிப்பாளர்கள் பணியாற்றுகின்றனர்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மூன்றுபேர். இவர்களில் ஒருவர் முஸ்லீம்.

(ஆ) தொழிலாளர் நலத்துறையின் எழுதுபொருள் மற்றும் அச்சகக் கிளையில் ஒரு முஸ்லீமும், கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகத்தின் நிர்வாக மற்றும் நிதிப்பிரிவில் ஓர் உதவியாளரும் ஓர் எழுத்தரும் பணிபுரிகின்றனர்.

(இ) எவருமில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கம் 1584.

# 68

## *அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவில் பணிபயிலும் முஸ்லீம்களுக்கும் முஸ்லீம் அல்லாதோருக்கும் இடையே காட்டப்படும் பாரபட்சம்

426. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: (அ) பின்கண்ட கேள்விகளுக்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பதிலளிப்பாரா: இந்திய அரசாங்கத்தின் அச்சக மற்றும் எழுதுபொருள் பிரிவில் தகுதி வாய்ந்தவர்கள் பயிற்சி ஊழியர்களாகப் பயிற்றுவிக்கப்பட்டு வருகிறார்கள் என்பது உண்மையா?

(ஆ) பல்வேறு அச்சகங்களில் உயர் பதவிகளுக்கு நியமனம் செய்யப்பட இவர்கள் தகுதி வாய்ந்தவர்களா?

(இ) திரு.பி.சி.சென் குப்தா என்ற இத்தகைய ஒரு பயிற்சி ஊழியர் புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில் மாதம் 200 ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்பட்டார் என்பதும், ஆனால் அதேசமயம் ஒரு முஸ்லீமுக்குத் தகுதியான வேலை தரப்படாததால், முடிவில் அவர் வேறு வழியின்றி கல்கத்தாவிலுள்ள அரசு அச்சகத்துக்கு உதவி நிர்வாகியாக மாற்றல் பெற்றுக்கொண்டு சென்றுவிட்டார் என்பதும் உண்மையா?

(ஈ) மேலே கண்ட கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலாக இருக்குமானால், இத்தகைய பாரபட்சப் போக்குக்குக் காரணங்கள் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) ஆம், தகுதிவாய்ந்தவர்களே. ஆனால் எத்தகைய திட்டவட்டமான உரிமையும் கொண்டாட முடியாது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கம் 1585.

*(இ) ரூ.200-10-250 என்ற பழைய சம்பள விகிதத்தில் திரு. சென் குப்தா தவறுதலாக நியமனம் செய்யப்பட்டு விட்டார். ஆனால் பின்னர் தவறு கண்டுபிடிக்கப்பட்டதும் ரூ.100 லிருந்து தொடங்கும் சரியான சம்பள விகிதத்துக்கு அவர் மாற்றப்பட்டார். ரூ. 100 லிருந்து தொடங்கும் சரியான புதிய சம்பள விகிதத்தில் முஸ்லீம் நியமிக்கப் பட்டார்.*

*இதன் பின்னர் இருவருமே பதவி உயர்வு பெற்றனர்.*

*(ஈ). இங்கு இந்தப் பிரச்சினை எழவில்லை.*

***மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:*** *இருவருமே ஒரே மாதிரியான சம்பள விகிதத்தில் பதவி உயர்வு பெற்றார்களா என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அவ்வாறுதான் நடைபெற்றிருக்கும் என்று நினைக்கிறேன்.*

# 69

## *புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில் எந்திரங்களைப் பழுதுபார்த்தல்

*427.* ***மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்:*** *(அ) புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தின் எந்திரங்களை உள்ளூரில் பழுது பார்ப்பதற்கு எவ்வளவு செலவாயிற்று என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?*

*(ஆ) மேலே கூறிய அச்சகத்தில் இயந்திரத் தொழில்நுட்பப் பிரிவு ஒன்று இருக்கிறதா? அவ்வாறு இருக்குமானால் பழுது பார்ப்புப் பணிகளை ஏன் வெளியில் செய்ய வேண்டும்?*

*(இ) பழுதடைந்த பாகங்களை சரிசெய்ய தலைமை மெக்கானிக் தாமே ஏற்பாடு செய்கிறார் என்பதும், பழுதுபார்ப்புப் பணி*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள்,* தொகுதி II, *மார்ச் 30, 1943, பக்கங்கள் 1585- 86.*

களை மேற்கொள்ளும் நிறுவனத்துக்கு அனுப்பப்படும் கடிதத்தில் என்ன பழுதுபார்ப்புகளைச் செய்யவேண்டும் என்பதை விவரிக்காது, இதனை தலைமை மெக்கானிக் நேரில் விளக்கிக்கூறுவார் என்று மட்டுமே குறிப்பிடப்படுகிறது என்பதும் உண்மையா? இது உண்மை யானால் பழுதுபார்ப்புப் பணிகளை மேற்கொள்ளும் நிறுவனத்துக்கு அனுப்பப்படும் கடிதத்தில் பழுதுபார்ப்புகளைப் பற்றிய முழு விவரங்களும் ஏன் தரப்படுவதில்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. 1942-43 ஆம் ஆண்டில் எந்திர சாதனத்தை உள்ளூரிலேயே பழுதுபார்ப்பதற்கு மொத்தம் ரூ.1177-2-0 செலவாகியிருக்கிறது.

(ஆ) இக்கேள்வியின் முதல்பகுதிக்கு 'ஆம்' என்பதே பதிலாகும். இரண்டாவது பகுதியைப் பொறுத்தவரையில், அச்சகத்திலேயே செய்ய இயலாத பழுதுபார்ப்புப் பணிகள்தான் வெளியார் நிறுவனத்துக்குத் தரப்படுகின்றன.

(இ) இல்லை.

# 70

## *அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தில் கூடுதல் ஊழியர்கள்

+428. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: (அ) கல்கத்தா அச்சகத்திலிருந்து அலிகார் அச்சகத்துக்கு எவ்வளவு கூடுதல் வேலை பெறப்பட்டது, இதன் நிமித்தம் அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தின் நிர்வாகி எத்தனை கூடுதல் ஊழியர்களை நியமனம் செய்தார் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நல உறுப்பினர் கூறுவாரா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கங்கள் 1585- 86.

+ இந்தக் கேள்விக்கான பதில் அவையில் சமர்ப்பிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அவையில் இல்லை.

*(ஆ) கூடுதல் ஊழியர் நியமனம் கூடுதல் வேலைக்கு ஏற்ப அமைந்துள்ளதா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 1943 மார்ச் 16 ஆம் தேதிவரை வேலையையும், இதனையொட்டி நியமிக்கப் பட்ட கூடுதல் ஊழியர்களையும் பற்றிய விவரங்கள் அவை முன் வைக்கப்படுகின்றன.*

*(ஆ) இக்கேள்விக்கு 'ஆம்' என்பதே பதில்.*

*கல்கத்தா அச்சகத்திலிருந்து பெறப்பட்ட வேலைகள் சம்பந்த மாக செய்யப்பட்ட நியமனங்களைக் காட்டும் தகவல் அறிக்கை.*

*3 அச்சுக் கோப்பவர்கள் சம்பளம் ரூ.25*

*1 அச்சகப்படி திருத்துவோர் சம்பள விகிதம் ரூ.90-4-110*

*1 அச்சகப்படித் திருத்துவோருக்கு வாசித்து உதவுபவர் சம்பள விகிதம் ரூ. 28-2-38.*

*3 பாளத்தகடு அச்சிடுவோர் சம்பளம் ரூ. 20*

*1 தட்டச்செழுத்து வார்ப்பவர் சம்பளம் ரூ.20*

*2 காகிதம் கணக்கிட்டுத் தருபவர் சம்பளம் ரூ.20.*

*1 பொதுக்கண்காணிப்பாளர் சம்பள விகிதம் 125-5-150*

*1 உதவி அச்சடிப்புக் கண்காணிப்பாளர் சம்பள விகிதம் 55-3-70.*

*1 உதவி அச்சுக்கோப்புக் கண்காணிப்பாளர் சம்பள விகிதம் 50-3-65*

*1 தலைமைக் கணக்கிடுபவர் சம்பள விகிதம் 70-3-100.*

*1 (எழுத்தர்) உதவி எழுதுபொருள் மற்றும் பண்டகசாலைக் காப் பாளர் சம்பள விகிதம் 80-4-100.*

## தகவல் அறிக்கை

| தொடர் எண் | படிவம் எண் | தேவையான பிரதிகள் | தொடர் எண் | படிவம் எண் | தேவையான பிரதிகள் |
|---|---|---|---|---|---|
| 1. | ஐ.ஏ.எஂ்ப்.ஏ. 176 | 13,000 புத்தகங்கள் | 11 | ஐ.ஏ.எஂ்ப் ஏ-2 (பெரியது) | 37,000 புத்தகங்கள் |
| 2. | ஐ.ஏ.எஂ்ப்.ஓ. 1287 | 3,00,000 | 12 | ஐ.ஏ.எஂ்ப் -1068 | 43,000 புத்தகங்கள் |
| 3. | ஐ.ஏ.எஂ்ப்.ஓ. 1435 | 1,400 புத்தகங்கள் | 13 | ஐ.ஏ.எஂ்ப்.ஓ. 1367 - ஏ | 1,50,000 |
| 4. | ஐ.ஏ.எஂ்ப்.எம். 1213 | 1,000 புத்தகங்கள் | 14 | ஏ.எஂ்ப்.ஓ. 1810ஏ | 7,500 புத்தகங்கள் |
| 5. | ஐ.ஏ.எஂ்ப்.இஜட். 2187ஏ | 30,000 | 15 | ஏ.எஂ்ப்.டபிள்யூ 3010 | 9,000 புத்தகங்கள் |
| 6. | ஐ.எ.ஏஂ்ப்.இஜட். 27 | 35,000 புத்தகங்கள் | 16 | ஐ.ஏ.எஂ்ப். இஜட் 2135 | 6,000 புத்தகங்கள் |
| 7. | ஐ.எ.ஏஂ்ப்.இஜட். 2011* | 50,000 புத்தகங்கள் | 17 | எஸ்.90-ஏ | 1,00,000 |
| 8. | ஐ.எ.ஏஂ்ப்.இஜட். 2011 ** | 40,000 புத்தகங்கள் | 18 | எஸ்.90-பி | 50,000 |
| 9. | ஐ.ஏ.எஂ்ப்.இஜட். 2157 | 2500 புத்தகங்கள் | 19 | எஸ்.97ஏ | 4,00,000 |
| 10. | ஐ.ஏ.எஂ்ப்.ஏ 175 | 7,000 புத்தகங்கள் | | | |

* சிறியது
** பெரியது

# 71

## *அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தின் நிர்வாகிக்கு எதிராக குற்றச்சாட்டுகள்

429. மௌல்வி சையத் முர்துஸா சாகிப் பகதூர்: (அ) அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தில் ஓராண்டுக்குள் கடித உறைகள் தயாரிப்பவர்கள் எத்தனை பேர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர், பல்வேறு வகுப்பினருக்கும் எந்த விகிதாசார அடிப்படையில் வேலை தரப்பட்டிருக்கிறது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தின் நிர்வாகி எத்தகைய தேர்வும் வைக்காமல் அவர்களை நியமித்தார் என்பதும், அவர்களில் பெரும்பாலோர் முஸ்லீம்கள் அல்லாதவர்கள் என்பதும் உண்மையா?

(இ) அலிகார் இந்திய அரசாங்க அச்சகத்தின் நிர்வாகி எத்தகைய செயல்முறை தேர்வும் வைக்காமல் தொழில்நுட்ப ஊழியர்களை நியமிக்கிறார் என்பதும், ஒதுக்கப்படாத இடங்களுக்கும் சில சமயங்களில் ஒதுக்கப்பட்ட இடங்களும்கூட எப்போதுமே முஸ்லீம் அல்லாதவர்களை நியமிக்கிறார் என்பதும் உண்மையா? இது உண்மையானால் ஏன் அவ்வாறு செய்கிறார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 1942ல் கடிதஉறைகள் தயாரிப்பவர்கள் 43பேர் நியமிக்கப்பட்டனர்; இவர்களில் 29 பேர் இந்துக்கள், 11 பேர் முஸ்லீம்கள், 3 பேர் இதர சிறுபான்மை சமூகங்களைச் சேர்ந்தவர்கள்.

(ஆ) இல்லை.

(இ) இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கங்கள் 1586.

# 72

## *புதுடில்லி அரசாங்கத் தலைமைச் செயலகத்தின் தெற்கு மற்றும் வடக்கு வளாகங்களில் தற்காலிக அறைகள்

431. பாய் பரமா நந்த்: (அ) புதுடில்லி அரசாங்கத் தலைமைச் செயலகத்தில் தெற்கு மற்றும் வடக்கு வளாகங்களில் உள்ள சில நடைக்கூடங்கள் அல்லது தாழ்வாரங்கள் அறைகளாக மாற்றப் பட்டு பல்வேறு இந்திய அரசாங்க அலுவலகங்களைச் சேர்ந்த ஊழியர்கள் அவற்றைப் பயன்படுத்தி வருகின்றனர் என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா?

(ஆ) இவ்வாறு மாற்றப்பட்ட சில அறைகளில் ஏறத்தாழ நாள் முழுதும் வெயில் காய்ந்து கொண்டிருக்கிறது என்பது உண்மையா?

(இ) மேலே குறிப்பிடப்பட்ட அறைகளில் சூரிய வெளிச் சத்தைத் தடுப்பதற்கு சாதாரண கண்ணாடிப்பலகணிகள் மட்டுமே இருக்கின்றன என்பது உண்மையா?

(ஈ) இவற்றில் சில அறைகள் மிகவும் குறுகலாக இருக் கின்றன என்பது உண்மையா?

(உ) கிட்டத்தட்ட நாள் முழுதும் வெயில் காயும் இத்தகைய அறைகளில் மிகக்குறுகிய அறையின் அகலம் எவ்வளவு? இப்படிப் பட்ட அறைகளின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஊ) பிப்ரவரி மாதம் பிற்பாதியிலும் மார்ச் மாதம் முற்பாதி யிலும் பகல் நேரத்தில் இந்த அறைகளின் தட்பவெப்பநிலை எவ்வளவு? நாள் முழுவதும் சூரிய ஒளிபடும் இந்த மாற்றப்பட்ட

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 16, 1943, பக்கம் 1586.

அறைகளில் 1942 ஏப்ரல், மே, ஜூன், ஜூலை, அக்டோபர் மாதங் களில் தட்பவெப்பநிலை எவ்வளவு இருந்தது?

(எ) இந்த அறைகள் அனல்தகிக்கும் சூட்டடுப்புகள் போல் இருந்தன என்பதும், நாள்முழுதும் ஊழியர்கள் அவற்றில் வாட்டி வதைக்கப்பட்டு வந்தனர் என்பதும் உண்மையா?

(ஏ) கோடை காலத்தில் பணியாற்றுவதற்கு இந்த அறைகள் ஏற்றவைதானா என்பதை சுகாதார அதிகாரி வந்து பார்வையிட் டாரா? இந்த அறைகள் பணியாற்றுவதற்கு ஏற்றவைதாம் என்று அவர் அறிக்கை சமர்ப்பித்தாரா?

(ஐ) மேலேகூறிய கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலாக இருக்கு மானால், பல்வேறு அலுவலகங்களைச் சேர்ந்த அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகளுக்கு இந்த அறைகளை ஒதுக்குவதற்கும், இப் போது இந்த அறைகளில் பணியாற்றிவரும் ஊழியர்களை அவர் களுக்காக ஆரம்பத்தில் கட்டப்பட்ட அறைகளுக்கு மாற்றுவதற்கும் அரசாங்கம் தயாராக இருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) தெற்கு நோக்கியிருக்கும் இவற்றில் சில அறைகளில் பிற்பகலில் வெயில் காய்கிறது.

(இ) இல்லை. இத்தகைய அறைகளில் கண்ணாடிப் பலகணி களுடன் திரைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

(ஈ) இல்லை.

(உ) இந்த அறைகளின் மிகக்குறைந்த அகலம் 8 அடி 3 அங்குலம். இத்தகைய அறைகளின் எண்ணிக்கை 3.

(ஊ) கேட்கப்பட்ட தகவல்கள் அவை முன்வைக்கப்பட் டுள்ளன.

(எ) இல்லை.

(ஏ) ஆம்; சுகாதாரத் துறையைச் சேர்ந்த அதிகாரிகள் இந்த அறைகளைப் பார்வையிட்டனர். அவர்கள் எத்தகைய ஆட்சேபமும் தெரிவிக்கவில்லை.

ஐ. கடந்த கோடைகாலத்தில் இவற்றில் சில அறைகளில் அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகள் பணியாற்றினர்.

தகவல் அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| பிப்ரவரி மாதம் பிற்பாதி | ... | ... | $60^0$ பா. |
| மார்ச் மாதம் முற்பாதி | ... | ... | $75^0$ பா |
| ஏப்ரல் 1942 | ... | ... | $98^0$ பா |
| மே 1942 | ... | ... | $104^0$ பா |
| ஜூன் 1942 | ... | ... | $106^0$ பா |
| ஜூலை 1942 | ... | ... | $96^0$ பா |
| அக்டோபர் 1942 | ... | ... | $90^0$ பா |

# 73

## *புதுடில்லி தலைமைச் செயலகத்தின் வடக்கு வளாகத்தில் எழுத்தர்களின் கழிப்பிடங்களில் போதிய வெளிச்சமின்மை

+432. பாய் பரமானந்த்: (அ) புதுடில்லி தலைமைச் செயலகத்தின் வடக்கு வளாகத்தில் குறிப்பாக முதல் தளத்திலுள்ள எழுத்தர்களின் பெரும்பாலான கழிப்பிடங்களில் மின்விளக்குகள் பொருத்தப் படவில்லை என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) ஆனால் அதேசமயம் அந்தக் கட்டிடத்திலுள்ள அதிகாரிகளின் கழிப்பிடங்கள் அனைத்திலும் மின்விளக்கு வசதி செய்யப்பட்டுள்ளது என்பது உண்மையா?

(இ) சில எழுத்தர்கள் இரவு நீண்டநேரம் வரை பணியாற்ற வேண்டியிருக்கிறது என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 1943, பக்கங்கள் 1587-88

+ கேள்விகேட்டவர் அவையில் இல்லாததால் இக்கேள்விக்கான பதில் அவை முன் வைக்கப்பட்டது.

*(ஈ) இவர்கள் இருட்டில் கழிப்பிடங்களைப் பயன்படுத்த வேண்டும் அல்லது இருட்டிய பிறகு கழிப்பிடங்களைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் அவர்களுக்கு இருக்காது என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறதா?*

*(உ) எழுத்தர்களுக்கு மட்டும் கழிப்பிடங்களில் மின்விளக்கு வசதி செய்து தரப்படாததற்குக் காரணம் என்ன?*

*(ஊ) சில படிக்கட்டுகளில் போதிய வெளிச்சமில்லை என்பதும், இருட்டிய பிறகு சில படிக்கட்டுகளில் விளக்கு வசதி இல்லை என்பதும் உண்மையா?*

*(எ) ஒவ்வொரு நாள் மாலையும் தலைமைச் செயலகத்தைச் சுற்றியுள்ள பகுதி முழுவதும் ஒளி வெள்ளத்தில் செகச் ஜோதியாக மிளிர்கிறது என்பது உண்மையா?*

*(ஏ) மேலே குறிப்பிட்ட கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலானால் கட்டிடங்களில் உள்ள படிக்கட்டுகளில், குறிப்பாக பிரதான படிக்கட்டுகளில் போதிய விளக்கு வசதி ஏன் செய்து தரப்படக் கூடாது?*

*(ஐ) படிக்கட்டுகளில் விளக்கு வசதி செய்து தருவது நடைமுறை சாத்தியமல்லை என்றால், இருட்டியபிறகு அலுவலகத்தில் தங்கி வேலை செய்ய எவரையும் அனுமதிக்கக் கூடாது என்று எல்லா அலுவலகங்களுக்கும் திட்டவட்டமான ஆணைகள் பிறப்பிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறதா? இவ்வாறு செய்தால், ஊழியர்கள் இருட்டில் தட்டுத்தடுமாறிக் கொண்டு கீழே இறங்கிச் செல்லுவதைத் தவிர்க்கலாம் அல்லவா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) சில குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள மின்விளக்குகள் எரியாமல் பழுதடைந்து விட்டன; மின்விளக்குகள் பற்றாக்குறை காரணமாக அவற்றுக்குப் பதிலாக வேறு மின்விளக்குகள் பொருத்த இயலாது போயின.*

*(ஆ) ஆம்; அதிகாரிகளின் கழிப்பிடங்கள் மட்டுமன்றி*

எல்லாக் கழிப்பிடங்களிலுமே மின் விளக்கு வசதி செய்யப்பட்டுள்ளது.

(இ) ஆம்.

(ஈ) இல்லை.

(உ) கழிப்பிடங்கள் சிலவற்றில் சில காலம் வரை ஓரளவு மின் விளக்கு வசதியே செய்யப்பட்டிருந்ததற்குக் காரணம் மின் விளக்குகள் கிடைக்காததேயாகும். அண்மையில்தான் கணிசமான எண்ணிக்கையில் மின்விளக்குகள் வந்து சேர்ந்தன. எனவே, பழுதடைந்துவிட்ட மின் விளக்குகளை மாற்றுவதற்கு ஏற்கனவே நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

(ஊ) மின்விசைப் பற்றாக்குறை காரணமாக இதில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கும் பொருட்டு படிக்கட்டுகளில் வெளிச்சம் குறைக்கப்பட்டுள்ளது. அங்கு சில மின்விளக்குகள் எரிகின்றன.

(எ) தலைமைச் செயலகத்தைச் சுற்றியுள்ள சாலைகளின் வெளிச்சத்தையே மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என்று நினைக்கிறேன். போக்குவரத்து அதிகமாக இருப்பதன் காரணமாக இங்கு போதிய விளக்கு வசதி செய்து தரப்பட்டிருக்கிறது.

(ஏ) மின்விசை அதிகரிக்கும்போது மின் விளக்கு வசதியும் அதிகரிக்கும்.

(ஐ) படிக்கட்டுகளில் போதிய விளக்கு வசதி செய்து தரப்பட்டிருப்பதால் இத்தகைய நிலைமை ஏற்பட வாய்ப்பில்லை. எனினும் இதுவிஷயத்தில் ஏதேனும் ஐயம் இருக்குமாயின், மின் விசை நிலைமை அனுமதிக்கும் அளவுக்கு மின் விளக்கு வசதியை அதிகப்படுத்துவதற்கு ஆவன செய்வேன்.

# 74

## *டில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவினால் ஏற்படும் சிரமங்கள்

*436. சர்தார் சாந்த் சிங்:* வீட்டு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவிலுள்ள சில விதிமுறைகளை எதிர்த்து தொழிலாளர் நலத் துறையிடம் புதுடில்லி வீட்டுச் சொந்தக்காரர்கள் மற்றும் குத்தகைக் காரர்கள் சங்கம் சென்ற டிசம்பரில் ஒரு முறையீட்டைச் சமர்ப் பித்தது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா? இது உண்மை யானால், அந்த முறையீட்டை தொழிலாளர் நலத்துறை பரிசீலித் ததா? இதிலிருந்து என்ன முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன?

(ஆ) வீட்டு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவு பல சிரமங் களைத் தோற்றுவித்து வருகிறது என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா? அவ்வாறு அறிவாரெனில், பழைய டில்லியில் நடை முறையிலுள்ள 1941ஆம் வருட பஞ்சாப் வீட்டு வாடகைக் கட்டுப் பாடு சட்டத்தை இந்த உத்தரவுக்குப் பதிலாக ஏற்றுச் செயல்படுத்த அரசாங்கம் சித்தமாக இருக்கிறதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (அ) ஆம். இந்த முறையீடு இன்னமும் பரிசீலனையில் உள்ளது.

(ஆ) இல்லை. கேள்வியின் பின்பகுதி இங்கு எழவில்லை. நட்சத்திரக் குறியிட்ட 231ஆம் எண் கேள்விக்கு அளிக்கப்பட்ட பதிலின் (இ) பகுதியை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

*சர்தார் சாந்த் சிங் :* இது சம்பந்தமாக மாண்புமிகு டில்லி தலைமை ஆணையர் அண்மையில் வழங்கிய தீர்ப்பை மாண்புமிகு உறுப்பினர் பார்த்தாரா என்று அவரைக் கேட்க விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் பார்க்க வில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1943, பக்கங்கள் 1590.

# 75

## *எண்ணெய் வள ஆய்வுகளை மேற்கொள்வதற்கான உரிமங்கள்

*441.* திரு. கே.சி. நியோகி: இந்தியாவில் எண்ணெய் வள ஆய்வு நடத்துவதற்கான உரிமங்கள் பிரிட்டிஷ், அமெரிக்க நிறுவனங்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா? இது உண்மையானால் இத்தகைய உரிமங்கள் எந்த நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன? எத்தகைய நிபந்தனைகளின் அடிப்படையில் வழங்கப்பட்டிருக்கின்றன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மத்திய அரசாங்கத்தால் நிர்வகிக்கப்படும் பிரதேசங்களில் தவிர, மேலே குறிப்பிடப்பட்ட உரிமங்கள் மாகாண அரசாங்கங்களால் வழங்கப்படுகின்றன. இவ்வாறு மாகாண அரசுகளால் அளிக்கப்பட்டிருக்கும் உரிமங்கள் சம்பந்தமான தகவல்கள் மத்திய அரசிடம் இல்லை. மத்திய அரசாங்கத்தால் நிர்வகிக்கப்படும் பிரதேசங்களில் இத்தகைய உரிமங்கள் எவையும் அளிக்கப்படவில்லை.

கேள்வியின் இரண்டாவது பகுதி இங்கு எழவில்லை.

திரு. கே.சி. நியோகி : மண்ணியல் ஆய்வுத்துறை அண்மையில் பயன்பாட்டுக் கிளையைத் தொடங்கியிருக்கும் நிலைமையில், முக்கியமான கனிமங்கள் விஷயத்தில் மாகாண அதிகாரிகள் வழங்கும் உரிமங்கள் பற்றித் தங்களுக்குத் தெரிந்திருப்பது அவசியம் என்று மத்திய அரசாங்கம் கருதவில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : நிச்சயமாக.

திரு. கே.சி. நியோகி : மத்திய அரசாங்கத்துக்கு, குறிப்பாக மண்ணியல் ஆய்வுப் பிரிவுக்குக் கிடைத்துள்ள தகவலின்படி எந்த மாகாண அரசாங்கத்தாலும் இத்தகைய உரிமங்கள் எவையும் வழங்கப்படவில்லை என்று நான் எடுத்துக் கொள்ளலாமா?

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள்,* தொகுதி II, *மார்ச் 30, 1943,* பக்கம் *1590.*

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : தற்போது எங்களிடம் இது சம்பந்தமான தகவல் ஏதும் இல்லை. மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் விரும்பினால் அத்தகவல்களை அவருக்கு என்னால் சேகரித்துத் தர முடியும்.

திரு. கே.சி. நியோகி : கனிம வளங்களை ஆராயும் பணியை மேற்கொள்வதற்கு பிரிட்டிஷ், அமெரிக்க நிறுவனங்களுக்கு ஏற்கெனவே உரிமங்கள் வழங்கப்பட்டு விட்டன என்று ஒரு விஞ்ஞான சஞ்சிகையில் கூறப்பட்டிருக்கிறது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இத்தகவல்களை மதிப்பிற்குரிய என் நண்பர் வேண்டும் என்று விரும்பினால் அவற்றைச் சேகரித்துத் தருகிறேன்.

திரு. கே.சி. நியோகி : நன்றி.

# 76

## *''உணவு உற்பத்தியைப் பெருக்குவோம்'' இயக்கத்தை ஊக்குவிக்கும் பொருட்டு புதுடில்லியில் பழம்பாணி குடியிருப்புகளுக்கு முன்னாலுள்ள வளாகங்களை புதர்வேலி எழுப்பிப் பிரித்தல்

444. ஹாஜி சௌதுரி முகமது இஸ்மாயில் கான்: உணவு உற்பத்தியைப் பெருக்குவோம் என்று அரசாங்கம் பிரசாரம் செய்து வருகிறது; இந்நிலைமையில், புதுடில்லியில் ஏ.பி.சி. வகையைச் சேர்ந்த குடியிருப்புகளுக்கு முன்னாலுள்ள கூட்டு வளாகங்களை புதர்வேலி எழுப்பிப் பிரித்து, அவற்றில் குடியிருப்பவர்கள் உணவு உற்பத்தி அதிகரிப்புத் திட்டத்தில் ஈடுபடுவதற்கு வழிவகை செய்யும் உத்தேசம் ஏதும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு உண்டா? இல்லை என்றால், அது ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து இத்தகைய கோரிக்கை ஏதும் எனக்கு வரவில்லை. அவ்வாறு வந்தால் அதைப் பரிசீலிக்கத் தயாராக இருக்கிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, 1943, பக்கம் 1595.

# 77

## *புதுடில்லியின் புதிய பகுதியில் வசிக்கும் அரசு ஊழியர்கள் பழைய பகுதியில் குடியிருப்புகளுக்கு விண்ணப்பிக்க அனுமதித்தல்

89. திரு அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா : (அ) மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குப் பின்கண்ட தகவல் கள் தெரியுமா:

(i) இந்திய அரசாங்க ஊழியர்களுக்காக புதுடில்லியில் கட்டப்பட்டிருக்கும் குடியிருப்புகளை வகைப்படுத்தும் விதிமுறை களின்படி பழைய பகுதி (தலைமைச் செயலகத்துக்கு அருகில் உள்ளது), புதிய பகுதி (மின்டோ சாலைப்பக்கத்தில் இருப்பது) என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன;

(ii) ஓர் ஊழியர் ஒரு குறிப்பிட்ட வகைப் பிரிவுக் குடியிருப் பிலிருந்து உயர் வகைப் பிரிவு குடியிருப்புப் பெறுவதற்கு தகுதி அடையும்போது, பழைய பகுதியில் அவருக்குக் குடியிருப்பு வழங்கப் படுவதற்கு முன்னர் அவர் புதிய பகுதியில் குறைந்தபட்சம் ஒரு வருடமாவது வசித்திருக்க வேண்டும்;

(iii) குடியிருப்பு ஒதுக்கீடு சம்பந்தமாக அண்மையில் இந்திய அரசாங்கம் புதிய விதிகளை வகுத்துள்ளது; இதன்படி குடி யிருப்புகளில் கண்ணாடி வில்லைகள் வைத்திருப்பவர்கள் தாங்கள் குடியிருக்கும் அதே வகைப் பிரிவைச் சேர்ந்த வேறு குடியிருப்பு களுக்கு விண்ணப்பிப் பதற்கு தடை விதிக்கப்பட்டிருக்கிறது;

(iv) மேலே கூறிய புதிய விதிகளின்படி புதிய விண்ணப்ப தாரர்கள் பழைய பகுதியில் குடியிருப்புகள் பெறுவதற்கு உடனடி யாகத் தகுதியுடையவர்களாகி விடுகிறார்கள்; ஆனால் அதேசமயம் புதிய பகுதியில் போதிய அளவு நீண்ட காலம் வசித்து வருபவர்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, 1943, பக்கம் 1595.

களும் காத்திருப்போர் பட்டியலில் இடம் பெற்றிருப்பவர்களுமான பலருக்கு எத்தகைய நியாயமான காரணமுமின்றி இந்தச் சலுகை மறுக்கப்படுகிறது;

(v) அரசு ஊழியர்களின் நலன்களை கண்காணித்து வருபவையான தலைமைச் செயலக ஊழியர்கள் சங்கம், சம்பந்தப் பட்ட இலாகாக்களது அதிகாரிகள் சங்கம், பொதுத் தலைமை அலுவலக ஊழியர்கள் சங்கம் போன்றவற்றைக் கலந்தாலோசியாமலேயே இந்திய அரசாங்கம் மேலே குறிப்பிட்ட புதிய விதிகளை உருவாக்கியுள்ளது:

(vi) புதிய பகுதியில் வசித்து வருபவர்கள் வீட்டிலிருந்து அலுவலகம் சென்று வருவதற்கு பேருந்து கட்டணமாகவோ அல்லது டோங்கா வாடகையாகவோ நாளொன்றுக்கு நபருக்கு குறைந்த பட்சம் ஆறு அணா ஆகிறது;

(vii) புதிய பகுதியில் வசிக்கும் ஊழியர்களுக்கு பயணப்படி எதுவும் அளிக்கப்படுவதில்லை.

இவை எல்லாம் உண்மையா?

(ஆ) கேள்வியின் (அ) (i) முதல் (vii) வரைக்குமான பதில் 'ஆம்' என்பதாக இருப்பின், புதிய பகுதியில் (மின்டோ சாலைப் பகுதி) வசிக்கும் அரசு ஊழியர்கள் பழைய பகுதியிலுள்ள குடியிருப்புகளுக்கு மாறிச் செல்லுவதற்கு விண்ணப்பிப்பதை அனுமதிக்கும் நோக்கத்தோடு இந்தத் தகுதியின்மையை அகற்றும் உத்தேசம் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) (i) மற்றும் (ii) இல்லை.

(iii) ஆம்.

(iv) பழம்பாணி ஒருங்கிணைந்த 'சி' வகை குடியிருப்புகள் தவிர புதிய விதிகளின்படி குடியிருப்புகளை மாற்றுவது அனுமதிக்கப்படுவதில்லை; ஆனால் (அ) (i)க்கு அளித்த பதிலில்

கூறியிருப்பது போல் குடியிருப்புகள் பகுதிவாரியாகப் பிரிக்கப் படவில்லை.

(v) ஆம்.

(vi) மதிப்பிற்குரிய உறுப்பினரிடமிருந்து இந்தத் தகவலைக் கவனத்தில் எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

(vii) எந்தக் குடியிருப்புகளிலும் வாடகைக்கு இருப்பவர் களுக்குப் பயணப்படி அளிக்கப்படுவதில்லை.

*(ஆ) இந்த விஷயத்தைப் பரிசீலிக்கத் தயாராக இருக்கிறேன்.*

# 78

## *சில கனிம வளங்கள் சம்பந்தமாக இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையின் பயன்பாட்டுக் கிளையின் செயற்பாடுகள்

92. திரு. கே.சி. நியோகி : ஈயம், கந்தகம், டங்ஸ்டன், வெள்ளீயம், தாமிரம், கனிச்சத்துகள்மிக்க நீர் வகைகள் போன்றவை சம்பந்தமாக இந்திய மண்ணியல் ஆய்வுத்துறையின் பயன்பாட்டுக் கிளையின் செயற்பாடுகளில் காணப்பட்டுள்ள முன்னேற்றம் குறித்து மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து ஒரு விரிவான அறிக்கையை அளிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அத்தகையதோர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

### அறிக்கை

1. ஈயம்: ராஜபுதனத்தில் நீண்டகாலம் கைவிடப்பட்டு விட்ட சில ஈய - துத்தநாக சுரங்கங்கள் பற்றி மண்ணியல் ஆய்வுத் துறை ஒரு விரிவான ஆய்வினை 1941-42 ஆம் ஆண்டில் மேற்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943, மார்ச் 30, 1943 பக்கங்கள் 1596 - 98.

0

கொண்டது. இந்தியாவிலேயே உதய்ப்பூர் சமஸ்தானத்தில் ஜாவாரில் உள்ள சுரங்கங்களில்தான் மிக வளமான ஈய-துத்தநாகப் படிவுகள் இருப்பது தெரியவந்தது. இந்த சுரங்கங்கள் ஒரு சமயம் செயல்பட்டு வந்து, 100 ஆண்டுகளுக்கும் மேலாகக் கைவிடப்பட்டு விட்டன. இந்தக் கனிமங்கள் சம்பந்தமான உரிமைகள் மேவார் சமஸ்தானத்துக்குச் சொந்தமாக இருந்தன. அந்த சமஸ்தானம் இந்த உரிமைகளை ஒரு வாணிக நிறுவனத்துக்குக் குத்தகைக்கு விட்டு விட்டது. ஆனால் இந்த நிறுவனமோ துரிதமாக செயலில் இறங்கும் நிலைமையில் இல்லை. அதே சமயம், மிக துரிதமாக சுரங்க ஆய்வுப் பணியை மேற்கொள்வது யுத்த முயற்சிக்குப் பெரிதும் அவசியமாக இருந்தது. எனவே, இந்த சுரங்கங்களின் உரிமைகளைத் தாமே வாங்கிக் கொள்ளவும், சமஸ்தானத்திடமிருந்து குத்தகைக்கு எடுத்துக் கொள்ளவும் அரசாங்கம் முடிவு செய்தது. இம்முடிவு செயல்படுத்தப்பட்டது. மேவார் சமஸ்தானத்திலிருந்து உரிமைகளைக் குத்தகைக்கு எடுத்த வாணிக நிறுவனத்துக்கு நியாயமான நஷ்டஈடு வழங்கப்பட்டது. மேவார் சமஸ்தானத்துடன் செய்து கொள்ளப்பட்ட குத்தகை ஒப் பந்தப்படி இந்திய அரசு தனது ஆய்வுப்பணியில் மும்முரமாக இறங்கிற்று. 1942 மே இறுதியில் பணிகள் தொடங்கின. இப்பணிகள் இரண்டு கட்டங்களில் மேற்கொள்ளப்பட்டன: (1) விரிவான பொது மதிப்பாய்வு செய்து, ஆழமான துரப்பண நடவடிக்கைகளைக் கைக்கொள்வது; (2) துரப்பணப் பணிகள் முடிந்தவுடன் தாதுப் படிவங்களைக் கண்டுபிடித்து, ஒரு முன்னோடி தாது சுத்திகரிப்புத் தொழிற்சாலையை அமைப்பது. பழைய சுரங்கங்களுக்கு நான்கு வாயில்கள் அமைக்கப்பட்டன. ஒரு வாயிலில் சென்றபோது ஈய- துத்தநாகத் தாதுப்படிவங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அவை ஏராளமாக இருந்தாலும் தற்போது எதிர்பார்த்த அளவுக்கு இல்லை. மற்றொரு வாயில் சில பழைய சுரங்கங்களுக்கு இட்டுச் சென்றது. அங்கு பெருமளவுக்கு தாதுப்படிவங்கள் இருப்பதற்கான அறிகுறிகள் தென்படுகின்றன. மற்ற இரு வாயில்கள் மூலம் இனிமேல் தான் தாதுப்படுகைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். எந்திரங்கள் முதலியவற்றைப் பெறுவதில் மிகுந்த சிரமங்கள் இருந்தபோதிலும் செயற்பாடுகள் திருப்திகரமாக இருப்பதாகவே சொல்ல வேண்டும். நான்கு சுரங்க வாயில்களில் எதுவும் உயர்ந்த தரமுள்ள ஈயப் படிவங்களுக்கு இட்டுச்செல்லும் என்று திட்டவட்டமாகத் தற்போது கூறுவதற்கில்லை. இவை யாவும் ஆரம்ப நடவடிக்கைகளே; இந்த நடவடிக்கைகள் முழு அளவுக்கு

மேற்கொள்ளப்படும் வரை, படிவுகளின் அளவையும் வளத்தையும் பற்றி மேற்கொள்ளப்படும் எந்த ஊகமும் அவசரப்பட்ட ஒன்றாகவே இருக்கும். இங்கு அமைக்கப் படவிருக்கும் தொழில் நிலையத்தைப் பொறுத்தவரையில், இது சம்பந்தமாக எந்த முடிவும் மேற்கொள்வதற்கு முன்னர் சமாதான சூழ்நிலைமைகளில் இப்போதைய முன்னேற்ற வேகத்தில் மேலும் இரண்டாண்டுகளாவது பணிகளைத் தொடர்வது உசிதமானதாக இருக்கும். எனினும் யுத்த முயற்சிகளை முன்னிட்டு வெகு விரைவில் உற்பத்தியைத் தொடங்க இந்திய அரசாங்கம் ஆர்வம் கொண் டிருக்கிறது. சுமார் மூன்று மாத காலத்திற்குள் தாதுப்பொருளின் தரம் குறித்து ஓரளவுக்கு மதிப்பிட முடியும் என்று நம்பப்படுகிறது. இந்தக் காலகட்டத்திற்குள் ஆதாயந் தரத்தக்க தாதுப்பொருள் கண்டுபிடிக்கப்படுமானால், தாதுப் பொருள் சுத்திகரிப்பு எந்திரங்களைத் தரவழைப்பதற்கும், நிறுவுவதற்கும் அவசியமான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும்.

2. கந்தகம்: போர் மூண்டதும், யுத்த நோக்கங்களுக்குத் தேவைப்படும் கனிமங்களைக் கண்டுபிடிக்கும் தனது முயற்சியின் ஒரு பகுதியாக இந்திய மண்ணியல் ஆய்வுத்துறை கந்தகத்தின் மீது விசேடக் கவனம் செலுத்திற்று. பலுசிஸ்தானில் கோஹி-இ-சுல்தானிலுள்ள அணைந்து போன எரிமலை வாயில் ஏராளமான கந்தகம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இங்குள்ள கனிவளங்களை மதிப்பிடும் பணி ஆரம்பத்தில் வழங்கீடு துறையிடம் ஒப்படைக்கப்பட்டது. ஒரு தனி அதிகாரியின் கீழ் அது ஒரு சிறு சுரங்கப் பிரிவை ஆரம்பித்தது. ஆனால் முதலில் எண்ணியதைவிட சுரங்கப் பணிகளுக்கு அதிகம் திட்டமிடுவது அவசியம் என்று உணரப்பட்டது. இச்சமயம்தான் மண்ணியல் ஆய்வுத் துறையின் பயன்பாட்டுப் பிரிவு தொடங்கப்பட்டது. சுரங்கப் பணியை இப்பிரிவு மேற்கொள்வது உகந்ததாகவும் உசிதமானதாகவும் இருக்கும் என்று கருதப்பட்டது; அவ்வாறே இப்பணி அதனிடம் ஒப்படைக்கப்பட்டது. கோஹி-இ-சுல்தானில் சுரங்கப்பணி நடைபெறக்கூடிய இரண்டு இடங்கள் இருக்கின்றன: (i) மிரி - இது சென்றடைவதற்குக் கடினமான உயரத்தில் இருப்பதால் இங்கு இன்னும் கனி வள ஆய்வுப் பணி தொடங்கவில்லை; (ii) பதால் - இங்குள்ள படிவங்கள் இப்போது தோண்டியெடுக்கப்பட்டு வருகின்றன. + 50 சதவிகித கந்தகம் பெருமளவுக்கு இந்தியத் தொழில்துறைக்கு வழங்கப்பட்டுள்ளது. + 50 தாதுப்

பொருளைப் பொறுத்தவரையில், பதாலில் அதன் இருப்பு இப்போது ஏறத்தாழ முற்றிலும் தீர்ந்துவிட்டது என்றே கூற வேண்டும். குறைந்த தரமுள்ள கந்தக தாதுதான் ஓரளவு எஞ்சியிருக்கிறது. இந்நிலைமையில் மிரி தாதுப்படிவங்களைத் தோண்டியெடுப்பது பற்றிப் பயன்பாட்டுப் பிரிவு தீவிரமாகப் பரிசீலித்து வருகிறது. பதாலை விட இங்கு தாதுப்படிவங்கள் கணிசமான அளவுக்கு அதிகம் இருக்கக் கூடும் என்று நம்பப்படுகிறது. ஆனால் போக்குவரத்தைப் பொறுத்த வரையில் மிகுந்த சிரமங்கள் உள்ளன. கோஹி-இ-சுல்தானில் அதிலும் குறிப்பாக மிரியில் தட்பவெப்ப நிலை மிகவும் கடுமை; குளிர் காலத்தில் குளிர் தாங்கவொண்ணாததாக இருக்கும்; கோடையிலோ வெயில் நெருப்பாகத் தகிக்கும்; அத்துடன் கடும் காற்றும் தனது கைவரிசையைக் காட்டும். இதன்காரணமாக இங்கு பணியாற்றுவதற்குத் தொழிலாளர்கள் கிடைப்பது மிகவும் சிரமம். இதல்லாமல், மிர்ரியிலிருந்து தாதுப்பொருளைக் கொண்டு செல்லுவதற்குப் போக்குவரத்து வசதியும் மிகமிகக் குறைவு. எனினும் இச்சிரமங்களை எல்லாம் சமாளிப்பதற்கு எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

இதுவரை + 50 சதவீத கந்தகத் தாதுதான் தோண்டியெடுக்கப்பட்டிருக்கிறது. சற்றுக் குறைந்த தரமுள்ள தாதுப்படிவங்களை வெட்டியெடுக்கும் சாத்தியக்கூறு பற்றியும், இத்தாதுப் பொருள்களின் தரத்தை உயர்த்த கோஹி-இ-சுல்தானுக்கு அருகில் அவற்றைச் சுத்திகரிப்பது குறித்தும் பயன்பாட்டுப் பிரிவு தற்போது ஆலோசித்து வருகிறது.

கலாத் சமஸ்தானத்தில் சான்னிக்கு அருகில் சில பழைய கந்தக சுரங்கங்கள் இருப்பதைக் கண்டுபிடிக்கும் நடவடிக்கைகளையும் பயன்பாட்டுப் பிரிவு எடுத்து வருகிறது. தற்போது இங்கு துரப்பணப் பணிகள் நடைபெற்று வருகின்றன.

3. **ஒல்ஃப்ராம் அல்லது டங்ஸ்டன்:** வங்காளத்தில் பங்கூரா மாவட்டத்திலும், மத்திய மாகாணத்தில் நாகபுரி மாவட்டத்திலும் இரண்டு இடங்களில் சிறு டங்ஸ்டன் படிமங்கள் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. பயன்பாட்டுப் பிரிவு இவற்றில் கவனம் செலுத்தி வருகிறது. முதலில் குறிப்பிடப்பட்ட படிமத்திலிருந்து

ஓரளவு டங்ஸ்டன் எடுக்கப்பட்டு வழங்கீட்டுத் துறைக்கு வழங்கப் பட்டுள்ளது. இந்தப் படிமம் அவ்வளவாக கவர்ந்து ஈர்க்கக் கூடிய தாக இல்லை; ஏனென்றால் ஒல்ப்ஃப்ராம் அங்குமிங்குமாக பாறை முகடுகளில் சிதறிக் கிடப்பதால் அவற்றிலிருந்து அதைப் பிரித்தெடுக்க வேண்டியிருக்கிறது. எனினும் சற்றுத் தரம் குறைந்த டங்ஸ்டன் கணிசமான அளவில் பெறப்பட்டிருக்கிறது. இங்கு எந்தி ரங்களை நிறுவி உற்பத்தியைப் பெருக்குவது குறித்துப் பரிசீலிக்கப் பட்டு வருகிறது. மத்திய மாகாணத்திலுள்ள படிமங்கள் வங்காளப் படிமங்களை விட மிகவும் தரம் குறைந்தவை. எனினும் போர் நடவடிக்கைகளுக்கு டங்ஸ்டன் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந் தவையாதலால், இந்தப் படிமங்கள் பற்றியும் மேற்கொண்டு ஆய்வு நடத்தப்பட்டு வருகிறது; ஓரளவு டங்ஸ்டன் பிரித்தெடுக்க முடியும் என்றும் நம்பிக்கை இருக்கிறது. இந்தியாவில் ஜோத்பூர் சமஸ் தானத்தில்தான் டங்ஸ்டன் பிரதானமாக கிடைக்கிறது. இந்த சுரங் கங்களை ஜோத்பூர் அரசாங்கம்தான் நிர்வகித்து வருகிறது. சமஸ் தான அரசாங்க அதிகாரிகளின் வேண்டுகோளின் பேரில் பயன் பாட்டுப் பிரிவு எல்லா உதவிகளையும் செய்து வருகிறது; தேவைப் படும்போது தொழில்நுட்ப ஆலோசனை கூறுவதோடு எந்திர சாத னங்களையும் வழங்கி வருகிறது.

4. வெள்ளீயம்: இந்தியாவில் பீகார் மாகாணம் ஹஜாரி பாக் மாவட்டத்தில் வெள்ளீயம் கிடைப்பது தெரிந்து பயன்பாட்டுப் பிரிவு அதில் முக்கிய கவனம் செலுத்தி வருகிறது. குப்பை குவியல் களிலிருந்து பெறப்பட்ட மாதிரிகளிலிருந்து இந்தப் பிரதேசத்தில் பரந்த அளவில் வெள்ளீயம் கிடைப்பது தெரியவந்தது. மிக ஆழமாக உள்ள பழைய சுரங்கங்களைத் திறப்பதற்கு முயற்சிகள் மேற்கொள் ளப்பட்டு வருகின்றன; ஆனால் இந்தச் சுரங்கங்கள் நீர் நிறைந்து கிடக்கின்றன. தண்ணீரை வெளியேற்றும் நடவடிக்கைகள் தற்போது மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆனால் நீரை வெளியேற்றும் சரியான விசைக் குழாய்கள் இல்லாததால் இந்தப் பணி தடைபட்டுப் போயுள்ளது. எனவே, நீரை வெளியேற்றும் சக்திவாய்ந்த எந்திர சாதனங்களைப் பெறுவதற்கு இப்போது முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டு வருகின்றன.

*5. தாமிரம்:* பீகாரில் கைவிடப்பட்டுவிட்ட ஒரு தாமிர சுரங்கத்தை மீண்டும் திறக்கும் சாத்தியக்கூறு பற்றி பயன்பாட்டுப் பிரிவு பரிசீலித்து வருகிறது. இந்தப் பழைய சுரங்கங்களிலும் தண்ணீர் வெளியேற்றப்பட வேண்டியிருக்கிறது; நிலத்தடியில் விரிவான ஆய்வு செய்யப்பட வேண்டியிருக்கிறது; இந்த சுரங்கங்கள் உரிய பலனை அளிக்குமா என்று கூறுவதற்கு முன்னர் அங்கு கிடைக்கும் உலோகக் கலவைகளைப் பரிசோதித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. இதைத்தவிர, வேறு சில இடங்களிலும் தாமிரப் படிமங்கள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவை ஓரளவு ஏமாற்றம் அளிப்பவையாகவே உள்ளன. ஆயினும் இங்கு கிடைக்கும் மாதிரி உலோகக் கலவைகள் சிறந்தவையாக இருப்பது தெரிய வந்தால் மேற்கொண்டு ஆய்வுப் பணிகள் மேற்கொள்ளப்படும்.

*6. கனிச்சத்துகள் மிக்க நீர்:* இந்தியாவிலுள்ள கனிச் சத்துகள் மிகுந்த நீரூற்றுகள் பற்றி மண்ணியல் ஆய்வுத்துறை விரிவாக ஆராய்ச்சி நடத்தியுள்ளது; கடந்த 18 மாதங்களில் 6 வகையான இந்திய ஊற்று நீரை அது பரிசோதித்துள்ளது. அவை குப்பிகளில் அடைக்கப்பட்டு பின்வருமாறு ரகம் பிரிக்கப்பட்டுள்ளது: சிவப்பு லேபிள் (அமில சத்து கொண்டது), வெள்ளை வேபிள் (அமில சத்து இல்லாதது), பச்சை லேபிள் (அமில சத்து இல்லாதது) நீல நிற லேபிள் (காஸ்டின்), நீலநிற லேபிள் (ஆக்சிஸ்லெஸ் - பெய்ன்ஸ்), மஞ்சள் நிற லேபிள் (கனிமசத்துகள் நிறைந்தது). சிவப்பு, வெள்ளை, நீலநிற லேபிள்கள் கொண்ட நீர் பயன்படுத்தத் தக்கது என்று கண்டறியப்பட்டுள்ளது; பெரிய அளவில் பரிசோதனையின் நிமித்தம் அவற்றை குப்பிகளில் அடைத்து விற்பனை செய்ய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன; ஆனால் உரிமையாளர்களுடன் இனிமேல் தான் இதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். இத்தகைய கனிச்சத்துகள் நிறைந்த நீரின் வாணிக அம்சமும், அவற்றின் மருத்துவ முக்கியத்துவமும் பரிசீலிக்கப்பட்டு வருகின்றன.

# 79

## *புதுடில்லியில் பழம்பாணி குடியிருப்புகளின் வளாகங்களில் வடிகட்டப்படாத தண்ணீர் வழங்கும் குழாய்கள் அமைத்தல்

*468. திரு. முகமது அஸார் அலி: (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குப் பின்கண்ட விஷயங்கள் தெரியுமா:*

*(i) புதுடில்லியில் அரசுப் பணியாளர்களின் பழம்பாணி குடியிருப்புகளின் வளாகங்களிலோ அல்லது முற்றங்களிலோ வடிகட்டப்படாத தண்ணீர் வழங்கும் குழாய்கள் அமைத்துத்தருவதாக சில காலத்துக்கு முன்னர் முந்திய தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் வாக்குறுதி அளித்திருந்தார்; ஆனால் பின்னர் ஏற்கெனவே குடியிருப்புக்கு வெளியே அமைக்கப்பட்டிருந்த குழாய்களை அப்படியே விட்டு வைப்பதென்று முடிவு செய்தார்; சென்ற கோடையில் இக் குழாய்களின் பூட்டுகள் களவு போனதால் இந்த ஏற்பாடும் கைவிடப்பட்டுவிட்டது;*

*(ii) இதனால் கோடை காலத்தில் தகிக்கும் கடுமையான வெயிலில் தொலை தூரத்திலிருந்து பெண்களும் குழந்தைகளும் தண்ணீர் எடுத்துக்கொண்டு தங்களது குடியிருப்புகளுக்கு வருவது மிகவும் சிரமமாக இருந்தது;*

*(iii) இந்தக் குடியிருப்புக்கு முன்னால் பெரிய வளாகங்கள் உள்ளன; அதிக உணவு உற்பத்தி செய்வோம் என்னும் அரசாங்கத்தின் இயக்கத்திற்காகவும் இந்த வளாகங்களை காய்கறி பயிரிடுவதற்கு இங்கு குடியிருப்பவர்கள் பயன்படுத்திக் கொள்ள முடியும்;*

*ஆ) புதுபாணி குடியிருப்புகளில் செய்யப்பட்டிருப்பது போல் ஒவ்வொரு குடியிருப்பின் முற்றத்திலும் வடிகட்டப்படாத தண்ணீர்*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, ஏப்ரல் 2, 1943, பக்கங்கள் 173-334.

வழங்கும் குழாய்கள் அமைப்பது உசிதமானது என்ற யோசனையை மாண்புமிகு உறுப்பினர் பரிசீலிப்பாரா? இல்லையென்றால் ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) (i) 1940 பிப்ரவரி 28ஆம் தேதி இந்த அவையில் பாய் பரமானந்த் கேட்ட நட்சத்திரக் குறிப்பிட்ட கேள்வி எண் 230க்கு முந்தைய மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அளித்த பதிலையே மதிப்பிற்குரிய உறுப்பினர் இங்கு குறிப்பிடுகிறார் என்று ஊகிக்கிறேன். புதுடில்லியில் உள்ள எழுத்தர்களின் பழம்பாணி குடியிருப்புகளின் முற்றத்திலோ அல்லது வளாகங்களிலோ வடிகட்டப்படாத தண்ணீர் வழங்கும் குழாய்கள் அமைக்கப்படுமென்று எனக்கு முந்தைய தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் எத்தகைய வாக்குறுதியும் அளிக்கவில்லை. இவ்வாறு செய்ய முடியுமா என்பதைப் பரிசீலிப்பதாக மட்டுமே அவர் கூறினார். கோடை மாதங்களின்போது, பெருங்குழாயுடன் இணைக்கப்பட்ட நெடுநீர்க் குழாயை இந்தக் குடியிருப்புகளுக்கு முன்னால் கொண்டுவந்து திறந்து விடுவதென்று தீர்மானிக்கப் பட்டது; இதன் பொருட்டு நெடுநீர்க் குழாயில் சில பொறி அமைவு களைப் பொருத்தவும் முடிவு செய்யப்பட்டது. கடந்த கோடை காலம் முழுவதும் இந்த ஏற்பாடு தொடர்ந்தது. உபகரணங்கள் பழுதடைந்து போன அல்லது திருட்டுப் போன ஒரு சில இடங்கள் மட்டும் இதற்கு விதிவிலக்கு

(ii) நீங்கள் குறிப்பிட்டதுபோல் இது மிகுந்த வசதிக் கேடாக இருந்திருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

(iii) ஆம்.

(ஆ) இல்லை. நிதி நெருக்கடி காரணமாகவும் தேவையான உபகரணங்கள் கிடைக்காததாலும் இந்தக் குடியிருப்புகளின் முற்றங் களில் தண்ணீர்க் குழாய்களை அமைக்கும் பிரச்சினையை சகஜ நிலைமை திரும்பும்வரை பரிசீலனை செய்வது சாத்தியமல்ல. இச்சந்தர்ப்பத்தில் மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு ஒரு தகவலைத் தெரிவிக்க விரும்புகிறேன்: எழுத்தர்களின் புது பாணி குடியிருப்புகளில் தண்ணீர்க்குழாய் எதுவும் அமைக்கப்படவில்லை, மாறாக, எழுத் தர்களின் பழம்பாணி குடியிருப்புகளின் முன்னால் செய்திருப்பது போன்று பெருங்குழாயுடன் இணைக்கப்பட்ட நெடுநீர்க் குழாய் வசதிதான் செய்யப்பட்டுள்ளது.

திரு. லால்சந்த் நாவல் ராய்: இந்த பழம்பாணிக் குடியிருப்புகளுக்குத் தண்ணீருக்காக எவ்வளவு இலவசப்படி வழங்கப் படுகிறது என்பதை மாண்பு மிகு உறுப்பினரிடமிருந்து நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்புத் தேவை.

திரு. லால்சந்த் நாவல் ராய் : இக்குடியிருப்புகளுக்கு இப்போது அரசு வடிகட்டப்படாத தண்ணீர் வழங்க முடியாத நிலைமையில், வடிகட்டப்பட்ட நீர் இலவசமாக வழங்கப்படுவதை 10,000 காலனுக்கு உயர்த்துவது பற்றி மாண்புமிகு உறுப்பினர் பரிசீலிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இது குறித்துப் பரிசீலிப்பேன்.

# 80

## *வங்காளத்திலும் பீகாரிலுமுள்ள நிலக்கரித் தொழில்துறை சார்பில் தூதுக்குழு

திரு.கே.சி.நியோகி: வங்காளத்திலும் பீகாரிலுமுள்ள நிலக்கரித் தொழில் துறையின் பல்வேறு நிறுவனங்கள் சார்பில் மார்ச் 25 ஆம் தேதி ஒரு தூதுக் குழுவினரை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் வரவேற்றுப் பேசினாரா? அவ்வாறு பேசினார் எனில், தூதுக் குழுவினர் என்ன விஷயத்தை அவரது கவனத்துக்குக் கொண்டு வந்தனர்? இதன் பேரில் எத்தகைய நடவடிக்கை மேற் கொள்ள அரசாங்கம் உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டதுபோல், வங்காளத்திலும் பீகாரிலுமுள்ள நிலக்கரித் தொழில் துறையைப் பிரதிநிதித்துவப்படுத்தும் நிறுவனங்களைச் சேர்ந்த தூதுக் குழுவினர் மார்ச் 25 ஆம் தேதி என்னைச் சந்தித்தனர்.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, ஏப்ரல் 2, 1943, பக்கங்கள் 1734 - 35.

இப்போது தங்களிடமுள்ள அரிசிக் கையிருப்பை அதிகப் படுத்துவது சம்பந்தமான எதிர்கால ஏற்பாடுகள் குறித்து அவர்கள் கவலை தெரிவித்தனர். தங்களால் முடிந்த எல்லா உதவியும் செய்வ தாக சம்பந்தப்பட்ட மாகாண அரசாங்கங்கள் வாக்களித்த போதிலும், அரிசி வழங்கீட்டுக்கு அவற்றால் எத்தகைய உத்தரவாதமும் அளிக்க முடியாததால், தங்கள் இருப்புகளைப் பராமரிப்பதற்கு உறுதியான வாய்ப்புகளை நிலக்கரிச் சுரங்க நிறுவனங்களால் காண இயல வில்லை என்று தூதுக் குழுவினர் தெரிவித்தனர். ஓர் ஒன்றிணைந்த விநியோகத் திட்டத்தை மேற்கொள்ளும்படி சிறிது காலத்திற்கு முன்னர் இந்த நிறுவனங்களைத் தாங்கள் கேட்டுக் கொண்டதை மத்திய அரசாங்கம் சுட்டிக்காட்டிற்று. கணிசமான அளவு அரிசியை வங்காளத்தில் மத்திய அரசாங்கம் இறக்குமதி செய்து வருகிறது என்றும், இதுவிஷயத்தில் மாகாண அரசாங்கங்கள் உதவி செய்ய முடியவில்லை என்றால், அப்போது மத்திய அரசாங்கம் எல்லா உதவிகளையும் அளிக்கும் என்றும் தூதுக் குழுவினரிடம் தெரிவிக்கப் பட்டது. இதன் பின்னர் இந்த நிறுவனங்களின் பிரதிநிதிகள் கல்கத்தா விலுள்ள உணவு இலாகாப் பிரதிநிதியைப் பேட்டி கண்டனர். மத்திய அரசாங்கம் செய்துள்ள சில ஏற்பாடுகள் மூலம் எதிர்காலத் தில் சுரங்கத் தொழிலாளர்களின் உணவுப் பொருள் நிலைமை உறுதி யும் உத்தரவாதமும் பாதுகாப்பும் செய்யப்பட்டுள்ளது.

திரு. கே.சி. நியோகி : தற்போதுள்ள அரிசிக் கையிருப்பை அதிகப்படுத்துவது பற்றி மாண்புமிகு உறுப்பினர் குறிப்பிட்டார். பல்வேறு நிலக்கரிச் சுரங்கங்களுக்கு தற்போது தோராயமாகக் கிடைக்கக்கூடிய அரிசியின் அளவை கூறும் நிலைமையில் மாண்பு மிகு உறுப்பினர் இருக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என் பதிலில் நான் ஏற்கெனவே கூறியதுபோல், மத்திய அரசாங்கம் செய்துள்ள சில ஏற்பாடுகள் மூலம் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் எதிர்கால உணவு நிலைமை பாதுகாப்பாகவும் பத்திரமாகவும் உள்ளது.

கே.சி. நியோகி: மாண்புமிகு உறுப்பினர் தெரிவித்த தற்போதுள்ள அரிசிக் கையிருப்பைப் பற்றியே நான் குறிப்பிட் டேன். தற்போது அரிசிக் கையிருப்பு எவ்வளவு உள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நிலைமை வங்கா ளத்துக்கும் பீகாருக்கும் வேறுபடுகிறது. நான்கு அல்லது ஐந்து வாரங் களுக்கான இருப்பு தங்களிடம் இருக்கிறது எனத் தூதுக் குழுவினர் என்னிடம் தெரிவித்ததாக ஞாபகம்.

# 81

## *வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கு மலிவு விலைத் தானியக் கடைகள் அமைக்கும் திட்டம்

திரு.கே.சி. நியோகி: (அ) நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் நலனுக்காக 1942 ஏப்ரலில் மலிவு விலைத் தானியக் கடைகள் அமைக்கும் திட்டம் ஒன்றை வங்காள, பீகார் அரசாங்கங்களுக்கு அனுப்பியுள்ள செய்தியில் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை முன் வைத்திருப்பது உண்மையா என்பதை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து தெரிவிப்பாரா? அவ்வாறாயின் இந்தத் திட்டம் இவ்விரு மாகாண அரசாங்கங்களிடமும், நிலக்கரிச் சுரங்க நிறுவனங்களிடமும் எத்தகைய பிரதிபலிப்பை ஏற்படுத்திற்று?

(ஆ) நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கு மலிவு விலையில் உணவு தானியங்கள் கிடைப்பதற்கு வகை செய்யும் மேலே கூறிய திட்டத்திற்கு மாற்றாக இவ்விரு அரசாங்கங்களில் ஏதேனும் ஒன்று பயனுறுதியுள்ள எத்தகைய நடவடிக்கையும் எடுத்துக் கொண்டதா? அவ்வாறாயின் எந்த அடிப்படையில், எப்போது அந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது?

(இ) தொழிலாளர்களுக்கு மலிவான உணவு தானியங்களை வழங்குவதற்கு நிலக்கரிச்சுரங்கத்துறை நிறுவனங்களோ, அல்லது தனிப்பட்ட நிலக்கரிச் சுரங்கங்களோ என்ன நடவடிக்கை எடுத்துள்ளன? இது விஷயத்தில் இத்தொழிலாளர்களுக்கு இவ்விரண்டு அரசாங்கங்களும் எத்தகைய உதவி செய்துள்ளன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். இந்தப் பிரச்சினையைச் சமாளிப்பதற்கு வேறு வழிகளை மேற்கொள்வது

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, ஏப்ரல் 2, 1943, பக்கம் 1735.

உசிதமென பீகார் அரசாங்கம் கருதிற்று. வங்காள அரசாங்கத்திட மிருந்து எந்தப் பதிலும் வரவில்லை.

(ஆ) சுரங்கத் தொழிலாளர்களுக்குக் குறைந்த விலையில் உணவு தானியங்களைச் சப்ளை செய்வதற்கு இரண்டு மாகாண அர சாங்கங்களுமே தமது ஸ்தல அதிகாரிகளின் மூலம் சாத்தியமான எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துள்ளன என்று மத்திய அரசாங் கத்துக்குத் தகவல் கிடைத்துள்ளது.

(இ) மலிவான உணவு தானியங்கள் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் என்ன பொருளில் கூறுகிறார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் உள்ள பிரதான நிறுவனங்கள் தமது தொழிலாளர்களுக்கு நியாயமான விலையில் உணவு தானியங்களை வழங்குவதற்கு ஏற்பாடு செய்தன. தானியங்களைப் பெறுவதற்கு மாகாண அரசாங்கங்கள் அவற்றிற்கு உதவி செய்தன.

திரு.கே.சி. நியோகி: கேள்வி (அ) வின் இரண்டாவது பகுதிக்கு அதாவது ''இவ்விரு அரசாங்கங்களில் ஏதேனும் ஒன்று பயனுறுதியுள்ள எத்தகைய நடவடிக்கையும் எடுத்துக் கொண்டதா? அவ்வாறாயின் எந்த அடிப்படையில், எப்போது அந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது?'' என்பதற்குத் தாங்கள் பதில் கூறவில்லை என்று நினைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உணவு சப்ளை பெறுவதற்கு அவை உதவின என்று கூறினேனே.

திரு. கே.சி. நியோகி : எந்த வகையில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவற்றைப் பெறு வதற்கு அவை உதவின.

திரு. கே.சி. நியோகி: ஆனால் எவ்வகையில் அந்த உதவி அளிக்கப்பட்டது? ஏனென்றால் இதில் இடையூறுகள் ஏற்பட்ட சந்தர்ப்பங்கள் நிறைய உள்ளன.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: நிலக்கரிச் சுரங்கங்களின்

உரிமையாளர்கள் தங்கள் தொழிலாளர்களுக்கு உணவு தானியங்கள் வழங்க என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவர்கள் உணவு தானிய கையிருப்புகளைப் பராமரித்தனர்; மாகாண அரசாங்கங்களும் இது விஷயத்தில் உதவி செய்தன என்று ஏற்கெனவே நான்தான் கூறினேனே.

திரு. கே.சி. நியோகி: சில சுரங்க உரிமையாளர்கள் தங்களுடைய தொழிலாளர்களுக்கு வழங்குவதற்காக கொள்முதல் செய்த அரிசியை அரசாங்கம் கைப்பற்றிக்கொண்ட ஒரு நிகழ்ச்சி மாண்புமிகு உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டதா? இது சம்பந்தமாக சுரங்க உரிமையாளர்கள் மாகாண அரசாங்கங்களிடமும் இங்கும் முறையீடு செய்தது அவருக்குத் தெரியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இத்தகைய தகவல் ஏதும் எனக்கு இல்லை.

# 82

## *போர்க்காயங்கள் (ஈட்டுறுதிய காப்பீட்டு) மசோதா மீதான தெரிவுக் குழுவின் அறிக்கை தாக்கல்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, போர்க்காயங்களுக்கு உள்ளாகும் தொழிலாளர்களுக்கு நட்ட ஈடு தரும் கடமைப் பொறுப்பை தொழிலதிபர்கள் மீது சுமத்தவும், இத்தகைய கடமைப் பொறுப்பு சம்பந்தமாக தொழிலதிபர்களுக்குக் காப்பீட்டுக்கு வகை செய்யவுமான மசோதா குறித்துத் தெரிவுக் குழுவின் அறிக்கையைச் சமர்ப்பிக்கிறேன்.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 26, 1943, பக்கம் 42-43

# 83

## *இந்திய பாய்லர் திருத்த மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) :* ஐயா, 1923-ஆம் வருட இந்திய பாய்லர்கள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி விழைகிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) :* தீர்மானம் வருமாறு:

> ''1923-ஆம் வருட இந்தியப் பாய்லர்கள் சட்டத்தை மேலும் திருத்தும் மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி கோரப் படுகிறது.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* ஐயா, மசோதாவை முன் மொழிகிறேன்.

# 84

## +சுரங்க மகப்பேறு நல உதவி (திருத்த மசோதா)

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* ஐயா, 1941-ஆம் வருட சுரங்க மகப்பேறு நல உதவி சட்டத்தைத் திருத்தும் மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி வேண்டுகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 26, 1943, பக்கம் 43.

+ மேற்படி பக். 43

*திரு. தலைவர் : (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தீர்மானம் வருமாறு:*

*"1941-ஆம் வருட சுரங்க மகப்பேறு நல உதவி சட்டத்தைத் திருத்தும் மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி கோரப் படுகிறது."*

*தீர்மானம் ஏற்கப்பட்டது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *ஐயா, மசோதாவை முன்மொழிகிறேன்.*

# 85

## * மோட்டார் வாகன (ஓட்டுநர்கள்) திருத்த மசோதா

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *1942-ஆம் வருட மோட்டார் வாகன (ஓட்டுநர்கள்) அவசரச் சட்டத்தைத் திருத்தும் மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி விழைகிறேன்.*

*திரு. தலைவர் : (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : தீர்மானம் வருமாறு:*

*"1942-ஆம் வருட மோட்டார் வாகன (ஓட்டுநர்கள்) அவசரச் சட்டத்தைத் திருத்தும் மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி கோரப்படுகிறது."*

*தீர்மானம் ஏற்கப்பட்டது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *மசோதாவை முன்மொழிகிறேன்.*

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, ஜூலை 26, 1943, பக்கம் 43.

# 86

## *சிம்லாவில் சட்டமன்ற உறுப்பினர்கள் தங்குவதற்கு திருப்திகரமற்ற ஏற்பாடுகள்

61. **திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா :** (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்கு அன்புகூர்ந்து பதிலளிப்பாரா: குழு கூட்டங்களில் கலந்து கொள்ள சட்டமன்ற உறுப்பினர்கள் சிம்லாவுக்கு செல்லும்போது, அங்கு அவர்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்வது மத்தியப் பொதுப்பணித் துறையின் எஸ்டேட் அதிகாரியின் கடமை அல்லாவ?

(ஆ) தங்குவதற்கு மோசமான ஏற்பாடுகள் செய்யப்படுவதன் காரணமாக சட்டமன்ற உறுப்பினர்களுக்கு வசதிக் குறைவு ஏற்படாதபடிப் பார்த்துக் கொள்வதும் அந்த அதிகாரியின் பொறுப்பல்லவா?

இ) இந்து சட்டக்குழு கூட்டங்கள் நடைபெற்றபோது சட்டமன்ற உறுப்பினர்களுக்காக கட்டைவண்டிச் சாலையில் ஒதுக்கப்பட்ட 2,3,11 எண்ணுள்ள குடியிருப்புகள் 20ஆம் எண் குடியிருப்பை விட மிகவும் வசதிக்குறைவாக இருந்தன என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா? மே, ஜுன் மாதங்களில் நடைபெற்ற இக்கூட்டங்களில் பங்கு கொள்வதற்கு வந்த சட்டமன்ற உறுப்பினர்களுக்கு இத்தகைய வசதிக் குறைவான குடியிருப்புகளை எஸ்டேட் அதிகாரி தேர்ந்தெடுத்தது குறித்து விசாரணை நடத்த மாண்புமிகு உறுப்பினர் தயாராக இருக்கிறாரா?

ஈ) முறையான விசாரணைகளுக்குப் பிறகு இக்குடியிருப்புகளில் மாற்றங்கள் செய்வது பற்றி மாண்புமிகு உறுப்பினர் பரிசீலிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) சட்டமன்றக் குழுவைக் கலந்தாலோசித்து அரசாங்கம் நிர்ணயித்துக் கூறுகிறபடி மத்திய சட்டமன்ற உறுப்பினர்கள் தங்குவதற்கு இடவசதி செய்து தருவது எஸ்டேட் அதிகாரியின் கடமையாகும்.

---

* சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜுலை 28, 1943, பக்கம் 129.

ஆ) உறுப்பினர்களுக்கு எத்தகைய வசதிக் குறைவுகளும் ஏற்படுவதைக் கூடிய மட்டும் தவிர்க்கும் வகையிலேயே எல்லாக் குடியிருப்புகளும் திட்டமிட்டுக் கட்டப்படுகின்றன.

(இ) வண்டிச்சாலையிலுள்ள குடியிருப்புகள் அங்கீகரிக்கப் பட்ட திட்டங்களின்படியே கட்டப்பட்டன. மிகவும் உயர் மட்டத் திலுள்ள 2 மற்றும் 3ஆம் எண் குடியிருப்புகள் சட்டமன்றக் குழு வின் ஆலோசனையின் பேரில் ஒதுக்கப்பட்டன; இவை மிகவும் வசதியான இடத்தில் அமைந்திருப்பதாகக் கருதப்பட்டதே இதற்குக் காரணம். 2 மற்றும் 3ஆம் எண் குடியிருப்புகளிலுள்ள அறைகளில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகள் 20ஆம் எண் குடியிருப்பில் உள்ள அறைகளில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளிலிருந்து சற்று மாறுபட்டவை. எந்த மட்டத்தில் இருந்தாலும் ஒரு குடியிருப் பில் உள்ள அறைகளில் செய்யப்பட்டிருக்கும் ஒரு குறிப்பிட்ட ஏற்பாடு சிலருக்கு வசதியானதாகத் தோன்றக்கூடும்; மற்றவர்கள் அறைகளில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகள் எப்படியிருந்தாலும் உயர் மட்டத்திலுள்ள குடியிருப்புகளை விரும்பக்கூடும். எனவே, 20ஆம் எண் குடியிருப்பைவிட 2 மற்றும் 3ஆம் எண் குடியிருப்பு கள் வசதிக்குறைவாக இருப்பதாகச் சொல்ல முடியாது. 11ஆம் எண் குடியிருப்பு 20ஆம் எண் குடியிருப்புக்காக மாற்றிக் கொள்ளப் பட்டதால் அதில் எவரும் தங்கவில்லை. இத்தகைய நிலைமையில் விசேட விசாரணை எதுவும் நடத்துவதற்கு அவசியமில்லை.

(ஈ) ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், சட்டமன்ற உறுப்பினர் களுக்காக குடியிருப்புகள் சட்டமன்றக் குழுவுடன் கலந்தாலோ சித்தே ஒதுக்கப்பட்டன. சட்டமன்றக் குழு விருப்பம் தெரிவித்தா லொழிய இதில் எத்தகைய மாற்றங்களும் செய்ய வேண்டிய அவ சியமில்லை என்றே கருதுகிறேன்.

**சர் முகமது யாமின் கான்:** சிம்லாவில் துணைக் குழு கூட் டங்களில் கலந்து கொண்டவர்களிடம் மின்சாரமும் தண்ணீரும் பெறுவதற்காக ரூ. 75 வைப்புத் தொகை செலுத்த வேண்டும் என்று கேட்கப்பட்டதா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு தேவை.

**முகமது யாமின் கான் :** இங்கு டில்லியிலும் வைப்புத் தொகை கட்டும்படி சட்டமன்ற உறுப்பினர்கள் கேட்டுக் கொள்ளப் பட்டார்கள் என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* அது பற்றி எனக்கு எதுவும் தெரியாது.

*திரு. லால்சந்த் நாவல் ராய் :* இந்தக் குடியிருப்புகளை அவ்வப்போது பார்வையிட்டு, சட்டமன்ற உறுப்பினர்களின் வசதிகளைக் கவனித்துக் கொள்வதற்கு யாரேனும் அதிகாரி நியமிக்கப் பட்டிருக்கிறாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இது குறித்து எனக்கு எந்தத் தகவலும் இல்லை.

*திரு. லால்சந்த் நாவல்ராய் :* அப்படியானால் இது சம்பந்தமாக எவரேனும் ஓர் அதிகாரியை மாண்புமிகு உறுப்பினர் நியமிப்பாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இது குறித்து விசாரணை மேற்கொள்கிறேன்.

*டாக்டர் பி.என். பானர்ஜியா:* ஒவ்வொரு கூட்டத் தொடரின் போதும் சட்டமன்றக் குழுவின் கூட்டங்கள் எத்தனை நடைபெறுகின்றன?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எத்தனைக் கூட்டங்களை நடத்த வேண்டும் என்பதை சட்டமன்றக் குழுதான் முடிவு செய்ய வேண்டும்.

*டாக்டர் பி.என். பானர்ஜியா :* இது குறித்துத் தங்களிடம் தகவல் ஏதும் உள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* சென்ற கூட்டத் தொடரின்போது சட்டமன்றக் குழு கூட்டம் ஒன்று நடைபெற்றது எனக்கு நினைவிருக்கிறது.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* சட்டமன்றக் குழுவின் சில உறுப்பினர்கள் காலமாகி விட்டால், அவர்களுக்குப் பதிலாக வேறு சில உறுப்பினர்கள் நியமிக்கப்படுவார்களா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இச்செய்தியை கேட்க நான் மிகவும் வருந்துகிறேன். எனினும் காலி இடங்களை நிரப்புவதற்கு அவசியமான நடவடிக்கைகளை அவை எடுத்துக் கொள்ளும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை.

# 87

## *சிம்லா வண்டிச்சாலையிலுள்ள குடியிருப்புகளில் ரிக்ஷா நிற்குமிடம்

62. *திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா:* சிம்லாவில் வண்டிச் சாலையிலுள்ள குடியிருப்புகள் மத்திய சட்டமன்ற உறுப்பினர்கள் தங்குவதற்கு ஒதுக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா? அவ்வாறாயின், (i) சட்டமன்ற உறுப்பினர்களின் வசதிக்காக அந்தக் குடியிருப்புகளுக்கு அருகில் ரிக்ஷா நிற்குமிடத்தை அமைக்கும்படி சிம்லா நகராட்சியைக் கேட்டுக்கொள்ளும் உத்தேசம் அவருக்கு உண்டா? (ii) சட்டமன்ற உறுப்பினர்கள் அந்தக் குடியிருப்புகளில் தற்காலிகமாகத் தங்குவதால் அவர்களிடம் மின்சாரத்திற்காக வைப்புப்பணம் வசூலிக்காதபடி மாண்புமிகு உறுப்பினர் பார்த்துக் கொள்வாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* சட்டமன்ற உறுப்பினர்கள் வண்டிச் சாலையிலுள்ள மிகச் சில குடியிருப்புகளில் சிறிது காலமே தங்குவதால் இந்தப் பகுதியில் ரிக்ஷா நிற்குமிடத்தை அமைக்கும்படி சிம்லா நகரசபைக் குழுவை அணுகிக் கேட்பது நியாயமென அரசாங்கம் உணரவில்லை. சிம்லாவில் மின்விசை வழங்கும் பொறுப்பு சிம்லா நகரசபைக் குழுவைச் சார்ந்தது, அவ்வாறிருக்கும்போது இது விஷயத்தில் நகரசபை நிர்வாகத்தில் தலையிட இயலாததற்காக அரசாங்கம் வருந்துகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 28, 1943, பக்கம் 130.

# 88

## *புதுடில்லியிலும் டில்லியிலும் தண்ணீர் வழங்கீடு

*66. திரு. லால்சந்த் நாவல்ராய் :* (அ) தகிக்கும் வெயில் கொளுத்தும் இந்நாட்களில் புதுடில்லியிலும் டில்லியிலும் கடும் தண்ணீர் பஞ்சம் ஏற்பட்டு அதனால் தோன்றியுள்ள பெரும் சிரமங்களை அகற்றும் பொருட்டு இவ்விரு நகரங்களுக்கும் போதிய தண்ணீர் வழங்கீடு செய்வதற்கு செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா?

(ஆ) குழாய்களுக்குத் தட்டுத் தடுங்கின்றி தண்ணீர் வரும் பொருட்டு யமுனை நதிப்படுகை சீர்செய்யப்பட்டு வருகிறது என்பது உண்மையா? இவ்வாறாயின் இந்தத் திட்டம் எந்த அளவுக்கு முன்னேறியுள்ளது? இங்கிருந்து கிடைக்கும் தண்ணீர் டில்லியிலும் புதுடில்லியிலும் எல்லாக் காரியங்களுக்கும் போதுமானதாக இருக்குமா?

(இ) இந்தக் கோடை நாட்களில் குழாய்கள் மிகவும் சூடேறும் நிலைமையில் அதில் வரும் தண்ணீரைக் குளிர வைக்க என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) வடிகட்டி சுத்திகரிக்கப்பட்ட நீரை வழங்கும் பொருட்டு, இந்தக் கோடையில் கூடுதலாக ஐந்து வடிகட்டும் சாதனங்கள் அமைக்கப்பட்டுள்ளன; இங்கிலாந்திலிருந்து இரண்டு பிரம்மாண்டமான விசைக் குழாய்கள் வாங்கப்படுகின்றன; அக்டோபரில் அவை இந்தியாவுக்கு வந்து சேரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. வடிகட்டப்படாத தண்ணீர் பற்றாக் குறை ஏற்பட்டிருப்பதற்கு யமுனை நதியின் நீர் மட்டம் திடீரென்று குறைந்து விட்டதே காரணம். நீர்மட்டத்தை உயர்த்துவதற்கு கால்வாய் நெடுகிலும் பல அணைகள் கட்டப்பட்டு வருகின்றன. இதன் பின்னர் நிலைமை அபிவிருத்தியடைந்துள்ளது; தற்போது தண்ணீர் பஞ்சம் இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 28, 1943, பக்கங்கள் 134-35.

(ஆ) வலதுகரையை ஒட்டியுள்ள கால்வாய் வறண்டு போயுள்ளது; அங்குதான் நீரேற்று நிலையம் அமைந்துள்ளது; இந்தக் கால்வாயை திசைதிருப்பி ஆற்றை சீர்திருத்துவதற்கு புனா மத்திய நீர் இயக்க ஆராய்ச்சி நிலையத்தில் பரிசோதனைகள் நடைபெற்று வருகின்றன. இந்த விஷயம் குறித்து ஆராய்வதற்கு நியமிக்கப்பட்ட நிபுணர்கள் குழு தனது அறிக்கையைச் சமர்ப்பித்துள்ளது; அந்த அறிக்கை தற்போது பரிசீலிக்கப்பட்டு வருகிறது.

(இ) தண்ணீரைக் குளிர வைப்பதற்கு ஏற்பாடு செய்வது சாத்தியமல்ல.

**திரு. லால்சந்த் நாவல்ராய்** : ஏன் சாத்தியமல்ல, இங்கு மிகவும் குளிராக இருப்பது இதற்குக் காரணமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** : மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் தம் இஷ்டம் போல் முடிவு செய்து கொள்ள விட்டுவிடுகிறேன்.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா** : இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தை இதற்கு ஏன் பயன்படுத்தக்கூடாது?

# 89

## *மத்தியப் பொதுப் பணித்துறையில் பணியாற்றும் முஸ்லீம் துணை எஸ்டேட் அதிகாரிகள்

71. **திரு. நபி பக்ஷ் இல்லாஹி பக்ஷ் பூட்டோ** : (அ) மத்தியப் பொதுப் பணித்துறையில் பணிபுரியும் துணை எஸ்டேட் அதிகாரிகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து தெரிவிப்பாரா?

(ஆ) இவர்களில் எத்தனை பேர் முசல்மான்கள்?

(இ) முஸ்லீம்களின் வீதாசாரம் பராமரிக்கப்படுகிறதா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 28, 1943, பக்கம் 139.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (ஆ) நான்கு; ஒரு பணியிடம் தற்போது காலியாக உள்ளது.

(ஆ) எவரும் இல்லை.

(இ) தற்போது இல்லை. ஆனால் காலியாக உள்ள ஒரு பணியிடத்துக்கு ஒரு முஸ்லீமை நியமிக்கும்படி மத்தியப் பணியாளர் தேர்வாணையம் கேட்டுக் கொள்ளப்பட்டிருப்பதால் முஸ்லீம்களின் வீதாசாரம் விரைவில் சரிசெய்யப்படும்.

# 90

## *காஜியாபாத்தில் புதுக்கட்டிடங்கள் நிர்மாணம்

*72. சர்தார் சாந்த் சிங் :* (அ) டான் பத்திரிகையின் 1943 ஜூன் 29ஆம் தேதிய இதழில் ''வீண் விரயம்'' என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ள பிரதான கட்டுரை தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்கு வந்ததா? அவ்வாறாயின், புதுடில்லிக்கு அருகில் அல்லாமல் காஜியாபாத்தில் இந்தக் கட்டிடங்கள் கட்டப் படுவதற்குக் காரணம் என்ன?

ஆ) இந்த வீடுகள் யுத்த காலத்திற்காகக் கட்டப்படும் தற்காலிக் கட்டிடங்கள் என்பது உண்மையா? இது உண்மையானால், இந்திய அரசாங்கத்தின் அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகளுக்கு புதுடில்லியில் போதுமான வீட்டு வசதி இல்லை என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா? அவ்வாறு தெரியுமானால் யுத்தத்திற்குப் பிறகு, அரசிதழ் பதிவு பெற்ற அதிகாரிகளுக்குப் பயன்படக்கூடிய வீடுகளை அரசாங்கம் ஏன் கட்டக்கூடாது?

இ) யுத்தம் முடிந்ததும் இந்தக் காஜியாபத் வீடுகள் பாதுகாப்புத் துறைக்குத் தேவையில்லை என்றால், அரசாங்கம் இவ்வீடுகளை எவ்வகையில் பயன்படுத்தும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (அ) ஆம். ஆனால் அந்தக் கட்டுரையில் தெரிவிக்கப்பட்டிருக்கும் தகவல்கள் முற்றிலும் சரியல்ல.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஜூலை 28, 1943, பக். 139

ஆ) மற்றும் (இ). இந்த விஷயம் பரிசீலனையில் உள்ளது. இன்னும் எத்தகைய திட்டவட்டமான முடிவும் எட்டப்படவில்லை.

# 91

## *தொழில்துறைத் தொழிலாளர்களுக்கு நோய்க் காப்பீட்டுத் திட்டம்

127. திரு. நபிக்ஷ் இல்லாஹி பக்ஸ் பூட்டோ : (அ) தொழில் துறைத் தொழிலாளர்களுக்கான நோய்க் காப்பீட்டுத் திட்டம் தயாராகிவிட்டதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) இந்தத் திட்டம் எப்போது நடைமுறைக்கு வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது?

(இ) இத்திட்டத்தின் நகலை அவையில் சமர்ப்பிக்க மாண்புமிகு உறுப்பினர் முன்வருவாரா?

(ஈ) திட்டம் குறித்து மாகாண அரசாங்கங்கள் தெரிவித்த கருத்துகளையும் அவையில் முன்வைக்கும் உத்தேசம் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை.

(ஆ) பொறுக்கியெடுத்த சில தொழில்களில் பணியாற்றும் தொழிலாளர்களுக்காக நோய்க்காப்பீடு நகல் திட்டம் ஒன்றைத் தயாரிப்பதற்காக இந்திய அரசாங்கம் ஒரு தனி அதிகாரியை நியமித்தது. இத்திட்டம் தற்போது தயாரிக்கப்பட்டு வருகிறது. இது எப்போது நடைமுறைக்கு வரும் என்பதை இந்தக் கட்டத்தில் சொல்லுவதற்கில்லை.

(இ) மற்றும் (ஈ) இந்த விஷயங்கள் பின்னால் பரிசீலிக்கப்படும். இது சம்பந்தமாக சட்டம் இயற்ற வேண்டியிருக்கும். திட்டத்தின் விவரங்கள் அவைக்கு முற்றிலுமாகத் தெரிவிக்கப்படும்.

திரு. லால்சந்த நாவல்ராய்: இத்திட்டம் எந்த அளவுக்குப் பூர்த்தியடைந்துள்ளது?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கம் 268.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பூர்வாங்க அறிக்கை கிடைத்துள்ளது.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இத்திட்டம் ஏறத்தாழ எப்போது பூர்த்தியாகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இது குறித்து தற்போது எதுவும் கூறுவதற்கில்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய் :** இரண்டு ஆண்டுகளுக்குள்ளா அல்லது ஓராண்டுக்குள்ளா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரண்டு மாத காலத்திற்குள்.

**திரு. லால்சந்த் நாவல்ராய் :** நன்றி.

# 92

## *பாபர்சாலைப் பகுதியில் யுத்தத்திற்கு முந்திய வாடகை மதிப்பைவிடக் குறைவாக வாடகைகளை நிர்ணயித்தல்

*132. சர்தார் சாந்த் சிங் : (அ)* (i) பாபர் சாலைப் பகுதியிலுள்ள மத்தியதர குடியிருப்புகளுக்கான வாடகை 1942 ஜூலை 1-ஆம் தேதி முதல் மாதம் ரூ. 42-8-0 என நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது என்பதும்,

(ii) 1938-39லிருந்து இந்த வீடுகளுக்கு வீட்டு வரி விதிக்கும் பொருட்டு புது டில்லி நகரசபைக் குழு மதிப்பிட்ட ஆண்டுக்கு ரூ. 560 என்னும் வாடகை மதிப்பை விட இந்த வாடகை குறைவானது என்பதும், மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) 1938-39ல் புதுடில்லி நகரசபைக் குழு மதிப்பிட்ட யுத்த

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கம் 271.

முற்கால வாடகை மதிப்பைவிடக் குறைவாக வாடகை நிர்ணயித்ததற்கான காரணங்கள் என்ன?

(இ) இத்தனை ஆண்டுகளாக அதிக விகிதத்தில் வீட்டு வரி விதிக்கப்பட்டு வந்ததை அரசாங்கம் எவ்வாறு நியாயப்படுத்துகிறது?

(ஈ) இந்த மதிப்பீடு அதிகமில்லை என்றால் வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரியின் உத்தரவை அரசாங்கம் எவ்விதம் நியாயப் படுத்துகிறது?

(உ) இந்தப் பகுதியிலுள்ள வீட்டுச் சொந்தக்காரர்களில் பெரும்பாலோர் மத்தியதர வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பதும், வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரியின் எதேச்சாதிகாரமான முடிவால் அவர்கள் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதும் மாண்பு மிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஊ) கரோல்பாக் பகுதியில் பூசா சாலைக்கு அருகில் அல்லது புதுடில்லியில் இதர இடங்களில் உள்ள கிட்டத்தட்ட இதே போன்ற வீடுகளுக்கு வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரி என்ன வாடகை நிர்ணயித்துள்ளார்?

(எ) கல்கத்தாவில் வங்காள அரசாங்கம் வீட்டு வாடகைகளைக் கட்டுப்படுத்தும்போது 1941ஆம் ஆண்டில் நிலவிய வாடகையை விட பத்து சதவிகிம் அதிகரிக்க அனுமதித்துள்ளது என்பது மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஏ) புதுடில்லியில் இதே போன்று வாடகையை அதிகரிப்பதற்கு அனுமதிக்கும் உத்தேசம் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா? இல்லையென்றால் ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** *(அ)* (i) பாபர் சாலைப் பகுதியில் பல்வேறு வாடகைகள் கொண்ட பலவிதமான வீடுகள் உள்ளன. வாடகை ரூ. 42-80 என்பது இவற்றில் ஒரு வகையைச் சேர்ந்த வீடுகளுக்கு மட்டுமே ஆகும்.

(ii) ஆம்.

(ஆ) 1939ஆம் வருட டில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு உத்தரவின் விதி 8-ன்படி வாடகைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. இதன்படி, 1939 செப்டம்பர் 1-ஆம் தேதிக்கு முந்தைய பன்னிரண்டு மாதங்களில் நிலவிய சூழ்நிலைமைகளை அனுசரித்து, ஒரே வகையைச் சேர்ந்த வீடுகளுக்கு இருந்த வாடகைகளைக் கருத்திற் கொண்டு வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு அதிகாரி நியாயமான வாடகையை நிர்ணயிக்க வேண்டியுள்ளது.

(இ) இது அரசாங்கம் சம்பந்தப்பட்ட விஷயமல்ல.

(ஈ) மேலே (ஆ) கேள்விக்கு அளிக்கப்பட்ட பதிலின்படி இந்தப் பிரச்சினை எழவில்லை.

(உ) ஆம், ஆனால் வீட்டுச் சொந்தக்காரர்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்று அரசாங்கம் கருத ஆதாரமில்லை.

(ஊ) ஒரே மாதிரியான வசதிகள் கொண்ட வீடுகள் கரோல் பாகில் இல்லை.

(எ) இது குறித்து எனக்கு அதிகாரபூர்வமான தகவல் இல்லை.

**சர்தார் சாந்த் சிங்:** புதுடில்லி நகரசபைக்குழு மதிப்பீடு செய்துள்ள வாடகை மதிப்பில் நிலவும் வேறுபாடு குறித்தும், வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள வாடகை குறித்தும் விசாரணை செய்து, வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு ஓரளவு நியாயம் கிடைக்கவும், வாடகைகளை உயர்த்தவும் மாண்புமிகு உறுப்பினர் ஏற்பாடு செய்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இதை என்னால் செய்ய இயலாது. ஏனென்றால் அதிகாரியால் நியாயமான வாடகை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. கணக்கிலெடுத்துக்கொள்ள வேண்டாத சந்தர்ப்ப சூழ்நிலைமைகளால் அந்த அதிகாரி தவறான முடிவு எடுத்திருக்கக்கூடும் என்று எண்ணுவதற்கு இடமில்லை.

# 93

## *சிமிண்டு, உருக்கு, வெட்டுமரம் முதலியவற்றைப் பயன்படுத்திக் கட்டிடங்கள் கட்டுவதற்குத் தடை

*135. சர் அப்துல் ஹலீம் குஸ்னாவி : (அ)* எல்லா வகையான கட்டிடங்களையும் கட்டுவதற்கு சிமிண்டு, உருக்கு, வெட்டுமரம் ஆகியவற்றைப் பயன்படுத்துவது தடை செய்யப்பட்டிருப்பதாக அரசாங்கம் தண்டோரா போட்டு அறிவித்துள்ளது. இந்த உத்தரவு பூர்த்தியடையும் தறுவாயிலுள்ள மற்றும் சிமிண்டு, உருக்கு, வெட்டு மரம் முதலியவை தேவைப்படாத கட்டிடங்களுக்கும் இந்த உத்தரவு பொருந்துமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் விளக்குவாரா?

*(ஆ)* மேற்கண்ட *(அ)* கேள்விக்கான பதில் 'இல்லை' என்பதாக இருக்குமானால், இத்தகைய வீடுகளைக் கட்டுபவர்கள் கதவுகளுக்கான முகப்புக் கூறுகளையும் பலகணிச் சட்டங்களையும் ஏனையவற்றையும் மாம்பலகையிலிருந்து தயாரித்துக் கொள்ள அனுமதிக்கப்படுவார்களா? அதிலும் இது குறித்து அதிகாரிகள் சரி பார்த்து, தேவையான இந்தப் பொருள்கள் யாவும் வீடு கட்டுபவர்களிடம் ஏற்கெனவே கைவசம் இருக்கின்றன என்று உறுதி செய்து கொண்ட பிறகு இந்த அனுமதி வழங்கப்படுமா?

*(இ) (ஆ)* கேள்விக்கான பதில் 'ஆம்' என்பதாக இருக்குமானால் இது சம்பந்தமான செயல்துறைக் கட்டளைகளை அனைத்து மாகாணங்களுக்கும் பிறப்பிக்க அரசாங்கம் உத்தேசித்துள்ளதா? இல்லையென்றால் சிமிண்டு, உருக்கு, வெட்டுமரம் முதலியவற்றைப் பயன்படுத்தினாலும் பயன்படுத்தாவிட்டாலும் எல்லாக் கட்டிடங்களும் கட்டுவது இப்போதைக்கு நிறுத்தி வைக்கப்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** *(அ)* முதல் *(இ)* வரை. தொழிலாளர்கள் மற்றும் கட்டிடப் பொருள்களுக்குள்ள

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கங்கள் 273-74.

தேவையை மட்டுப்படுத்துவதற்காகவும், பண வீக்கப் போக்கு களைக் கட்டுப்படுத்துவதற்காகவும் இந்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்களுக்கு சில கட்டளைகளை அனுப்பியுள்ளது; ஸ்தல ஸ்தாபன அமைப்புகளும் தனிநபர்களும் கட்டிடங்கள் கட்டு வதற்கு ஊக்கமளிக்க வேண்டாம் என்று அது கேட்டுக் கொண் டுள்ளது. இவை பொதுவான செயல் துறைக் கட்டளைகளே தவிர, அந்தந்த மாகாணத்திலுள்ள நிலைமைகளுக்கு ஏற்ப உசிதமான முறையில் அவற்றைச் செயல்படுத்தும் சுதந்திரம் மாகாண அரசாங் கங்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. எனவே, மாகாண அரசாங்கங் களின் உத்திரவுகள் பற்றி விளக்கம் பெற விரும்பினால் மதிப்பிற் குரிய உறுப்பினர் சம்பந்தப்பட்ட மாகாண அரசாங்கத்துடன் தொடர்பு கொள்ளுமாறு ஆலோசனை கூறுகிறேன்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இப்பொருள்களுக்கு தடை விதிக்கப்பட்டுள்ளது என்றால் ராணுவத் தேவைகளுக்காக இவை கள் வினியோகம் செய்யப்படுவதாலா, அல்லது வேறு ஏதாவது காரணங்களினாலா, என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ராணுவத் தேவை களுக்காகத்தான்.

**சர் அப்துல் ஹலீம் குஸ்னாவி:** இந்த அவையின் மதிப் பிற் குரிய உறுப்பினர் ஒருவர் தமது வீட்டைக் கட்டி முடிப்பதற்கு, மத்ரா மாவட்ட நீதிபதி அனுமதி வழங்க மறுத்துவிட்டார் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர் 22 மாமரப் பலகைகளையும், கதவுகளுக்கு 22 பலகைகளையும் உபயோகிக்க விரும்பினார். வீட்டைக் கட்டி முடிப்பதற்கு இது ஒன்றுதான் பாக்கி இருந்தது. ஆனால் மாவட்ட நீதிபதி அனுமதி கொடுக்க மறுத்து விட்டார்.

**தலைவர் (சையது குலாம் பிக் நைரங்) :** இது ஒரு கேள்வி அல்ல, ஒரு தகவல்தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தத் தகவலைத் தெரிந்து கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

**சர் அப்துல் ஹலீம் குஸ்னாவி :** இந்த விஷயத்தைப் பொறுத்த வரை ஆக்ரா பிரிவின் ஆணையரை அணுகியபோது, வீட்டைக் கட்டி முடிப்பதற்கு ஏற்கெனவே தேவையான மரம் கையிருப்பில் உள்ளது என்பதை மாவட்ட நீதிபதிக்கு வீட்டுக்காரர் உணர்த்தினால், அவர் அனுமதி அளிப்பார் என்று ஆணையர் தெரிவித்தது உண்மையா? வீட்டுக்காரர் தன்னிடம் தேவைப்படும் மரம் இருப்பதை மாவட்ட நீதிபதிக்கு நிரூபித்தும் அவர் அனுமதி அளிக்க மறுத்துவிட்டார்.

தலைவர் (சையத் குலாம் பிக் நைராங்) : மீண்டும் இது ஒரு தகவல் தானே தவிர கேள்வி அல்ல.

**திரு. லால்சந்த் நாவல்ராய் :** பாதி கட்டி முடிந்த கட்டடங்களுக்கும் முக்கால் பகுதி கட்டிமுடிந்த கட்டடங்களுக்கும், கட்டி முடிக்கப்படுவதற்குத் தடை விதிக்கப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த விஷயம் குறித்து என்னிடம் எந்தத் தகவலும் இல்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இது சம்பந்தமாக ஏதாவது விதிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மாகாணங்களுக்குப் பொதுவான உத்தரவுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

**திரு. லால்சந்த் நாவல்ராய் :** சுயமாகத் தீர்மானித்து முடிவு செய்யும் அதிகாரம் அவர்களுக்கு ஏதாவது அளிக்கப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த அதிகாரம் மிகவும் கவனத்துடன் பயன்படுத்தப்படும் என்று நினைக்கிறேன்.

**திரு. லால்சந்த் நாவல்ராய் :** அப்படியென்றால், மத்திய அரசு இதுவரை எந்த உத்தரவுகளையும் வழங்கவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கட்டத்தில் அதைப் பற்றிக் கூறுவதற்கில்லை.

# 94

## *யுத்த நடவடிக்கைகள் தொடர்பாக புதுடில்லி மற்றும் சிம்லாவில் எழுப்பப்படும் கட்டடங்களுக்கு ஆன செலவு

*144. சர்தார் சாந்த் சிங் : செப்டம்பர் 1939 லிருந்து, புதுடில்லி மற்றும் சிம்லாவில் யுத்த நடவடிக்கைகள் தொடர்பாக இந்திய அரசு எழுப்பியுள்ள கட்டடங்களின் மொத்த மதிப்பு தனித்தனி யாக ஒவ்வொரு நகரத்துக்கும் எவ்வளவு என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா? அமெரிக்கர்கள் சார்பாக ஏதாவது தொகை செலவு செய்யப்பட்டுள் ளதா? அப்படியென்றால் எவ்வளவு தொகை? யார் செலவை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *மார்ச் 1943 இறுதி வரைக்குமான செலவுகள் பின்வருமாறு:*

(i) *புதுடில்லி - ரூ. 1,55,14,629.*

(ii) *சிம்லா - ரூ. 24,65,137.*

(iii) *அமெரிக்கர்களுக்காக - ரூ. 38,47,916.*

*(கூட்டு குத்தகைக் கடன் முறையின் கீழ் பாதுகாப்புத்துறை கணக்கில் இது பற்று வைக்கப்பட்டுள்ளது.)*

***மௌலானா ஜாபர் அலி கான் :*** *போர் முடிந்த பிறகு இந்தத் தற்காலிகக் கட்டடங்கள் எல்லாம் இடித்துத் தரைமட்டமாக்கப் பட்டு விடுமா என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *ஆம்.*

***சர்தார் சாந்த் சிங் :*** *அமெரிக்கர்களுக்காக செலவழிக்கப்பட் டுள்ள ரூ. 38,47,916 தொகைக்கு எந்த அரசு பொறுப்பேற்றுள்ளது?*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி* III, *2 ஆகஸ்டு, 1943, பக்கம் 282.*

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : கூட்டுக் குத்தகைக் கடன் முறையில் இந்திய அரசு பொறுப்பேற்றுள்ளது.

சர்தார் சாந்த் சிங்: இந்திய வரி செலுத்துவோர் மீதான இந்தச் செலவு பிறகு உரிய கணக்குகளில் பற்று வைக்கப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: முன் அறிவிப்பு தேவை.

# 95

## *பழைய ஸ்டாண்டர்ட் (நிர்ணயிக்கப்பட்ட) நேரத்தால் பாதிக்கப்பட்ட தொழிற்சாலைகள்

151. காஜி முகமது அகமது காஸ்மி : (அ) முன்பு வழக்கத்திலிருந்த பழைய ஸ்டாண்டர்ட் நேரத்தால் எந்தத் தொழிற்சாலைகள் (இந்தியாவின் எந்தப் பகுதியிலுள்ளவை) பாதிக்கப்பட்டுள்ளன என்பதைத் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா?

(ஆ) இப்படிப்பட்டத் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை எத்தனை? அந்த ஸ்டாண்டர்ட் நேரத்தை கடைப்பிடித்ததால், இந்தத் தொழிற்சாலைகளுக்கு ஏற்பட்ட இழப்பு எவ்வளவு?

(இ) பழைய ஸ்டாண்டர்ட் (நிர்ணயிக்கப்பட்ட) நேரத்தைத் திரும்பவும் அமலுக்குக் கொண்டு வரும் யோசனையை அரசு பரிசீலிக்க உத்தேசித்துள்ளதா? இல்லை என்றால், ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) பழைய ஸ்டாண்டர்ட் நேரத்தால் இந்தியாவில் எந்தப் பகுதியிலுமுள்ள தொழிற்சாலைகளும் பாதிக்கப்பட்டுள்ளதாக அரசுக்கு எந்தத் தகவலும் இல்லை.

(ஆ) கேள்வி எழவில்லை.

(இ) முதல் பகுதிக்கான பதில் இல்லை என்பதுதான். நேரத்தை முன்னே தள்ளி நிர்ணயித்ததற்கான காரணங்களைப் பத்திரிகை அறிக்கை ஒன்றின் மூலம் அரசு விளக்கியுள்ளது. அந்த

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 2 ஆகஸ்டு, 1943, பக்கம் 285.

அறிக்கையின் நகல் அவைமுன் வைக்கப்பட்டுள்ளது. பழைய ஸ்டாண்டர்ட் நேரத்தை திரும்பவும் அமலுக்குக் கொண்டு வர எந்தக் காரணங்களும் கொடுக்கப்படவில்லை.

## பத்திரிகை அறிக்கை

இந்தியாவில் இரண்டு ஸ்டாண்டர்ட் நேரங்கள் வழக்கத்திலிருப்பது பாதுகாப்புத் தேவைகளைப் பொறுத்த வரையில் விரும்பத்தக்கதல்ல. எனவே இந்த ஆண்டு மே மாதம் 15ஆம் தேதியிலிருந்து ஓர் ஒருங்கிணைந்த ஸ்டாண்டர்ட் நேரம் நாடு முழுவதும் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது. எது ஸ்டாண்டர்ட் நேரமாக இருக்க வேண்டுமென்று தீர்மானிப்பதில், தீர்க்கரேகை 82 1/2க்கு மேற்கே உள்ள பகுதியில் ஏற்கெனவே போதுமான அளவு, பகல் வெளிச்சம் மிச்சப்படுவதைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். அதே நேரத்தில் கிழக்கு மாகாணங்களின் தேவைகளையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது. தொழிற்சாலைகள், வீட்டு உபயோகம், தெரு விளக்குகள் மற்றும் சில இடங்களில் இருளை விரட்ட அதிகப்படியாகத் தேவைப்படும் மின்சக்தி அளவுக்கு மீறிப் போவதை தவிர்ப்பது அவசியம். ஆனால் கோடைகால மாதங்களில் கிழக்குப் பகுதிகளில் போதுமான அளவு பகல் வெளிச்சம் உள்ளது. இந்தியா முழுவதும் கிரீன்விச் நேரத்திலிருந்து 5 1/2 மணி நேரம் முன்னதாக இந்திய நேரத்தை நிர்ணயிப்பதன் மூலம், கோடைகாலத்தில் கிழக்குப் பகுதிகளின் தேவைகளைச் சமாளிக்க முடியும் என்று கருதப்பட்டது. இதற்கு அலுவலகங்கள் மற்றும் தொழிற்சாலைகளின் வேலைநேரங்களில் சிறிது மாற்றங்கள் செய்வது அவசியம். எனவே மே 15ல் இந்தியா பூராவும் ஒரே சீரான நேரம் அறிமுகப் படுத்தப்பட்டது. எனினும் பனிக்காலம் தொடங்குவதற்கு முன்பு இந்திய அரசு மேலும் ஒரு மாற்றத்தைச் செய்ய முடிவெடுத்தது. கிழக்கு மாகாணங்களில் போதிய பகல்வெளிச்சம் தொடர்ந்து கிடைப்பதற்காக விரைவில் ஒரு மாற்றம் தேவை என்பது உணரப்பட்டது. அதாவது கிரீன்விச் நேரத்திலிருந்து 6 1/2 மணி நேரம் முன்னதாக இந்திய நேரம் இருக்கவேண்டும். ஆகஸ்டு 31 - செப்டம்பர் 1 தேதிக்கு இடைப்பட்ட நள்ளிரவிலிருந்து இந்த மாற்றம் அமலுக்கு வரும். அந்த தேதியிலிருந்து கடிகாரங்கள் ஒரு மணிநேரம் முன்னதாக திருப்பி வைக்கப்படும். தீர்க்கரேகை 82 1/2க்கு மேற்கே உள்ள பகுதிகளில் சில அசௌகரியங்கள் ஏற்படக்கூடும். வேலை நேரத்தில் மாற்றம் செய்வதன் மூலம் இந்த அசௌகரியங்கள் தீர்க்கப்படும். புதிய நேரத்திற்கு மக்கள் பழகியபிறகு பெரும் தொல்லைகள் ஒன்றும் இருக்காது.

# 96

## *நிலக்கரி உற்பத்தியில் வீழ்ச்சி

*28. திரு.கே.சி. நியோகி: (அ) 1943 ஜனவரியிலிருந்து, பிரிட்டிஷ் இந்தியாவின் நிலக்கரி உற்பத்தியில் வீழ்ச்சி ஏற்பட்டுள்ளது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறமுடியுமா? அப்படியென்றால், நிலக்கரி உற்பத்தியின் அளவு குறைவதற்கான காரணங்களைப் பற்றி அரசு விசாரணைக்கு ஏற்பாடு செய்யுமா? நிலைமை சீரடைவதற்கு அரசு என்னென்ன பயனுள்ள நடவடிக்கைகளை எடுக்க உத்தேசித்துள்ளது?*

*(ஆ) பிரிட்டிஷ் இந்திய நிலக்கரிச் சுரங்கங்களில் 1942 டிசம்பர் 31ல் இருந்ததாக அறிவிக்கப்பட்டுள்ள கையிருப்பைவிட 1943 மே 31ல் இருந்த கையிருப்பு மிகவும் குறைந்துவிட்டது என்பது உண்மையா? இந்தக் குறைவிற்குக் காரணம் என்ன?*

*(இ) 1943 ஜனவரி முதல் தேதியிலிருந்து 1943 மே 31 வரையிலான காலகட்டத்தில் எடுக்கப்பட்டுள்ள நிலக்கரியை, ஏற்றி அனுப்பப் போதுமான அளவு ரயில் சரக்குப்பெட்டிகள் கிடைக்கவில்லை என்பது உண்மையா? அப்படியென்றால் கையிருப்புக் குறைவதற்குக் காரணம் என்ன?*

*(ஈ) வங்காள மாகாணத்திலுள்ள கஜோராப் பகுதியில், சுமார் 10 லட்சம் டன்களுக்கு அதிகமாக உற்பத்தி செய்யும், 30 நிலக்கரிச் சுரங்கங்கள் ரயில் சரக்குப் பெட்டி வசதி கிடைக்காததால் மூடப்படும் நிலையில் உள்ளன. ஒண்டால் ரயில் நிலைய சந்திப்பிலிருந்து, ராணுவ லாரிகள் மூலம் ராணுவத் தளவாடங்களை எடுத்துச் செல்ல வசதிகள் இருப்பினும், ராணுவ அதிகாரிகள் இந்த நிலக்கரிச் சுரங்கங்கள் பயன்படுத்திவரும் ரயில் பாதையை உபயோகிப்பதுதான் இதற்குக் காரணமா?*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கம் 286.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இல்லை. கேள்வியின் இரண்டாவது பகுதி எழவில்லை.*

*(ஆ) 1942 டிசம்பர் 31-ல் இருந்ததாகக் கூறப்படும் கையிருப் பளவு நம்பத் தகுந்ததாக இல்லை. இப்பொழுது கையிருப்பைக் கணக்கெடுப்பதற்கு மேலும் சிறந்த முறைகள் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளன. 1942 டிசம்பர் 31லிருந்து 1943 மே 31 வரையிலான காலத்தில் கையிருப்பு குறையாததுடன் அதிகரித்துள்ளதாகவே நம்பப் படுகிறது.*

*(இ) கேள்விக்கான முதல் பகுதிக்கான பதில், ஆம் என்ப தாகும். இரண்டாவது பகுதிக்கான பதில், இல்லை என்பதாகும்.*

*(ஈ) இல்லை. கஜோராப் பகுதியில் பல முன்னோடித் திட் டங்கள் செயல்பட்டு வருகின்றன. இந்தக் கேள்வி ஒக்ரா முன் னோடித் திட்டங்கள் 1, 2 செயல்படும் பகுதிகளைக் குறிப்பதாக நினைக்கிறேன். இந்த இரு முன்னோடித் திட்டங்களில், சுமார் 30 நிலக்கரிச் சுரங்கங்கள் உள்ளன. இந்த இரு முன்னோடித் திட்டங் களில் பெறப்படும் நிலக்கரியின் அளவு 100 ரயில் சரக்கு பெட்டி களுக்குப் போதுமானது. அதாவது சுமார் 2000 டன் நிலக்கரி ஒரு நாளைக்கு அல்லது ஆண்டுக்கு 7,20,000 டன் ஆகும். வங்காளம் மற்றும் அசாம் ரயில்வேக்கள் அதிக அளவில் நிலக்கரி அனுப்பக் கோரியிருந்ததால், இந்த இரண்டு முன்னோடித் திட்டங்களுக்கும் ரயில் சரக்குப் பெட்டிகள் அனுப்புவதில் முன்னுரிமை அளிக்கப் பட்டுள்ளது. வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் இன்றுள்ள ரயில் சரக்குப் பெட்டிகளின் தேவையைக் கவனிக்கும் போது இந்த இரு முன்னோடித் திட்டங்களின் உற்பத்தி அதிகரித் தாலும் ஒரு நாளைக்கு 100க்கும் மேற்பட்ட ரயில் சரக்குப் பெட்டி களை இந்தச் சுரங்கங்கள் பெறமுடியும். ஒக்ரா 2 முன்னோடித் திட்டத்திலுள்ள 20 ரயில் சரக்குப் பெட்டிகள் ராணுவ டெப்போ வுக்கு ஒதுக்கப்பட்டுள்ளன. ஆனால் மேலே விளக்கியதுபோல், இந்த நடைமுறையினால் நிலக்கரிச் சுரங்கங்கள் மூடுவதற்கான வாய்ப் பில்லை. ஒண்டால் சந்திப்பிலிருந்து ராணுவ லாரிகளில் ராணுவத் தளவாடங்களைக் கொண்டு செல்ல முடியும் என்ற விஷயம் இந்திய அரசுக்குத் தெரியாது.*

# 97

## *பிரிட்டிஷ் அல்லது அமெரிக்க நிறுவனங்களுக்கு பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எண்ணெய் வளத்தைப் பயன்படுத்துவதில் சலுகைகள்

*30. திரு. கே.சி. நியோகி : 1943 மார்ச் 30ல் கேட்கப்பட்ட நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 441ஐ, மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கவனத்தில் கொண்டு, பிரிட்டிஷ் இந்தியா விலுள்ள எண்ணெய் வளங்கள் சம்பந்தமாக சலுகைகள் (எண்ணெய் வள ஆராய்ச்சி மற்றும் எண்ணெய் எடுப்பதற்கான உரிமம்) பெற் றுள்ள பிரிட்டிஷ் அல்லது அமெரிக்க நிறுவனங்களின் பெயர்ப் பட்டி யலையும், ஒவ்வொரு உரிமம் சம்பந்தமான அடிப்படையான நிபந் தனைகளின் சுருக்கத்தையும் அவர் அளிப்பாரா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மார்ச் 30ல் 1943ல் கேட்கப்பட்ட கேள்வி எண் 441-ன் துணைக் கேள்விகளுக்கு அளித்த பதிலில் கொடுக்கப்பட்டுள்ள அறிக்கையை மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.*

# 98

## *தொழிலாளர் நிலைக்குழுவின் மூன்றாவது கூட்ட நடவடிக்கைகளின் சுருக்கம்

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1943 மே 7 மற்றும் 8 ஆம் தேதி களில், நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழுவின் மூன்றாவது கூட்ட நடவடிக்கைகளின் சுருக்கமான நகல் ஒன்றை அவைமுன் வைக்கிறேன்.*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கம் 287.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 2, 1943, பக்கம் 292.

# 99

## +மத்தியப் பொதுப்பணித் துறையில் அதிக ஊதியம் கிடைக்கும் பதவிகளில் உள்ள சீக்கியர்கள்

209. சர்தார் சாந்த் சிங்: மத்தியப் பொதுப்பணித்துறை மற்றும் அதைத்தவிர்த்த மற்ற பிரிவுகளில் மாதம் ரூ. 400ம் அதற்கு மேலும் ஊதியம் நிர்ணயிக்கப்பட்டுள்ள பணியிடங்களின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? இந்தப் பணியிடங்களில் எத்தனை சீக்கியர்கள் பணிபுரிகின்றனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ரூ. 400 வரைக்கும் அதற்கு மேலும் ஊதியங்கள் பெறக்கூடிய பதவிகள் 60. ரூ. 400ம், அதற்கும் அதிகமான ஊதியங்கள் நிர்ணயிக்கப்பட்டுள்ள பதவிகள் 82 உள்ளன. இந்த 142 பதவிகளில் 6 இடங்களில் சீக்கியர்கள் பணிபுரிகின்றனர்.

மத்தியப் பொதுப்பணித் துறையைத் தவிர்த்த மற்ற பிரிவுகள் என்று மரியாதைக்குரிய உறுப்பினர் குறிப்பிடுவது எந்த அலுவலகத்தை என்ற தெரியவில்லை.

# 100

## ★மத்தியப் பொதுப்பணித்துறையின் தலைமைப் பொறியாளர் அலுவலகத்தில் பணியாளர் பிரிவு

+210. சர்தார் சாந்த் சிங் : (அ) பணியாளர் சம்பந்தமான விஷயங்களைக் கவனிக்கவும், தேர்வு மையங்களின் வேலைகளை

---

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 5, 1943, பக்கம் 426.

★ மேற்படி அதே தொகுதி, பக்கம் 426.

+ கேள்விகேட்டவருக்கு ஒதுக்கப்பட்ட 'கோட்டா' தீர்ந்துவிட்டதால் இந்தக் கேள்விக்கான பதில் அவையில் அளிக்கப்பட்டுள்ளது.

எளிமையாக்கவும் தனிப் பிரிவு ஒன்று மத்திய பொதுப்பணித்துறைத் தலைமைப் பொறியாளர் அலுவலகத்தில் அமைக்கப்பட்டுள்ளதா?

(ஆ) இந்தப் பிரிவில் எத்தனை பேர் வேலை செய்கிறார்கள்? அவர்களில் இந்துக்கள், முஸ்லீம்கள், கிறித்தவர்கள் எத்தனை பேர்?

(இ) கண்காணிப்பாளர் உட்பட இந்தப் பிரிவில் உள்ள எந்த ஊழியர்களுக்கும் பணியாளர்கள் சம்பந்தமான விஷயங்களில் எந்தவித அனுபவமுமில்லை என்பது உண்மையா?

(ஈ) ஏற்கெனவே உள்ள பணியாளர் பிரிவில் வேலைபுரிந்த அனுபவமிக்க ஊழியர்களை இந்தப் பிரிவுக்கு ஏன் தேர்ந்தெடுக்கவில்லை?

(உ) பணியாளர் சம்பந்தமான பிரச்சினைகளில் முஸ்லீம் பணியாளர்கள் சம்பந்தப்பட்டவைகள் விரைவில் தீர்க்கப்படுவதாகவும் ஆனால் மற்ற சமூகத்தைச் சேர்ந்தவர்களின் விஷயங்கள் நீண்ட காலமாக கவனிப்பாரற்றுக் கிடப்பதாகவும் உள்ளதா?

(ஊ) இந்தப் பிரிவின் சமுதாயப் பணிகளைப் பற்றி விசாரிக்க அரசு தீர்மானித்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) மொத்தப் பணியாளர்களின் எண்ணிக்கை 12.

| | |
|---|---|
| இந்துக்கள் | 5 |
| முஸ்லீம்கள் | 6 |
| சீக்கியர்கள் | எவருமில்லை |
| இந்தியக் கிறித்தவர்கள் | 1 |

(இ) இல்லை. இரண்டு உதவியாளர்களும் மூன்று எழுத்தர்களும் ஏற்கெனவே உள்ள பணியாளர் பிரிவிலிருந்து எடுக்கப்பட்டுள்ளனர்.

(ஈ) ஏற்கெனவே உள்ள பணியாளர் பிரிவின் வேலைகளுக்குக் குந்தகம் விளைவிக்காமல், அதிக பணியாளர்களை அங்கிருந்து எடுக்க முடியவில்லை.

(உ) இல்லை.

(ஊ) இல்லை.

# 101

## *மத்தியப் பொதுப் பணித்துறையில் பக்ஷி மதன் சிங் என்பவரை வேலைக்கு அமர்த்தியதற்கு எதிராகப் புகார்கள்

+211. சர்தார் சாந்த் சிங் : (அ) மத்தியப் பொதுப்பணித் துறை கட்டுமானப்பிரிவில், 'மற்ற சிறுபான்மையாருக்காக' ஒதுக்கப்பட்ட காலி இடத்தில் பக்ஷி மதன் சிங் என்பவர் நியமிக்கப்பட்டது உண்மைதானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) உள்துறைச் சட்டவிதிகளின்படி அவர் ஒரு சீக்கியர் என்பதற்கான சான்றிதழ் அளிக்கும்படி வேலைக்குத் தேர்ந்தெடுக்கும்போது அவரிடம் கேட்கப்பட்டதா? இல்லையென்றால் ஏன் கேட்கப்படவில்லை?

(இ) பணிக்குச் சேருவதற்கு முன்பு பக்ஷி மதன் சிங் மூன்று நான்கு தடவை ''பதித்'' ஆனது உண்மையா? சீக்கியப் பிரிவினருக்கு ஒதுக்கப்பட்டுள்ள இடத்தில் பணியில் சேருவதற்காகவே முடி வளர்த்து அரசை ஏமாற்றுகிறார் என்பது உண்மையா?

ஈ) உள்ளூர் சீக்கிய அமைப்புகள் கூடுதல் தலைமைப் பொறியாளருக்கும் மற்றும் நிர்வாக அலுவலருக்கும் அளித்த பல முறையீடுகளும் இதுவரை கிடைக்கப்பெற்றதற்கான தகவல் தெரிவிக்கப்படவில்லை என்பது உண்மையா?

உ) இந்த நபருக்குப் பதிலாக உண்மையான சீக்கியர் ஒருவரை நியமிக்க அரசு தீர்மானித்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம்.

(ஆ) நியமனத்தின்போது அவர் அளித்த தகவல்களின் மீது துறைக்கு எந்த சந்தேகமும் எழவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 2 ஆகஸ்டு, 1943 பக்கம் 426-427.

+ இந்தக் கேள்விக்கான பதில் அவையில் அளிக்கப்பட்டுள்ளது. கேள்வி கேட்டவருக்கு ஒதுக்கப்பட்ட 'கோட்டா' முடிந்துவிட்டது.

*(இ) இல்லை. இதைக் குறித்து அரசுக்கு எந்தத் தகவலும் இல்லை.*

*(ஈ) ஆம். அந்த முறையீடுகள் கிடைக்கப் பெற்றதைக் குறித்துத் தகவல்கள் கொடுக்கப்படுகின்றன.*

*(உ) வேலைக்குச் சேர்வதற்கு ஓராண்டுக்குள் அவர் சீக்கிய மதத்தில் சேர்ந்ததாக நிரூபிக்கப்பட்டால், கேஷாத்ரியாக இருந்து வேலைக்கு முன்பு ''பதித்'' ஆகியிருந்தால் மட்டுமே வேறு நபரை நியமிக்க முடியும்.*

# 102

## *இந்திய ஊற்று நீரின் வர்த்தக வாய்ப்புகள்

*50. திரு. கே.சி. நியோகி : 1943 மார்ச் 30 தேதி கேள்வி எண். 92ஐ கவனத்தில் கொண்டு:*

*(அ) இந்திய ஊற்றுநீரின் வர்த்தக வாய்ப்புகளைப்பற்றி சோதனை செய்யப்பட்டது பற்றியும், சோதனைக்கு அனுப்ப குப்பி களில் நிரப்பும் பணி முடிவடைந்து விட்டது குறித்தும், மேலும்*

*(ஆ) சோதனையில் திருப்திகரமாக உள்ள பல்வேறு நீரூற்று கள் உள்ள இடங்களைக் குறித்தும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் ஓர் அறிக்கை தருவாரா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) நீரூற்றுகளின் வர்த்தக வாய்ப்புகள் இன்னும் ஆய்வுக் கட்டத்திலேயே உள்ளது. சோதனைக்கு அனுப்ப, நீரூற்றுத் தண்ணீரைக் குப்பிகளில் அடைக் கும் பணி முடிந்துவிட்டது.*

*(ஆ) தனியார் நிலங்களில் இந்த நீரூற்றுகள் இருக்கின்றன. இந்த நில உரிமையாளர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வருவதால் இந்தக் கட்டத்தில் நீரூற்றுகள் இருக்கும் பகுதியை தெரி விப்பது சரியல்ல என்று அரசு கருதுகிறது.*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 5, 1943, பக்கம் 434.

# 103

## *இந்தியாவில் நீர்மின்சக்திக்கான வாய்ப்புகள் பற்றிய ஆய்வு

*274. திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி (திரு. ஆர்.ஆர். குப்தாவிற்காக) : (அ) இந்த நாட்டில் நீர் மின்சக்திக்கான வாய்ப்புகள் பற்றிய ஆய்வு நடத்த அரசு உத்தரவிட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா? அப்படியானால் இந்த ஆய்வு எப்பொழுது நடைபெற்றது? யாரால் நடத்தப்பட்டது?*

*(ஆ) இந்தியாவின் சிறந்த, தரமான நிலக்கரி இருப்பை பாதுகாக்க வேண்டுமென்ற பொதுவான அங்கீகரிக்கப்பட்ட கொள்கையின்படி, நிலக்கரி எடுக்கப்படும் பகுதிகளுக்கு வெகு தொலைவில் இருக்கும் ஐக்கிய மாகாணங்கள், பஞ்சாப், மற்றும் மத்திய இந்திய சமஸ்தானங்களில் நீர்மின்சக்தியின் வளர்ச்சிக்கு அதிக ஊக்கமளிக்க வேண்டுமென்று அரசு தீர்மானித்துள்ளதா? அப்படியென்றால் எம்முறைகளில் அரசு ஊக்கமளிக்க விரும்புகிறது?*

*(இ) ஐக்கிய மாகாணங்கள், மற்றும் பஞ்சாப் அரசுகள், மைசூர், திருவிதாங்கூர் சமஸ்தானங்கள், மற்றும் பம்பாயிலுள்ள டாட்டாக்கள் துவங்கியுள்ள நீர்மின்சக்தி திட்டங்களின் நிர்ணயிக்கப்பட்ட உற்பத்தி ஆற்றல் எவ்வளவு? இத்திட்டங்களில் உபயோகப்படுத்தப்படும் மின்சக்தி போக எஞ்சிய மின்சக்தியின் அளவு எவ்வளவு?*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 5, 1943, பக்கம் 434.*

(ஈ) தங்களது புள்ளி விவரங்களிலிருந்து புதிய நீர்மின் சக்தித் திட்டங்கள் அமையும் வாய்ப்புள்ள இடங்களின் பட்டியலையும் ஒவ்வொரு திட்டத்திலிருந்தும் மின்சக்தி எவ்வளவு கிடைக்கக் கூடும் என்பதையும் தெரிவிக்க முடியுமா?

(உ) மின்சக்தி மலிவாகக் கிடைக்கும் பகுதிகளில் உள்ள ரயில்வேப் போக்குவரத்தை மின்சார ரயில்வேயாக மாற்றும் திட்டத்தைப் பற்றி அரசு சிந்தித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) 1941 ஆம் ஆண்டு இறுதியில், இந்தியா பூராவிலும் உள்ள நீர்மின்விசை சாத்தியக்கூறுகள் பற்றி ஒரு சிறிய ஆய்வு இந்திய அரசின் மின்சார ஆணையரால் நடத்தப்பட்டது.

(ஆ) நீர்மின்விசை திட்டங்களை ஊக்குவிப்பது முக்கியமாக மாகாண அரசுகள் மற்றும் சமஸ்தானங்களின் பொறுப்பாகும். நீர் மின்சக்தித் திட்டங்களின் வளர்ச்சியில் மத்திய அரசு அக்கறை கொண்டுள்ளது. நீர்மின்சக்தித் திட்ட வளர்ச்சி உட்பட மின்சக்தி வினியோகத்தை போருக்குப் பின்பு எப்படி அமைப்பது என்பது வைசிராய் நிர்வாகசபையின் புனரமைப்புக் குழுவின் கவனத்தை ஈர்த்துள்ளது.

(இ) மற்றும் (ஈ) உறுப்பினரால் கேட்கப்பட்டுள்ள தகவல்களைப் போர்க்காலத்தில் வெளியிடுவது பொதுநலனுக்கு உகந்ததல்ல. எப்படி இருப்பினும், நீர்மின்விசை திட்டங்களின் வளர்ச்சி முக்கியமாக மாகாண அரசாங்கங்கள் மற்றும் சமஸ்தானங்களின் பொறுப்பில் உள்ளது.

(உ) ஆம், இந்தப் பிரச்சினை அடிக்கடி பரிசீலிக்கப்பட்டு வருகிறது, ஒரு குறிப்பிட்ட பகுதியின் ரயில்வேப் போக்குவரத்தை மின்சாரமயமாக்குவது மலிவான மின்சக்தி கிடைப்பதை மட்டும் பொறுத்ததன்று. இது இதர பல்வேறு சாத்தியப்பாடுகளையும் பொறுத்தது.

# 104

## *சம்பளப் பட்டுவாடா சட்டத்தின் செயல்பாட்டு அறிக்கையில் சில தகவல்களைச் சேர்ப்பது

*289. திரு.முகமது அஸார் அலி: (அ) ரயில்வேத் துறையில் சம்பளப் பட்டுவாடா சட்டச் செயல்பாட்டைப் பற்றிய அறிக்கையில், பெற்றுக்கொண்ட விண்ணப்பங்களைப் பற்றியும், அவை எப்படி தீர்வு செய்யப்பட்டன என்பதைப் பற்றியும் தகவல்களை சம்பளப்பட்டுவாடா சட்டத்தின்கீழ் நியமிக்கப்பட்ட அதிகாரிகள் தெரியப்படுத்தவில்லை என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?*

*(ஆ) கேள்வி (அ) வுக்கு ஆம் என்பது பதிலாக இருக்குமானால், விண்ணப்பங்களைப் பற்றிய தகவல்களை சேர்த்துக் கொள்ள நடவடிக்கை எடுக்கப்படுமா? அடுத்த அறிக்கைகளில் அவை பற்றிய குறிப்பு தரப்படுமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) தற்பொழுது மரியாதைக்குரிய உறுப்பினர் கூறுவது உண்மைதான்.*

*(ஆ) அவருடைய ஆலோசனை பரிசீலிக்கப்படும்.*

# 105

## +பலுசிஸ்தானில் வெட்டி எடுக்கப்பட்ட கந்தகம் மற்றும் கந்தக அமிலம் தயாரிக்கத் தேவைப்படும் இயந்திர சாதனங்கள் அளிக்கப்பட்டுள்ள நிறுவனங்கள்

*390. திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி (திரு.ஆர்.குர்.குப்தாவின் சார்பாக): இந்திய மண்ணியல் ஆராய்ச்சிக் கழகம், பலுசிஸ்தானில் வெட்டியெடுத்த கந்தகத்தின் அளவு எவ்வளவு என்பதையும், சுரங்*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 12, 1943, பக்கம் 654.*

+ *மேற்படி அதே தொகுதி, பக். 654-55.*

கத்திலிருந்து இவ்விதம் கந்தகமெடுப்பதற்காகச் செலவு செய்யப் பட்ட தொகை எவ்வளவு என்பதையும் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) பலுசிஸ்தானில், தற்பொழுதுள்ள சுரங்கத்தில் வெட்டி எடுக்கப்படவேண்டிய கந்தகஇருப்பு குறைவாக உள்ளது என்பது உண்மையா? இது எப்படியிருப்பினும் தற்பொழுது வெட்டி எடுக்கப் படாத கந்தகத்தின் அளவு எவ்வளவு?

(இ) அடுத்த கரும்பு பிழியும் பருவத்தில், இந்திய சர்க்கரை ஆலைகளுக்குக் கந்தகம் வினியோகம் செய்யமுடியாது என்பதை வினியோகத்துறை அறிவித்துள்ளது உண்மையா? அப்படியென் றால் சர்க்கரை ஆலைகளுக்கு இந்த அறிவிப்பைக் கொடுக்கக் காரணம் என்ன? இந்த மாதிரி அறிவிப்பு ஒன்றும் கொடுக்கவில்லை யென்றால் கடந்த இரண்டு கரும்பு பிழியும் பருவங்களில், கந்தக வினியோகம் எப்படி நடைபெற்றது? அடுத்த பருவத்துக்கு வினி யோகம் எப்படி நடைபெறும்?

(ஈ) செம்பு உருக்கும் உலைகளில் கந்தக டைஆக்ஸைடு வாயு ($SO_2$) என்ற துணைப்பொருள் அதிக அளவில் வீணாகிறது என்பது உண்மையா? அப்படியென்றால், இந்த மாதிரி வீணடிக்கப் படும் வாயு, கந்தக அமிலமாக எளியமுறையில் மாற்றப்படுமா? இந்த முறையைப்பற்றி அரசு ஆய்வு செய்துள்ளதா அல்லது இந்த மாதிரியான கந்ககஅமில வினியோகத்திற்கான ஆதாரத்தை உரு வாக்க அரசு முன்வந்துள்ளதா? அப்படியென்றால் அதன் முடிவு என்ன?

(உ) போர் ஆரம்பித்த நாளிலிருந்து வினியோகத்துறை கந்தக அமிலம் தயாரிக்க இயந்திர சாதனங்களை இறக்குமதி செய்து வந்துள்ளது. அப்படியென்றால் அவைகளின் எண்ணிக்கை எத்தனை? எப்படி அவை வினியோகிக்கப்பட்டன? இந்த மாதிரி யான இயந்திர சாதனங்கள், எந்தத் தொழில் நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்டன? இந்த நிறுவனங்களுக்கு அளிக்கப்படுவதற் கான விசேடக் காரணங்களையும் மற்றும் ஒவ்வொரு இயந்திர சாதனமும் வினியோகம் செய்யப்பட்டதின் விவரப்பட்டியலை யும், அவையின் முன் அரசு வைக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) சுரங்கத்தில் வெட்டியெடுக்கப்பட்ட கந்தகத்தின் அளவை வெளியிடுவது பொது மக்கள் நலனுக்கு உகந்ததல்ல. பலுசிஸ்தானில் கந்தகம் எடுக்கும் பணிக்கு செலவிடப்பட்ட மொத்தத் தொகை ரூ.11,85,000.*

*(ஆ) இதுவரை வெட்டி எடுக்கப்படாமல் இருக்கும் அளவை வெளியிடுவது பொதுமக்கள் நலனுக்கு உகந்ததல்ல.*

*(இ) இல்லை. சர்க்கரைத் தொழிலுக்கு, கடந்த பிழியும் பருவத்துக்குத் தேவையான கந்தகம் அமெரிக்க இறக்குமதியிலிருந்தும் ஒதுக்கிவைக்கப்பட்டிருந்த கையிருப்பிலிருந்தும் அளிக்கப்பட்டுள்ளது. பலுசிஸ்தானில் எடுக்கப்படும் கந்தகத் தாதுப்பொருள்கள் சர்க்கரை ஆலைகளுக்கு வினியோகிக்கப்படுகின்றன. தனிப்பட்ட முறையில் சுத்திகரிக்கப்பட்டோ, அல்லது அரசு அனுமதியுடன் அமைந்துள்ள மத்திய சுத்திகரிக்கும் நிலையத்தில் சுத்திகரிக்கப்பட்டோ, கரும்பு பிழிந்தெடுக்கும் பருவத்தில், அவை சர்க்கரை ஆலைகளில் பயன்படுத்தப்படும். திட்டமிடப்பட்ட தேவைகளில் துண்டுவிழுந்தால் வினியோகத்துறை ஏற்பாடு செய்கின்ற அமெரிக்க இறக்குமதியின் மூலம் அது சரி செய்யப்படும்.*

*(ஈ) இந்தியாவில் செம்பு உருக்கும் ஆலைகளில் கந்தக டை ஆக்ஸைட் ஒரு துணைப்பொருளாக உற்பத்தி செய்யப்படுகிறது. மிகவும் வீர்யம் குறைந்த நிலையில் அது மற்ற வாயுக்களுடன் காணப்படுகிறது. அதைச் சிறந்த முறையில் கந்தக அமிலமாக மாற்றுவது கடினமான விஷயம். போரின் துவக்க கட்டத்தில் இந்த முறையில் கந்தகத்தையும் கந்தக அமிலத்தையும் பெற நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இதன் பொருட்டு சிக்கலான மற்றும் விலையுயர்ந்த இயந்திர சாதனங்கள் இறக்குமதி செய்ய வேண்டியிருந்ததுடன் தொழில்நுட்ப வல்லுனர்களையும் வெளிநாட்டில் இருந்து அழைக்க வேண்டியிருந்ததால் இந்த முறையைத் தொடர முடியவில்லை. மேலும் இதனால் வெற்றிகரமான பலனும் கிட்டவில்லை.*

*(உ) இல்லை. அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்ய உத்தேசித்துள்ள இயந்திரங்களைப் பற்றிய முழு விவரமும் கேள்வி எண் 47க்கு 1943 ஆகஸ்டு 4ல் அளித்த பதிலில், மாண்புமிகு வினியோகத்துறை உறுப்பினரால் தெரிவிக்கப்பட்டுள்ளது.*

# 106

## *உதய்ப்பூர் சமஸ்தானத்தில் ஜாவாரிலுள்ள ஈயச் சுரங்கம்

291. திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி: (திரு.ஆர்.ஆர்.குப்தாவுக்காக): (அ) இந்திய மண்ணியல் ஆராய்ச்சிக் கழகத்தின் பயன்பாட்டுப் பிரிவின் கீழ் உதய்ப்பூர் சமஸ்தானத்தின் ஜாவாரில் ஓர் ஈயச் சுரங்கம் வேலைசெய்து வருகிறதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? இந்தச் சுரங்கத்திற்காக இதுவரை செலவிடப்பட்ட பொருள்களில் ஈயம் மற்றும் துத்த நாகத்தின் சராசரி விகிதாசார அளவு எவ்வளவு?

ஆ. இந்தியாவில் வேறு எந்தப் பகுதியிலாவது ஈயப் படுகைகள் இருப்பது பற்றி அரசுக்கு தகவல் ஏதாவது உள்ளதா? இல்லையென்றால் ஜாவாரில் மட்டும் கிடைக்கும் ஈயம், இந்தியாவின் தேவையை எந்த அளவுக்கு பூர்த்தி செய்கிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். 1943 ஜூன் இறுதிவரை 61/2 லட்சம் ரூபாய் செலவழிக்கப்பட்டுள்ளது. வெட்டியெடுக்கப்படும் தாதுப்பொருளில் 2 சதவீதம் ஈயமும், 8 சதவீதம் துத்தநாகமும் கிடைக்கின்றன.

(ஆ) ஆம். இதுவரை கிடைத்த தகவல்களின்படி ஜெய்ப்பூர் சமஸ்தானத்திலுள்ள சவுத்கா-பார்வாராவில் ஈயம் கிடைக்கக்கூடும் என்பது நம்பப்படுகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஆகஸ்டு 12, 1943, பக்கம் 655.

# 107

## *வங்காளத்திலுள்ள ஒரு மாவட்டத்தில் டங்க்ஸ்டன் படுகைகள் கண்டுபிடிப்பு

292. திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி: (திரு.ஆர்.ஆர்.குப்தாவுக்காக): வங்காளத்திலுள்ள ஒரு மாவட்டத்தில் இந்திய மண்ணியல் ஆய்வுக்கழகம் டங்க்ஸ்டன் கனிமப்படுகை ஒன்றை கண்டுபிடித்துள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? இந்தப் படுகையிலிருந்து இதுவரை எடுக்கப்பட்ட டங்ஸ்டனின் அளவு எவ்வளவு? அது எப்படி வினியோகிக்கப்பட்டது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். ஆனால் இந்த யுத்தகாலத்தில் கிடைக்கப்பெற்ற டங்ஸ்டனின் அளவை வெளியிடுவது பொதுமக்களின் நலனுக்கு உகந்ததல்ல. இந்தத் தாதுப்பொருள் வழங்கீட்டுத் துறை (வெடிமருந்து உற்பத்தி தலைமை இயக்ககம்) மூலம் வினியோகிப்படுகிறது.

# 108

## தொழிலாளர் நலத்துறை ஆலோசகர்கள் தொழிலாளர் இலாகா ஆலோசகர்கள் ஆகியோரின் பணிகள்

297. திரு.அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா: தொழிலாளர் நலத்துறையில் நியமிக்கப்பட்டுள்ள தொழிலாளர் நல ஆலோசகர்கள் மற்றும் தொழிலாளர் இலாகா ஆலோசகர்கள் ஆகியோர்களின் பணிகள் என்ன?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி 111, 12 ஆகஸ்டு 1943, பக்கம் 657.

+ மேற்படி தொகுதி, பக்கங்கள் 657-58.

(ஆ) இதுவரை எத்தனை ஆலோசர்கள் நியமிக்கப்பட்டுள் ளனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அரசின் வழி காட்டுதலின்படி இந்தியத் தொழில்துறை சார்ந்த தொழிலாளர் களின் நலன்களைக் குறித்த எல்லா விஷயங்களையும் தொழிலாளர் நல ஆலோசகர்கள், துணை ஆலோசகர்கள், உதவியாளர்கள் அரசின் கவனத்திற்குக் கொண்டு வருவதுடன் ஆலோசனையும் வழங்குகிறார்கள்.

தொழிலாளர் சம்பந்தமான சட்டங்கள், நிர்வாக விஷயங்கள் முக்கியமாக தொழிலாளர் சம்பந்தமான பிரச்சினைகள் அதாவது தீர்க்கப்பட்டுவரும் பிரச்சினைகள் மற்றும் எதிர்பார்க்கபடும் பிரச் சினைகள் இங்கிலாந்தில் எப்படித் தீர்க்கப்படுகின்றன என்பது குறித்து தொழிலாளர் இலாகா ஆலோசகர்கள் ஆலோசனை வழங்குகிறார்கள்.

(ஆ) ஒரு தொழிலாளர் நல ஆலோசகர், ஒரு துணை தொழி லாளர் நல ஆலோசகர், 7 உதவித் தொழிலாளர் நல ஆலோசகர் கள் உள்ளனர்.

டிசம்பர் 1942 லிருந்து 1943 ஜூன் வரை ஒரு தொழிலாளர் இலாகா ஆலோசகர் பணியில் இருந்தார்.

தற்பொழுது தொழிலாளர் இலாகா ஆலோசகர் இல்லை.

திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா: அவர்கள் அக விலைப்படி பற்றி ஆலோசனை கூறுவார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை ஐயா.

திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி: மாண்புமிகு உறுப்பினரின் தொழிலாளர் இலாகா ஆலோசகர் தொழிலாளர் நல ஆலோ சகரிலிருந்து வேறுபட்டு உழைப்பாளிகளின் நலனைப் பிரதி பலிக்கிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லவே இல்லை, ஐயா.

# 109

## *தொழிற் தகராறுகளுக்கான உடனடி காரணங்களைக் களைவதற்கான நடவடிக்கைகள்

298. திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்தியாயா: ராணுவத் தேவைகளைத் தயாரிக்கும் அரசுக்குச் சொந்தமான தொழிற்சாலைகளிலும் மற்றும் போருக்குத் தேவையான பொருள்களை முழுவதுமோ அல்லது பகுதியோ தயாரிக்கும் தனியார் தொழிற்சாலைகளிலும் வேலைகள் தங்குதடையின்றி நடைபெற தொழில் தகராறுகளுக்கான உடனடிக் காரணங்களைக் களைவதற்கு என்னென்ன நடவடிக்கைககள் எடுக்கப்பட்டுள்ளன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவிக்க முடியுமா?

(ஆ) தொழிலாளர்கள் கட்டாயமாக வேலை நிறுத்தம் செய்யும் சூழ்நிலை உருவாகுமுன் எல்லாத் தகராறுகளையும் நடுவர் தீர்ப்புக்குவிடும் ஒரு பொதுவான கொள்கையை அரசு கடைப்பிடிக்கத் தீர்மானித்துள்ளதா?

(இ) எல்லா மாகாண அரசுகளையும் இதே வழியைப் பின்பற்ற அரசு யோசனை கூற உத்தேசித்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) அரசு தொழிற்சாலைகளிலும், தனியார் தொழிற்சாலைகளிலும் ஒரு நியாயமான சூழலுக்கு உத்தரவாதம் செய்யவே அரசு முயன்று வருகிறது. தகராறுகள் தோன்றும்போது சமரசத்துக்கும், நடுவரின் தீர்ப்புக்கும் வழிவகைகள் உள்ளன.

(ஆ) மற்றும் (இ) இல்லை. சமரச முயற்சி தோல்வி அடையும்போது நடுவர் தீர்ப்புக்கு விடுவது அரசின் பொதுவான கொள்கையாக இருக்கிறது. தகராறுகளைத் தீர்ப்பதற்கான தற்போதைய நடைமுறை மாகாண அரசுகளுடன் கலந்தாலோசித்து உருவாக்கப்பட்டுள்ளது. ஒரு பொதுவான சீரான நடைமுறை உருவாகியுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற தொகுதி, III, ஆகஸ்டு 12, 1943, பக்கம் 657-58.

# 110

## *புதுடில்லியிலுள்ள அசோகா சாலையில் மசூதி இடிப்பு

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): பொதுநல முக்கியத்துவம் வாய்ந்த ஒரு விஷயத்தைப் பற்றி விவாதிக்க ஒத்தி வைப்புத் தீர்மானம் ஒன்றை மௌல்வி அப்துல் கனி என் கவனத் திற்குக் கொண்டுவந்துள்ளார். அதாவது அசோகா சாலை எண் 9 குடியிருப்புப் பகுதியிலுள்ள ஒரு மசூதி, அரசு அலுவலர்கள் மற்றும் பொதுப் பணித்துறை ஆட்களால் இடிக்கப்பட்டுள்ளதாக அவர் கூறுகிறார். இது எப்பொழுது நடந்தது?

மௌல்வி முகமது அப்துல் கனி: (திர்ஹுத் பகுதி முக மதியர்): பத்து நாட்களுக்கு முன்பு இது நடந்தது. நேற்று இரவுதான் எனக்குத் தகவல் கிடைத்தது.

திரு. தலைவர்: (மாண்புமிகு சர். திரு. அப்துல் ரகீம்): இதில் அக்கறை கொண்டிருப்பது மரியாதைக்குரிய உறுப்பினர் மட்டு மல்ல. பொதுமக்களைப் பாதிக்கும் அவசர விஷயம் என்றால் உடனடியாக ஒவ்வொருவரும் அதில் கவனம் செலுத்த வேண்டும். ஏன் இதற்கு முன்பே இது கவனத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட வில்லை?

சர் முகமது யாமின் கான்: (ஆக்ரா பிரிவு முகமதியர் ஊரகப் பகுதி): ஐயா, நேற்றுவரை அவையின் எந்த உறுப்பினரின் கவனத் துக்கும் இது வரவில்லை. ஏனென்றால், இது அரசு குடியிருப்புகள் ஒன்றில் நடைபெற்றுள்ளது.

திரு. தலைவர்: ( மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அப்படி யென்றால் இதுபற்றி எப்படி மதிப்பிற்குரிய உறுப்பினர் தெரிந்து கொண்டார்?

சர் முகமது யாமின் கான்: சில வழிப்போக்கர்கள் உறுப் பினர்கள் சிலரிடம் விவரத்தைத் தெரிவித்துப் புகார் செய்தனர்.

---

★ மத்திய சட்டமன்ற தொகுதி III, ஆகஸ்டு 12 , 1943, பக்கம் 897.

**திரு. தலைவர்:** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): இதை பற்றி அரசு தரப்பில் ஏதாவது தெரிவிக்க வேண்டியுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): இந்தத் தீர்மானத்தைப் பற்றி எனக்கு எந்த முன்னறிவிப்பும் கிடையாது. எனது மதிப்பிற்குரிய நண்பர் இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தைப் பற்றி கல்வி, சுகாதாரம் மற்றும் நிலங்கள் துறைக்கு எழுதிய அறிவிப்புக்கடிதம் இப்பொழுதுதான் எனக்குக் கொடுக்கப்பட்டது.

**திரு. தலைவர்:** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): நான் விவரத்தைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய துறையில் விசாரணை நடத்தியதில் இந்த மாதிரி ஒரு நிகழ்ச்சி நடந்ததாக அவர்களுக்குத் தெரியாது என்று எனக்குக் கூறப்பட்டது. நான் ஏற்கனவே கூறியபடி எனக்கு இந்த விஷயத்தைப் பற்றி விசாரிக்கப் போதுமான அவகாசமில்லாமல் போய்விட்டது, இந்த மாதிரி இடிக்கப்பட்ட செயல் நடந்திருக்கும் என்று கருத எனக்கு எந்தக் காரணமும் தெரியவில்லை. இருப்பினும் எனது மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒரு குறுகிய கால முன்அறிவிப்பு கேள்வியை அளித்தால் நான் விசாரணை செய்து அவர் விரும்பும் தகவல்களை அளிக்க முடியும்.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அதுவே சரியான வழி என்று நினைக்கிறேன்.

**திரு. எச்.எ.சத்தார் எச். எஸ்ஸாக் சேட்:** (மேற்குக்கரை மற்றும் நீலகிரி: முகமதியர்):

அப்படியானால் இந்தத் தீர்மானம் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): ஒரு குறுகிய அவகாசக் கேள்வியை எழுப்பினால் அதை நான் கவனிக்க முடியும்.

**சர் முகமது யாமின் கான்:** எப்படியாகிலும் குறுகிய அவகாசக் கேள்வியை இன்று எழுப்ப முடியாது, செவ்வாய்க்கிழமை வரை அவை அமர்வில் இருந்தால் அப்பொழுதுதான் கேட்க முடியும்.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அதுவே நல்லது.

# 111

## *புது டில்லியில் அசோகா சாலையில் உள்ள மசூதி இடிப்பு

மௌல்வி முகமது அப்துல் கனி: (அ) அசோகா சாலையிலுள்ள 9 ஆம் எண் குடியிருப்பில் ஒரு மசூதி இருப்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) பொதுப்பணித்துறை அதிகாரிகளின் உத்தரவின் பேரில் அத்துறை ஆட்கள் அந்த மசூதியின் ஒரு பகுதியை இடித்துத் தள்ளினார்களா?

(இ) முஸ்லீம்களின் ஆர்ப்பாட்டத்தினால்தான் இடிக்கப்படும் பணி நிறுத்தப்பட்டதா?

(ஈ) இந்த மாதிரிச் செயல்களைத் தடுக்க அரசு என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது? இந்தச் செயலில் ஈடுபட்டவர்களின் மீது என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன? அதன் விளைவுகள் என்ன?

(உ) இந்தக் கட்டடத்திற்கு ஏற்படுத்திய சேதத்தைச் சீர்செய்ய அரசு என்ன செய்யப்போகிறது? என்பதைப் பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம் - ஒரு பழைய உபயோகத்திலில்லாத இடிந்துவிழும் நிலையிலுள்ள மசூதி உள்ளது.

(ஆ) இல்லை. மசூதியின் வடபகுதியின் வளைவுகளில் ஒன்று, அது சாய்ந்து கொண்டிருந்த ஒரு மரத்தை வெட்டியவுடன், எதிர்பாராத விதமாக இடிந்து விழுந்தது. அந்த மரம் வெளிச்சம் வருவதைத் தடுக்கிறது என்று கூறி, அந்த வீட்டின் தற்போதைய

★ மத்திய சட்டமன்ற தொகுதி III, ஆகஸ்டு 25, 1943, பக்கம் 960.

குடித்தனக்காரர் மேஜர் அன்வர் மரத்தை அப்புறப்படுத்தக் கேட்டுக் கொண்டார்.

(இ) இல்லை.

(ஈ) மத்தியப் பொதுத்துறை பணியாளர்கள் இந்தச் செயலில் ஈடுபடாததால் இந்தக் கேள்வி எழவில்லை.

(உ) அது இடிந்துவிழும் நிலையிலுள்ள ஒரு பழைய கட்டடம். எனவே அதற்கு எந்தவித சேதமும் செய்யப்படவில்லை.

**சர் முகமது யாமின் கான்:** அந்த மரத்தை வெட்டும்போது சாய்ந்து கொண்டிருந்த வளைவைப் பாதுகாக்க நடவடிக்கைகள் ஏன் எடுக்கப்படவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த மாதிரி யான ஒரு விபத்தைத் தடுக்க முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்கப்படவில்லை என்று கருதக் காரணம் ஏதும் இல்லை.

**சர் முகமது யாமின் கான்:** பொதுப்பணித் துறையின் திறமை யான பொறியாளர்களால் கூட ஒரு வளைவைக் காப்பாற்ற முடிய வில்லையா? இவ்வளவு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்தும், அவர்களால் ஒரு வளைவைப் பாதுகாக்க முடியவில்லை என்பதை நான் ஏற்றுக் கொள்ள வேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** போதிய கவனமும் எச்சரிக்கையும் இருந்தாலும் கூட இந்த மாதிரி விபத்து நடக்கக்கூடும்.

**சர் முகமது யாமின் கான்:** அரசின் குடியிருப்புகளில் இந்த மசூதி உள்ளது. இந்தக் குடியிருப்புகள் கட்டப்படுவதற்கு முன்பு அது பொதுமக்களுக்கு திறந்துவிடப்பட்டிருந்தது. அது நல்ல முறை யில் செப்பனிடப்பட்டு ஒழுங்காகப் பராமரிக்கப்பட வேண்டிய பொறுப்பு அரசுக்கு இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குடியிருப்புகள் கட்டுவதற்கு முன்போ அல்லது பின்போ மசூதி உபயோகத்திலிருந் ததாகத் கருதுவதற்கானக் காரணம் ஒன்றும் இருப்பதாகத் தெரிய வில்லை.

மௌலானா ஜாபர் அலி கான்: மசூதியின் இடிக்கப்பட்ட பகுதிகள் செப்பனிடப்படும் என்று அரசு உறுதி அளிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது மசூதியாக உபயோகப்படுத்தப்படவில்லை. அது ஒரு நினைவுச் சின்னமும் அல்ல. எனவே அதைச் செப்பனிட வேண்டிய அவசியமில்லை.

சர் முகமது யாமின் கான்: இந்த மசூதியை அடைவதற்கு பொதுமக்களுக்கு ஒரு பாதை அமைத்துக் கொடுக்கப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் ஏற்கனவே கூறியபடி, அது ஒரு மசூதியாக உபயோகத்தில் இல்லை.

சர் முகமது யாமின் கான்: அது ஏன் ஒரு மசூதியாகப் பயன் படுத்தப்படவில்லை என்பதன் காரணத்தைத் தெரிந்து கொள்ளலாமா?

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மரியாதைக் குரிய உறுப்பினர் வழக்காடுகிறார்.

சர் முகமது யாமின் கான்: அதை ஒரு செயல்படும் மசூதி யாக்க, பொதுமக்கள் எளிதில் அதை அடைவதற்கு அரசு வழி செய்யுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது ஒரு மசூதி யாக ஒருபொழுதும் உபயோகப்படுத்தப்படவில்லை.

மௌலானா ஜாபர் அலிகான்: நான் என் செலவில் மசூதியை செப்பனிடுவதற்கு அரசுக்கு ஏதாவது மாற்று கருத்து உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் விண்ணப்பம் அனுப்பினால் தொழிலாளர் நலத்துறை அதைக் கவனிக்கும்.

சேத் யூசப் அப்துல்லா ஹரூன்: அந்த மரத்தை வெட்டு வதற்கு குடியிருப்பவர் மறுப்புத் தெரிவித்தது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நிலைமை

முற்றிலும் மாறானது. அந்தக் குடியிருப்பில் வசிப்பவரின் விருப்பத்திற்கிணங்கவே மரம் வெட்டப்பட்டது.

சேத் யூசப் அப்துல்லா ஹரூன்: அந்தக் குடித்தனக்காரரிடம் மாண்புமிகு உறுப்பினர் விசாரிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் அளித்த தகவல் சரியில்லை என்று கருத எந்தக் காரணமும் இல்லை.

நவாப்ஜாடா முகமத் லியாகத் அலி கான்: இந்த அவையின் மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் தரும் தகவல் சரியல்ல என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கருத காரணம் என்ன?

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அது ஒரு வெறும் வாக்குவாதந்தான்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னிடம் அதிகாரபூர்வமான தகவல் உள்ளது. மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்குத் தகவல் தந்த வட்டாரம் எவ்வளவு தூரம் நம்பத்தகுந்தது என்பது எனக்குத் தெரியாது.

# 112

## *இந்தியத் தொழிற்சங்கங்கள் (திருத்த மசோதா)

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): இந்தியத் தொழிற்சங்கச் சட்டம் 1926 ஐ மேலும் திருத்த, மசோதா ஒன்றைக் கொண்டுவர அனுமதியளிக்கக் கோருகிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தீர்மானம்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 8, 1943, பக்கம் 30.

என்னவென்றால் ''இந்திய தொழிற்சங்கச் சட்டம், 1926ஐ மேலும் திருத்தம் செய்ய மசோதா கொண்டு வர அனுமதி வேண்டப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, மசோதாவை முன்மொழிகிறேன்.

# 113

## +இந்தியப் போர்க்காயங்கள் உதவித் திட்டத்தின்படி ஆண்களுக்கும் பெண்களுக்கும் அளிக்கப்படும் உதவித் தொகையை சமச்சீராக்குதல்

47. திரு.என்.எம். ஜோஷி: (அ) போர்க்காயங்கள் உதவித் திட்டங்களின்படி, இங்கிலாந்தில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் அளிக்கப்பட்டு வந்துள்ள உதவித்தொகையில் இருந்த வேறுபாடு நீக்கப்பட்டு, இருபாலாரும் சமமான தொகை பெறுவது, மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(ஆ) இதற்கு அளிக்கப்படும் பதில் ஆம் என்றால், இந்தியாவிலும் இத்திட்டத்தின்படி ஆண்களும் பெண்களும் சமமான உதவித் தொகை பெற, இதேபோன்ற ஒரு மாற்றத்தைக் கொண்டு வர, இந்திய அரசு தீர்மானித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கான அறிவிப்பு வந்தவுடன் நான் இங்கிலாந்திலுள்ள நிலைமையைத் தெரிந்து கொண்டேன். ஆண்களும், பெண்களும் பெற்று வந்த உதவித் தொகைகளில் இருந்த வேறுபாடு நீக்கப்பட்டு விட்டது.

(ஆ) இந்த விஷயம் கவனத்தில் எடுத்துக்கொள்ளப்படுகிறது.

---

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 9, 1943, பக்கம் 68.

# 114

## *தொழிலாளர்களை நியாயமாக நடத்துவது சம்பந்தமான நிபந்தனையை அரசு ஒப்பந்தங்களில் சேர்த்தல்

48. திரு.என்.எம். ஜோஷி: தொழிலாளர்களை நியாயமாக நடத்துவது சம்பந்தமான நிபந்தனை அரசு ஒப்பந்தங்களில் சேர்க்கப் பட வேண்டும் என்று முத்தரப்பு தொழிலாளர் மாநாடு ஒன்றில் விவாதிக்கப்பட்டது உண்மையா என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்கமுடியுமா? அப்படியென் றால் இந்த விஷயத்தைப்பற்றி அரசு என்ன நடவடிக்கை எடுக்கத் தீர்மானித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், அது தொழிலாளர் நிலைக்குழுவின் மூன்றாவது கூட்டத்தில் நடை பெற்றது. குறிப்பிட்டுச் சொன்னால், அரசு ஒப்பந்தங்களில் நியாய மான ஊதியம் அளிக்கப்பட வேண்டுமென்ற நிபந்தனையைச் சேர்க்கும் அவசியம் பற்றி விவாதிக்கப்பட்டது. தொழிலாளர்கள் ''நியாயமாக நடத்தப்பட வேண்டுமென்பதைப் பற்றி'' அல்ல. மத்தியப் பொதுப்பணித்துறையைப் பொறுத்தவரையில் இந்தக் கொள்கையை அரசு ஒப்புக்கொண்டுள்ளது. இந்த விதிமுறையை அமலாக்க எடுக்க வேண்டிய ஆரம்ப நடவடிக்கைகள் தீவிர கவ னத்தில் இருந்து வருகின்றன. மத்தியப் பொதுப்பணித்துறைத் தொழிலாளர்களின் ஒப்பந்தங்களில் இத்திட்டம் நிறைவேற்றப் பட்ட பிறகு மற்ற அரசுத் துறைகளிலும் இந்த நிபந்தனையை அறிமுகம் செய்ய நடவடிக்கை எடுக்கப்படும்.

திரு. ஹுசைன்பாய் ஏ. லால்ஜி: 'தீவிர கவனத்தில்' இருப்பது என்பதன் பொருள் என்ன? இதற்கு ஏதாவது காலக்கெடு உள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். ஒரு விஷயம் கவனத்தில் இருப்பதற்கும், தீவிர கவனத்தில் இருப்பதற் கும் உள்ள வேறுபாடு எனக்கு நன்கு புரிகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 9, 1943, பக்கம் 68.

திரு. ஹுசைன்பாய் ஏ. லால்ஜி: காலக்கெடுவைப் பொறுத்த வரையில் ஏதாவது வேறுபாடு உள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒரு விஷயம் பற்றி அனேகமாக முடிவெடுக்கப்பட்டுவிட்டது என்பதுதான் அதன் பொருள்.

## 115

## *புதுடில்லியில் உள்ள குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டவர்கள் சம்பந்தமான சில விதிமுறைகள்

49. மௌல்வி முகமது அப்துல் கனி: (அ) புதுடில்லியில் பல ஊழியர்களுக்கு குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டன. அவர்கள் அந்த குடியிருப்புகளில் தங்குவதற்கான தகுதியில் மாற்றம் ஏற்படும்போது அவர்கள் தகுதிக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள குடியிருப்புகளில் போய் குடி புகவேண்டும். குடியிருப்புகள் ஒதுக்குவதற்கான புதிய விதி முறைகள் அறிமுகமாவதற்கு முன்பு தங்கும் தகுதியில் மாற்றம் ஏற்பட்டாலும் அவர்கள் தகுதிக்கு ஏற்ற குடியிருப்புகள் காலி இல்லாத போது தங்களுடைய பழைய குடியிருப்புகளிலேயே தொடர்ந்து குடியிருக்கும் சலுகை அளிக்கப்பட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பரா?

ஆ. கேள்வி 'அ' வுக்குப் பதில் ஆம் என்றால், விதி 7(2) (பி) யின் கீழ் கொண்டுவந்த புதிய விதியின் மூலம் என்றைக்கு அவர் அந்த குடியிருப்பில் வசிக்கும் தகுதியில் மாற்றம் பெறுகிறாரோ அன்றிலிருந்து அவரது நியமனத் தேதி கணக்கிலெடுத்துக் கொள்ளப் படுவதால் அவர் கீழ்நிலைக்கு தள்ளப்படுவதுடன் அவருக்கு இது ஒரு தண்டனை போலாகிவிடுகிறது. இத்தண்டனைக்குக் காரணங் கள் என்ன?

இ. மேலே குறிப்பிட்டுள்ள புதிய விதியினால் கீழ்நிலைக் குடியிருப்புகளில் வசிப்பவர்கள் அதிககாலம் அங்கேயே தங்கு வதால் இந்த வகுப்பு குடியிருப்பவர்களுக்குத் தகுதியானவர்கள் விதி 4 ன் படி அதிக காலம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. இந்த விதி நடைமுறையில் இல்லையென்றால் நீண்டகாலம் காத்திருக்க வேண்டியது அவசியம் இருக்காது.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV , நவம்பர் 9, 1943, பக்கம் 68,69.

(ஈ) சம்பந்தப்பட்ட எல்லோருடைய மனவருத்தங்களை யும் போக்க விதி 7 (பி) II III ஐ மறுபரிசீலனை செய்து நீக்க மாண்பு மிகு உறுப்பினர் முன்வருவாரா?

(உ) புதிய நடைமுறை மூலம் அதாவது குடியிருப்புகளுக்கு பணிமூப்பை நிர்ணயிப்பது பணியில் உள்ள மொத்த காலமாகக் கணக்கிடப்படுவதால் புதிதாக வேலைக்குச் சேர்பவர்கள் எந்தக் குடியிருப்புகளுக்கு அவர்கள் தகுதி பெற்றிருந்தாலும் குடியிருப்பு கிடைக்காமல் அவதிப்படுகின்றனர் என்பதை மாண்புமிகு உறுப் பினர் உணர்கிறாரா?

(ஊ) இவர்களுடைய மனக்குறையைப் போக்க, குடியிருப்பு கள் ஒதுக்கப்படாத புதிய ஊழியர்களின் பணிமூப்பை அவர்கள் வேலைக்குச் சேர்ந்த தேதியிலிருந்தும், மற்றவர்களைப் பொறுத்த மட்டில் அவர்கள் என்றைக்கு புதியவகுப்பு குடியிருப்புக்குத் தகுதி பெறுகிறார்களோ அந்தந்த தேதியிலிருந்தும் கணக்கிட இந்த விதி யைத் திருத்துவதற்கான வாய்ப்பை அவர் சிந்திப்பாரா?

(எ) இந்தத் திருத்தங்களை ஏற்றுக்கொண்டால், அவை உடனடியாக செயல்படுத்தப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) அவர்கள் தண்டிக்கப்படுவுதாகக் கருதப்படுவது குடி யிருப்பு களின் பற்றாக்குறையினால்தானே தவிர புதிய விதி 7(2) (பி) ஆல் அல்ல.

(இ) ஆம். தற்போதுள்ள நிலையில் இது தவிர்க்க முடியாதது.

(ஈ) இல்லை. அரசின் கையில் அதிகமான குடியிருப்புகள் கிடைக்கும் வரை இக் குறைகளைத் தீர்ப்பது எந்த விதத்திலும் சாத்தியமில்லை. போர் முடியும் வரை நிலைமையில் மாற்றம் இருக்கப் போவதில்லை.

(உ) இதுதான் காரணம் என்று நான் நினைக்கவில்லை, தேவைக்குக் குறைவாக குடியிருப்புகள் இருந்தால், எந்தச் சட்டத்தை இயற்றினாலும் சிலருக்கு மன வருத்தம் இருக்கத்தான் செய்யும்.

(ஊ) விதிகளில் இதற்கு வகை செய்யப்பட்டுள்ளது.

(எ) கேள்வி எழவில்லை.

# 116

## *வங்காளத்தில் தொழிலாளர் நலத்துறைப் பணியாளர்களுக்குச் சலுகை விலையில் உணவு தானியங்கள் வினியோகம்

*5. திரு. கே.சி. நியோகி: (அ) வங்காளத்தில் தொழிலாளர் நலத்துறையில் எந்தெந்தப் பிரிவினர் சலுகை விலை மற்றும் குறைந்த விலையில், உணவு தானியங்கள் பெறுகிறார்கள் என்பதை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?*

*(ஆ) இந்த மாதிரி சலுகை விலையில் அல்லது குறைந்த விலையில் கடந்த ஜனவரியிலிருந்து மாதந்தோறும் அவர்கள் பெறும் அரிசி, கோதுமை மற்றும் இதர உணவு தானியங்களின் அளவு எவ்வளவு? இந்த மாதிரி ஊழியர்களின் எண்ணிக்கை எத்தனை?*

*(இ) இந்த ஊழியர்களின் நலனுக்காக பொருள்களை வினியோகம் செய்யும் பொறுப்பு யாருக்குக் கொடுக்கப்பட்டுள்ளது? தங்களுடைய பொறுப்பை நிறைவேற்ற அவர்கள் வைத்திருக்க வேண்டிய உணவுதானியக் கையிருப்பின் அளவு எவ்வளவு? எந்த நிறுவனங்களின் மூலம் இந்தப் பொருள்கள் கொள்முதல் செய்யப்படுகின்றன? மாதவாரியாக, சராசரியாக என்ன விலையில் கொள்முதல் செய்யப்படுகின்றன?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* மாண்புமிகு உணவுத்துறை உறுப்பினர் 1943 நவம்பர் 9ல் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 55க்கு அளித்த பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 9, 1943, பக்கம் 81.*

# 117

## *ஊதியப் பட்டுவாடா சட்டத்தின் நடைமுறையில் சில முறைகேடுகள்

*130. திரு. லால்சந்த் நாவல்ராய்: (அ) 1939-40 மற்றும் 1940-41ஆம் ஆண்டுகளில் ஊதியப் பட்டுவாடா சட்டத்தின் நடை முறையில் சமரச அதிகாரி (ரயில்வேக்கள்) மற்றும் ரயில்வே தொழி லாளர்களின் மேற்பார்வையாளரால் கண்டுபிடிக்கப்பட்ட முறை கேடுகளின் எண்ணிக்கை எவ்வளவு என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் அறிவிக்க முடியுமா?*

*(ஆ) ஊதியப் பட்டுவாடா சட்டத்தின் எந்தக் குறிப்பிட்ட பிரிவின்படி அல்லது அதன்கீழ் இயற்றப்பட்ட எந்த விதிகளின்படி அந்தச் சட்டப்பிரிவின் கீழ் நியமிக்கப்பட்ட அதிகாரிகளிடம் அல் லாமல் ரயில்வே நிர்வாகத்திற்கு முறைகேடுகளைப் பற்றி அறிக்கை அளிக்க அனுமதிக்கப்பட்டுள்ளது?*

*(இ) இப்படி எந்த விதிமுறையும் இல்லையென்றால் ஊதியப் பட்டுவாடா சட்டத்தின் பிரிவு 15(3) படி தொழிலாளர்களின் மேலாளர்களால் ஏன் நடவடிக்கை எடுக்கப்படவில்லை?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) 1939-40 ஆம் ஆண்டுகளில் 3012 முறைகேடுகளும், 1940-41 ஆம் ஆண்டுகளில் 4158 முறைகேடுகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த முறைகேடு கள் மீண்டும் ஏற்படாமல் தடுக்க, வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்படி அண்மையில் ரயில்வே நிர்வாகம் கேட்டுக் கொள்ளப் பட்டது. முறைகேடுகள் தொடர்ந்து அதிகரித்து வருமானால் இந்தச் சட்டத்தின் 15 ஆவது பிரிவின்படி முறையான நடவடிக்கைகள் எடுப்பது பற்றி கவனிக்கப்படும். தனிப்பட்ட கோரிக்கைகளைப் பொறுத்தவரையில் வேறுவழிகளில் சமரசத்தீர்வுக்கு சாத்தியமுள்ள*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 230-231.

இடங்களில் இந்தப் பிரிவின்படி நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியம் இல்லை என்று அரசு கருதுகிறது.

(ஆ) ஊதியப் பட்டுவாடா சட்டத்திலோ அல்லது அதன்கீழ் இயற்றப்பட்ட விதிகளிலோ இந்த மாதிரி எந்த விதிகளும் இல்லை.

(இ) பிரிவு 15(3) கீழ் உள்ள விதிகள் கட்டாயமானதல்ல, ரயில்வே நிர்வாகத்திற்கு அறிக்கைகள் அளிப்பதிலும் எந்தக் கோரிக்கைகளையும் சமாதான முறையில் தீர்வுக்குக் கொண்டு வருவதிலும் ஆய்வாளர்களைத் தடுப்பதற்கு சட்டத்தில் இடம் இல்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய் : பரிந்துரைகள் செய்ய இந்த ஆய்வாளர்களுக்கு அதிகாரம் இருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம்.

திரு. என்.எம். ஜோஷி : கம்பெனிகள் நிர்வகிக்கும் ரயில் வேக்களில் மட்டுமா அல்லது அரசு நிர்வகிக்கும் ரயில்வேக்களிலும் இந்த முறைகேடுகள் காணப்படுகின்றனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 118

## *ரயில்வே சமரச அதிகாரியின் நடவடிக்கைகள்

131. திரு. லால்சந்த் நாவல்ராய்: ரயில்வே சமரச அதிகாரியின் நடவடிக்கைகளின் களத்தை மேலும் விரிவாக்க முடிவெடுக்கப் போவதாக 1943 பிப்ரவரி 19 ஆம் தேதிய எனது நட்சத்திரக் குறி

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 231.

யிட்ட கேள்வி எண் 147க்கு அளித்த பதிலில் தெரிவித்ததை, மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு நினைவுபடுத்துவதுடன், இந்த விஷயம் குறித்து ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதா, அப்படியென்றால் அந்த விஷயம் பற்றி ஒரு சிறிய அறிக்கை வெளியிட தீர்மானிக்கப்பட்டுள்ளதா என்பதை அவர் கூறுவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இந்தக் கேள்வி இன்னும் பரிசீலனையில் இருந்து வருகிறது. நான் தற்பொழுது எந்த அறிக்கையும் அளிக்கும் நிலையில் இல்லை.

*திரு. லால்சந்த் நாவல்ராய் :* முடிவெடுப்பதற்கு ஏன் இவ்வளவு தாமதமாகிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த விஷயம் கவனத்தில் இருக்கிறது என்பதைக் கூறிவிட்டேன்.

*திரு. லால்சந்த் நாவல்ராய் :* ஏன் இது இவ்வளவு காலம் எடுக்கிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அது அதிக காலம் எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை.

*திரு. ஹுசைன்பாய் ஏ லால்ஜி :* எப்பொழுது அது தீவிரப் பரிசீலனைக்கு வரும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* பரிசீலனைக் கட்டம் முடிந்து விட்டது.

*திரு. கோவிந்த் வி. தேஷ்முக் :* எப்பொழுதிலிருந்து இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* நீண்டகாலமாக, குறிப்பாக திரு. ஜோஷி தமது கேள்வியைக் கேட்ட நாளிலிருந்து என்று கூறலாம்.

# 119

## *பொறியாளர் கல்லூரி

136. திரு. அனங்க மோகன் தாம் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருவனவற்றைப் பற்றி தெரிவிப்பாரா:

(அ) பொறியியற் பிரிவுகளில் பொறியாளர் கல்லூரி அளிக்கும் ஏ.எம்.ஐ.இ. பட்டயத்தை பொறியியல் பட்டப் படிப்புக்கு இணையாக இந்திய அரசால் அங்கீகரிக்கப்பட்டுள்ள நிலையில், இந்தக் கல்லூரி ஒரு தேர்வு நடத்தும் அமைப்பா?

(ஆ) இந்தக் கல்வி அமைப்புக்கு அரசு (மத்திய அல்லது மாகாண அரசு) பொருளாதார ரீதியில் உதவி செய்கிறதா? அப்படி யென்றால் அனுமதிக்கப்பட்டுள்ள உதவித் தொகை (மானியம்) எவ்வளவு?

(இ) இந்தக் கல்லூரியின் புரவலர்களாகவும் மற்றும் கௌரவ உறுப்பினர்களாகவும் மேதகைய வைசிராயும் மற்றும் மாகாண ஆளுநர்களும் இருப்பது உண்மையல்லவா?

(ஈ) இந்தக் கல்லூரி அரசுப் பட்டயம் (ராயல் சார்டர்) பெற்றுள்ளது என்பது அரசுக்குத் தெரியுமா?

(உ) இங்கிலாந்திலுள்ள இதேபோன்ற கல்லூரிகள் உதாரணமாக இயந்திரப் பொறியியல், கட்டடப் பொறியியல், மின்சாரப் பொறியியல் கல்லூரிகள் இந்தியப் பொறியாளர் கல்லூரி நடத்தும் தேர்வுகளை அங்கீகரிக்கவில்லை என்பது உண்மையா?

(ஊ) இந்தக் கல்லூரியை பிரிட்டிஷ் கல்லூரிகள் அங்கீகரிக்க இந்திய அரசு மன்னர்பிரான் அரசின் உதவியை நாடுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆமாம்.

(அ) இந்தக் கல்லூரிக்கு மத்திய அரசு எந்தப் பொருளாதார உதவியையும் அளிக்கவில்லை. ஆனால் மாகாண அரசுகள் உதவி அளிக்கின்றனவா என்பதைப் பற்றி எனக்குத் தெரியாது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 233-34.

(இ) மேதகைய வைசிராய் மற்றும் மாகாண ஆளுநர்கள் இந்தக் கல்லூரியின் கௌரவ உறுப்பினர்களாக உள்ளனர்.

(ஈ) ஆம்.

(உ) அரசுக்கு எந்தவிதத் தகவலும் இல்லை.

(ஊ) அவசியமென்றால் இந்தக் கல்லூரியே இந்தப் பிரச்சினையை எழுப்பவேண்டும். எனவே எனது மதிப்பிற்குரிய உறுப்பினரே இந்த விஷயம் பற்றி அந்தக் கல்லூரிக்கு எழுதலாம் என்று யோசனை கூறுகிறேன்.

# 120

## *இந்திய எழுத்தர்களுக்காக புதுடில்லியில் ஒரு பெரிய தங்கும் விடுதி கட்டுதல்

145. சர்தார் சாந்த் சிங்: (அ) இந்திய எழுத்தர்கள் தங்குவதற்கும் உணவு வசதியும் பெற இடமில்லாமல், பெரும் இன்னலுக்குள்ளாயிருக்கிறார்கள். அவர்களுக்கு இவ்வசதிகளை அளிப்பதற்கு, புதுடில்லியில் ஒரு பல-மாடிக் கட்டடத்தைக் கட்டும் யோசனையை அரசு கவனத்தில் கொண்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

(ஆ) ஒற்றையராக வாழும் ஐரோப்பிய (நான்கமிஷண்டு) ராணுவ அதிகாரிகள் தங்குவதற்காகக் கட்டப்பட்ட பல கட்டடங்கள் தங்கும் விடுதிகளாக நடத்தப்படுகின்றனவா?

(இ) இந்திய எழுத்தர்களுக்கும் இதேபோன்ற வசதிகளை அளிக்க அரசு முன்வருமா? இல்லை என்றால் ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எழுத்தர்களுக்கு ஒரு தங்கும் விடுதி கட்டலாம் என்ற யோசனை அரசின் கவனத்தில் உள்ளது.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 242-243.

(ஆ) ஆம்.

(இ) ஒற்றையர்களாக வாழும் இந்திய எழுத்தர்களுக்காக சுமுரிகள் என்ற வசதிகள் புதுபாணி வகை மற்றும் பழம்பாணி வகை குடியிருப்புகளில் அளிக்கப்பட்டுள்ளன. ஒரு விடுதி கட்டுமளவுக்கு தேவை இருக்குமா என்பது பரிசீலனையில் உள்ளது.

# 121

## *புதுடில்லியில் மின்டோ சாலை மற்றும் ஹேவ்லாக் சதுக்கத்திலுள்ள விசாரணை அலுவலகங்களில் புகார்களைக் கவனிப்பதில் தாமதம்

+147. சர்தார் சாந்த் சிங் : (அ) எழுத்தர்களுக்கான பழம்பாணி வகைக் குடியிருப்புகளில் செப்பனிடுதல் போன்ற பணிகள் சம்பந்தமாக மின்டோ சாலை மற்றும் ஹேவ்லாக் சாலையிலுள்ள விசாரணை அலுவலகத்தில் கொடுக்கப்படும் புகார்கள் பொதுவாக மிகவும் காலம் தாழ்ந்தே கவனிக்கப்படுகின்றன என்ற விஷயம் அரசுக்குத் தெரியுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) (கீழே குறிப்பிட்டுள்ளவை பற்றி) அரசுக்குத் தெரியுமா?

(i) இதில் சில புகார்களுக்கு எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை; மேலும்

(ii) இந்த விஷயத்தைக் குறித்து நிர்வாக பொறியாளர், கட்டுமானம், III பிரிவு அல்லது 'பி' பிரிவு அதிகாரிகளுக்கு எழுதப் படும் கடிதங்கள் பெற்றுக்கொண்டதற்கான ஒப்புதல் தெரிவிக்கப் படவில்லை என்பதுடன் எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப் படுவதில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, நவம்பர் 13, 1943, பக்கம் 243-244.

+ கேள்வி கேட்டவர் வராததால், பதில் அவையில் அளிக்கப்பட்டுள்ளது.

*(இ) பெற்றுக்கொண்ட கடிதங்கள் கிடைக்கப் பெற்றதை தெரிவிக்கவும், அவை சம்பந்தமாக நடவடிக்கைகள் எடுக்கவும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு உத்தரவு அனுப்ப அரசு தயாராக உள்ளதா? இல்லை என்றால் ஏன் இல்லை?*

*(ஈ) அரசின் கவனத்திற்குப் பின்வரும் விஷயங்கள் வந்துள் ளனவா?*

(i) *வீட்டுக்கு வெள்ளை அடிக்கும்போது ஒப்பந்தக்காரரின் தவறான முறைகளினால் குடியிருப்பவர்களுக்கு மிகுந்த சிரமங்கள் ஏற்படுகின்றன;*

(ii) *அவர்கள் தங்களுடைய தொழிலாளர்களைக் குடியிருப்பு களுக்கு அனுப்பி, ஒரு குறிப்பிட்ட நாளில் அறைகளைக் காலியாக வைக்கச் சொல்லி விட்டு, பல நாட்களுக்குப் பிறகே வெள்ளை அடிக்க ஆள்களை அனுப்புகின்றனர்; மேலும்*

(iii) *வெள்ளை அடித்து முடித்து முடிந்த பிறகு கதவுகள் மற்றும் கண்ணாடிகளை சுத்தம் செய்வதில்லை. வீடுகளை பழைய படி ஒழுங்குபடுத்த முடியாமல் குடியிருப்பவர்கள் சங்கடத்துள்ளா கிறார்கள்.*

*(உ) இந்தக் குறைகளைத் தீர்ப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்க அரசு தயாராக உள்ளதா? இல்லையென்றால் ஏன் தயாராக இல்லை?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ)* இல்லை.

*(ஆ)* (i) இல்லை.

(ii) *கிடைக்கப் பெறும் கடிதங்கள் அனைத்துக்கும் உட னடியாக நடவடிக்கைகள் எடுக்கப்படுவதால், எல்லாக் கடிதங் களையும் பெற்றுக்கொண்டதற்கான ஒப்புதல் அளிக்கும் அவசியம் இல்லை.*

*(இ)* *ஆம்.*

*(ஈ)* i, ii, iii இல்லை.

*(உ) ஆம். அடிக்கடி நேரில் சென்று பார்வையிட, நிர்வாகப் பொறியாளருக்கு உத்தரவு அனுப்ப அரசு தீர்மானித்துள்ளது.*

# 122

## *புதுடில்லியில் பைர்ட் கிழக்குச் சதுக்கம் மற்றும் இர்வின் சாலைக்கு இடையிலுள்ள திறந்த வெளியில் புதிதாகக் கட்டப்பட்டுள்ள 'ஈ' டைப் பழம்பாணி குடியிருப்புகள்

+148. சர்தார் சாந்த் சிங் : (அ) புது டில்லியிலுள்ள பைர்ட் கிழக்குச் சதுக்கம் மற்றும் இர்வின் சாலைக்கும் இடையிலுள்ள திறந்த வெளியில் புதிதாகப் பல 'ஈ' வகை பழம்பாணிக் குடியிருப்புகள் கட்டப்பட்டுள்ளதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) அவருக்குப் பின்வரும் விஷயங்கள் தெரியுமா?

(i) இந்தப் பகுதி, சிறு குறுகிய தெருக்களால் பின்னப்பட்டு சிலந்தி வலை போன்ற நகரத்தின் நெருக்கடிமிக்க பகுதியாகக் காட்சியளிக்கிறது; மேலும்

(ii) மத்திய பொதுப்பணித்துறை அதிகாரிகள் புதுடில்லியில் ஆரம்பத்தில் கடைப்பிடிக்கப்பட்டுவந்த கட்டடம் கட்டுவதற்கான வழிமுறைகளுக்கு மாறாகச் செயல்பட்டு அந்தப் பகுதியைப் பெரும் நெருக்கடிக்குள்ளாகி விட்டனர்.

(இ) இந்த மாதிரி ''ஈ'' வகை பழம்பாணி குடியிருப்புகள் அதிகம் கட்ட தீர்மானிக்கப்பட்டுள்ளது உண்மையா?

(ஈ) எழுத்தர்களுக்கான குடியிருப்புப் பகுதிகள் தற்பொழுதுள்ளதைவிட அதிகம் நெருக்கடிக்கு ஆளாகாமல் புதிய குடியிருப்புகளை கட்டும் யோசனையை அரசு கவனத்தில் எடுத்துக் கொள்ளுமா? அவற்றுக்கு அருகே திறந்த வெளியிடங்களும் புல்வெளிகளும் அமைக்க முன்னேற்பாடுகள் செய்யப்படுமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 244.

+ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாததால், பதில் அவைமுன் வைக்கப்பட்டுள்ளது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம்.*

*(ஆ)* (i) (ii) இல்லை.

*(இ)* ஆம்.

*(ஈ)* இந்த முறையில்தான் எப்பொழுதும் அரசு நடந்து கொண்டு வருகிறது.

# 123

## *புதுடில்லியிலுள்ள ஹேவ்லாக் மற்றும் பைர்ட் சதுக்கங்களில் சில நடைபாதைகளை மூடுவதன் அவசியம்

*+149. சர்தார் சாந்த் சிங் : (அ)* 'டி' வகை பழம்பாணி குடியிருப்பு களின் சதுக்கங்கள் நான்கு மூலைகளிலும் பாதைகளுக்காக திறந்து விடப்பட்டிருக்கின்றனவா?

*(ஆ)* பிறகு இந்த நடை பாதைகள் அடைக்கப்பட்டனவா?

*(இ)* இந்த சதுக்கங்களில் குடியிருப்புகளுக்கு முன்பு உள்ள புல்வெளியை பாதுகாப்பது இதற்கான காரணங்களில் ஒன்றா?

*(ஈ)* அரசுக்கு பின்வரும் விஷயம் தெரியுமா?

i) ஹேவ்லாக் மற்றும் பைர்ட் சதுக்கங்களில் 'பி' 'சி' வகை குடியிருப்புகளின் மூலையில் இரண்டு குடியிருப்புகளுக்குப்பிறகு நடைபாதை அமைக்கப்பட்டுள்ளதா?

ii) கூலிகள் மற்றும் வேலையாட்கள் இந்தப் பாதைகளை வழக்கமாக உபயோகிப்பதுடன், பல இடங்களில் புல்வெளிகளைக் கடந்து செல்வதால் இந்த இரண்டு சதுக்கங்களிலுமுள்ள புல்வெளி கள் காலடித் தடங்களால் அழகு சிதைந்து காணப்படுகின்றனவா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 244-45.

+ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாததால் பதில் அவை முன் வைக்கப்பட்டுள்ளது.

(உ) இந்தப் பாதைகளைத் தடுத்து, இந்தக் காலடித்தடங்களில் மீண்டும் புற்களை வளர்க்கத் திட்டமுள்ளதா? இல்லை என்றால் ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) மற்றும் (ஆ) ஆம்.

(இ) இல்லை.

(ஈ) ஆம்.

(உ) இந்த ஆலோசனையை அரசு பரிசீலனை செய்யும்.

# 124

## *புதுடில்லியில் பழம்பாணி குடியிருப்புகளில் அதிகமாகக் காய்கறிகள் வளர்ப்பது

+150. சர்தார் சாந்த் சிங் : (அ) உணவு மற்றும் காய்கறிகளின் உற்பத்தியைப் பெருக்குவது என்ற அரசின் பொதுவான கொள்கைகளுக்கிணங்க புதுடில்லியிலுள்ள பழம்பாணி குடியிருப்புகளில் வசிக்கும் அரசு ஊழியர்கள் அதிகமாகக் காய்கறி வளர்க்க முடியுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) பழம்பாணிக் குடியிருப்புகளில் 'ஈ' 'சி' 'பி' வகை, அதிலும் முக்கியமாக 'டி' வகை குடியிருப்புகளிலுள்ள முற்றங்கள் அளவில் சிறியதாக இருப்பதால் காய்கறிகள் அதிக அளவில் வளர்க்க முடியாது என்பது உண்மையா?

(இ) அதிகக் காய்கறிகளை வளர்க்க, தங்கள் குடியிருப்புகளுக்கு வெளியே மேலும் நிலங்கள் ஒதுக்கும்படி, அதுவும் வேலியுடன் ஒதுக்கும்படி பழம்பாணிக் குடியிருப்புகளில் வசிக்கும் ஊழியர்கள் கேட்டால், அதற்கு உதவ அரசு முன்வருமா? இல்லை என்றால் ஏன் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 245.

+ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாததால் இந்தக் கேள்விக்கான பதில் அவை முன் வைக்கப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இந்தக் குடியிருப்புகளில் வசிக்கும் ஊழியர்களின் வீட்டு உபயோகத்திற்குச் சிறிதளவு காய்கறிகள் வளர்க்க முடியும்.

(ஆ) ஆம்.

(இ) இல்லை. இந்த ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டால் புல்மைதானத்தின் அழிவில்தான் முடியும். வேலி போடுவதற்கு அதிகச் செலவு பிடிக்குமாதலால், அரசு அதற்கு ஏற்பாடு செய்ய முடியாது. இப்படி அதிகப்படியாக அளிக்கப்படும் நிலத்தைச் சரியான முறையில் ஊழியர்களால் பயன்படுத்த முடியும் என்று தோன்றவில்லை.

# 125

## * ஐக்கிய மாகாணங்களில் சிவில் முன்னணிப் படையில் கமிஷண்டு ராணுவ அதிகாரிகள்

29. திரு. பியாரி லால் குரில் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து தெரிவிப்பாரா?

(அ) ஐக்கிய மாகாணங்களில் சிவில் முன்னணிப் படையில் இதுவரை சேர்க்கப்பட்டுள்ள கமிஷண்டு ராணுவ அதிகாரிகள் (பல்வேறு தகுதி நிலைகளில்) எத்தனை பேர்?

(ஆ) அவர்களில் இந்துக்கள், முஸ்லீம்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் எத்தனை பேர்?

(இ) இந்த கமிஷண்டு ராணுவ அதிகாரிகளில் பதவி உயர்வு எத்தனை பேருக்கு அளிக்கப்பட்டுள்ளது?

(ஈ) ஷெட்யூல்டு வகுப்பு கமிஷண்டு ராணுவ அதிகாரிகளில் எவராவது உயர் தகுதி நிலைக்கு பதவி உயர்வு பெற்றுள்ளாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கங்கள் 248-49.

(உ) ஈ பிரிவுக்கான பதில் எதிர்மறையாக இருந்தால் இந்த பதவி உயர்வை தற்போது அளிக்க அரசு தீர்மானித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) மற்றும் (ஆ) கமிஷண்டு ராணுவ அதிகாரிகள் 25 பேர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

அதிகாரிகளின் தகுதிநிலை மற்றும் வகுப்புகள் வருமாறு:

| | முஸ்லீம்கள் | ஷெட்யூல்டு வகுப்பினர் | மற்றவர்கள் |
|---|---|---|---|
| கமாண்டேண்டுகள் | ... | ... | 2 (1 கிறித்தவர்) |
| காப்டன் | ... | ... | 2 (1 கிறித்தவர்) |
| லெப்டினெண்டுகள் | ... | ... | 7 (2 கிறித்தவர்) |
| 2-வது லெப்டினெண்டுகள் | 4 | 3 | 7 |

(இ) இரண்டு கமாண்டேண்டுகளும் இரண்டு காப்டன் களும் அதே தகுதி நிலையில் முதல் தேர்வில் நியமிக்கப்பட்டனர். 2-ஆவது லெப்டினெண்டுகள் 7 பேர் லெப்டினெண்டுகளாக பதவி உயர்வு அளிக்கப்பட்டனர்.

(ஈ) இல்லை.

(உ) காலி இடங்கள் இருப்பதைப் பொறுத்து பதவி உயர்வு அளிக்க முடியும். மத்திய அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டு பதவி உயர்வு அளிக்கும் அதிகாரம் மாகாண அரசுக்கு அளிக்கப்பட்டுள் ளது. முறைகேடுகளைத் தவிர்ப்பதற்கல்லாமல், இந்த விஷயங் களில் முக்கியமாக உயர்பதவிகளைப் பொறுத்தமட்டில், மாகாண அரசு சுயமாக தீர்மானம் எடுப்பதில் தலையிடுவது விரும்பத்தக்க தல்ல. இரண்டு வரையறைகளே பதவி உயர்வை தீர்மானிக்கின் றன: ஒன்று திறமை, மற்றொன்று பணி மூப்பு. ஒரு ராணுவப் பிரிவின் (யூனிட்டின்) திறமை அதன் அதிகாரிகளின் திறமையைப் பொறுத்துள்ளது என்பதால் திறமைதான் பதவி உயர்வுக்கு அடிப் படையாக இருக்கிறது. ஆனால் திறமை ஒரே மட்டத்தில் இருக்கும் இடங்களில் பணி மூப்பை கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

# 126

## *சிவில் முன்னணிப் படையில் உள்ள கமிஷண்டு ராணுவ அதிகாரிகளின் பணிக்காலத்தை போர்ப்பணியாகக் கணக்கிடுதல்

30. திரு. பியாரி லால் குரீல்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து கூறுவாரா?

(அ) சிவில் முன்னணிப் படையில் உள்ள கமிஷண்டு ராணுவ அதிகாரிகளின் பணி, போர்க்காலப் பணியாக எடுத்துக் கொள்ளப்படுமா? இல்லை என்றால் ஏன் இல்லை?

(ஆ) இந்தக் கேள்விக்கான பதில் எதிர்மறையில் இருக்கு மானால் அரசு தனது முடிவை மாற்றிக்கொள்ள முன்வருமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். (ஆ) கேள்வி எழவில்லை.

# 127

## +யுத்தப் பிற்கால சமூகப் பாதுகாப்புப் பற்றிய பெவரிட்ஜ் அறிக்கை

229. கான் பகதூர் மியான் குலாம் காதிர் முகமது ஷாபன் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவ ரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) போருக்குப் பிறகு செயல்படுத்த வேண்டிய சமூகப் பாதுகாப்புப் பற்றிய பெவரிட்ஜ் அறிக்கையை அரசு கவனத்தில் எடுத்துக் கொண்டுள்ளதா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 249.

\+ மேற்படி அதே தொகுதி, பக்கம் 249.

(ஆ) போருக்குப் பிறகு இந்தியாவில் செயல்படுத்த வேண்டிய சமூகப் பாதுகாப்புத் திட்டம் ஏதாவது அரசிடம் இருக்கிறதா?

(இ) இதுவரை அரசின் கவனத்திற்கு இந்த விஷயம் வரா விடினும், இப்பொழுதாவது கவனத்தில் எடுத்துக்கொண்டு, இந்த நாட்டிற்கு பெவரிட்ஜ் திட்டம் போன்ற ஒரு திட்டத்தை உரு வாக்குமா?

(ஈ) யுத்தப் பிற்கால மறுசீரமைப்புக் குழு எந்த நோக்கத் துடன் வேலை செய்து கொண்டிருக்கிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) இங்கிலாந்து அரசுக்கு அளிக்கப்பட்டுள்ள பெவரிட்ஜ் அறிக்கையைப் பற்றி ஆலோசிக்க வேண்டியது இந்திய அரசல்ல. எனினும் இந்திய அரசுக்கு அந்த அறிக்கையைப் பற்றித் தெரியும்.

(ஆ) மற்றும் (இ) பிரிவுகளைப் பொறுத்தவரையில், 1943 செப்டம்பரில் நடைபெற்ற முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டின் கடைசிக் கூட்டத்தில் இந்த விஷயத்தைப் பற்றி நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். தீர்மானத்தின் நகல்கள் அவையின் முன் வைக்கப்பட்டுள்ளன. இந்தத் தீர்மானத்தை நடைமுறைப் படுத்த இந்திய அரசு தீவிர கவனம் செலுத்தி வருகிறது.

(ஈ) மதிப்பிற்குரிய பண்டிட் எச்.என். குன்சுருவின் கேள்வி எண் 74க்கு 1943 ஆகஸ்டு 4ல் மாநிலங்களின் அவையில் மாண்பு மிகு சர் ஜுவாலா பிரசாத் ஸ்ரீவத்சவா அளித்த பதிலை மதிப்பிற் குரிய உறுப்பினர் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

**1943 செப்டம்பர் 6, 7 தேதிகளில் புதுடில்லியில் நடை பெற்ற முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டில் நிறை வேற்றப்பட்ட தீர்மானம்:**

தொழிலாளர்களுக்கான சமூகப் பாதுகாப்புக் கொள்கையைத் திட்டமிடுவதற்கு தேவையான விஷயங்களை அளிக்கும் நோக்கத் துடன் மத்திய அரசு, பிரிட்டிஷ் இந்தியாவின் மாகாண அரசுகள், இந்திய சமஸ்தானங்கள், மன்னர்கள் அவை ஆகியவற்றின் ஒத்துழைப்புடன் ஊதியங்கள் மற்றும் வருமானங்கள், வேலை

வாய்ப்பு, குடியிருப்பு வசதி, பொதுவான சமூக நிலைமை பற்றி ஆய்வு செய்ய வழிமுறைகளை உருவாக்குவதுடன், தேவைப்படும் புள்ளிவிவரங்களும், தகவல்களும் கிடைக்கப்பெற்றவுடன், மத்திய அரசு சமூகப் பாதுகாப்புப் பற்றி திட்டங்கள் உருவாக்க பல தரப் பினரையும் கொண்ட குழுவை நியமிக்க, இந்த முத்தரப்பு மாநாடு பரிந்துரைக்கிறது.

# 128

## *டி.ஐ.இஸட் பகுதியில் உள்ள எழுத்தர்களுக்கான பழம்பாணி குடியிருப்புகளில் புல்வெளிகள் புறக்கணிப்பு

*232. சர்தார் சாந்த் சிங் : 'டி' 'ஐ' இஸட் பகுதியில் உள்ள எழுத்தர்களுக்கான பழம்பாணிக் குடியிருப்புகளில் புல்வெளிகள் சரியாகப் பராமரிக்கப்படுவதில்லை என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவிக்க முடியுமா?*

*(ஆ) பெரும்பாலும் தரை முழுவதும் உலர்ந்த கட்டைப் புற்கள் மூடிக்கிடக்கின்றனவா?*

*(இ) இந்தப் புல்வெளிகளைச் சுற்றியுள்ள சாலைகள் அநேக மாக ஒழுங்கற்றதாகி விட்டதுடன் சில பகுதிகளில் சாலைகள் புதரால் மூடப்பட்டு, மேலும் சில இடங்களில் புற்களே காணப் படாமல் சரளைக் கற்கள் மற்றும் மண்ணால் மூடப்பட்டுள்ளனவா?*

*(ஈ) இந்தப் புல் வெளிகளைப் பராமரிக்கத் தோட்டக்கலை பிரிவால் தோட்டக்காரர்கள் வழக்கமாக நியமிக்கப்படுகிறார்களா?*

*(உ) இந்தத் தோட்டக்காரர்கள் புல்வெளிகளுக்கு மாதம் ஓரிரு முறை தண்ணீர் விடுவதுடன், வேறு எதிலும் அக்கறை கொள்ள வில்லை என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?*

*(ஊ) இந்தப் புல்வெளிகளைச் சரியான முறையில் பராமரிக்க நடவடிக்கை எடுக்க அரசு தயாராக உள்ளதா?*

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 17 நவம்பர் 1943, பக்கம் 412.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம்.

(ஆ) இல்லை.

(இ) இல்லை.

(ஈ) ஆம்.

(உ) தோட்டக்காரர்கள் தண்ணீர் விடுவதுடன் புல்வெளி களை நன்கு பராமரித்து வருகிறார்கள்.

(ஊ) இந்தக் கேள்வி எழவில்லை. இந்த விஷயத்தைப் பற்றி உண்மையான புகார்கள் இருக்குமானால் அதை விசாரிக்க அரசு தயாராக உள்ளது.

சர்தார் சாந்த் சிங் : தமது துறை தயாரித்துக் கொடுத்த, குறிப்பின் அடிப்படையில் மாண்புமிகு உறுப்பினர் தமது பதிலை அளித்தாரா அல்லது இந்தக் கேள்விகளில் எழுப்பப்பட்டுள்ள குற்றச் சாட்டுகள் சரியா தவறா என்று உறுதிப்படுத்த அந்தக் குடியிருப்பு களின் நிலைமைகளைக் காண நேரில் சென்று வந்தாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : எனக்கு அளிக்கப் பட்டுள்ள தகவல்கள் தவறு என்று கருத எந்தக் காரணமும் இல்லை.

# 129

## *கிழக்கிந்திய ரயில்வேயில் ஊதியப் பட்டுவாடச் சட்டத்தின் செயல்பாடு

236. நவாப் சித்திக் அகான் (குவாஜி முகமது அகமது காஸ்மி சார்பாக) : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) 1941, 1942 மற்றும் 15 அக்டோபர் 1943 வரை ஒவ் வொரு ஆண்டும், கிழக்கிந்திய ரயில்வேயில் ஊதியப் பட்டுவாடாச்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17, 1943, பக்கம் 414.

சட்டம் (1936 ஆம் ஆண்டு சட்டம் IV) எத்தனை தடவைகள் மீறப் பட்டுள்ளதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது?

(ஆ) 1937ல் ஊதியப்பட்டுவாடாச் சட்டம் அமலுக்கு வந்த பிறகு, அச்சட்டத்தின் பிரிவு 15(1) கீழ் நியமிக்கப்பட்ட அதிகாரி யிடம் கிழக்கிந்திய ரயில்வேயின் சட்ட மீறல்களைப் பற்றி ஆய் வாளர்கள் அளித்துள்ள அறிக்கைகள் எத்தனை?

(இ) கிழக்கிந்திய ரயில்வே அதிகாரிகளுக்கு பிரிவு 20-ன் படி எத்தனை தடவை அபராதம் விதிக்கப்பட்டுள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) கிழக்கிந்திய ரயில்வேயில் ஊதியப் பட்டுவாடா சட்டம் 1941-1942ல் 334 தடவை களும், 1942-43ல் 481 தடவைகளும், ஏப்ரில் 1 லிருந்து 15 அக்டோபர் வரை 123 தடவைகளும் மீறப்பட்டுள்ளன.

(ஆ) இல்லை.

(இ) இல்லை.

# 130

## *கிழக்கிந்திய ரயில்வேயில் ஊதியப் பட்டுவாடாச் சட்டத்தின் செயல்பாடு

237. நவாப் சித்திக் அலி கான் (குவாஜி முகமது அகமது காஸ்மி சார்பாக): ஊதியப்பட்டுவாடா சட்டத்தை மீறுவோர் மீது எந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றாலும் ரயில்வேத் தொழி லாளர்களின் ஆய்வாளர்கள் ரயில்வேத் தொழிலாளர்களின் மேற் பார்வையாளரின் முன் அனுமதி பெற வேண்டுமா என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

(ஆ) (அ) பிரிவுக்கு பதில் ஆம் என்றால் ஊதியப் பட்டு வாடாச் சட்டம் கிழக்கிந்திய ரயில்வேயால் மீறப்பட்டது சம்பந்த மாக எத்தனை தடவை அனுமதி கேட்கப்பட்டு வழங்கப்பட்டது என்பதை, 1937-லிருந்து ஆண்டு வாரியாகத் தெரிவிக்க முடியுமா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 17 நவம்பர் 1943, பக்கம் 414.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஊதியப் பட்டுவாடா சட்டம் 1936, பிரிவு 14-ன் கீழ் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளரும் மற்றும் துணை மேற்பார்வையாளரும்தான் ஆய்வாளர்களாக நியமிக்கப்பட்டு, இந்த இரு அதிகாரிகளே வழக்கமான நடவடிக்கைகளை எடுப்பதால் அவர்களிடம் முன் அனுமதி பெற வேண்டும் என்ற கேள்வி எழவில்லை.

(ஆ) (அ) பிரிவுக்கு அளித்த பதிலினால் இந்தக் கேள்வி எழவில்லை.

# 131

## *கிழக்கிந்திய ரயில்வேயில் ஊதியப் பட்டுவாடாச் சட்டத்தின் செயல்பாடுகள்

238. நவாப் சித்திக் அலி கான் : (குவாஜி முகமது அகமது காஸ்மி சார்பாக) : (அ) ஊதியப்பட்டுவாடா சட்டத்தின் செயல்பாட்டின் மீது பயனுள்ள சரியான மேற்பார்வை இல்லாததுதான் கிழக்கிந்திய ரயில்வேயில் இந்தச் சட்டம் அடிக்கடி மீறப்படுவதற்குக் காரணமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) கிழக்கிந்திய ரயில்வே அதிகாரிகளின் ஊதியப் பட்டுவாடா சட்ட மீறலை சரியான முறையில் கட்டுப்படுத்த தற்பொழுதுள்ள வழிமுறைகளில் மாற்றங்கள் செய்யும் யோசனையைக் கவனத்தில் எடுத்துக்கொள்ள அரசு முடிவு செய்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) மதிப்பிற்குரிய உறுப்பினர் சுட்டிக்காட்டுவது உண்மையல்ல. ஆண்டுதோறும் இவ்வளவு அதிகமான முறைகேடுகள் கண்டுபிடிக்கப்பட்டு, ரயில்வேத் தொழிலாளர்களின் மேற்பார்வையாளர்களால் சீர்செய்யப்படுவது இப்பொழுதுள்ள நடைமுறைகள் சிறந்த பயன் தருபவை என்பதை நிரூபித்துள்ளது.

(ஆ) கேள்வி எழவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17, 1943, பக்கங்கள் 414-415.

# 132

## *தொழிலாளர்களுக்குப் போர்க்கால போனஸ் அளிப்பது பற்றி திரு. வி.ஜி. பால்வைக் அளித்த முறையீடு

239. திரு. கோவிந்த் வி. தேஷ்முக் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) தொழிலாளர்களுக்கான போர்க்கால போனஸைப் பற்றி 1943 அக்டோபரில் நாக்பூரிலுள்ள மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் மாகாணத் தொழிலாளர் சம்மேளனத்தின் தலைவர் திரு. வி.ஜி. பால்வைக்கிடமிருந்து முறையீடு ஏதேனும் வந்துள்ளதா?

(ஆ) இரண்டு மாதங்களுக்கு அதிகமான ஊதியத்தை போர்க்கால போனசாக அளிக்க எம்ப்பரெஸ் அண்டு மாடல் மில்ஸ் நிபந்தனை விதித்துள்ளது. அதாவது இதனைச் செலவாகப் பாவித்து கம்பெனிக்கு வரிவிலக்கு அளிப்பதுப் பற்றி அரசு முடிவு செய்ய வேண்டுமென்று நிபந்தனை விதித்துள்ளது. இந்த நிபந்தனை குறித்து அரசு ஏதாவது முடிவுக்கு வந்துள்ளதா, அப்படியென்றால் என்ன முடிவு?

(இ) 1943 நவம்பர் 14க்குள் மில் உரிமையாளர்கள் இந்த அதிகப்படியான இரண்டாவது தவணைப் போர்க்கால போனஸை வழங்காவிட்டால் மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பஞ்சாலைத் தொழிலாளர் சம்மேளனத்தின் செயற்குழு 15 நவம்பர் 1943லிருந்து வேலைநிறுத்தம் செய்ய முடிவு செய்துள்ளதை அவர் அறிவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17, 1943, பக்கம் 414-15.

(ஆ) இல்லை. வருவாய் இன செலவாக அனுமதிக்கப் படும் போனசின் அளவு எவ்வளவு என்ற பொதுவான கேள்வி கவனத்தில் உள்ளது. இந்தக் கட்டத்தில் மேலும் தகவல் கொடுப்பது சரியல்ல.

(இ) ஆம்.

**திரு. கோவிந்த் வி. தேஷ்முக்:** விரைவிலேயே ஒரு முடிவுக்கு வந்து விவரங்களை அளிக்க முடியாது என்பதற்கு என்ன காரணங் கள் உள்ளன என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** வெகு விரைவில் ஒரு முடிவை எட்ட நாங்கள் எங்களால் முடிந்தவரை முயன்று வரு கிறோம்.

**திரு. கோவிந்த் வி. தேஷ்முக்:** இந்திய அரசு இந்தப் பிரச் சினைக்கு எப்போது முடிவு காணும்? வேலைநிறுத்தத்தை தள்ளிப் போடுவதே நல்லது என்ற என் ஆலோசனையின் அடிப்படை யிலேதான் வேலை நிறுத்தம் வாபஸ் பெறப்பட்டுள்ளது. எனவே எவ்வளவு காலம் ஆகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எந்த விவரமும் தெரிவிக்க முடியாத நிலையில் இருக்கிறேன்.

**திரு. என்.எம். ஜோஷி :** இந்தப் பிரச்சினையை இன்னும் இந்திய அரசு தீர்மானிக்காததால் மத்திய மாகாணத்திலுள்ள பஞ்சாலைத் தொழிலாளர் மத்தியில் மிகுந்த அதிருப்தி நிலவு கிறது என்பது இந்திய அரசுக்குத் தெரியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச் சினையைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

# 133

## *தான்பாத்திலுள்ள சுரங்கப்பள்ளியில் மாணவர்கள் சேர்ப்பு

242. மௌலவி முகமது அப்துல் கனி : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) 1941, 1942 மற்றும் 1943ம் ஆண்டுகளில் தான்பாத் சுரங்கப் பள்ளியில் சேர்க்கப்பட்ட மாணவர்கள் எத்தனை பேர்? அதில் முஸ்லீம் மாணவர்களின் எண்ணிக்கை எத்தனை?

(ஆ) முஸ்லீம் மாணவர்களின் சேர்க்கைக்கு ஏதாவது ஒதுக்கீடு தீர்மானிக்கப்பட்டுள்ளதா?

(இ) கடந்த மூன்று ஆண்டுகளில் பள்ளியில் சேர விண்ணப்பித்த முஸ்லீம் மாணவர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) 1941, 1942, 1943ம் ஆண்டுகளில் 24 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். 1941, 1942 ஆம் ஆண்டுகளில் எந்த முஸ்லீம் மாணவனும் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. 1943ல் இரண்டு மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டதில் ஒரு மாணவன் பள்ளியில் சேரவில்லை.

(ஆ) இல்லை.

(இ) 34.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது : முஸ்லீம் மாணவர்கள் சேர்க்கப்படாததற்குக் காரணம் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நுழைவுத் தேர்வில் அவர்கள் வெற்றி பெறாததே அதற்குக் காரணம்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17 , 1943, பக்கம் 416.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது :* அவர்களது கல்வித் தகுதியைப் பொறுத்தவரையில் அந்தப் பள்ளியில் சேரத்தகுதியான ஏராளமான முஸ்லீம் மாணவர்கள் உள்ளனர் என்பதை நான் நிரூபிக்க முடியும். முஸ்லீம்களுக்கு உபகாரச் சம்பளம் அளிக்கப் படுவதில்லை என்பது உண்மையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* என்னால் கூற முடியாது. அதற்கு முன்னறிவிப்பு வேண்டும்.

*மௌல்வி முகமது அப்துல் கனி :* கடந்த ஆண்டு தகுதி வாய்ந்த முஸ்லீம் மாணவர்கள் விண்ணப்பித்தபோது ஒட்டுமொத்த மாக அவர்கள் விண்ணப்பங்கள் தள்ளுபடி செய்யப்பட்டன என்பது உண்மையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இல்லை. பள்ளி யில் மாணவர்களைச் சேர்த்துக் கொள்வது பின்வரும் முறையில் அமைந்து உள்ளது என்பதை மரியாதைக்குரிய உறுப்பினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்: எல்லா மாணவர்களுக்கும் பொதுவான நுழைவுத் தேர்வு மூலம் 50 சதவீத இடங்கள் நிரப்பப்படுகின்றன. பிறகு ஒவ்வொரு மாகாணத்திற்கும் உரிய ஒதுக்கீட்டின்படி சில இடங்கள் நிரப்பப்படுகின்றன. பிறகு எஞ்சியுள்ள இடங்கள் தகுதி யின் அடிப்படையில் நிரப்பப்படுகின்றன. எந்த குறிப்பிட்ட சமூகத் தினருக்கும் இங்கு இட ஒதுக்கீடு இல்லை.

# 134

## *நிலக்கரி உற்பத்தியில் வீழ்ச்சி

*250. கே.சி. நியோகி :* (அ) 1943 மார்ச் 20ல், சட்டமன்றத்தில் எனது நட்சத்திரக்குறியிட்ட கேள்வி எண் 349க்கு அளித்த பதிலில் நிலக்கரி உற்பத்தியின் வீழ்ச்சி மிகவும் அற்பமானதென்றும், அதைப் பற்றிய ஒரு விவரமான விசாரணை தேவையில்லை என்றும் அறிவித்ததை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். கடந்த ஜனவரியிலிருந்து

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17, 1943, பக்கம் 421-422.

*பிரிட்டிஷ் இந்தியாவிலும் இந்திய சமஸ்தானங்களிலும் நிலக்கரி உற்பத்தி பயங்கர வீழ்ச்சி அடைந்துள்ளது என்பது உண்மையா என்பதைத் தெரிவிக்க முடியுமா?*

*(ஆ) இந்தக் கேள்விக்குப்பதில் ஆம் என்றால் மாதவாரியாக அடைந்த வீழ்ச்சியின் அளவை அது தெரியவந்த தேதியிலிருந்து அறிவிக்கும் நிலையில் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் இருக்கிறாரா?*

*(இ) நிலக்கரிப் பற்றாக்குறை அச்சுறுத்தலைப் பற்றி எந்த வர்த்தக நிறுவனமிடமிருந்தாவது அல்லது வர்த்தகத்தில் சம்பந்தப் பட்டுள்ள தனிநபரிடமிருந்தாவது அரசுக்கு எச்சரிக்கை வந்துள்ளதா? முதல் தடவையாக இந்த எச்சரிக்கை அரசின் கவனத்திற்கு எப்பொழுது வந்தது? நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்தால் என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) கடந்த ஆண்டு இதே மாதத்துடன் ஒப்பிடும்போது பிரிட்டிஷ் இந்தியாவிலும், இந்திய சமஸ்தானங்களிலும் 1943 ஆம் ஆண்டு நிலக்கரி உற்பத்தியில் சரிவு காணப்படுகிறது. முதல் 5 மாதங்களில் இந்த வீழ்ச்சி குறைவாக இருந்தாலும் ஜூன் மாதத்திலிருந்து இது கணிசமாக உயர்ந்துவிட்டது.*

*(ஆ) நிலக்கரி உற்பத்தியில் 1940 ஆம் ஆண்டு, அதிக உற்பத்தியை எட்டிய ஆண்டு. அதன் பிறகு ஆண்டு தோறும் உற்பத்தி, படிப் படியாக குறைந்து வருகிறது. ஜூன் 1943ல் உற்பத்தி கவலை தருமளவுக்குக் குறைந்துவிட்டது. 1942 ஆம் ஆண்டுடன் ஒப்பிடும்போது இந்த ஆண்டு ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் உற்பத்தி மாதந்தோறும் 3,53,000 டன்கள் குறைந்துவிட்டது. செப்டம்பரில் இந்த வீழ்ச்சி 299,000 டன்னாக உள்ளது.*

*(இ) 1943 ஆகஸ்டில் இந்தத் தொழில் சம்பந்தப்பட்ட தனி நபர் ஒருவர் அரசுக்கு எச்சரிக்கை அளித்தார். அந்த சமயத்திலே அரசு நிலைமையை நன்கு புரிந்து கொண்டிருந்தது. பரிகார நட வடிக்கைகள் எடுக்க தீவிர கவனம் செலுத்தி வந்தது. நிலைமையில் அபிவிருத்தி காண எடுக்கப்பட்டுள்ள முக்கியமான நடவடிக்கைகள் வருமாறு:*

(1) நிலக்கரியை எடுத்துச் செல்ல முக்கியமாக வங்காளத்திலும், பீகார் நிலக்கரி பிரதேசங்களிலும் அதிகமான ரயில் பெட்டிகள் ஒதுக்கப்பட்டுள்ளன.

(2) சுரங்கங்களுக்கு வேண்டிய சாமான்கள், இயந்திர சாதனங்கள் குறித்த நேரத்தில் கிடைக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

(3) மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்கள் பணிபுரிய அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

(4) நிலக்கரிப் பிரதேசங்களில் சுரங்கத்தொழிலாளர்களிடையே ராணுவ நடவடிக்கைகளின் தலையீட்டைத் தடுக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

(5) முக்கியமாக உணவு மற்றும் இதர நுகர்வோர் பொருள்கள் சுரங்கப் பகுதிகளில் அதிக அளவில் கிடைக்கத் திட்டங்கள் தயாரிக்கப்படுகின்றன. சுரங்கத் தொழிலாளர்களுக்குக் குறைந்த விலையில் போதுமான அளவு ரேஷன் கிடைப்பதை உறுதி செய்ய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

(6) சுரங்கத் தொழிலாளர்களின் ஆரோக்கியம், மற்றும் பொது நலன்களைப் பேணிக்காக்க வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் அதிகாரிகள் நியமிக்கப்பட உள்ளனர்.

திரு. கே.சி. நியோகி : நிலக்கரிப் பற்றாக்குறைக்கான முக்கிய காரணங்களை மாண்புமிகு உறுப்பினர் சுட்டிக்காட்டுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, நிலக்கரி பற்றாக்குறை ஏற்பட முக்கிய காரணம், சந்தேகத்துக்கு இடமின்றி தொழிலாளர் பற்றாக்குறைதான். ''உணவு உற்பத்தியைப் பெருக்குங்கள்'' என்ற இயக்கமும் நிலக்கரிச் சுரங்கங்கள் அருகே ஆரம்பிக்கப்பட்டுள்ள ராணுவ தொழிற்சாலைகளும் தொழிலாளர்களைச் சுரங்கப் பகுதிகளிலிருந்து இழுத்துக் கொண்டதுதான் அதற்குக் காரணம்.

# 135

## *டில்லியில் நடைபெற்ற நிலக்கரி வாணிக மாநாடு

251. கே.சி. நியோகி : (அ) 23 அக்டோபரில், மாண்புமிகு உறுப்பினரின் தலைமையில் டில்லியில் நடைபெற்ற நிலக்கரி வாணிகப் பிரதிநிதிகள் மற்றும் அத்தொழில் சம்பந்தப்பட்டவர்களின் மாநாட்டின் முக்கிய நோக்கம் நிலக்கரி உற்பத்தியை அதிகரிப்பதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? அப்படியென்றால் இந்த மாநாட்டை நடத்துவதற்கான முடிவு எத்தகைய சூழ்நிலையினால் எடுக்கப்பட்டது? மேலும் அங்கு நடந்த விவாதத்தின் முடிவு என்ன?

(ஆ) அதிக அளவு நிலக்கரி ஏற்றுமதியை ராணுவத் தேவைகளுக்காக ஊக்குவிப்பது அவசியம் என்பதே நிலக்கரி உற்பத்தியை தற்பொழுது அதிகரிக்க வேண்டுமென்ற நடவடிக்கைகளுக்கு ஓரளவாவது காரணமாக உள்ளதா அல்லது வேறு காரணம் ஏதாவது உள்ளதா?

(இ) தொழிலாளர் நலத்துறை, மாநாட்டில் பங்கு கொண்டவர்களுக்கு எழுதிய கடிதத்தில், நிலக்கரி உற்பத்தியின் அளவு தொடர்ந்து குறைந்து வருவதைக் குறிப்பிட்டிருந்ததுடன், இந்தியாவிலும் வெளி நாடுகளிலும் இந்திய நிலக்கரிக்கு அதிகத் தேவை இருப்பதையும் குறிப்பிட்டு இவை மத்திய அரசுக்கு மிகுந்த கவலையை அளித்துள்ளதாகத் தெரிவிக்கப்பட்டிருந்தது. முதல் முதலாக இந்திய அரசுக்கு எப்பொழுது கவலை தோன்ற ஆரம்பித்தது? இதற்கான சூழ்நிலைகள் யாவை? இந்த நிலைமையில் மாற்றம் காண அரசு என்னென்ன நடவடிக்கைகளை எடுத்துள்ளது? அதனுடைய பலன்கள் என்ன?

(ஈ) அரசு அல்லது தனியார் கணக்கில் நிலக்கரி ஏற்றுமதியை ஊக்குவிக்கும் அரசின் கொள்கையினால் உள்நாட்டில் நிலக்கரி வினியோகம் எந்த விதத்திலாவது பாதிக்கப்படுமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17 , 1943, பக்கம் 421-422.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். தொழிலாளர் பற்றாக்குறையே உற்பத்திச் சரிவுக்கு முக்கியமான காரணங்களில் ஒன்று என்று அரசு நம்புகிறது. இந்தப் பற்றாக்குறை யைச் சரிக்கட்டிவிட்டால் உற்பத்திச் சரிவு நிறுத்தப்படுவதுடன் உற்பத்தி இலக்கை அடைவது சாத்தியமாகும். இதற்காக அரசு எடுக்கும் எந்த நடவடிக்கைகளுக்கும் சுரங்க உரிமையாளர்களின் முழு ஒத்துழைப்பையும் பெறுவதில் அரசு மிகவும் ஆர்வமாக உள்ளது. வங்காளம் மற்றும் பீகாரில், சுரங்கத் தொழிலாளர்களுக்கு உணவு தானியங்கள் மற்றும் இதர பண்டங்களின் சீரான வினியோ கத்திற்கு, சங்க உரிமையாளர் சங்கங்கள் ஆரம்பிக்கும் திட்டங் களை செயல்படுத்துவதற்கு இந்திய அரசு இந்தச் சுரங்கங்களுக்கு உதவி செய்யும். இதற்கான ஒப்பந்தமே கூட்டத்தில் நடந்த விவா தத்தின் முக்கிய பயன் என்று கூறலாம்.

(ஆ) இந்தியத் தொழில் துறையின் தேவை அதிகரித்ததுடன் உற்பத்தி குறைந்துள்ளதால் உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய் வதற்கு நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்க வேண்டியது அவசிய மாகிறது.

(இ) ஆம். போர் ஆரம்பத்திலிருந்தே நிலக்கரி உற்பத்தியை அதன் உயர்ந்த அளவில் வைத்திருக்க அரசு ஆவலாக உள்ளது. 1940 ஆண்டே நிலக்கரி உற்பத்தியின் உச்ச கட்டம் என்று கூறலாம். 1940ஆம் ஆண்டு உற்பத்தியைவிட 1941ஆம் ஆண்டு உற்பத்தி அளவு சிறிது குறைந்தது. 1942ல் இது மேலும் குறைந்தது. 1943 ஆம் ஆண்டு உற்பத்தி அளவு 1942ஆம் ஆண்டு அளவை விட குறையும் என்று தெரிகிறது.

ராணுவத் திட்டங்கள், ரயில்வேக்கள் மற்றும் போர்த் தள வாடத் தொழிற்சாலைகள் போன்றவற்றின் வளர்ந்துவரும் தேவை களைத் தற்பொழுதுள்ள உற்பத்தியால் சமாளிக்க முடியாது என்பது இந்த ஆண்டு ஜூன் வாக்கில் தெளிவாகி விட்டது. எனவே நுகர் வோர்களுக்கு ரேஷன் முறையில் நிலக்கரி வினியோகிக்கப்பட்டது. ரேஷன் வினியோகத்திற்கும் மற்றும் பிறதேவைகளைச் சமாளிக் கவும் ஆண்டுக்கு 2 கோடி 56 லட்சத்து ஐம்பதாயிரம் டன் நிலக்கரி கிடைப்பதற்கு அரசு உத்தரவாதம் செய்ய வேண்டும். இதுவரை கிடைத்த அளவை விட இது அதிகமான அளவாகும். எனவே உற்பத்தியைப் பெருக்க எடுக்கப்படும் நடவடிக்கைகள் மிகவும் அவசரத் தேவையாகி விட்டன.

நிலைமையைச் சீர்செய்ய எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் சம்பந்தமாக அவருடைய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 15 'இ' பிரிவுக்கு அளிக்கப்பட்டுள்ள பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனிக்கவும். இந்த நடவடிக்கைகள் மற்றும் இதர நடவடிக்கை களின் விளைவுகளைத் தெரிந்துகொள்ள இன்னும் சிறிது காலம் பிடிக்கும்.

(ஈ) இல்லை.

**திரு. கோவிந்த் வி. தேஷ்முக் :** நிலக்கரி உற்பத்தி அளவை அதிகரிக்க, நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்கள் நிலத் தடியில் பணிபுரிகிறார்கள் என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அப்படித்தான் நான் சொன்னேன்.

**திரு. கோவிந்த் வி. தேஷ்முக்:** அப்படியென்றால், எவ்வளவு காலத்திற்குப் பெண் தொழிலாளர்கள் இந்தச் சுரங்கங்களில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருப்பார்கள் என்பதை மாண்புமிகு உறுப்பினர் கூறுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நெருக்கடி நீடிக் கும் வரை.

**திரு. கோவிந்த் வி. தேஷ்முக் :** இந்தச் சுரங்கங்களில் நிலத் தடியில் பணிபுரிய வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ள பெண் தொழி லாளர்களைக் கவனித்துக் கொள்ள என்ன முன்னெச்சரிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்பதை மாண்புமிகு உறுப்பினர் கூற முடி யுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** சில நடவடிக் கைகளைப் பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கிறோம். எனது மதிப் பிற்குரிய உறுப்பினர் அடுத்த கூட்டத் தொடரில் ஒரு கேள்வியை அவையில் முன்வைத்தால் நான் சில தகவல்கள் கொடுக்க முடியும்.

**திரு. கே.சி. நியோகி:** நிலக்கரி ஏற்றுமதியை ஊக்குவிக்க மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசு ஏதாவது பரிந்துரை அளித் துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விஷயத் தைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகிம்) :** அடுத்த கேள்வி.

# 136

## *புதுடில்லி மற்றும் கல்கத்தாவிலுள்ள இந்திய அரசு அச்சகங்களில் மேலாளர்கள் நியமனம்

253. எச்.ஏ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்குறிப்பிட்டவைகளுக்கு தயவு செய்து பதில் தெரிவிப்பாரா:

(அ) அண்மையில், புதுடில்லி மற்றும் கல்கத்தாவிலுள்ள இந்திய அரசு அச்சகங்களில் மேலாளர்களை நியமனம் செய்வதில் மிக மூத்த முஸ்லீம் உதவி மேலாளர்களின் உரிமைகள் புறக்கணிக்கப்பட்டதை அவர் அறிவாரா? அப்படியென்றால் அதற்கான காரணம் என்ன?

(ஆ) சட்டமன்றத்துறை, வழங்கீட்டுத்துறை, கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகம் ஆகியவைகளில் பணியாற்ற எழுத்தர்களாகத் தேர்வு செய்யப்பட்ட முஸ்லீம் அல்லாத எழுத்தர்களை தமது அலுவலகத்திலிருந்து விடுவித்த புது டில்லி அரசு அச்சக மேலாளர், அண்மையில் அரசாங்க எழுதுபொருள் மற்றும் அச்சுத்துறை அலுவலகத்தில் எழுத்தர் வேலைக்கு தேர்வு செய்யப்பட்ட ஒரு முஸ்லீம் எழுத்தரை தமது அலுவலகத்திலிருந்து விடுவிக்க மறுத்துவிட்டது உண்மையா?

(இ) லைனோ அச்சுப் பிரிவில் பணியில் இருந்த 6 முஸ்லீம் ஊழியர்களுக்குப் புது டில்லியிலுள்ள அரசு அச்சக உதவி மேலாளர் மாற்றல் உத்தரவு அளித்துள்ளது உண்மையா? அப்படியென்றால் இப்படி ஒட்டுமொத்தமான முஸ்லீம் ஊழியர்களின் மாற்றல்களுக்குக் காரணம் என்ன?

(ஈ) புதுடில்லியிலுள்ள இந்திய அரசு அச்சகத்தில் பிழை திருத்துபவர் பதவிக்கு பழைய சம்பள விகிதத்தில் இருந்த ஒரு

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17 , 1943, பக்கம் 424-25.

முதுநிலை ஊழியரின் உரிமையைப் புறக்கணித்துவிட்டு புதிய சம்பள விகிதத்தில் ஒரு இளநிலை ஊழியரை தற்காலிக மேலாள ராக இருந்தவர் நியமித்தது உண்மையா?

(உ) நியமனங்கள் செய்யவும், பதவி உயர்வு அளிக்கவும், மாற்றல்கள் செய்யவும், சில பதவிகளை தேர்வு நிலைப் பதவிகளாக நிர்ணயிக்கவும் அரசு அச்சகங்களின் மேலாளர் மற்றும் உதவி மேலாளர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதா? அப்படியென் றால் இந்த விஷயங்களில் வழிகாட்டுவதற்கு ஏதாவது விதிகள் இயற்றப்பட்டுள்ளனவா?

(ஊ) எல்லாச் சந்தர்ப்பங்களிலும் இந்த விதிகள் சரியாகப் பின்பற்றப்படுகின்றனவா என்பதைக் கண்டறிய ஒரு விசாரணைக்கு மாண்புமிகு உறுப்பினர் ஏற்பாடு செய்வாரா?

(எ) இந்திய அரசு அச்சக அதிகாரிகளின் நியாயமற்ற தான்தோன்றித்தனமான நடவடிக்கைகளைப் பற்றி அடிக்கடி ஏராளமான புகார்கள் எழுப்பப்படுவதால் 'இ' பிரிவில் குறிப்பிட் டுள்ள அதிகாரங்களுடன் கூடிய ஒரு சுயேச்சையான குழுவை நியமிக்கும் யோசனையை மாண்புமிகு உறுப்பினர் கவனத்தில் கொள்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) இல்லை.

(ஆ) இல்லை.

(இ) ஆம், ஒவ்வொரு ஊழியருக்கும் கடினமான வேலை யும் எளிய வேலையும் மாறிமாறிக் கிடைப்பதற்காக வழக்கமாக மூன்று மாதத்திற்கு ஒரு முறை இந்த மாதிரி பல்வேறு பிரிவுகளுக் கிடையே மாற்றல்கள் செய்யப்படுவது வழக்கம். மூன்று முஸ்லீம் அல்லாத அச்சுக் கோப்பவர்கள் முஸ்லீம் ஊழியர்களுடன் மாற்றல் பெற்றனர். 2 முஸ்லீம் ஊழியர்கள் லைனோப் பிரிவுக்கு மாற்றம் செய்யப்பட்டுள்ளனர்.

(ஈ) ஆம். பிழை திருத்தலை சரிபார்ப்பவர் பதவி தேர்வு மூலம்

நிரப்பப்படுவதால் திறமையின் அடிப்படையில், விண்ணப்பித் தவரில் சிறந்தவருக்கு அளிக்கப்பட்டது.

(உ) இந்திய அரசின் அச்சக மேலாளர்கள் அத்துறையின் கையேட்டிலுள்ள விதிகளின்படி சில குறிப்பிட்ட பதவிகளுக்கு நியமனம் செய்யவும், பதவி உயர்வு அளிக்கவும் அதிகாரம் பெற்றுள்ளனர். அவர்கள் எந்தப் பதவியையும் தேர்வுநிலைப் பதவி யாக நிர்ணயம் செய்யும் தகுதி பெற்றவர்களல்லர்.

(ஊ) மற்றும் (எ) மேலே குறிப்பிட்ட எந்த முறைகேடுகளும் நடைபெறாததால் பரிந்துரைக்கப்பட்ட நடவடிக்கைகளை எடுக்க வேண்டிய அவசியமில்லை.

**திரு. எச்.எ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட் :** 'ஈ' பிரிவு சம்பந்த மாக ஒரு முஸ்லீமின் உரிமை சில காரணங்களுக்காக புறக்கணிக்கப் பட்டதாக எனது மதிப்பிற்குரிய நண்பர் கூறினார். யாருடைய உரிமை புறக்கணிக்கப்பட்டதோ, அந்த முஸ்லீம் ஊழியர் 22 ஆண்டுகளாகப் பணியாற்றுகிறார் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எனக்கு எந்த விதத் தகவல் இல்லாவிடினும் எனது மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறுவதை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

**திரு. எச்.எ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட் :** பிறகு அ, ஆ பிரிவு களுக்கான பதில் எதிர்மறையானது என்றுதான் அவர் கூறினார். 'அ' பிரிவைப் பொறுத்தவரையில் இந்த நியமனங்கள் இந்த ஆண்டில் நடந்தன என்பதை நான் அவருக்குத் தெரிவித்துக் கொள் கிறேன்.

**மாணபுமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்கு முன் னறிவிப்பு தேவை.

# 137

## * தொழிற்சங்கங்களுக்கு அரசு வெளியீடுகள்

**35. திரு. முகமது அஸார் அலி :** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைக் கூறுவாரா:

(அ) ஒன்றுக்கு மேற்பட்ட மாகாணங்களில் செயல்படும் பதிவு. செய்யப்பட்ட மற்றும் பதிவு செய்யப்படாத தொழிற்சங்கங்களின் பெயர்களைத் தனித்தனியாகவும்,

(ஆ) அரசு வெளியீடுகள் இலவசமாக வழங்கப்படும் பதிவு செய்யப்பட்ட மற்றும் பதிவு செய்யப்படாத தொழிற் சங்கங்களின் பெயர்களைத் தனித்தனியாகவும்,

(இ) முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டிற்கு, மற்றும் குழுக் களுக்கு அழைக்கப்பட்ட, பதிவு செய்யப்பட்ட மற்றும் பதிவு செய்யப்படாத தொழிற்சங்கங்களின் பெயர்களைத் தனித்தனியாக வும் வெளியிடுவாரா?

'ஆ' 'இ' பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களைக் கையாளும் முறைகளில் வேறுபாடுகள் இருந்தால் அதற்கான காரணங்கள் என்ன என்பதையும் அவர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஒன்றுக்கு மேற் பட்ட மாகாணங்களில் செயல்படும் பதிவுசெய்யப்பட்ட தொழிற் சங்கங்களின் பட்டியல், ஏற்கெனவே கையிருப்பிலிருந்த விவரங் களிலிருந்து தயாரிக்கப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது. பதிவு செய்யப் படாத தொழிற்சங்கங்களின் விவரங்கள் இல்லை.

(ஆ) ஒன்றுக்கு மேற்பட்ட மாகாணங்களில் செயல்படும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 17, 1943, பக்கம் 438-440.

தொழிற்சங்கங்களைப் பற்றித்தான் மரியாதைக்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என நினைக்கிறேன்.

அகில இந்திய தொழிலாளர் அமைப்புகளான அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் மற்றும் இந்திய தொழிலாளர் சம்மேளனம் ஆகியவற்றுக்கு அவர்கள் கேட்கும்போது, இலவசமாக சில சிறு அறிக்கைகளும், ஆண்டு அறிக்கைகளும், இதர விஷயங்களும் அனுப்பப்படுகின்றன. தனிப்பட்ட தொழிற்சங்கங்கள் எதற்கும் அரசு வெளியீடுகள் இலவசமாக அனுப்பப்படவில்லை.

(இ) முத்தரப்புத் தொழிலாளர் மாநாட்டின் சட்ட திட்டங்களும் தொழிலாளர் நிலைக்குழுவும் பின்வரும் முறையில் தொழிலாளர் பிரதிநிதிகளின் நியமனத்துக்கு வழி வகுத்துள்ளன:

(i) *தொழிலாளர் மாநாட்டிற்கு -*

தொழிலாளர் பிரதிநிதிகள் 11 பேர். அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசின் உடன்பாட்டுடன் 4 பேரையும், இந்திய தொழிலாளர் சம்மேளனத்தின் உடன்பாட்டுடன் 4 பேர்களையும் மற்ற தொழிற்சங்கங்களின் சார்பில் 3 பேரையும் அரசு நியமிக்கிறது.

(ii) *தொழிலாளர் நிலைக்குழுவிற்கு -*

தொழிலாளர்கள் பிரதிநிதிகள் 5 பேர். அதில் 4 பேர்கள் இரண்டு அகில இந்திய தொழிற்சங்க அமைப்புகளின் உடன்பாட்டுடனும்; சுதந்திரமாக ஒருவரையும் மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் நியமிப்பார்.

மாநாடு மற்றும் குழுக்களுக்கு நியமனம் செய்யப்படுவது, அவற்றின் சட்ட திட்டங்களைப் பொறுத்தது. பல்வேறு தொழிற் சங்கங்களுக்கிடையே எந்தவித வேறுபாடும் காட்டப்படுவதில்லை.

(ஈ) (ஆ) மற்றும் (இ) பிரிவுகளுக்கான பதில்களிலிருந்து எந்தவிதமான பாரபட்சமும் (தனிச்சலுகைகளும்) இல்லை என்பதை தெரிந்து கொள்ள முடியும்.

## பல்வேறு மாகாணங்களில் உள்ள பதிவு செய்யப்பட்ட மத்திய தொழிற்சங்கங்கள் :

*அச்சகங்கள் -*

*1) இந்திய அரசு அச்சுத் தொழிலாளர்கள் சங்கம்*

*கப்பல் பணியாளர்கள் -*

*2) இந்திய வாணிகக் கப்பல் அதிகாரிகள் சங்கம், பம்பாய்.*

*பல்வேறு வகைப்பட்ட சங்கங்கள் -*

*3) அகில இந்திய தந்தி ஊழியர்கள் சங்கம், லாகூர்.*

*4) இந்தியச் சர்க்கரைத் தொழில் ஊழியர்கள் சங்கம், லக்னோ.*

*5) இந்தியச் சர்க்கரை ஆலைச் சங்கம், கல்கத்தா.*

*6) இந்தியச் சணல் ஆலைச் சங்கம், கல்கத்தா.*

*7) இந்திய இம்பீரியல் வங்கி, இந்திய ஊழியர்கள் சங்கம், கல்கத்தா.*

*8) புகையிலை உற்பத்தித் தொழிலாளர் சங்க மைய அமைப்பு.*

*9) அகில இந்திய தந்தித் தொழிலாளர் சங்கம், லாகூர்.*

*10) இந்தியத் தென் மாகாணங்களுக்கான சர்க்கரை விற்பனை வாரியம், சென்னை.*

*ரயில்வே மற்றும் போக்குவரத்து -*

*11) வடமேற்கு ரயில்வே இளநிலை எழுத்தர்கள் சங்கம்.*

*12) வங்காள அசாம் ரயில் பாதை தொழிலாளர் சங்கம்.*

*13) அசாம் வங்காள ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம்.*

*14) கிழக்கிந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம், கல்கத்தா.*

*15) வங்காளம் மற்றும் அசாம் ரயில்வே ஊழியர் சங்கம்.*

*16) பி.என்.ஆர். ஊழியர் சங்கம், கல்கத்தா.*

*17) பி,என். ரயில்வே இந்தியத் தொழிலாளர் சங்கம், கரக்பூர்.*

*18) வடமேற்கு ரயில்வேத் தொழிலாளர் சங்கம், கராச்சி.*

19) ஜி.ஐ.பி. ரயில்வேத் தொழிலாளர் சங்கம், பம்பாய்.

20) ஜி.ஐ.பி. ரயில்வேக் கணக்கர்கள் சங்கம், பம்பாய்

21) பி.பி. அண்டு சி.ஐ. ரயில்வேத் தொழிலாளர் சங்கம், அஹமதாபாத்.

22) பி.பி. அண்டு சி.ஐ. ரயில்வேத் தொழிலாளர் சங்கம், பம்பாய்.

23) இந்தியா மற்றும் பர்மா ரயில்வேத் தொழிலாளர் தேசிய சங்கம், பம்பாய்

24) பி.பி. அண்டு சி.ஐ. ரயில்வேத் தொழிலாளர் சங்கம், பம்பாய்.

25) ஜி.ஐ.பி. ரயில்வே ஒப்பந்தத்தார்கள் மற்றும் லைசென்ஸ் பெற்ற கூலிகள் சங்கம், புசாவல்.

26) வடமேற்கு ரயில்வேக் கணக்கர்கள் சங்கம், லாகூர்.

27) வடமேற்கு ரயில்வே சங்கம், லாகூர்

28) கிழக்கிந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம், லக்னௌ.

29) ரயில்வேத் தொழிலாளர் சங்கம், மொரதாபாத்.

30) கிழக்கிந்திய ரயில்வே கார்டுகள் சங்கம், லக்னௌ.

31) இந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம், அலகாபாத்.

32) பி.என். ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம், கோரக்பூர்.

33) இ.பி. ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம்.

34) கணக்கர்கள் சங்கம், கிழக்கிந்திய ரயில்வே.

35) கணக்கர்கள் சங்கம், வடமேற்கு ரயில்வே, லாகூர்

36) அகில இந்திய ரயில்வே இயந்திரத் தொழிலாளர் பெடரல் சங்கம், லாகூர்.

37) டில்லி சோனிபட் பேருந்து போக்குவரத்துச் சங்கம், சோனிபட்.

38) இட்டஹட் மோட்டர் சங்கம், பானிபட்.

39) வடமேற்கு ரயில்வே கார்டுகள் சங்கம், லாகூர்.

40) வடமேற்கு ரயில்வேத் தொழிலாளர்களின் ஒருங்கிணைந்த சங்கம், லாகூர்.

41) கிழக்கிந்திய ரயில்வேப் பயணச்சீட்டுப் பரிசோதகர்கள் சங்கம், கல்கத்தா.

42) கிழக்கிந்திய ரயில்வேக் கூட்டுக் கரங்கள் சங்கம், ஹௌக்ளி.

43) அகில இந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம், நாக்பூர்.
44) வடமேற்கு ரயில்வே தொழிலாளர் ஒன்றுபட்ட சங்கம், லாகூர்.
45) டில்லி-கர்முக்தேசர் மோட்டார் சங்கம்.
46) கிழக்கிந்திய ரயில்வே முஸ்லீம் ஊழியர்கள் சங்கம், லக்னௌ.
47) எஸ்.எஸ். லைட் ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம், சகரன்பூர்.
48) பி.என். மேற்கு ரயில்வே தொழிலாளர்கள் சங்கம், கோரக்பூர்.
49) கிழக்கிந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் சங்கம், கல்கத்தா.
50) மெட்ராஸ் மற்றும் தென்மராட்டா ரயில்வேத் தொழிலாளர் சங்கம், பெரம்பூர், சென்னை.
51) தென் இந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம், பொன்மலை, திருச்சிராப்பள்ளி.
52) தென் இந்திய ரயில்வேத் தொழிலாளர் சங்கம், விழுப்புரம்.
53) அகில இந்திய ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனம், மைலாப்பூர், சென்னை.

# 138

## சமரச அதிகாரி (ரயில்வேக்கள்) மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளர் அலுவலகத்தின் வகுப்புவாரி இயைபு

1. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தயை கூர்ந்து தெரிவிப்பாரா:

(அ) சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளர் அலுவலகத்தில் எத்தனை அலுவலக எழுத்தர்கள் உள்ளனர்?

(ஆ) 1942 டிசம்பரிலிருந்து 1944 பிப்ரவரி இரண்டாவது வாரம் வரை எத்தனை ரயில்வே தொழிலாளர்களின் ஆய்வாளர்கள் தற்காலிகமாக அல்லது நிரந்தரமாக நியமிக்கப்பட்டுள்ளனர்?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 24-25.

(இ) இந்த நியமனங்களில் எத்தனை பேர்

(i) தாழ்த்தப்பட்ட வகுப்பினர்?

(ii) சாதி இந்துக்கள் எத்தனை பேர்?

(iii) முஸ்லீம்கள் எத்தனை பேர்?

(iv) மற்ற சமூகத்தைச் சேர்ந்தவர்கள் எத்தனை பேர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) சுருக்கெழுத்தாளர் உட்பட 11 பேர்.

(ஆ) 1942 டிசம்பரிலிருந்து 1944 ஜனவரி வரை 5 தற்காலிக ஆய்வாளர்கள் நியமிக்கப்பட்டனர்.

(இ) (i) மூன்று. (ii) எவருமில்லை. (iii) இரண்டு.

# 139

## *ரயில்வே தொழிலாளர்களின் ஆய்வாளர்களில் முஸ்லீம்கள்

2. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : (அ) திரு. ஜாதவ் சமரச அதிகாரியாக (ரயில்வே) முதல்தடவை நியமிக்கப்பட்ட போது, பயிற்சி பெற்ற ரயில்வே தொழிலாளர்களின் ஆய்வாளர்களாகத் தற்காலிகமாக பணியாற்றியவர்களின் எண்ணிக்கை எவ்வளவு என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) இதில் முஸ்லீம்கள் எத்தனை பேர்? தற்காலிக ஆய்வாளர்களாகப் பணிபுரிந்த முஸ்லீம்கள் எத்தனை பேர் நிரந்தரமாக்கப்பட்டனர் அல்லது நிரந்தரமாகக்கூடிய பணி இடங்களில் அமர்த்தப்பட்டனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இரண்டு.

(ஆ) இரண்டு பேரும் முஸ்லீம்கள்தான். ஒருவர் வேறு இடத்துக்கு வேலைக்குச் சென்று விட்டார். மற்றொருவர் தற்பொழுது பதிலியாக தற்காலிகமாக ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளராக உள்ளார்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 25.

# 140

## *ரயில்வே தொழிலாளர்களின் ஆய்வாளர்களாக தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் நியமனம்

3. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : டாக்கா, டாட்டா நகர், ஆஜ்மீர் அசன்சால்; ஜல்பைகுரி ஆகிய நகரங்களில் பணிக்கு நிய மிக்கப்பட்ட ஐந்து ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர்கள், மத்திய சிவில் வினியோகத்துறையில் அல்லது ராணுவத் துறை யில் சிவிலியன் தொழிலாளர் நல அதிகாரிகளாக மாற்றுப்பணிக்குச் சென்று விட்டது உண்மையா?

(ஆ) யுத்தம் நடைபெறும் காலம் முழுவதும் நீண்டகாலம் நிரந்தரப்படுத்தப்படாத இந்த ஐந்து காலி இடங்களுக்கும், ஆறு மாதத்திற்கு மேல் தற்காலிகமாக பணியாற்றி வந்த அனுபவமுள்ள இரண்டு முஸ்லீம் ஊழியர்களின் உரிமையைப் புறக்கணித்துவிட்டு, தாழ்த்தப்பட்ட இந்து வகுப்பைச் சேர்ந்த ஆய்வாளர்கள் நியமிக்கப் பட்டுள்ளனர் என்பதும், சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வேத் தொழிலாளர்களின் மேற்பார்வையாளரால் இந்த நியமனம் தன் னிச்சையாகச் செய்யப்பட்டுள்ளது என்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். ஆனால் மாற்று வேலைக்கு அனுப்பப்பட்டவர்கள் எல்லோரும் சிவில் வினியோகத் துறைக்கோ அல்லது சிவிலியன் தொழிலாளர் நல அதிகாரிகளாகவோ அனுப்பப்படவில்லை.

(ஆ) இல்லை. அதே உறுப்பினரின் கேள்வி எண் 1 பிரிவு (இ)க்கு உள்ள பதில் இதைத் தெளிவாக்கும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 25.

# 141

## *ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர்களாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நியமனம்

4. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : இந்த ஐந்து நீண்டகால காலி இடங்கள் தோன்றக் காரணம், திரு. ஏ. ஹமீத் திரு. ஏ. கரீம் ஆகிய இரண்டு முஸ்லீம்கள், ஒரு சீக்கியர் டி சிங் மற்றும் இரண்டு சாதி இந்துக்கள் வேறு இடத்துக்கு வேலைக்கு அனுப்பப் பட்டதுதான் என்பது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : பணிமாற்றலினால்தான் காலி இடங்கள் உருவானது என்பது உண்மைதான்.

# 142

## *ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர்களாக தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நியமனம்

5. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி: தேர்வு ஆணையத்தால் தேர்ந்தெடுக்கப்படாமலும், விளம்பரம் எதுவும் கொடுக்கப்படாமலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஐந்து பேர் ரயில்வே தொழிலாளரின் ஆய்வாளராக நியமிக்கப்பட்டுள்ளனர் என்பது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை. மூன்று தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மட்டும் நியமிக்கப்பட்டுள்ளனர். விளம்பரத்தின் மூலமோ அல்லது தேர்வு ஆணையத்தின் மூலமோ தேர்வு செய்யப்படவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 25

★ மேற்படி பக். 25.

# 143

## *ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர்களாக தாழ்த்தப்பட்ட வகுப்பினர் நியமனம்

6. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : எந்தவித தேர்வு முறையும் இன்றி ஐந்து புதிய ஆய்வாளர்களை தாழ்த்தப்பட்ட வகுப்பிலிருந்து சமரச அதிகாரி மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளர் நியமித்தது சரியா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? அவருடைய மாகாணமான பம்பாயைச் சேர்ந்த அவரது உறவினர்களா அவர்கள்?

(ஆ) தமது சொந்த உறவினர்களையும், வகுப்பினர்களையும் எழுத்தர்களாகவும், ஆய்வாளர்களாகவும் வேலைக்கு அமர்த்துவது சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வே தொழிலாளர்களது மேற்பார்வையாளரின் நேர்மையான நடவடிக்கையா? பிற மாகாணங்களிலும் இந்த வேலைக்குத் தகுதியான, படித்த, தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் இருக்கின்றனர் என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

(இ) ஆய்வாளர்களாக தற்காலிகமாக நன்கு பணியாற்றியவர்களை ஏன் நியமித்திருக்கக்கூடாது?

(ஈ) தேர்வு ஆணையத்தைக் கலந்து கொள்ளாமல் ரயில்வேத் தொழிலாளர்களின் மேற்பார்வையாளர் ஏன் ஆய்வாளர்களை நியமனம் செய்தார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) (இ) (ஈ) முந்தைய கேள்விக்கு அளித்த பதிலை கவனிக்க வேண்டுகிறேன். எழுத்தர்களைப் பொறுத்தமட்டில் 11 பேர்களில் ஒரே ஒருவர் மட்டும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். தற்பொழுதுள்ள சமரச அதிகாரி (ரயில்வே) யினால் நியமிக்கப்பட்டவர்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 25-26.

# 144

## *ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர்களாக தாழ்த்தப்பட்டவர்கள் நியமனம்

7. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : ஒரு தேர்வாணையத்தின் மூலம் இந்த ஐந்து ரயில்வே தொழிலாளர்களுக்கான ஆய்வாளர்கள் பதவிக்கான காலி இடங்களை நிரப்பும் ஆலோசனையை ஏற்றுக்கொள்ள தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் முன்வருவாரா? இதன் மூலம் எல்லா வகுப்பினர்களின் நியாயமான உரிமைகளுக்கும் பாதகம் ஏற்படாது அல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஆய்வாளர்களுக்கான அந்தக் காலி இடங்களை நிரப்புவது பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

# 145

## +சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வேத் தொழிலாளர்களுக்கான மேற்பார்வையாளர் அலுவலகத்தில் வங்காளி ஆய்வாளர்கள்

8. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் தொழிலாள்ர்களுக்கான மேற்பார்வையாளர் அலுவலகத்தில் எத்தனை வங்காளிகள் ஆய்வாளர்களாக உள்ளனர்? ஒரே ஒரு வங்காளி மட்டும் இருந்தால் ஏன் அதிகமான வங்காளிகள் நியமிக்கப்படவில்லை?

(ஆ) இந்துக்கள் மற்றும் முஸ்லீம் வகுப்பினரைச் சார்ந்த ஏராளமான தகுதி வாய்ந்த வங்காளிகள் வேலைக்காகக் காத்திருக்கிறார்கள் என்பது உண்மையல்லவா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 26.

+ மேற்படி அதே பக். 26

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இரண்டு.

(ஆ) வேலைக்கு நியமனம் செய்யத் தகுதி வாய்ந்த பல வங்காளிகள் இருக்கலாம், ஆனால் வேலைக்கு தேர்ந்தெடுக்கப்படு பவரின் மாகாணத்தைப் பொறுத்து நியமனம் அளிக்கப்பட வேண்டு மென்ற கருத்து தவறானது.

# 146

## * சமரச அதிகாரியும் (இரயில்வே) மற்றும் இரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளருமான திரு. டி.ஜி. ஜாதவின் தகுதிகள்

9. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : தற்பொழுது சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் இந்திய அரசின் ரயில்வேத் தொழிலாளர் களின் மேற்பார்வையாளராக திரு. டி.ஜி. ஜாதவ் இருக்கிறாரா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரி விப்பாரா? அப்படியென்றால் அவரது தகுதிகள் என்ன? அரசுத் துறையிலோ அல்லது ரயில்வேத் துறையிலோ அவர் பணியாற்றி இருக்கிறாரா?

(ஆ) சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வேத் தொழி லாளர்களின் மேற்பார்வையாளர் அலுவலகத்தில் தலைமை எழுத் தராக பணியாற்றும் திரு. அதுர் ரஹ்மான் பூரி ஆய்வாளராகப் பதவி இறக்கம் செய்யப்பட்டாரா? அப்படியென்றால் அதற்கான காரணங் கள் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். திரு. டி.ஜி. ஜாதவ் அந்தப்பதவியில்தான் இருக்கிறார். தற்பொழுதுள்ள பணிக்கு முன்பு, அவர் பம்பாய் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்ட உறுப்பினராக இருந்தார். பம்பாய் பிற்படுத்தப்பட்ட வகுப் பினர் வாரியத்தின் தேர்ந்தெடுத்த உறுப்பினராக இருந்ததுடன் தெரிந் தெடுத்த பல குழுக்களிலும், வளர்ச்சிக் குழுக்களிலும், ஆலோசனைக்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 26.

குழுக்களிலும் பணியாற்றியிருப்பதுடன் கிழக்கு கந்தேஷ் மாவட்டத்தின் கூட்டுறவு சங்கங்களின் மத்தியஸ்தராகவும் இருந்திருக்கிறார். அவர் ஒரு பி.ஏ., எல்.எல்.பி. பட்டதாரி. 1934ல் பட்டப் படிப்பை முடித்த அவர் 1940ல் சட்டத் துறையில் பட்டம் பெற்றார். அரசிலோ அல்லது இரயில்வேயிலோ அவர் பணிபுரிந்ததில்லை.

ஆ) திரு. அப்துல் ஹமீத் பூரியைத்தான் மரியாதைக்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என எண்ணுகிறேன். அவருடைய தலைமை எழுத்தர் பதவிக்காலம் முடிந்தபிறகு, அவருடைய நிலையான ஆய்வாளர் பதவிக்கு மாற்றப்பட்டார்.

# 147

## *சமரச அதிகாரிகள் (ரயில்வே) மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளர்கள்

10. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி : (அ) ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளர் மற்றும் சமரச அதிகாரிகளாக (ரயில்வே) அதன் ஆரம்பத்திலிருந்து யார் பதவி வகித்துள்ளனர் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

ஆ) சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளராக ஒரு ஐ.சி.எஸ். அதிகாரியையோ அல்லது அனுபவம் மிக்க அதிகாரியையோ ஏன் நியமிக்கக் கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) சமரச அதிகாரி (ரயில்வே) மற்றும் ரயில்வேத் தொழிலாளர்களின் ஆய்வாளர் பதவி ஒரு கூட்டுப் பதவியாகும். அப்பதவியில் திரு. ஜாதவ் நியமிக்கப்படுவதற்கு முன் திரு. கலீலி ஐ.சி.எஸ். அப்பதவியில் இருந்தார்.

(ஆ) இந்தப் பதவியை ஓர் ஐ.சி.எஸ். அதிகாரியோ அல்லது அரசாங்கத்தில் அதிகாரியாகப் பணியாற்றிய ஒருவரோதான் வகிக்க வேண்டும் என்ற அவசியமில்லை என்று கருதுகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 26-27

# 148

# *பிரிட்டிஷ் இந்தியாவிலும் மற்றும் சமஸ்தானங்களிலும் நிலக்கரி உற்பத்தி மற்றும் அது சம்பந்தப்பட்ட விஷயங்கள்

19. திரு. கே.சி. நியோகி: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருபவனவற்றைப் பற்றித் தெரிவிப்பாரா:

*(அ) பிரிட்டிஷ் இந்தியாவிலும் சமஸ்தானங்களிலும் 1941, 1942, 1943ஆம் ஆண்டுகளில் ஒவ்வொரு ஆண்டுக்கும் தனித்தனியாக நிலக்கரி உற்பத்தி எவ்வளவு?*

*(ஆ) பிரிட்டிஷ் இந்தியா மற்றும் சமஸ்தானங்களில் 1941, 1942, 1943 டிசம்பர் 31ல் இருந்த நிலக்கரி கையிருப்பு எவ்வளவு?*

*(இ) 1941, 1942, 1943 ஆம் ஆண்டுகளில் சமஸ்தானங்கள் மற்றும் பிரிட்டிஷ் இந்திய நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து, சுரங்கங்களின் உபயோகம் உட்பட வெளியில் அனுப்பப்பட்ட நிலக்கரியின் அளவு என்ன?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) பிரிட்டிஷ் இந்தியா மற்றும் சமஸ்தானங்களில் 1941, 1942ஆம் ஆண்டுகளில் நிலக்கரி உற்பத்தியின் அளவு :*

| | 1941 | 1942 |
|---|---|---|
| பிரிட்டிஷ் இந்தியா | 26,088,600 | 25,949,800 |
| சமஸ்தானங்கள் | 3,260,400 | 3,385,100 |

*(ஆ) பிரிட்டிஷ் இந்தியாவில் 1941 டிசம்பர் 31ல் நிலக்கரி கையிருப்பு 2,767,500 டன்கள். 1942 டிசம்பர் 31ல் நிலக்கரி கையிருப்பு சி.ஐ.எம் கணக்குப்படி 2,521,600 டன்கள். நிலக்கரிச் சுரங்கங்கள் அளித்த கையிருப்பு அளவை சி.ஐ.எம். சரிபார்த்தபோது அதிகம் மிகைப்படுத்தப்பட்டதாகக் கண்டுபிடிக்கப்பட்டது. சமஸ்தானங்களிலுள்ள கையிருப்பு அளவு கிடைக்கவில்லை.*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 26-27

(இ) பிரிட்டிஷ் இந்திய நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து சுரங்கங்களின் உபயோகம் உட்பட வெளியில் அனுப்பப்பட்ட நிலக்கரியின் அளவு 1941 மற்றும் 1942 ஆண்டுகளில் முறையே 24,257,700, 22,695,800 டன்களாகும் சமஸ்தானங்களிலிருந்து சுரங் கங்களின் உபயோகத்தைச் சேர்க்காமல் வெளியில் அனுப்பப் பட்ட நிலக்கரியின் அளவு 1941 மற்றும் 1942 ஆண்டுகளில் முறையே 3,243,200, 3,370,500 டன்களாகும். சமஸ்தானங்களில் நிலக்கரிச் சுரங் கங்கள் உபயோகிக்கும் நிலக்கரியின் அளவு கிடைக்கவில்லை.

1943 ஆம் ஆண்டுக்கான புள்ளிவிவரத்தைத் தற்போது வெளியிடுவது பொதுமக்கள் நலன்களுக்கு உகந்ததல்ல.

# 149

## *நிலக்கரி நிலைமை

20. திரு. கே.சி. நியோகி : (அ) இன்றைய நிலக்கரி உற்பத்தி நாட்டின் நிலக்கரித் தேவைக்கு எவ்வளவு குறைவாக உள்ளது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா?

(ஆ) அண்மையில் சுரங்கத் தலைமை ஆணையரின் அலுவலகம் பல சுரங்கங்களின் நிலக்கரி கையிருப்பு அளவை சரிபார்த்தபோது சுரங்கங்கள் கொடுத்த அளவிற்கும் உண்மையான கையிருப்புக்கும் இடையே அதிக வேறுபாடு காணப்பட்டது உண்மையா? அப்படியென்றால் குறைவு எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இன்றைய நிலக்கரி உற்பத்தி நாட்டின் தேவைக்கு வேண்டிய அளவை விட எவ்வளவு குறைவாக உள்ளது என்பதை தெரிவிப்பது பொதுமக்கள் நலனுக்கு உகந்ததல்ல.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 38.

(ஆ) 1943 மே இறுதியில் நிலக்கரி கையிருப்பு சரிபார்க்கப் பட்டதில் 20 லட்சம் டன்கள் குறைவாக இருப்பது கண்டுபிடிக்கப் பட்டது. அதிகமான சரக்குப் பெட்டிகள் ஒதுக்கப்படும் என்ற நம்பிக் கையில் 1942ல் பல நிலக்கரிச் சுரங்கங்கள் மிகைப்படுத்தப்பட்ட உற்பத்தி அளவைக் கொடுத்துள்ளன. தவறான தகவல்களை அளித்ததற்காக பல சுரங்கங்கள் மீது நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன. தற்பொழுது அடிக்கடி கையிருப்பு சரிபார்க்கப்படு கிறது.

# 150

## *நிலக்கரிச் சுரங்கங்களின் பாதுகாப்பு (பராமரிப்பு) திருத்த மசோதா

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1936 ஆம் ஆண்டு நிலக்கரிச் சுரங்கங்களின் பாதுகாப்பு (பராமரிப்பு) சட்டத்தை மீண்டும் திருத்த ஒரு மசோதாவைக் கொண்டு வர அனுமதி அளிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : தீர்மானம் வருமாறு: ''1939 ஆம் ஆண்டு நிலக்கரிச் சுரங்கங்களின் பாதுகாப்பு (பராமரிப்பு) சட்டத்தை மீண்டும் திருத்துவதற்கு மசோதா கொண்டு வர அனுமதி கோரப்படுகிறது.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, நான் மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 55.

# 151

## *நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வதற்கானத் தடை நீக்கம்

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : அடுத்த தீர்மானம் திருமதி ரேணுகா ரேயின் பேரில் உள்ளது. ஜாரியா மற்றும் அதன் அருகாமையிலுள்ள நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் நிலத்தடியில் வேலை செய்ய அனுமதிக்கப்பட்டதைப் பற்றி அவர் விவாதிக்க விரும்புகிறார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) : இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தில் எழுப்பப் பட்டுள்ள விஷயம் அண்மையில் நடைபெற்ற விஷயமல்ல என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்கிறேன். 1943 ஆகஸ்டு இரண்டாம் தேதி மற்றும் 1943 ஆகஸ்டு 18ந் தேதி வெளியிடப்பட்டுள்ள இரண்டு ஆரம்ப அறிவிக்கைகளின் அடிப்படையில் தடைகள் நீக்கப்பட்டுள்ளன. 1943 நவம்பர் 24 தேதியிட்ட அறிவிக்கை நான் ஏற்கெனவே குறிப்பிட்டுள்ள 1943 ஆகஸ்டு அறிவிக்கையின் தொடர்ச்சிதான். ஆகஸ்டு அறிவிக்கை வெளியிட்டபிறகு சட்டமன்றக் கூட்டத் தொடர் நடைபெற்றுள்ளது.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : எந்த அறிவிக்கை? பெண்களை நிலத்தடியில் வேலைசெய்ய அனுமதி அளித்த அறிவிக்கையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஆம். இந்தத் தீர்மானத்துக்கு எதிரான ஆட்சேபணைகளின் அடிப்படையில் என் நிலையை நான் எடுக்கவில்லை. இந்த மன்றம் இந்த விஷயத்தை விவாதிக்க விரும்பினால் நான் அதற்குத் தயாராக உள்ளேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1944, பக்கம் 93.

திரு. என்.எம். ஜோஷி : (அரசு சாரா நியமன உறுப்பினர்) : இந்த விஷயத்தில் நான் ஒரு வார்த்தை சொல்லலாமா? கடந்த அவை கூட்டத்தொடருக்கு முன்பே இந்திய அரசு அறிவிக்கைகளை வெளியிட்டிருந்தாலும், முக்கியமான சுரங்கப் பகுதிகளில் அது உண்மையாக நடைமுறைக்கு வந்தது அண்மையில்தான். எனவே இந்த விஷயம் முக்கியமானது என்பதுடன் அண்மையில் நிகழ்ந்தது மாகும்.

திரு. தலைவர் : ஆகஸ்டு அறிவிக்கையில் ஜாரியா மற்றும் அதன் அருகிலுள்ள பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடவில்லையா?

திரு. என்.எம். ஜோஷி : இல்லை.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : இந்தப் பகுதிகள் அறிவிக்கையிலிருந்து விடுவிக்கப்பட்டனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை. ஒவ்வொரு கட்டமாக நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வந்தன. தடையை நீக்கவேண்டும் என்ற இந்திய அரசின் விருப்பம் 1943 ஆகஸ்டு 23 ஆம் தேதிய அறிவிக்கையில் வெளியிடப்பட்டது. அது மத்திய மாகாணங்கள், பேரார் சுரங்கங்களில் அமலுக்கு வந்தது.

திருமதி ரேணுகா ரே: (அரசு சாரா நியமன உறுப்பினர்) 1943 ஆகஸ்டு 2 மற்றும் 18 தேதியிட்ட அறிவிக்கைகளுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கப்பட்டது. ஆனால் அதை அரசு கவனத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. எப்படியிருப்பினும், நான் எடுத்துக் கொண்ட விஷயம் ஜாரியா மற்றும் அதன் அண்டைப் பகுதிகளைப் பற்றித் தான். அவையின் கடந்த கூட்டத்தொடருக்குப் பின்புதான், அவை பற்றிய அறிவிக்கைகள் வெளியிடப்பட்டுள்ளன.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : அப்படியென்றால், இந்தத் தீர்மானத்தை எடுத்துக் கொண்டு விவாதிப் பதில் மாண்புமிகு உறுப்பினருக்கு எவ்வித ஆட்சேபணையும் இல்லாததால் தீர்மானம் விவாதத்திற்கு 4 மணிக்கு எடுத்துக் கொள்ளப் படும்.

# 152

## *இந்தியாவில் நிலக்கரிப் பாதுகாப்பு

80. திரு. கே.சி. நியோகி: ராஞ்சியிலுள்ள இந்திய அரசு ஆராய்ச்சி கல்லூரியின் இயக்குநரும், மற்றும் அறிவியல் தொழில் ஆராய்ச்சி வாரிய எரிபொருள் ஆராய்ச்சிக் குழுவின் தலைவருமான டாக்டர் எச்.கே. சென் 1943 டிசம்பரில் பாட்னா பல்கலைக் கழகத்தில் ஆற்றிய சொற்பொழிவில் இந்தியாவில் நிலக்கரியைச் சேமித்துப் பாதுகாப்பது சம்பந்தமாக தெரிவித்த கருத்துகள் மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டனவா?

(ஆ) பல்வேறு நிபுணர்கள் இந்திய அரசிடம் இந்தக் கேள்வியை எழுப்பியது உண்மையா? அப்படியென்றால் இந்த விஷயத்தில் இதுவரை என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

(இ) மேற்குறிப்பிட்ட சொற்பொழிவுகளில், முக்கியமாக ரயில்வேக்களில் குறைந்த தரமுள்ள நிலக்கரியை உபயோகிக்க வேண்டுமென்ற டாக்டர் சென் தெரிவித்த கருத்து எவ்வளவு தூரம், எந்த முறையில் நிறைவேற்றப்பட்டுள்ளது அல்லது எதிர்காலத்தில் நிறைவேற்றப்படுமா?

(ஈ) நாட்டில் இன்று நிலவும் நிலக்கரிக் கையிருப்பு நிலைமையில் இந்தப் பிரச்சினைகள் உடனடி கவனத்திற்கு எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கின்றனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை.

(ஆ) (i) ஆம் 1939ல் இந்திய அரசு நிலக்கரிப் பாதுகாப்புச் சட்டத்தை இயற்றியது. பாதுகாப்பு வாரியம் தன்னார்வு பாதுகாப்பு நடவடிக்கைகளுக்கு அளித்த உதவிகளினால் உயர்தர நிலக்கரிப் பாதுகாப்பில் நல்ல வெற்றி காணப்பட்டுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 10, 1944, பக். 203-4.

(ii) 1939ல் நிறைவேற்றப்பட்ட இந்திய நிலக்கரிச் சுரங்க ஒழுங்குமுறை விதிகளின்படி சுரங்கங்களின் பரப்பளவுக்கு சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. இது சுரங்கத்தின் பாதுகாப்பை அதிகரிப்பதுடன் நிலக்கரி சேமிப்புக்கும் பாதுகாப்புக்கும் வழி வகுக்கிறது.

(இ) நிலக்கரி வினியோகக் கட்டுப்பாட்டு அதிகாரியின் அலுவலகத்தில் கம்ப்யூஷன் பொறியாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். குறைந்த தர நிலக்கரியை உபயோகிக்கும் தொழில் நிறுவனங்களுக்கு உயர்தர நிலக்கரி வினியோகிக்கப்படாமல் கண்காணிக்க வேண்டிய பொறுப்பு அவர்களது கடமைகளில் ஒன்றாகும். நிலக்கரி உபயோ கிக்கும் தொழில் நிறுவனங்களைப் பற்றிய ஒரு ஆய்வு நடத்த மாகாண அரசுகளின் உதவி நாடப்பட்டுள்ளது.

தீவிர எரிபொருள் சிக்கனப் பிரசாரத்திற்கு அரசாங்கம் மிகவும் முக்கியத்துவம் கொடுக்கிறது. ஏற்கெனவே, இது நிலக்கரி ஆணையரின் கவனத்தை ஈர்த்துள்ளது. ரயில்வேயின் தேவைகளுக்கு, குறைந்த தரத்திலான நிலக்கரி, முடிந்த அளவு, அதிக அளவில் அளிக்கப்பட்டு வருகிறது.

(ஈ) இந்தப் பிரச்சினைகள், எப்பொழுதும் அரசாங்கத்தின் கவனத்தில் உள்ளன.

**திரு. கே.சி. நியோகி :** நான் குறிப்பிட்ட கருத்துகள் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்கு வரவில்லை என்று அவர் கூறினார் என்று நினைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மரியாதைக்குரிய உறுப்பினர் குறிப்பிட்டுள்ள சொற்பொழிவுகள் என் கவனத்துக்குக் கொண்டுவரப்படவில்லை.

**திரு. கே.சி. நியோகி :** அவை பத்திரிகைகளில் வெளியிடப்பட்டுள்ளன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவை வெளியிடப்பட்டு இருக்கலாம்.

திரு. கே.சி. நியோகி : இந்த மாதிரியான முக்கியமான அபிப்பிராயங்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கப் படவில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பத்திரிகைகளில் வெளியிடப்படும் எல்லாவற்றையும் அல்ல.

திரு. கே.சி. நியோகி : சொல்லப் போனால் அந்த கனவான் ஒரு பொறுப்பான பதவியில் இருக்கிறார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மதிப்பிற்குரிய உறுப்பினர் எனக்கு ஒரு நகலை அனுப்பக் கேட்டுக் கொள்கிறேன். நான் அதைப் பார்க்கவில்லை.

திரு. கே.சி. நியோகி : அது வருந்தத்தக்க விஷயந்தான். தற்போதைய நிலக்கரி இயக்கத்தையொட்டி முடிந்த வரை அதிக மான அளவில் தரம் குறைந்த நிலக்கரி உபயோகப்படுத்தப்படுமா என்பதை அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இதற்காக அரசாங்கம் பல நடவடிக்கைகளை எடுத்துள்ளது என்பதைக் கூறி யுள்ளேன்.

திரு. கே.சி. நியோகி: தற்போதைய நிலக்கரி இயக்கத்தை யொட்டி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் உறுதிமொழியைப் பெற விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : நிச்சயமாக.

திரு. ஹுசைன்பாய் ஏ. லால்ஜி : எத்தனை நிபுணர்கள் பணி யில் சேர்க்கப்பட்டுள்ளனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 153

## *நிலக்கரி உற்பத்தி நிலைமை

82. சர் எஃப்.இ. ஜேம்ஸ் : மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) நிலக்கரி உற்பத்தியில் இந்தியாவின் அண்மைக்கால நிலை என்ன? 1943 டிசம்பர் முதல் தேதியிலிருந்து நிலக்கரியின் உற்பத்தி அளவு அதிகரித்துள்ளதா அல்லது குறைந்துள்ளதா? அப்படியானால் எந்த அளவுக்கு?

(ஆ) பல நிலக்கரிச் சுரங்கங்கள் செயல்படவில்லை அல்லது முழு அளவுக்கு செயல்படவில்லை என்பதை அவர் அறிவாரா?

(இ) முக்கியமாக (பணிக்குத் தேவைப்படும்) தொழிலாளர்களைத் தேர்வுசெய்வது, உணவுப் பொருள்கள் அளிப்பது, இயந்திரமயமாக்கல் மற்றும் வரிச் சலுகைகள் சம்பந்தமாக என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

(ஈ) பின்வருபவனவற்றைப் பற்றி என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

(i) அதிக அளவு உற்பத்தியை வேண்டுமென்றே தடுக்க முயலும் சுரங்க உரிமையாளர்களை வழிக்குக் கொண்டு வருதல்;

(ii) சீரான நிலக்கரி வினியோகத்தை உறுதி செய்தல்; அது கறுப்புச் சந்தையில் நுழைவதைத் தடுத்தல்.

(உ) ரயில்வேத் துறை நிலக்கரிச் சுரங்கங்கள் முழுத் திறனுடன் செயல்படுகின்றனவா, இல்லையெனில் ஏன் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 10, 1944, பக். 205-7

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) அண்மைக் காலத்தில் நிலக்கரி உற்பத்தியில் சிறிது முன்னேற்றம் காணப் படுகிறது. 1943 டிசம்பரில் எடுக்கப்பட்ட நிலக்கரியின் அளவு, நவம்பர் மாத அளவைவிட 20 சதவீதம் அதிகரித்துள்ளது. ஜனவரி மாத அளவு இன்னும் கிடைக்கவில்லை. ஆனால் உற்பத்தி மேலும் அதிகரித்திருக்கும் என நம்பப்படுகிறது.

(ஆ) பாதுகாப்புடனும் சிக்கனமாகவும் செயல்பட்டுவரும் சுரங்கங்கள் மூடப்பட்டதாக அரசாங்கத்துக்குத் தகவல் இல்லை. தொழிலாளர் பற்றாக்குறை, அல்லது இயந்திர சாதனங்களின் தட்டுப்பாடு, மற்றும் கடந்த பருவமழை காலத்தில் அவர்கள் பணி யிடங்கள் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டதால் பல சுரங்கங்கள் முழுத் திறனுடன் இயங்க முடியவில்லை.

(இ) (i) ஆரம்பத்தில் வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் 10000 பேர்வரை கொண்ட அரசுத் தொழிலாளர் படை நிலக்கரியை வெட்டி எடுக்கும் மற்றும் ஏற்றி அனுப்பும் பணி களுக்காக உருவாக்கப்பட்டுள்ளது. சிறிது அனுபவம் பெற்ற பிறகு அவர்கள் சுரங்கத்தினுள் பணிபுரிவார்கள் என நம்பப்படுகிறது. முதல் 1000 பேர் கொண்ட குழு ஏற்கெனவே வந்துவிட்டது. நிலக்கரி ஏற்றி அனுப்பும் பணிக்காக 1000 பேர் கொண்ட குழுவை ராணுவம் தற்காலிகமாக அனுப்பியுள்ளது. ரயில்வே மற்றும் ஹைதராபாத் திலுள்ள சிங்கரேணி நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அரசுத் தொழிலாளர் கள் அனுப்பப்பட்டுள்ளனர். நிலக்கரிச் சுரங்கங்களில் சுரங்கத் தொழி லாளர்கள் வேறு வேலைகளில் ஈடுபடுத்தப்படுவதைத் தடுக்க நட வடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

(ii) ஒரு ரூபாய்க்கு 6 சேர் என்ற விலையில் தங்கள் தொழி லாளர்களுக்கு உணவு தானியங்கள் அளிக்க சுரங்க உரிமையாளர் கள் சங்கங்கள் சம்மதித்துள்ளன. சுரங்கத் தொழிலாளர்கள் மற்றும் அவர்களைச் சார்ந்திருப்பவர்களுக்கு ஒரு குறிப்பிட்ட அளவு உணவு தானியங்கள் அளிக்க இந்திய அரசு மாகாண அரசுகளுடன் ஏற்பாடு செய்து வருகிறது. மேலும் அகவிலைப்படியுடன் கூடிய ஊதியம், 1939ல் இருந்ததை விட 50 சதவீதம் உயர்த்தப்பட்டுள் ளது. மேலும் வருகையின் அடிப்படையிலோ அல்லது உற்பத்தி அளவின் அடிப்படையிலோ அளிக்கப்படும் உற்பத்தி போனசை அறிமுகப்படுத்த எல்லா நிலக்கரிச் சுரங்கங்களையும் இந்திய

அரசு ஊக்கப்படுத்தி வருகிறது. இப்படிப்பட்ட போனசை பல நிலக்கரிச் சுரங்கங்கள் ஏற்கெனவே அறிமுகப்படுத்தியுள்ளன.

(iii) இயந்திர சாதனங்களை வெளிநாடுகளிலிருந்து பெற, எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. தற்போது, புதிதாக வாங்கப்படும் நிலக்கரி வெட்டியெடுக்கும் சாதனங்களுக்கு, இவைகளின் கழிக்கப்பட்ட மதிப்பில் ஆண்டுக்கு 50 சதவீதம் என்ற விகிதத்தில் தேய்மானம் அளிக்கப்படும். அதிகப்படியான இலாப வரி மற்றும் வருமான வரியில் இந்தத் தேய்மானத்தைக் கணக்கிலெடுத்துக்கொள்ள அரசு தயாராக உள்ளது. இந்த நிபந்தனைகளை அவர்கள் ஒப்புக் கொள்கிறார்களா என அந்தத் தொழிலதிபர்களிடம் கேட்கப்பட்டுள்ளது. அப்படி அவர்கள் இதற்குச் சம்மதித்தால் அவர்களுக்குத் தேவைப்படும் இயந்திரசாதனங்களைப் பற்றிய தகவல்களை அனுப்பக் கோரியுள்ளோம். அவர்களுடைய பதிலை எதிர்பார்த்திருக்கிறோம்.

(iv) அதிகப்படியான உற்பத்திக்குப் போனஸ் அளிப்பதைப் பற்றி அத்துறையினருடன் விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. இந்த போனஸ் அமித லாப வரிக்கு உட்பாடதது.

(v) நுகர்பொருட்கள், தரமான துணிகள், தேவையான அளவுக்கு மருத்துவப் பொருள்கள் அளிக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

(ஈ) (i) உற்பத்தியில் அதிகபட்ச இலக்கை அடைவதை வேண்டுமென்றே தவிர்க்க முயலும் சுரங்க உரிமையாளர் யாரும் இருப்பதாக அரசுக்குத் தகவல் இல்லை. இருப்பினும் இந்த மாதிரியான ஒரு நிலை உருவாகாதிருக்க ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு, சுரங்க உரிமையாளர்களுடன் நிலக்கரி ஆணையர், இதைப் பற்றி விவாதித்து வருகிறார். இதன்படி ஒவ்வொரு நிலக்கரி சுரங்கத்துக்கும் உற்பத்தி இலக்கு நிர்ணயிக்கப்படும். இத்திட்டத்தின்படி ஒரு சுரங்க உரிமையாளர் சரியான காரணமின்றி உற்பத்தி இலக்கை அடையமுடியவில்லை என்றால், நிலக்கரி ஆணையர் வழக்கமான முறையில் எச்சரிக்கை செய்வார். இந்தப் போக்கு தொடர்ந்து நீடிக்குமானால் அந்த சுரங்கத்தை அரசு எடுத்துக்கொள்ளும்; தேவைப்பட்டால் சுரங்கத்தை உடனடியாகக் கையகப்படுத்திக் கொள்ளும்.

(ii) நிர்வாக சபையின் போர் வள ஆதாரங்கள் குழுவால் அங்கீகரிக்கப்பட்ட பங்கீட்டுத் திட்டத்தின்படி போர்க்காலப் போக்கு வரத்து இலாக்காவின் கீழ் இயங்கிவரும் நிலக்கரி வினியோக கட்டுப்பாட்டு அலுவலர் நிலக்கரி வினியோகத்தைக் கவனித்து வருகிறார். நிலக்கரி வினியோக அலுவலகக் கட்டுப்பாட்டு அலுவலர் அளிக்கும் முன்னுரிமை அல்லது உரிமங்கள் அடிப்படையில் எல்லா நிலக்கரி வினியோகமும் நடைபெறுகிறது. பொதுவான பங்கீட்டு உத்தரவுகளுக்குட்பட்டு ஒவ்வொரு தொழில் துறைக்கும் நிர்ணயிக்கப்பட்டுள்ள பங்கின் அடிப்படையிலும், பல்வேறு தொழில்கள் சம்பந்தப்பட்டுள்ள இலாகாக்களின் சிபாரிசுகளின் அடிப்படையிலும் இவை அமைந்துள்ளன. யாருக்கு அனுப்பப்பட வேண்டுமென்ற விவரங்களுடன் ஒவ்வொரு நிலக்கரி சுரங்கங்களுக்கும் தினந்தோறும் உத்தரவுகள் அனுப்பப்படுகின்றன. நிலக்கரிச் சுரங்கங்கள் ஏற்றி அனுப்பிய சரக்கு, எடை போடும் நிலையத்தில் சரிபார்க்கப்படுகிறது. இந்த நிலையங்கள் அனுப்பும் தகவல் அறிக்கைகள் நிலக்கரி ஒதுக்கும் அலுவலகங்களினால் மேலும் பரிசீலிக்கப்படுகின்றன. ரயில்வே ஆய்வாளர்கள் மற்றும் கட்டுப்பாட்டு அலுவலக ஆய்வாளர்கள் சரியான விலாசதாரர்களுக்கு அனுப்பப்படுகிறதா என்பதை சரக்கை ஏற்றும் ரயில் நிலையத்தில் சரிபார்க்கிறார்கள். சரக்குகள் வந்தடையும் நிலையத்தில் முன்னுரிமை பத்திரத்தின்படி யாருக்கு சரக்கு ஒதுக்கப்பட்டுள்ளதோ, அவர் பெயருக்கு சரக்கு சப்ளை செய்யப்படுகிறதா என்பதையும், வெளிச் சந்தைக்கு சரக்கு கடத்தப்படுகிறதா என்பதையும் அவர்கள் அடிக்கடி சரிபார்க்கிறார்கள். கறுப்புச் சந்தையில் நிலக்கரி விற்கப்பட்ட பல சம்பவங்கள் கண்டுபிடிக்கப்பட்டு, சட்ட நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுள்ளன.

(உ) நிலைமைகளுக்கு ஏற்ப, விரைவில் ரயில்வேச் சுரங்கங்கள் முழு அளவு உற்பத்தித் திறனை எட்ட எல்லா சாத்தியமான நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. இதில் கணிசமான முன்னேற்றம் காணப்பட்டாலும் எல்லா ரயில்வே நிலக்கரிச் சுரங்கங்களும் முழு உற்பத்தித்திறனையும் எட்டிவிட்டதாக அறிவிக்கும் நிலையில் நான் இல்லை. தற்போதைய நெருக்கடிகளுக்குக் காரணங்கள் வருமாறு:

(i) தொழிலாளர் பற்றாக்குறை.

(ii) இயந்திரமயமாக்கலை அறிமுகப்படுத்துவதில் உள்ள தவிர்க்க முடியாத தாமதம்.

(iii) அதிகப்படியான உற்பத்தியை எடுத்துச் செல்ல ரயில் போக்குவரத்து வசதி இல்லாமை.

இந்த நெருக்கடிகள் யாவும் விரைவில் தீர்க்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**சர் முகமது யாமின் கான் :** (ஆ) கேள்வியின் ஒரு பகுதிக்குப் பதிலளிக்கையில் முழு அளவில் இயங்காத நிலக்கரிச் சுரங்கங் களைப்பற்றி மாண்புமிகு உறுப்பினர் தெரிவித்தார். அதில் ஐரோப் பியக் கம்பெனிகளுக்குச் சொந்தமானவை எத்தனை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தக் கட்டத்தில் இதற்கு என்னால் எந்த பதிலும் கூறமுடியாது. அவை முழு உற் பத்தித் திறனுடன் செயல்படவில்லை. அவற்றில் ஐரோப்பியர் களுடை யவை எத்தனை இந்தியர்களுடையவை எத்தனை என்ற தகவல்களைப் பெறமுடியும் என்று நான் கருதவில்லை.

**சர் முகமது யாமின் கான்:** இதை விசாரணை செய்து ரயில்வே நிதிநிலை அறிக்கைக்கு முன்பு இந்தக் கூட்டத் தொடரில் மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த விசா ரணையை நடத்த முடியும் என்று நான் நினைக்கவில்லை.

**திரு. கே.சி. நியோகி:** எந்த இனத்தைச் சார்ந்தவர்கள் சுரங்க உரிமையாளர்கள் என்பதைத் தவிர்த்து, சர் முகமத் யாமின் கான் தன் கேள்வியில் கோரிய சிறிய மற்றும் பெரிய நிலக்கரி சுரங்கங் கள் சரியாக செயல்பட்டு வருகின்றனவா என்பதைப் பற்றிய தகவலை அளிக்கும் நிலையில் மாண்புமிகு உறுப்பினர் இருக் கிறாரா? மேலும், மாண்புமிகு உறுப்பினரின் திட்டம் பெரிய சுரங் கங்களுக்கும் அதே போன்று சிறிய சுரங்கங்களுக்கும் பொருந்துமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** எல்லாச் சுரங் கங்களுக்கும் இது பொருந்தும். மதிப்பிற்குரிய என் நண்பர் கேட்ட கேள்வியின் முதல் பகுதி சம்பந்தமாக நான் கூறக் கூடியதெல்லாம் நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்க உதவும் விசாரணையை நடத்தத் தயாராக இருக்கிறேன். நிலக்கரிச் சுரங்கங்களைப் பற்றிய நியாய விசாரணைக்கு நான் தயாரில்லை என்பதுதான்.

**திரு. என்.எம். ஜோஷி :** மாண்புமிகு உறுப்பினர் சுரங்கத் தொழிலாளர்களின் ஊதியம் 50 தசவீதம் உயர்ந்திருக்கிறது என்று

கூறும் அதே வேளையில் சுரங்கப் பகுதிகளில் வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண் போருக்கு முன்பு இருந்ததைவிட மும்மடங்கு அதிகரித்துள்ளது என்று கூறுவது தம்முடைய அறிக்கையை தவறுதலாகப் புரிந்து கொள்ளாமலிருப்பதற்காகவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஒரு கேள்வி அல்ல, எனக்கு ஒரு வழிகாட்டுதல் என நான் நினைக்கிறேன்.

**நவாப் ஜாடா முகமது லியகத்அலி கான்:** இந்தியாவிலிருந்து நிலக்கரி ஏற்றுமதி செய்யப்படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இலங்கையைத் தவிர வேறு எங்குமில்லை.

**திரு. என்.எம்.ஜோஷி:** மாண்புமிகு உறுப்பினர், பெண் சுரங்கத் தொழிலாளிகள் நிலத்தடியில் பணியாற்ற கட்டாயப்படுத்தப் படுவதில்லை என்று தெரிவித்திருக்கிறாரா? அப்படித் தெரிவித்திருந்தால் இந்திய அரசு, சுரங்கத் தொழிலாளிகள் மற்ற இடங்களில் வேலை செய்வதை தடுக்க நடவடிக்கைகள் எடுப்பதாக சற்று முன்னர் அவர் தெரிவித்தது முன்பு தெரிவித்த கருத்துக்கு முரண்பாடாக இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்தவித முரண்பாட்டையும் நான் காணவில்லை.

**சர் முகமது யாமின் கான்:** வரி குறைப்பு பற்றிய கேள்விக்கு அளித்த பதிலில் நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்களின் கோரிக்கைகளைப் பற்றி மாண்புமிகு உறுப்பினர் விளக்கவில்லை. அவர்கள் அமித லாப வரியைச்செலுத்த விரும்பவில்லையா அல்லது அமித லாப வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டுமென்று விரும்புகிறார்களா? எந்த அடிப்படையில் அவர்கள் அமிதலாப வரியிலிருந்து விலக்குக் கேட்கிறார்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிலக்கரி ஒரு அழிமான சொத்து என்ற அடிப்படையில்.

**மௌல்வி முகமது அப்துல் கனி:** இலங்கைக்கு ஏற்றுமதியாகும் நிலக்கரியின் அளவு என்ன என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 154

## *ரயில்வேத் தொழிலாளர்கள் சம்பந்தமான சில ஆண்டறிக்கைகள் பிரசுரம்

43. திரு. லால்சந்த் நாவல்ராய்: பின்வரும் அறிக்கைகள் வெளியிடப்படுகின்றனவா என்பதை மாண்புமிகு உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா? வெளியிடப்படவில்லை என்றால் ஏன்? எப்பொழுது வெளியிடப்படலாம்?

(i) ஊதிய பட்டுவாடா சட்டம் IV மற்றும் செயல்பாடு பற்றிய கல்கத்தா ரயில்வே சமரச அதிகாரி, மற்றும் ரயில்வே தொழிலாளரின் மேற்பார்வையாளரின் ஆண்டறிக்கை, மற்றும்

(ii) 1941-42 ஆம் ஆண்டின்போது இந்திய ரயில்வேக்களில் வேலை நேர விதிகளின் செயல்பாடு பற்றிய ஆண்டு அறிக்கை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1941-42 க்கான அறிக்கைகளே கடைசியாக வெளியிடப்பட்டுள்ள அறிக்கைகள். கடுமையான காகிதப் பற்றாக்குறையால் எதிர்கால அறிக்கைகளின் வெளியீடு தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது.

# 155

## +நிலக்கரிச் சுரங்கங்களின் பாதுகாப்பு (பராமரிப்பு) திருத்த மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நல உறுப்பினர்): தலைவர் அவர்களே, இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் இந்த மசோதாவைப் பரிசீலிக்க மேலும் கொஞ்சம் அவகாசம் தேவை என்ற விருப்பத்தைத் தெரிவித்திருப்பதால் இந்த மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தீர்மானத்தை முன்மொழியப் போவதில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 10, 1944, பக்கம் 210.

\+ மேற்படி அதே தொகுதி, பக். 210.

# 156

## *மாகாணங்களில் சிவில் படையில் ராணுவ அதிகாரிகளாக நிர்வாக அதிகாரிகள் (கமிஷண்ட்) பதவி உயர்வு

III. திரு.ஜி.ரங்கையா நாயுடு: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

(அ) 1941, 1942, 1943 ஆம் ஆண்டுகளில் சிவில் பயோனியர் படையில் எத்தனை நிர்வாக அதிகாரிகள் ராணுவ அதிகாரிகளாகப் பதவி உயர்வு அளிக்கப்பட்டனர்? அவ்வாறு இல்லை என்றால் ஏன் இல்லை?

(ஆ) சிவில் பயோனியர்ப் படை அதிகாரிகள் கமிஷண்ட் ராணுவ அதிகாரிகள் பதவிக்கு விண்ணப்பிப்பதைக் கட்டுப்படுத்தச் சட்டம் ஏதும் பின்னால் நிறைவேற்றப்பட்டுள்ளதா?

(இ) பிராமணர் அல்லாதவர்கள், பிற்படுத்தப்பட்டவர்கள், ஷெட்யூல்டு வகுப்பினர்கள் போன்ற இந்துக்கள் மற்றும் கிறிஸ்தவர்கள், முகமதியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் ஆகியவர்கள் இடையே எத்தனை பேர் கமிஷண்ட் ராணுவ அதிகாரிகளாகவும் மற்றும் நிர்வாக அதிகாரிகளாகவும் வேலைக்குச் சேர்த்துக் கொள்ளப் பட்டனர்?

(ஈ) பயோனியர் மற்றும் நிர்வாக அதிகாரிகளுக்கு தினம் அளிக்கப்பட்ட ரேஷனுக்கான கட்டணம் எவ்வளவு? தனித்தனியாக, கொடுக்கவும். மேலும்,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1944, பக்கம் 281-83.

*(உ) 1941, 1942, 1943 ஆம் ஆண்டுகளில் சிவில் பயோனியர் படைத்துறையில் பணிபுரிந்த எழுத்தர்களில் எத்தனை பேர் நிர்வாக அதிகாரிகளாகப் பதவி உயர்வு பெற்றனர்? இல்லை என்றால் ஏன் இல்லை?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (அ), (இ), (உ). இந்தக் கேள்விகளைப் பொருத்தவரையில் மூன்று அறிக்கைகள் சபையில் அளிக்கப்பட்டுள்ளன.*

*1942, 1943 ஆண்டுகள் சம்பந்தப்பட்டவை இவை. சிவில் பயோனியர் படை 1941ல் உருவாகவில்லை.*

*(ஆ) இல்லை. சிவில் பயோனியர் படையில் பணிபுரிய ஒரு அதிகாரி முன்வந்தால் அவருடைய சேவை தேவைப்படும் வரை அவர் பணிபுரிந்தாக வேண்டும். பார்க்க, சிவில் பயோனியர் படை அவசரச் சட்டம், பகுதி 9. தற்போது எந்த அதிகாரியையும் விடுவிக்க முடியாது.*

*(ஈ) மார்ச் மாத முதல் தேதிக்கு முன்பு எந்த அதிகாரிக்கும் இலவச ரேஷன் அனுமதிக்கப்படவில்லை. அதற்குப் பிறகு, சிவில் பயோனியர்களுக்கு மாதம் நபர் ஒன்றுக்கு 15 ரூபாய் என்று அளிக்கப்பட்டது போல இந்தச் சலுகை அவர்களுக்கும் விரிவு படுத்தப்பட்டுள்ளது. அண்மைக் காலத்தில் உணவுப் பொருள் களின் விலையில் ஏற்ற இறக்கம் இருப்பதால் ஒரே விகிதத்தை வைத்துக் கொள்ள முடியவில்லை. சந்தையில் இன்றுள்ள விலையை விட அதிகமாகாத, அனுமதிக்கப்பட்ட விலை விகிதத் தில் ரேஷன் பொருள்களை வாங்குவதற்கு மாகாண அரசு அனுமதிக்கப்பட்டுள்ளது. இவை மாகாண அதிகாரிகளாலேயே வாங்கப்பட வேண்டும்.*

## விவரப்பட்டியல்

### பகுதி (அ)

| | | |
|---|---|---|
| மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் | *1942*<br>*1943* | *5* |
| ஒரிசா | *1942*<br>*1943* | *2* |
| மதராஸ் | *1942*<br>*1943* | *1* |
| பம்பாய் | இல்லை | - |
| பஞ்சாப் | *1942*<br>*1943* | -<br>*3* |
| ஐக்கிய மாகாணங்கள் | *1942*<br>*1943* | *1* |
| பீகார் | *1942*<br>*1943* | *2* |
| வங்காளம் | *1942*<br>*1943* | *3*<br>*11* |
| வடமேற்கு எல்லை மாகாணம் | *1942*<br>*1943* | *1*<br>*2* |
| | | *31* |

இரு பிரிவு அதிகாரிகளும் வேறுபட்ட பதவி அந்தஸ்து பெற் றுள்ளனர். ஒரு விண்ணப்பதாரரை நிர்வாக அதிகாரியாக ஏற்றுக் கொள்வதன் மூலம் மாகாண அரசுகள் அவருக்கு கமிஷண்ட் ராணுவ அதிகாரியாக பதவி உயர்வு அளிக்க வேண்டிய அவசியம் கிடையாது. தங்கள் திறமையை நிரூபித்துள்ள சில நிர்வாக அதிகாரிகள் காலி இடங்கள் தோன்றியபோது 2வது லெப்டினென்ட் பதவியில் அமர்த்தப்பட்டுள்ளனர்.

## விவரப்பட்டியல் பாகம் (இ)

| மாகாணம் | பிராமணர் அல்லாதவர் | பிராமணர் | பிற்பட்ட வகுப்பினர் | ஷெட்யூல்டு வகுப்பினர் | முஸ்லீம்கள் | இதரர்கள் | ஆங்கிலோ-இந்தியர் |
|---|---|---|---|---|---|---|---|
| **மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்:** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 5 | 4 | 1 | 2 | 3 | 1 | .. |
| நிர்வாக அதிகாரிகள் | 8 | 5 | .. | .. | .. | 1 | .. |
| **ஒரிசா :** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 18 | 9 | 1 | .. | 4 | 2 | .. |
| நிர்வாக அதிகாரிகள் | .. | .. | .. | .. | .. | .. | .. |
| **சென்னை :** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 34 | .. | .. | 7 | 7 | 15* | .. |
| நிர்வாக அதிகாரிகள் | .. | .. | .. | .. | .. | .. | .. |
| **பம்பாய் :** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவு அதிகாரிகள் | 2 | 6 | .. | 3 | 2 | .. | .. |
| நிர்வாக அதிகாரிகள் | 4 | 1 | 1 | .. | 1 | .. | .. |
| **பஞ்சாப் :** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 11 | .. | ... | 2 | 13 | 1 | .. |
| நிர்வாக அதிகாரிகள் | 8 | .. | .. | .. | 9 | .. | .. |
| **ஐக்கிய மாகாணங்கள்:** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 15 | .. | 4 | 4 | 5 | 2 | 1 |
| நிர்வாக அதிகாரிகள் | 7 | .. | .. | 2 | 4 | 1 | .. |
| **பீகார் :** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 17 | .. | .. | 2 | 5 | 2 | .. |
| நிர்வாக அதிகாரிகள் | .. | .. | ... | .. | .. | .. | .. |
| **வங்காளம்:** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | 31 | .. | .. | 17 | 56 | 7 | .. |
| நிர்வாக அதிகாரிகள் | .. | .. | .. | .. | .. | .. | .. |
| **வடமேற்கு எல்லை மாகாணம்:** | | | | | | | |
| (கமிஷண்ட்) ராணுவ அதிகாரிகள் | .. | .. | .. | .. | 19 | .. | .. |
| நிர்வாக அதிகாரிகள் | 1 | .. | .. | .. | 7 | .. | .. |
| மொத்தம் | 161 | 25 | 3 | 39 | 135 | 32 | 1 |

★ இரண்டும் சேர்ந்தது

விவரப்பட்டியல்
பாகம் (உ)

| | | |
|---|---|---|
| மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் | 1942<br>1943 | 2 |
| ஒரிசா | 1942 | இல்லை |
| மதராஸ் | 1942<br>1943 | 2<br>1 |
| பம்பாய் | 1942<br>1943 | 1 |
| பஞ்சாப் | 1942<br>1943 | -<br>3 |
| ஐக்கிய மாகாணங்கள் | 1942 | இல்லை |
| பீகார் | 1943<br>1942 | 1<br>2 |
| வங்காளம் | 1943<br>1942 | 11<br>- |
| வடமேற்கு எல்லை மாகாணம் | 1943 | 1 |
| மொத்தம் | | 24 |

குறிப்பு: சிவில் பயோனியர் படையில் இருந்த எழுத்தர்கள், மிகவும் குறைந்த ஊதியம் பெற்றுவந்ததால், அவர்களில் பலர் நிர்வாக அதிகாரிகளாக பதவி உயர்வு பெறத் தகுதி பெறவில்லை.

திரு. ஜி. ரங்கையா நாயுடு: போர் ஆரம்பத்தில் இந்த நிர்வாக அதிகாரிகள் கமிஷண்ட் அதிகாரிகளுக்கான காலியான இடங்களுக்கு விண்ணப்பிக்க அனுமதிக்கப்பட்டது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயத்தைப் பற்றி எனக்கு எந்தத் தகவலும் இல்லை.

# 157

## *அரசு பெண் ஊழியர்களுக்கு குடியிருப்பு வசதி

112. சர் எஃப். இ.ஜேம்ஸ்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

மாதம் ரூ.600 க்குக் குறைவாக ஊதியம் பெறும் அரசு ஊழியர்கள் ''முதல்தர வசதி பெற்ற குடியிருப்புகள்'' என்று வகைப் படுத்தப்பட்ட டில்லி அல்லது புதுடில்லி அரசு விடுதியிலோ, ஓட்டலிலோ, குடியிருப்புகளிலோ இடவசதி பெற உரிமை பெற்ற வர்கள் அல்ல என்ற தொழிலாளர் இலாகா சட்டம் ஒன்று அமலில் இருக்கிறதா?

(ஆ) இந்தச் சட்டம் அரசு பெண் ஊழியர்களுக்கும் பொருந்துமா?

(இ) (ஆ) கேள்விக்கான பதில் ஆம் என்றால், தங்கள் சொந்த இருப்பிடத்திலிருந்து தொலைவில் வசிக்கும் பெண் ஊழியர்களுக்குக் கிடைத்த குடியிருப்புகள் வசதியாக இல்லாத சந்தர்ப்பங்களிலும், மேலும் 600-க்குக் குறைவாக ஊதியம் பெறும் பெண் ஊழியர்கள் எந்தக் காலியான பதவியில் பணிபுரிகிறார் களோ அந்தப் பதவியின் ஆண் உரிமையாளர் அந்தத் தொகையை விட அதிக ஊதியம் பெறுபவராக இருக்கும் சந்தர்ப்பங்களிலும் இந்தச் சட்டத்தில் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளனவா?

(ஈ) குடியிருப்பு ஆலோசனைக் குழுவின் இயைபு எத் தகையது?

(உ) தேவைப்பட்ட சந்தர்ப்பங்களில் மேற்குறிப்பிட்ட விதி களில் விலக்களிப்பதை அங்கீகரிக்க இந்தக் குழுவுக்கு அதிகார மிருக்கிறதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1944, பக்கம் 283.

*(ஊ) எத்தனை சந்தர்ப்பங்களில் இந்தக் குழு அரசு பெண் ஊழியர்களுக்காக விதிமுறைகளைத் தளர்த்தியுள்ளது?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.*

*(ஆ) ஆம்.*

*(இ) இல்லை*

*(ஈ)* i. *லெப்டினெண்ட் ஜெனரல் டி.ஜெ.ஹட்டன் சி.பி., எம்.சி.*

ii. *மாண்புமிகு திரு. எச்.சி. பிரியோர், சி.எஸ்.ஐ., சி.ஐ.இ., ஐ.சி.எஸ்.*

iii. *மாண்புமிகு திரு. இ. கன்ரான் ஸ்மித் சி.எஸ்.ஐ., சி.ஐ.இ., ஐ.சி.எஸ்.*

iv. *திரு. ஜி. மேக்வொர்த்.யங், சி.ஐ.இ., ஐ.சி.எஸ்.*

*(உ) இல்லை. இந்தக் குழு மேதைகைய கவர்னர் - ஜெனரலுக்கு பரிந்துரைகள் மட்டுமே அளிக்க முடியும்.*

*(ஊ). (உ) கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டுள்ள நிலைமையில் இந்தக் கேள்வி எழவில்லை.*

*சர் எப்.இ.ஜேம்ஸ்: இந்தச் சட்டம் கடுமையாக அமலாக்கப் படுவதால், மிகவும் திறமையாகப் பணியாற்றும் தகுதியான அரசு பெண்ஊழியர்கள் பல கஷ்டங்கள் அனுபவிப்பது எனது மதிப் பிற்குரிய நண்பருக்கு சந்தேகத்திற்கு இடமின்றி தெரியுமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனக்குத் தெரியும்.*

*திரு. என்.எம். ஜோஷி: பல ஊழியர்களின் கஷ்டத்தைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, குடியிருப்பு விநியோகத்தில் பங்கீட்டு முறையைப் புகுத்த அரசு ஏற்பாடு செய்ய நான் கேட்டுக் கொள்ளலாமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கட்டத்தில் என்னால் எந்த பதிலும் கூற இயலாது.

*பண்டிட் லட்சுமி காந்த்த மைத்ரா:* இந்தக் குடியிருப்பு ஆலோசனைக்குழு எப்பொழுது உருவாக்கப்பட்டது? யாரால் உருவாக்கப்பட்டது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கட்டத்தில் என்னிடம் எந்தத் தகவலும் இல்லை.

# 158

## நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்களை வேலைக்கமர்த்துதல்

*114. திரு. லால்சந்த் நாவல்ராய்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர், நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்கள் பணி செய்வதை மீண்டும் அறிமுகம் செய்துள்ளது உண்மைதானா என்பதை அவர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) இந்தியாவில் பெண்கள் சுரங்கத்தில் வேலை செய்வது பொதுமக்களின் கண்டனத்தால் ஒழித்துக்கட்டப்பட்டது உண்மையா?

(இ) பெண் தொழிலாளர்களுக்கு, ஆண் தொழிலாளர்களுக்குச் சமமான ஊதியம் அளிக்கப்படுகிறதா, அவர்கள் நிலத்தடியில் பணிபுரிகிறார்களா என்ற கேள்விகளை காமன்ஸ் சபையில் அண்மையில், இந்தியா மந்திரி மாண்புமிகு அமெரியிடம் கேட்ட போது அவர் பதிலளிக்காமல் மழுப்பிவிட்டது உண்மையா?

(ஈ) மேலே (இ) கேள்வியில் குறிப்பிடப்பட்டுள்ள இரு விஷயங்க்ள் குறித்து மாண்புமிகு உறுப்பினர் அறிக்கை அளிக்கப் போகிறாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1944, பக்கம் 285 - 286.

(உ) இந்தியாவில் சுரங்கப்பணிகளுக்கு ஆண் ஊழியர்கள் கிடைக்கிறார்கள் அல்லவா? அப்படியானால், பெண் ஊழியர் களுக்குப் பதிலாக ஆண் ஊழியர்களைப் பயன்படுத்தக்கூடாதா?

(ஊ) உடல் ஆரோக்கியத்திற்குப் பாதகம் ஏற்படினும், தங்கள் குடும்பம் சிதைந்தாலும்கூட, பெண் தொழிலாளர்கள் கடுமையாக உழைப்பதுடன் அவர்களுக்கு அதிகம் கொடுக்கத் தேவையில்லை என்ற காரணத்தில்தான் அவர்கள் வேலையில் அமர்த்தப்படுகிறார் கள் என்பது உண்மையா? இல்லையென்றால் திரும்பவும் பெண் தொழிலாளர்களை ஆண்களுக்குப்பதிலாக வேலைக்கு எடுத்துக் கொள்வதற்கான சிறப்புக் காரணங்கள் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இப்பொழுது மத்திய மாகாணங்கள், பேரார், வங்காளம், பீகார் மற்றும் ஒரிசா மாகாணங்களில் நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் பணிபுரிய பெண் தொழிலாளர்கள் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

(ஆ) இந்திய நிலக்கரிச் சுரங்கங்களில், நிலத்தடியில் பெண் தொழிலாளர்களை வேலை செய்ய அனுமதிக்கக்கூடாது என்பது பல ஆண்டுகளாகவே இந்திய அரசின் தீர்மானமான கொள்கை யாக இருந்து வந்துள்ளது. 1928 ஆம் வருட இந்தியச் சுரங்கச் சட்டத்தில் இதற்கான வழிவகை ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 1929ல் பெண்கள் நிலத்தடியில் பணிபுரிவது தவிர்க்கப்பட்டது. 1937ல் இந்தச் சட்ட நடவடிக்கைகள் முழு அளவுக்கு செயல்படுத்தப் பட்டன.

(இ) என்னிடம் தகவல் இல்லை.

(ஈ) இல்லை. பிப்வரி 8ல் திருமதி ரேணுகா ரே கொண்டுவந்த ஒத்திவைப்புத் தீர்மானத்திற்குப் பதிலளித்துப் பேசுகையில் இந்த இரு விஷயங்கள் குறித்து ஒரு அறிக்கை அளித்துள்ளேன்.

(உ) ஆண் தொழிலாளர்கள் கிடைப்பதிலுள்ள கடுமை யான பற்றாக்குறையினால் பெண்கள் நிலத்தடியில் பணிபுரிய அனுமதிக்கப்பட்டனர். அரசுக்குத் தேவையான அளவு நிலக்கரி கிடைப்பதற்குத் தேவைப்படும் எண்ணிக்கையில் ஆண் தொழி லாளர்கள் கிடைப்பது உறுதியானவுடன் பெண்கள் நிலத்தடியில்

வேலை செய்வதற்குத் தடை விதிப்பது பற்றி அரசு மீண்டும் பரிசீலனை செய்யும். வங்காளம் மற்றும் பீகார் நிலக்கரிச் சுரங் கங்களுக்கு ஆண் தொழி லாளர்களை அனுப்ப அரசு உடனடி நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

*(ஊ) இல்லை. (இ) கேள்விக்கு அளித்த பதிலில் கூறியபடி போதுமான அளவு ஆண் தொழிலாளர்கள் கிடைக்காததால், சில நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்கள் நிலத்தடியில் பணிபுரிய அனுமதிக்கப்பட்டிருக்கின்றனர்.*

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** *(ஆ) கேள்வியைப் பொருத்த வரையில் பொதுமக்களின் கண்டனத்தினால்தான் பெண்தொழி லாளரின் பணிக்குத் தடைவிதிக்கப்பட்டது என்பது உண்மையா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *இந்தக் கேள்விக்கு என்னால் பதிலளிக்க இயலாது. ஏனெனில், எனக்கு இது தெரியாது.*

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** *பெண் தொழிலாளர் பற்றிய தடையை நீக்குவதற்கு முன்பு பொதுமக்கள் கலந்தாலோசிக்கப் பட்டனரா அல்லது அரசு தன் விருப்பப்படி தடையை நீக்கி விட்டதா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *சம்பந்தப்பட்ட வட்டாரங்களை அரசு கலந்தாலோசித்துள்ளது.*

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** *அதற்கு ஏதாவது ஆட்சேபனை தெரிவித்தார்களா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *எந்த ஆட் சேபனையும் கிடையாது.*

**திரு. என்.எம்.ஜோஷி:** *கேள்வி (இ) யைப் பொறுத்தவரை யில் ஆண்களுக்கு அளிக்கப்படும் அளவு ஊதியமே பெண்களுக் கும் அளிக்கப்படுகிறது என்பதைப்பற்றி தம்மிடம் தகவல் ஏதும் இல்லை என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்கிறாரா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *இந்தியா மந்திரி கேள்வியை தட்டிக் கழித்தாரா என்பதே கேள்வியின் சாரமாக இருந்தது. ஆண்களுக்கு அளிக்கப்படும் அளவுக்கே பெண்களுக் கும் ஊதியம் அளிக்கப்படுகிறது.*

**திரு. என்.எம். ஜோஷி:** சம அளவு ஊதியத்தைப் பொருத்த வரையில், நிலத்தடியில் பணிபுரியும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இருவரின் கூட்டுப்பணியின் அடிப்படையிலேயே ஊதியம் நிர்ணயம் செய்யப்படுகிறது என்பது மாண்புமிகு உறுப்பினருக்கு தெரியுமா? அவ்வாறிருக்கும்போது ஆண்களுக்கும் பெண்களுக்கும் சம அளவிலான ஊதியம் அளிக்கப்படுகிறது என்று எப்படி அவர் கூறுகிறார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தச் சட்ட விதியிலிருந்துத் தப்பித்துக்கொள்ளக் கடைப்பிடிக்கப்பட்டுவரும் வழிகள் அரசின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டால், இந்த விஷயத்தில் அரசு நடவடிக்கை எடுக்கும்.

**திரு. என்.எம். ஜோஷி:** ஆண் மற்றும் பெண் சுரங்கத் தொழிலாளர்கள் சமஊதியம் பெறுகிறார்களா என்பதைக் கண்டுபிடிக்க சரியான வழிமுறை இருக்கிறதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விசாரணை செய்வாரா? எனக்குக் கிடைத்தத் தகவல்களின்படி ஆண்களுக்கும் பெண்களுக்கும் கூட்டு வேலைக்கே ஊதியம் கொடுக்கப்படுகிறது. எனவே இந்த ஊதியம் சமமானதா என்பதைக் கண்டுபிடிப்பது சாத்தியமில்லாததாக இருக்கிறது, ஏனெனில் இருவரும் சேர்ந்தே கூட்டு ஊதியம் பெறுகிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விஷயத்தில் நான் ஒன்றும் செய்யமுடியாது. அரசு அறிவித்துள்ள பொதுநல நடவடிக்கைகள் நிறைவேற்றப்படுகின்றனவா என்ப்தைக் கண்காணிக்க ஆய்வாளர்களை நியமிப்பது பற்றி அரசாங்கம் யோசித்து வருகிறது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு என்னால் உறுதியாகக் கூற முடியும்.

**திரு. என்.எம். ஜோஷி:** பெண்கள் நிலத்தடியில் பணிபுரிவதைப்பற்றி இங்கிலாந்திலும் மற்றும் இந்த நாட்டிலும் உள்ள தொழிற்சங்கங்கள் அக்கறைகொண்டிருப்பதால், நிலத்தடியில் பணிபுரியும் பெண்களின் இன்றைய நிலை பற்றி ஓர் அறிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் வெளியிடுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இந்த யோசனை கணக்கிலெடுத்துக் கொள்ளப்படும்.

# 159

## *யுத்தத் தொழில்நுட்ப வல்லுனர்களுக்குப் பயிற்சி மையங்கள்

*120. சையத் குலாம் பிக் நைராங்: (அ) யுத்தத் தொழில்நுட்ப வல்லுனர்களுக்கானப் பயிற்சி மையங்களின் பெயர்களையும் ஒவ்வொரு மையத்திலும் அனுமதிக்கப்பட்டுள்ள பயிற்சியாளர் களின் எண்ணிக்கையையும் குறித்து ஓர் அறிக்கையை, மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து வெளியிடுவாரா?*

*(ஆ) பின்வருபவற்றுடன் இணைந்து எத்தனை மையங்கள் திறக்கப்பட்டுள்ளன:*

i) *அரசாங்க நிறுவனங்கள்;*

ii) *ரயில்வே தொழில் பட்டறைகள், மற்றும்*

iii) *தனியார் நிறுவனங்கள்.*

*(இ) இந்த நிறுவனங்களில் முஸ்லீம்களுக்குச் சொந்த மானவை எத்தனை? இந்துக்களுக்குச் சொந்தமானவை எத்தனை?*

*(ஈ) ஒவ்வொரு பிரிவுக்கும் அங்கீகரிக்கப்பட்ட பயிற்சியாளர் களின் எண்ணிக்கை எவ்வளவு?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *ஓர் அறிக்கை அளிக்கப்பட்டுள்ளது.+*

*(ஆ)* (i) *இந்திய சமஸ்தானங்களிலுள்ள 25 மையங்களை யும் சேர்த்து 125, நகராட்சிகள் (4), ஜில்லா போர்டுகள் 5,* (ii) 26, (iii) 119.

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 16, 1944, பக் 290-91.*

+ *அறிக்கை இடம்பெறவில்லை.*

(இ) (ஈ) தொழில் நிறுவனங்கள், தொழில்நுட்பக் கல்லூரி மற்றும் இதர அமைப்புகளுடன் தனியார் பயிற்சி மையங்கள் இணைந்திருக்கின்றன. வரையறுக்கப்பட்ட கம்பெனிகள், டிரஸ்ட் அமைப்புகள் போன்றவை பல மையங்களை நிர்வகிக்கின்றன. இந்த மாதிரி விஷயங்களில் விரிவான விசாரணைக்குப் பிறகே, இவை பெரும்பாலும் இந்துக்களுக்குச் சொந்தமானவையா அல்லது முஸ்லீம்களுக்குச் சொந்தமானவையா என்பதைக் கூறமுடியும். 763 இடங்களை கொண்டுள்ள 7 பயிற்சி மையங்கள் முஸ்லீம் களாலும், 5184 இடங்களைக் கொண்டுள்ள 27 மையங்கள் இந்துக் களாலும் நிர்வகிக்கப்பட்டு வருவது தெரிகிறது.

# 160

## *உதவி இயக்குனர்கள், மூத்த பிராந்திய ஆய்வாளர்கள், பிராந்திய ஆய்வாளர்கள் மற்றும் தொழில்நுட்ப ஆய்வாளர்கள்

*121. சையத் குலாம் பீக் நைராங்: (அ) உதவி இயக்குனர் கள், மூத்த பிராந்திய ஆய்வாளர்கள், பிராந்திய ஆய்வாளர்கள், தொழில்நுட்ப ஆய்வாளர்கள் எத்தனை பேர் உள்ளனர்?*

*(ஆ) இவர்களில் முஸ்லீம்களின் எண்ணிக்கை எவ்வளவு?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *எண்ணிக்கைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:*

| | |
|---|---|
| *பயிற்சி உதவி இயக்குனர்கள்* | *2* |
| *தொழில் நுட்பப் பயிற்சி மூத்த பிராந்திய ஆய்வாளர்கள்* | *7* |
| *தொழில் நுட்பப் பயிற்சி பிராந்திய ஆய்வாளர்கள்* | *15* |
| *தொழில்நுட்ப ஆய்வாளர்கள்* | *8* |

*பதினைந்து பிராந்திய ஆய்வாளர்களில் 7 பேர் பகுதி நேரமும், நான்கு பேர் கௌரவ அதிகாரிகளாகவும் உள்ளனர். 8 தொழில்நுட்ப ஆய்வாளர்களில் மூன்றுபேர் பகுதிநேர அதிகாரி களாக உள்ளனர்.*

*(ஆ) ஒருவரும் இல்லை.*

***டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:*** *இதில் முஸ்லீம்கள் எவரும் இல்லையா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அவ்வாறுதான் சொன்னேன்.*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 10, 1944, பக் 297.*

# 161

## *இங்கிலாந்துக்குப் பயிற்சிக்காக அனுப்பும் பெவின் இளைஞர்கள்

**சையத் குலாம்பீக் நைய்ராங்:** எத்தனை ''பெவின்'' இளைஞர்கள் பயிற்சிக்காக இங்கிலாந்துக்கு ஏற்கனவே அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா?

(ஆ) இதில் முஸ்லீம்களின் எண்ணிக்கை எத்தனை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 563

(ஆ) 110

# 162

## +தேசியப் பணித்துறை நடுவர் மன்றங்களின் தலைவர்கள்

123. **சையத் குலாம் பீக் நைராங்:** தேசியப் பணித்துறை நடுவர் மன்றங்களின் தலைவர்களாக மொத்தம் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிக்க முடியுமா?

(ஆ) இவர்களில் எத்தனை பேர் முஸ்லீம்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பத்து. இவர்களில் நான்கு பேர் முழுநேரத் தலைவர்களாகவும் பாக்கியுள்ள 6 பேரும் பகுதிநேரத் தலைவர்களாகவும் உள்ளனர். இவர்கள் மத்திய மற்றும் மாகாண அரசாங்கங்களில் ஏனைய முழுநேரப் பணிகளில் ஈடுபட்டுள்ளனர்.

(ஆ) ஒன்று.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி 1, பிப்ரவரி 10, 1944, பக் 297.

\+ மேற்படி, பக்கம் 297.

# 163

## *நிலக்கரி ஆணையரின் தகுதிகளும் கடமைகளும்

142. திரு.கே.சி. நியோகி: (அ) நிலக்கரி பற்றாக்குறைக்கான முக்கியக் காரணம் சந்தேகமில்லாமல் தொழிலாளர் பற்றாக்குறை தான் என்று கேள்வி எண் 250க்கு 1943 நவம்பர் 17ஆம் தேதி மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் சட்டமன்றத்தில் அளித்த பதிலை அவர் கவனத்துக்குக் கொண்டுவருகிறேன். தொழிலாளர் பற்றாக்குறை என்று இருக்கும்போது நிலக்கரி உற்பத்தி பெருக்கத் துக்கு ஒரு நிலக்கரி ஆணையரை நியமிப்பது அவசியம் என்று அரசு ஏன் கருதியது என்பதைத் தெளிவுபடுத்த முடியுமா?

(ஆ) நிலக்கரி ஆணையரின் கடமைகள் என்ன? அப்படி நியமிக்கப்பட்ட ஆணையருக்குத் தேவையான தகுதிகள் என்ன? தேவையான தகுதிகளுடனான இந்தியர் யாரும் இல்லை என்பதை அரசு அறிந்துள்ளதல்லவா?

(இ) தொழிலாளர் இலாகா, ரயில்வே இலாகா, மற்றும் இதர அரசு இலாகாக்களுடனான நிலக்கரி ஆணையருடைய அதிகாரபூர்வமான உறவுகள் எப்படி இருக்கும்?

(ஈ.) நிலக்கரி ஆணையருக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள ஊதியம் எவ்வளவு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாண்புமிகு போர்க்காலப் போக்குவரத்துத்துறை உறுப்பினர் 1944 பிப்ரவரி 24ல் இக்கேள்விக்குப் பதிலளிக்க இசைந்துள்ளார்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1944, பக்கம் 345.

# 164

## *நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்க நடவடிக்கைகள்

திரு. கே.எஸ்.குப்தா: (அ) குறைந்தபட்சம், உள்நாட்டுத் தொழிற்சாலைகள் மற்றும் ரயில்வேக்களின் தேவைகளை நிறைவேற்றுமளவுக்காவது நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்க எடுக்கப் பட்டுள்ள நடவடிக்கைகளை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

(ஆ) நிலக்கரி சுரங்கத்தில் வேலை செய்வது சுரங்கத் தொழிலாளர்களின் ஆரோக்கியத்துக்கு மிகவும் ஆபத்தானது என்பது உண்மையா?

(இ) திறமையான, பயிற்சி பெற்ற உழைப்பாளர்களைக் கவரத்தக்க விதத்தில், சுரங்கத் தொழிலாளர்களுக்கு சிறப்பு வசதிகள் எதுவும் செய்து கொடுக்கப்படவில்லை என்பது உண்மையா?

(ஈ) சுரங்கத் தொழிலாளர்களும் அவர்களது குடும்பங்களும், வசதி அற்ற இடங்களிலும், சுத்தமற்ற சூழ்நிலைகளிலும் வசிக்கிறார்கள் என்பது உண்மையா?

(உ) நிலக்கரிச் சுரங்கப் பகுதிகளில் மருத்துவ உதவிகளும், குழந்தைகளின் கல்விக்கான வசதிகளும் கிடையாது என்பது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பிப்ரவரி 10ல் சர் எஃப். இ ஜேம்ஸின் கேள்வி எண் 82 க்கு அளித்த பதிலை மரியாதைக்குரிய உறுப்பினர் கவனிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். நிலக்கரி உற்பத்தியை அதிகரிப்பதற்காக அரசு மேற்கொண்டுள்ள முக்கியமான நடவடிக்கைகள் அதில் கூறப்பட்டுள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 1, 1944, பக்கம் 719.

(ஆ) இல்லை. சுரங்கத் தொழில் ஆபத்தான தொழில்தான். ஆனால் ஆரோக்கியத்துக்கு நிச்சயம் தீங்கு விளைவிக்கக்கூடியது என்று சொல்லுவதற்கில்லை.

(இ) இல்லை. சுரங்கத் தொழிலாளர்களுக்குச் சலுகை விலையில் உணவுப் பொருட்கள் அளிக்கப்படுவதுடன் நிலக்கரிச் சுரங்கங்களில் நுகர்பொருள்கள் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. புதிய நிலக்கரி சுரங்கத் தொழிலாளர் நலநிதி அவசரக் கட்டத்தின்படி அளிக்கப்படும் வசதிகளை அதிகரிக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன.

(ஈ) ஜாரியா மற்றும் அசன்சால் சுரங்கச் சுகாதார வாரியத்தின் கட்டுமான நியதிகளின்படி கட்டப்பட்டுள்ள நல்ல கட்டடங்களைக் கொண்டுள்ள குடியிருப்பு வசதிகள், ஜாரியா, ராணிகஞ்ச் சுரங்கப் பகுதிகளில் உள்ளன. குறைந்த எண்ணிக்கையில் சுரங்கத் தொழிலாளர்கள் உள்ள மற்ற சுரங்கப் பகுதிகளில் அவர்கள் விருப்பத்திற்கிணங்க குடியிருப்பு வசதிகள் அமைக்கப்படுகின்றன, இருப்பினும் நிலக்கரிச் சுரங்கங்களில் சுகாதார நிலைமைகள் மற்றும் குடியிருப்பு வசதிகள் குறித்து அரசுக்கு அவ்வளவு திருப்தி இல்லை. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நல நிதி அவசரச் சட்டத்தின் மூலம் இதை சீர்படுத்தத் திட்டங்கள் தயாரிக்கப்படுகின்றன.

(உ) தற்பொழுதுள்ள மருத்துவ உதவி மற்றும் கல்வி பெறுவதற்கான வசதிகள் திருப்திகரமாக இல்லை. இந்த வசதிகளை அதிகரிக்க நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நலநிதி அவசரச் சட்டத்தின் மூலம் திட்டமிடப்பட்டுள்ளது.

(ஊ) **திரு. என்.எம். ஜோஷி:** நிலக்கரிச் சுரங்கங்களில் குடியிருப்பு வசதி மற்றும் இதர நிலைமைகளையும், மேலும் அரசு செய்துள்ள சீர்திருத்தங்களையும் குறித்து ஓர் அறிக்கையை இந்திய அரசு அளிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரிந்த வரைக்கும் அறிக்கை அளிப்பதற்கு ஒன்றுமில்லை. இப்பொழுது தான் பணியைத் தொடங்கியுள்ளோம். சில காலங்கள், இந்த அவசரச் சட்டம் அமலில் இருந்த சிறிது காலத்திற்குப் பிறகு என் நண்பர் ஓர் அறிக்கை கேட்டால் அதைக் கவனிக்கத் தயாராக இருப்பேன்.

திரு. என்.எம்.ஜோஷி: இந்த விஷயத்தில் இந்த அவை மிகவும் ஆர்வம் கொண்டுள்ளது. அங்குள்ள நிலைமைகளைத் தெரிந்து கொள்ளவும் அங்கு ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைப் பற்றிய தகவல்களை அறிந்துகொள்ளவும் அவை மிகவும் ஆர்வம் கொண்டுள்ளது. எனவே இந்த அவையில் ஓர் அறிக்கை அளிக்கப் படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் இதற்கு ஏற்கனவே பதிலளித்துவிட்டேன்.

# 165

## தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்த, ஒரு மசோதாவை அறிமுகம் செய்ய அனுமதி கோருகிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தீர்மானம் என்னவென்றால் -

> ''தொழிற்சாலைகள் சட்டம் 1934 ஐ மேலும் திருத்தம் செய்ய மசோதா தாக்கல் செய்ய அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இந்த மசோதாவை அறிமுகம் செய்கிறேன்.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 3, 1944, பக்கம் 798.

# 166

## *'பேகர்' என்ற கட்டாய உழைப்புக்கு ஆளாக்கப்பட்டுள்ள ஷெட்யூல்டு வகுப்பினர்

ராவ் பகதூர் என் சிவராஜ்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) விவசாயத் தொழிலாளர்களின் பாதுகாப்பும் பொது நலமும் இந்திய அரசின் தொழிலாளர் இலாகாவின் பொறுப்பில் உள்ளதா?

(ஆ) 1944 ஜனவரி 29, 30 தேதிகளில் கான்பூரில் நடைபெற்ற அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தின் ஆண்டு கூட்டத்தொடரில், இந்தியா முழுவதும் வழக்கத்திலுள்ள ஷெட்யூல்டு வகுப்பினரை மட்டுமே பாதிக்கக்கூடிய 'பேகர்' என்ற கட்டாய உழைப்பு முறையை கண்டித்து நிறைவேற்றப் பட்ட தீர்மானத்தை அவர் அறிவாரா?

(இ) இந்த 'பேகர்' வழக்கத்தை ஒழிக்கும் நோக்கத்துடன் அதைப் பற்றி விசாரணை நடத்த ஒரு குழுவை நியமிக்க இந்திய அரசு தீர்மானித்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்திய அரசின் பல்வேறு துறைகளில், இந்த விஷயம் தொழிலாளர் துறையின் கீழ் வருகிறது. பொதுவான விஷயம் என்பது இந்திய அரசாங்கச் சட்டம் 1935 ன் 7 வது அட்டவணையின் பாகம் II பட்டியல் III உடன் படும் விஷயங்களின் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள ஒன்றாகும்.

(ஆ) அகில இந்திய ஷெட்யூல்டு வகுப்பினர் சம்மேளனத்தினிடமிருந்து முறையான கடிதம் ஒன்றும் வரவில்லை.

(இ) இந்தப் பிரச்சினையைப் பற்றி இந்திய அரசு இதுவரை ஆலோசிக்கவில்லை.

(ஈ) இந்த யோசனை உரிய நேரத்தில் கவனிக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 7, 1944, பக்கம் 903-4.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: மத்திய மாகாணங்கள் மற்றும் பேராரில் 'பேகர்' முறை ஒழிக்கப்பட்டு விட்டதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயத்தைப் பற்றி எனக்கு ஒரு தகவலும் இல்லை.

திரு. கே.சி.நியோகி: இவ்வகை கட்டாய உழைப்பு முறை ஒழிக்கப்படவேண்டுமென்று மேதகு மன்னர்பிரான் பிரதிநிதியும் அவரது ஏஜெண்டுகளும் மாகாண நிர்வாகத்தை வற்புறுத்தி வருகிறார்கள் என்பதும், இது நாட்டின் சில பகுதிகளில் சாதகமான விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது என்பதும் உண்மைதானா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தச் செய்தியைத் தெரிந்து கொள்வதில் மகிழ்ச்சியடைகிறேன்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: ஐக்கிய மாகாணங்களில் உழவர்கள் என்று அழைக்கப்படுபவர்களில் 35 சதவீதத்தினர் கிராமத் தொழிலாளிகள் என்பதையும், விலை ஏற்றத்தால் அவர்கள் எந்தப்பயனும் அடையவில்லை என்பதையும் மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா? உழவர்களுக்கு பொருளாகக் கொடுக்கப்படுவதில்லை. அவர்களுக்குப் பணமாக அளிக்கப்படுவதால் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சரி, உங்கள் கேள்வி என்ன?

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: கேள்வி என்னவென்றால் மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா, அதாவது உழவர்கள்...

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒரு நீண்ட சொற்பொழிவாற்றி விட்டார்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அதைப்பற்றி அறிவாரா, அதைக் குறித்து அரசு என்ன நடவடிக்கை எடுக்கத் தீர்மானித்துள்ளது என்பதை அறிய விரும்புகிறேன்.

(பதில் இல்லை)

# 167

## *ரயில்வே சமரச அதிகாரி மற்றும் ரயில்வே தொழிலாளர்களின் மேற்பார்வையாளரின் நடவடிக்கைகளை விரிவுபடுத்துதல்

394. திரு. லால்சந்த் நாவல்ராய்: நட்சத்திரக் குறியிட்ட என் கேள்விக்கு நவம்பர் 13ல் அளித்த பதிலில் தெரிவிக்கப்பட்டது போல ரயில்வே சமரச அதிகாரி, மற்றும் ரயில்வே தொழிலாளர்கள் மேற்பார்வையாளரின் நடவடிக்கைகளைக் கல்கத்தாவை தலைமை யிடமாகக் கொண்டுள்ள ரயில்வேயைத் தவிர இதர ரயில்வேக் களுக்கும் விரிவுபடுத்துவது பற்றி ஏதாவது முடிவு எடுக்கப் பட்டதா என்பதை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா? இல்லை யென்றால் எப்பொழுது முடிவு எடுக்கப்படும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பொதுவாக மத்தியத் தொழில் அமைப்புகளில் தொழில் தகராறுகளைத் தீர்ப் பதற்குப் பரந்த அளவிலான பிரேரணைகளைத் தீர்மானித்து முடி வெடுக்கும் வரை இந்தப் பிரச்சினையைப் பற்றிய முடிவு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது.

திரு. லால்சந்த் நாவல்ராய்: அது போர் முடிந்த பின்பு நடக்குமா அல்லது இப்பொழுதே அறிமுகப்படுத்தப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது நான் கொடுத்த பதிலை ஆதாரமாகக் கொண்ட ஓர் அனுமானம் அல்ல.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 14, 1944, பக்கம் 1024-25.

# 168

## *ஐக்கிய மாகாணங்களிலுள்ள சிவில் முன்னணிப் படையில் ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த கமிஷண்ட் ராணுவ அதிகாரிகள்

415. திரு. பியாரி லால் குரில்: சிவில் முன்னணிப் படையில் உள்ள கமிஷண்ட் ராணுவ அதிகாரிகளைப் பற்றி 1944 பிப்ரவரி 15ல் திரு.ஜி. ரங்கையா நாயுடுவின் கேள்விக்கு அளித்த பதில் சம்பந்தமாக ஒன்றைக் கேட்க விரும்புகிறேன். அந்தப் படையில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பு பெயர்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அவையில் ஓர் அறிக்கை அளிக்கப்பட்டுள்ளது.

ஐக்கிய மாகாணங்களில் உள்ள சிவில் பயோனியர் படைப் பிரிவுகளில் கமிஷண்ட் ராணுவ அதிகாரிகளாக நியமிக்கப்பட்டுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் விவரப்பட்டியல்:

| ஷெட்யூல்டு வகுப்பு அதிகாரியின் பெயர் | | முதல் நியமனத் தேதியும் பதவி அந்தஸ்தும் | தற்போதைய பதவி அந்தஸ்து | நியமிக்கப் பட்ட அதிகாரி களின் எண் ணிக்கை | நியமிக்கப் பட்ட ஷெட்யூல்டு வகுப்பு அதிகாரிகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. நந்த லால் குரீல் | 19.5.43 | 2 வது லெட் | 2வது லெட் | 28 | 4 |
| 2. எஸ்.கே. முலிக் | 3.7.43 | ,, | ,, | | |
| 3. கே.பி. பாலே ராவ் | 19.11.43 | ,, | ,, | | |
| 4. க்ஷேத்ரா பால் சிங் சாகர் | 29.1.44 | ,, | ,, | | |

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 14, 1944, பக்கம் 1036.

# 169

## *சிவில் முன்னணிப் படையில் உள்ள எழுத்தர்களின் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்

திரு. பியாரி லால் குரில்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) பல்வேறு மாகாணங்களில் சிவில் முன்னணிப் படையில் உள்ள எழுத்தர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) ஒவ்வொரு மாகாணத்திலும் இந்த எழுத்தர்களில், எத்தனை பேர் இந்துக்கள், முஸ்லீம்கள், ஷெட்யூல்டு வகுப்பினர், கிறிஸ்தவர்கள் மற்றும் ஆங்கிலோ-இந்தியர்கள்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பல குழுக்கள் போர்ப் பிராந்தியத்தில் உள்ளன. மற்றவர்கள் படைகளுடன் வெளிப் பகுதிகளில் உள்ளனர். எனவே இந்த சூழ்நிலையில் நீங்கள் கேட்ட விவரங்களை சேகரித்துத் தருவது சாத்தியமில்லை.

# 170

## *புது டில்லியிலுள்ள பழையபாணி மற்றும் புதியபாணி குடியிருப்புக்களுக்கிடையேயான வேறுபாடுகள்

493. சர்தார் சாந்த் சிங்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

(அ) புதியபாணி எழுத்தர் குடியிருப்புகளில் துணை வீடுகள் மற்றும் தோட்டம் உட்பட கீழ்ப்பரப்பு மற்றும் நிலப்பரப்புகளின் அளவு அதேபோன்ற பழம்பாணி எழுத்தர் குடியிருப்புகளின் அளவை விட (முக்கியமாக மின்டோ சாலைப்பகுதியில்) மிக அதிக

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 16, 1944, பக்கம் 1037.

+ மேற்படி அதே தொகுதி, மார்ச் 17, 1944, பக். 1217-18.

அளவை விட (முக்கியமாக மின்டோ சாலைப்பகுதியில்) மிக அதிக மாக உள்ளது. இதனால் புதியபாணி குடியிருப்புகளில் குடியிருப் பவர்கள் நல்ல காய்கறிகளைப் பயிரிடுவதுடன் பூந்தோட்டம் போடவும், கோழிகள் வளர்க்கவும் பால்மாடுகள், கன்றுகாலிகள் வளர்க்கவும் பூப்பந்தாட்ட, வரிப்பந்தாட்ட மைதானம் அமைக்கவும், அதேவேளையில் பழம்பாணிக் குடியிருப்புகளில் ஒரு சராசரி குடும் பத்திற்கு கோடை காலத்தில் சிறுகட்டில் போடுமளவுக்குக்கூட திறந்தவெளி இல்லை என்பதுடன் (டி) இ) பழம்பாணிக் குடியிருப்பு களில் கூரைகள் கோடை காலத்தில் மிகவும் வேகமாக சூடுபிடிக்கும் அளவுக்கு மிகவும் தாழ்வாக உள்ளதால் குடியிருக்க லாயக்கற்றதாக உள்ளதா?

(ஆ) புதுபாணி குடியிருப்புகளைக் கட்டுவதில் உபயோகப் படுத்தப்பட்ட பொருள்கள் அதாவது தேக்கு மரம், தாழ்ப்பாள்கள் போன்ற பொருள்கள், மற்றும் நாற்காலி மேஜை, பழம்பாணிக் குடியிருப்புகளில் உபயோகிப்பட்டவைகளைவிடத் தரத்தில் மிகவும் உயர்வாக இருப்பதுடன் சிறந்த வேலைப்பாடும் கொண்டவையாக உள்ளனவா?

(இ) புதுபாணி குடியிருப்புகளில் உள்ள கீழே குறிப்பிடப் பட்டுள்ள சிறப்புவசதிகள் மற்றும் சாதனங்கள் பழம்பாணிக் குடி யிருப்புகளில் இல்லை என்பது உண்மையா?

I. தோட்டங்கள், செடிகள்.

II. வேலைக்காரர்களுக்கான குடியிருப்பு.

III. அடுப்புகளுக்கு இரும்புச் சட்டங்கள்.

IV. சுவர் அலமாரிகள்.

V. திரைச்சீலை தொங்கவிட கொக்கிகள், வரிச்சுத்தட்டி களைத் தொங்கவிட வளையங்கள்.

VI. குளியலறையில் அலம்பு தட்டங்கள்.

VII. சுற்றுச்சுவருக்குள் வடிகட்டாத தண்ணீர் இணைப்பு.

VIII. டி','இ', பழம்பாணிக் குடியிருப்புகளில் தேவையான போது திறந்துவிட மூன்று திறப்புகளைக் கொண்ட பலகணிகள்.

*(ஈ.) 'பி'' பிரிவுக்குக் கீழான பழம்பாணிக் குடியிருப்புகளில் மாட்டுத் தொழுவங்கள் அமைக்க அனுமதிக்காத அதேவேளையில் புதுபாணிக் குடியிருப்புகளில் அனுமதிக்கப்பட்டுள்ளதா?*

*(உ) புதுபாணி குடியிருப்புகளிலிருந்து வரும் புகார் களுக்கு பொதுப்பணித்துறையின் விசாரணை அலுவலகம் உடனடி கவனம் செலுத்துவதுடன், பொது பராமரிப்பு மற்றும் வருடாந்திர செப்பனிடும் பணியிலும் அவைகளுக்கு முன்னுரிமை அளிக்கப் படுகிறதா?*

*(ஊ) பழம்பாணிக் குடியிருப்புகளை விட புதுபாணி குடி யிருப்புகளுக்கு பராமரிப்புச்செலவு மிக அதிகமா? மேலும் ஒப் பிட்டுப் பார்க்கும்போது புதுபாணி குடியிருப்புகளிலிருந்து கிடைக் கும் மூலதனத்திற்கான வட்டி அற்பமானதாக இருக்கும் அதே வேளையில் பழம்பாணிக் குடியிருப்புகள் போதுமான அளவு வருமானம் அளிக்கிறதா?*

*(எ) (அ) கேள்விக்கு பதில் 'ஆம்' என்றால் இரண்டு பிரிவு களுக்கும் பத்து சதவீதம் சமமாக வாடகை வசூலிக்கும்போது பழம்பாணி மற்றும் புதுபாணி குடியிருப்புகளுக்கு அளிக்கப்பட்டுள்ள வசதிகளின் வித்தியாசத்திற்கான காரணங்கள் யாவை?*

*(ஏ) வாணிகக் கோட்பாடுகளுக்கு இணங்க அவற்றின் அடிப்படை விதிகளை திருத்த அரசு தயாராக உள்ளதா? அவ்வாறு தயாராக இல்லையென்றால், அது ஏன்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்றும் பிற்பகுதிக்கு 'இல்லை' என்றும் பதில் அளிக்கப்படுகிறது.*

*(ஆ) இல்லை.*

*(இ) எண். (i) (ii) (iii) (iv) (v) (vi) (vii) (viii) ஆகியவற்றைப்*

பொறுத்தவரை 'டி' 'இ' பழம்பாணிக் குடியிருப்புகளைத் தவிர இதர குடியிருப்புகளில் வேலைக்காரருக்கான அறை ஒன்றும் உள்ளது. வடிகட்டாத தண்ணீர் இணைப்பு பழம்பாணி குடியிருப்புகளுக்கு வெளியே திறந்த வெளி வளாகத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

(ஈ) ஆம்.

(உ) இல்லை.

(ஊ) கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்பதுதான் பதில். இரண்டாவது பகுதியைப் பொருத்தவரை நிலைமை பின்வருமாறு உள்ளது.

இரு வகைக் குடியிருப்புகளிலும் குடியிருக்கும் அரசு ஊழியர்கள் ஒரு குறிப்பிட்ட வாடகை அல்லது தங்கள் சம்பளத்தில் 10 சதவீதம் என்பதில் எது குறைவாக உள்ளதோ அதை வாடகையாகக் கட்டவேண்டும். ஆனால் பழம்பாணி வீட்டிற்கான வாடகை குறைவாக இருப்பதால் பல குடியிருப்பாளர்கள் அந்த வாடகையே கட்டுகிறார்கள். பழம்பாணி மற்றும் புதுபாணி வாழ்க்கை முறைக்குப் பொருத்தமானமுறையில் வசதிகள் இருவித குடியிருப்புகளுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. சட்ட விதிகளின்படி வாடகை வசூலிக்கப் படுகிறது.

(எ) இல்லை. சட்டவிதிகளில் கூறியபடி சலுகை வாடகையில் அரசு குடியிருப்புகளை அளிக்கிறது. அதிகாரிகளின் வேறுபடும் பணிச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அதை மாற்ற முடியாது.

**சர்தார் சாந்த் சிங்:** பழம்பாணிக் குடியிருப்புகளில் வளாகத்திலும் புதுப்பாணிக் குடியிருப்புகளைப் பொருத்தவரையில் குடியிருப்பிற்குள்ளும் தண்ணீர் வசதி அளிக்கப்படவேண்டுமென்பது சட்டத்தின் பகுதியாக உள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அப்படித்தான் இருக்க வேண்டும்.

# 171

## *இந்திய அரசு அச்சகங்களில் அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்களுக்கும், சரிபார்ப்பவர்களுக்கும் பிழை திருத்துவோர் பதவி உயர்வு அளித்தல்

501. திரு. முகமது ஹுசைன் சவுத்ரி: இந்திய அரசின் அச்சகத்தில் அச்சு திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்களுக்கும் பிழை திருத்துபவராக பதவி உயர்வு அளிப்பது குறித்து 1944 பிப்ரவரி 26-ல் காஜி முகமது அகமது காஸ்மி கேட்ட கேள்வியின் பிரிவு (இ)க் கான விடை சம்பந்தமானது இந்தக் கேள்வி. பின்னால் நடைபெற்ற தேர்வுகளில் இரண்டாவது வாய்ப்புகளில் வெற்றி பெறுபவர்களைக் காட்டிலும், இலாகாவைச் சேர்ந்தவர்கள் முந்தைய தேர்வுகளில் வெற்றி பெற்றிருப்பினும் எந்த முன்னுரிமையும் அளிக்கப்படாததே இந்த முரண்பாட்டுக்குக் காரணமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) முந்தையத் தேர்வுகளில் வெற்றிபெற்றவர்கள் பிழை திருத்துபவர் வேலைக்கு அனுபவம் மற்றும் திறமையின் அடிப்படையில் அதிகத் தகுதி பெற்றவர்கள் என்பதை அவர் அறிவாரா?

(இ) பிழை திருத்துபவர் பதவிக்கு ஒரு விண்ணப்பதாரரின் நிலையைத் தீர்மானிக்க, வெற்றி பெற்ற தேதியை வழிகாட்டியாகக் கொள்ளாத வரை, தற்போதைய முரண்பாடு மற்றும் நடப்பிலுள்ள சட்டத்தை கொண்டுவருவதற்கு முன்புள்ள கஷ்டங்களை நீக்க முடியாது என்பது உண்மையா?

(ஈ) பதவியில் மூத்தவராக இருத்தல் மற்றும் திறமையின் அடிப்படையில் அதாவது மூத்தவராக இருத்தல் என்ற அடிப்படையில் ஆனால் தேர்வில் வெற்றி பெற்ற தேதியின் வரிசைப்படி

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 17, 1944, பக்கம் 1224-5.

தான் பதவி உயர்வு அளிக்க அரசு தீர்மானித்துள்ளதா? இல்லை என்றால் ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. இல்லை.

(ஆ) ஒருவர் முன்பே தேர்வில் வெற்றி பெற்றதால் திறமை அதிகம் பெற்றுள்ளதாகக் கருத முடியாது.

(இ) பிழை திருத்துபவர் பதவிக்கான தேர்வில் முதல் தடவையிலோ அல்லது இரண்டாவது தடவையிலோ வெற்றி பெறுபவர்களைப்பற்றி எந்தவித முரண்பாடும் இல்லை. ஆனால் மூன்றாம் வாய்ப்பில் தேர்வுபெற்றவர்களைக் குறித்து சில முரண்பாடுகள் எழுந்துள்ளன. காஜி முகமது அகமது கஸ்மியின் கேள்வி 231(டி) பிரிவுக்கு அளித்த பதிலில் குறிப்பிட்டதுபோல் அவர்களை விலக்கி விடுவது பற்றி பரிசீலிக்கப்பட்டுவருகிறது.

(ஈ) பிழை திருத்துபவர் பதவிக்கான தேர்வு, பதவி உயர்வுக்கு தகுதியைப் பெறுவதற்கான தேர்வாகும். ஒவ்வொரு ஊழியருக்கும் இரண்டு வாய்ப்புகள் அளிக்கப்படுகின்றன. பதவி உயர்வை தேர்வை வெற்றி பெற்ற தேதியின் அடிப்படையில் ஒழுங்குபடுத்த அரசு விரும்பவில்லை.

# 172

## *உதவி மண்ணியல் ஆராய்ச்சியாளர்களாக பீகாரிகள்

504. திரு. கைலாஷ் பீகாரி லால்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

(அ) ஒவ்வொரு மாகாணத்துக்கும் நிர்ணயிக்கப்பட்டுள்ள பங்கின் அடிப்படையில்தான் இந்திய மண்ணியல் ஆராய்ச்சி இலாகாவில் தோன்றும் காலி இடங்கள் நிரப்பப்படுகின்றன என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்றத்தின் விவாதங்கள், தொகுதி II, மார்ச் 17, 1944, பக்கம் 1226.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. இல்லை.

ஆ. கேள்வி எழவில்லை.

இ. தகவல்கள் சேகரிக்கப்பட்டு சபையில் அளிக்கப்படும்.

ஈ. கேள்வி எழவில்லை.

# 173

## *அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்களும் சரிபார்ப்பவர்களும் இந்திய அரசு அச்சகங்களில் பிழைதிருத்துவோர்களாகப் பதவி உயர்வு பெறுதல்

+506. திரு. கைலாஷ் பீகாரி லால்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களைத் தெரிவிக்க முடியுமா?

(அ) தகுதி பெற்ற பிழை திருத்தப் படிப்பவர்களும் சரிபார்ப் பவர்களும் பிழை திருத்துபவராக அரசு அச்சகத்தில் பதவி உயர்வு பெறும் சட்ட விதிகளை திருத்தும் விஷயம் அரசின் கவனத்தில் உள்ளதா?

(ஆ) எல்லா அரசு அச்சகங்கள், அவற்றின் பணிக்குழுக்கள் மற்றும் தொழிற்சங்கங்களிடமிருந்து கோரப்பட்ட கருத்துகள் பரி சீலிக்கப்பட்டு வருவது உண்மையா?

(இ) 1936ல் பிழை திருத்துவோருக்கான தேர்வில் வெற்றி பெற்ற சில தகுதிபெற்ற பிழை திருத்தப் படிப்பவர் ஒதுக்கப்பட்டு தற்பொழுதுள்ள சட்டப்படி நான்கு வருடத்திற்குப் பிறகு வெற்றி பெற்றவர்களுக்கு (1940) வாய்ப்பளிக்கப்பட்டது உண்மைதானா?

(ஈ) இதில் வெவ்வேறு மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள பங்கு எவ்வளவு?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 17, 1944, பக்கம் 1226.

+ இந்தக் கேள்விக்கான விடை அளிக்கப்பட்டது. கேள்வி கேட்டவர் அவைக்கு வர வில்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். காஜி முகமது அகமது கஸ்மி கேள்வி எண் 231 க்கு 25 பிப்ரவரி 1944 ல் நான் அளித்த பதிலை கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

(ஆ) ஆம்.

(இ) மற்றும் (ஈ) இல்லை. 1940 வரை நடைமுறையிலிருந்த நியதியின்படி மீண்டும் தகுதிபெறுவது அவசியமாகையால் யாரும் புறக்கணிக்கப்படவில்லை.

# 174

## *மக்கள் செய்தித் துறையின் மொழிகள் பிரிவு லாகூருக்கு மாற்றம்

140. திரு. முகமது அஸார் அலி: (அ) லாகூரில் மொழிகள் பிரிவுக்கு (அதிகாரிகளைத் தவிர்த்து) ஒதுக்கப்பட்ட மொத்த இடத்தின் பரப்பளவு மற்றும் அதில் பணியாற்றவுள்ள மொத்த பணியாளர்களின் எண்ணிக்கை பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? பணியாளர்களின் திறமையான பணிக்கு இது போதுமானது என்று அரசு கருதுகிறதா? இந்த அளவு கூட இடம் டில்லியில் கிடைக்கவில்லையா?

(ஆ) ஊழியர்களுக்கான கழிப்பிடமும் தற்காலிகமாகத் தயாரிக்கப்பட்டுள்ள சிறுநீர் கழிக்குமிடமும் வடிகால் வசதி இல்லாதவை என்பது அரசுக்குத் தெரியுமா?

(இ) மக்கள் செய்தித்துறையைச் சேர்ந்த எத்தனை பணியாளர்கள் டில்லியிலிருந்து லாகூருக்கு மாற்றப்பட்டுள்ளனர்? அவர்களின் எத்தனை பேருக்கு டில்லியில் குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டுள்ளன? எத்தனை பேருக்கு லாகூரில் குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டுள்ளன? குடியிருப்பு போதுமானதாக இல்லையென்று லாகூரில் எத்தனைபேர் குடியிருப்புகளைத் திரும்பத் தந்துவிட்டனர்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 17, 1944, பக்கம் 1227.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 4587 சதுர அடி அலுவலகத்துக்காக ஒதுக்கப்பட்டுள்ளது அலுவலகப் பணியாளர்கள் 48 பேர்.

இரண்டாவது பிரிவு - ஆம்.

மூன்றாவது பிரிவு - இல்லை.

(ஆ) கேள்வியின் முதல் பகுதிக்கு ஆம் என்றும் மறுபகுதிக்கு இல்லை என்றும் பதில் அளிக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| (இ) டில்லியிலிருந்து சென்ற பணியாளர்களின் எண்ணிக்கை ... | 35 |
| டில்லியில் குடியிருப்பு கொடுக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை ... | 7 |
| லாகூரில் குடியிருப்பு கொடுக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை ... | 18 |
| லாகூரில் குடியிருப்புகள் சிறியதாக உள்ளன என்று அவைகளைத் திரும்பக் கொடுத்துவிட்ட பணியாளர்கள் ... | 5 |

# 175

## *டில்லியிலுள்ள (புத்தக) வெளியீடுகளுக்கான நிர்வாகியின் விற்பனை நிலையத்தில் தாமதங்கள்

141. திரு.கைலாஷ் பீகாரி லால்: பழைய பீகாரிலுள்ள (புத்தக) வெளியீடுகளுக்கான நிர்வாகியின் விற்பனை நிலையத்தில் புத்தகங்களுக்கான விற்பனைச் சன்னலருகே மணிக்கணக்கில் காத்துக் கிடக்க வேண்டியிருக்கிறது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை என்பது தான் பதில்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 17, 1944, பக்கம் 1227.

# 176

## *தொழிலாளர் இலாகாவின் நிலைக் குழுவுக்கு உறுப்பினர்கள் தேர்வு

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

ஐயா, பின்கண்ட தீர்மானத்தை முன்மொழிகிறேன்:

''தொழிலாளர் இலாகா அக்கறை கொண்டுள்ள விஷயங்களில் ஆலோசனைகூற ஐந்து அதிகாரசார்பற்ற உறுப்பினர்களை நிலைக்குழுவுக்கு மாண்புமிகு தலைவர் வழிகாட்டும் முறையில் இந்த சபை தேர்ந்தெடுக்கும்.''

# 177

## +நிலக்கரி விலைக்கட்டுப்பாடு மற்றும் விநியோகத்திற்கான திட்டம்

677. திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா: (அ) நிலக்கரி விலையைக் கட்டுப்படுத்தவும் மற்றும் வினியோகத்தை ஒழுங்குபடுத்தவும், உற்பத்தியைப் பெருக்க ஊக்கமளிக்கவும் திட்டம் ஏதாவது உருவாக்கப்பட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்கமுடியுமா? அப்படியென்றால் இந்தத் திட்டத்தின் பின்னணியிலுள்ள கோட்பாடுகளைப் பற்றிய விவரங்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பதுடன் ஓர் அறிக்கையையும் சபையில் சமர்ப்பிக்க முடியுமா?

(ஆ) நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்களுக்கும் உண்மையான நுகர்வோருக்கும் இடையே உள்ள இடைத்தரகர்களை இந்தத் திட்டம் நீக்கிவிடுகிறதா? அப்படியென்றால் இத்திட்டத்தால்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 22, 1944, பக்கம் 1393

\+ மேற்படி அதே தொகுதி, மார்ச் 17, 1944, பக்கம் 1235.

ஏற்படும் சாதகங்கள் என்ன? தற்பொழுது நிலக்கரி வழங்குவோர் களுக்கு அதனால் ஏற்படும் பாதகமென்ன?

(இ) அதிக நிலக்கரி உற்பத்திக்காக, நிலக்கரிச் சுரங்கங் களுக்கு ஏன் போனஸ் கொடுக்கவேண்டும் அல்லது நிலக்கரி சுரங் கங்கள் நுகர்வோருக்கு நேரிடையாக சப்ளை செய்யமுடியும்போது, நிலக்கரி சுரங்கங்களும் நுகர்வோர்களும் இடைத்தரகர்களுக்கு ஏன் 0-4-0 கமிஷன் கொடுக்க வேண்டும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். திட்டத்தைப் பற்றிய ஓர் அறிக்கை+ அவையில் அளிக்கப்பட்டுள் ளது. இந்தத் திட்டம் ஐந்து பகுதிகளைக் கொண்டுள்ளது: (அ) ஒவ் வொரு நிலக்கரி சுரங்கத்தின் மாத உற்பத்தியின் மதிப்பீடு, (ஆ) இந்தத் திட்டம் வேலை செய்வதைப்பற்றி அரசுக்கு ஆலோசனை கூற நிலக்கரி கட்டுப்பாட்டுக்குழுவை உருவாக்குவது, (இ) உற்பத்தி முழுவதையும் அரசு ஒரு நிலையான விலையில் விற்பது, (ஈ) அதிகப் படியான உற்பத்திக்கு மிகை லாபத்திற்கான வரி இல்லாமல் போனஸ் அளிப்பதன் மூலம் உற்பத்தியை ஊக்குவிப்பது, (உ) சுரங்க நடவடிக்கைகளில் கட்டுப்பாடு. இந்தத் திட்டத்தின் குறிக்கோள் வருமாறு: (i) நியாயமான விலையில் தேவைப்படும் நுகர்வோர் களுக்கு எல்லா நிலக்கரியையும் வினியோகம் செய்வது (ii) நிலக்கரி உற்பத்தியை மிக அதிக அளவுக்கு உயர்த்துவதற்கு எல்லா உதவி களையும் செய்வது.

(ஆ) இல்லை. கேள்வியின் இரண்டாவது பகுதிக்குப் பதில் தேவையில்லை.

(இ) உற்பத்தியை ஊக்குவிக்கவே போனஸ் அளிக்கப் படுகிறது. கமிஷன் தொகை நிர்ணயிக்கப்படவில்லை. இந்திய அரசால் அது நிர்ணயிக்கப்படும். நிலக்கரிச் சுரங்க உரிமையாளரும் நுகர்வோர்களும், இடைத்தரகர் அவசியம் என்று சம்மதித்தால் மட்டுமே அவர் நியமிக்கப்படுவார்.

---

+ அறிக்கை இங்கு வெளியிடப்படவில்லை - ஆசிரியர்

# 178

## *போனஸ் நிதிக்காக நிலக்கரிக்கு வரி

+578. திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்தியாயா: நிலக்கரி சுரங்கங்களுக்கு போனஸ் அளிப்பதற்காக நிதி ஒன்றை உருவாக்க, நிலக்கரிக்கு வரி விதிக்க தீர்மானிக்கப்பட்டுள்ளது என்பதைப் பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? இது நுகர்வோரின் மீது சுமத்தப்படும் இரட்டை வரி ஆகாதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கேள்வியின் முதல் பகுதியைப் பொறுத்தவரை பதில் அதுவே நம் இலக்கு. இரண்டாவது பகுதியைப் பொறுத்தவரையில் நிலக்கரிக்கான வரி எல்லாவிதத்திலும் நுகர்வோர் மீதான வரிதான். ஆனால் போனஸ் அளிப்பதே நுகர்வோரின் நன்மைக்காகவே. இது உற்பத்தியை ஊக்குவித்து நுகர்வோரின் தேவைகளைப் பூர்த்தி செய்யும்.

# 179

## #புது டில்லியிலுள்ள இந்திய அரசு அச்சகத்தின் முஸ்லீம் ஊழியர்களின் வெள்ளிக்கிழமைத் தொழுகையினால் மிகைநேரம் குறைக்கப்படுகிறது

587. சேத் யூசுப் அப்துல்லா ஹரூன் (காஜி முகமது அகமது காஸ்மிக்காக) வெள்ளிக்கிழமை கூட்டுத்தொழுகைக்கு செல்லும் புதுடில்லி இந்திய அரசு அச்சக முஸ்லீம் உழைப்பாளர்களின் மிகை நேரத்தில் ஒருமணிநேரம் குறைக்கப்படுகிறது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 22, 1944, பக்கம் 1395.

+ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாததால் அதற்கான பதில் அவை முன் வைக்கப்பட்டது.

# மேற்படி அதே தொகுதி, பக். 1395

*(ஆ) முன்பு இந்த ஒரு மணிநேரத்துக்கு எந்தப் பிடித்தமும் இல்லாமல் இருந்தது உண்மையா?*

*(இ) பழைய வழக்கத்தை மீண்டும் கொண்டுவரும் யோசனையை அரசு பரிசீலிக்குமா அல்லது ஒரு மணி நேரத்தை நேர்வு விடுப்பில் அல்லது சராசரி ஊதியத்துடனான விடுப்பில் சேர்க்கத் தீர்மானிக்குமா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) 1931க்கு முன்பு எந்தவித கழித்தலும் இல்லாமல் இருந்தது. ஆனால் இந்தப் பழக்கம் ஒழுங்கற்றதால் கைவிடப் பட்டது.

(இ) முந்தைய (ஆ) கேள்விக்கு அளித்த பதிலினால் (இ) பிரிவு கேள்வி எழவில்லை. இந்தியத் தொழிற்சாலைகள் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்ட வேலைநேரத்துக்கு அதிகமாக வேலை செய்த நேரம் மிகைநேரம் என்று கணக்கிடப்படும். மிகைநேரத்தைக் கணக்கிடும்போது ஊழியர் வேலை செய்த மொத்த நேரத்திலிருந்து தொழுகை நேரம் கழிக்கப்படுகிறது.

**சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்:** *இந்திய அரசு நேரத்தை ஒரு மணி நேரம் முன்னுக்கு மாற்றி விட்டதே இந்தக் குழப்பத் திற்குக் காரணம் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அப்படி நினைக்கவில்லை.

**சேத் யூஸீப் அப்துல்லா ஹரூன்:** *அரசு தன் நேரத்தை மாற்றியிருப்பதால் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் தொழுகை நேரத்தை மாற்ற ஆலோசனை கூறுகிறாரா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தொழுகை நேரத்தை மாற்ற வேண்டுமா என்பது பிரச்சினையல்ல. பிரச்சினை என்னவென்றால் தொழுகை நேரத்தை மிகை வேலை நேரமாக அனுமதிப்பதா என்பதுதான்.

# 180

## *புது டில்லியிலுள்ள இந்திய அரசு அச்சகத்தில் ஞாயிற்றுக்கிழமை மற்றும் இதர விடுமுறை நாட்களில் செய்யும் பணிக்கான ஊதியம்

588. சேத் யூசுப் அப்துல்லா ஹரூன் (காஜி முகமது அகமது காஸ்மிக்காக): (அ) அரசின் அவசர வேலைகளை முடித்துக் கொடுப்பதற்காக புதுடில்லி அரசு அச்சக மேலாளரின் உத்தரவின் பேரில் ஊழியர்கள் ஞாயிற்றுக்கிழமைகள் மற்றும் பண்டிகை நாட்களில் பணிக்கு வருகிறார்கள் என்பதும், ஒரு நாள் வேலை முடிந்த பிறகு அவர்களுக்கு நான்கு மணிநேரத்துக்கான ஊதியமே கொடுக்கப்படுகிறது என்பதும், ஆனால் முன்பு அவர்களுக்கு பனிரெண்டு மணி நேர ஊதியம் கொடுக்கப்பட்டு வந்தது என்பதும் உண்மைதானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) வழக்கமான ஊதியம் பெறுபவர்களுக்கு விடுமுறை நாட்களில் 8 மணிநேரம் வேலைபார்த்த பிறகு பனிரெண்டு மணி நேரத்துக்கான கூலி அளிக்கும் பழைய வழக்கத்தைத் தொடங்கும் யோசனையை அரசு கவனத்தில் எடுத்துக்கொள்ளுமா அல்லது நான்கு மணிநேரம் என்பது எட்டு மணி நேரமாக அதிகரிக்கப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்று பதில் அளிக்கப்படுகிறது. இரண்டாவது பகுதியைப் பொருத்தவரையில் இந்திய தொழிற்சாலைகளின் சட்டப்படி, ஞாயிற்றுக்கிழமைகளில் பணிபுரிபவர்களுக்கு ஈட்டு விடுப்பிற்குப் பதிலாக, நான்கு மணிநேர உழைப்பிற்கான அதிகப்படியான ஊதியமும் அதாவது, அந்த நாளுக்கான ஊதியத்துடன் 50 சதவீதம் கூடுதல் ஊதியமும் அனுமதிக்கப்பட்டுள்ளது. மற்ற விடுமுறை நாட்களில் பணிபுரிந்தால் அவர்களின் ஒருநாள் சம்பளத்தில் 25 சதவீதம் அதிகப்படியாக அனுமதிக்கப்படுகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 22, 1944, பக்கம் 1395.

சில ஆண்டுகளுக்கு முன்பு பனிரெண்டு மணிநேரத்துக்கான அதிகப் படியான ஊதியம் (அதாவது ஒரு நாள் ஊதியத்துடன் 150 சத வீதம்), நான்கு மணி நேர ஊதியத்துக்குப் பதிலாக, தவறுதலாக வழங்கப்பட்டு வந்தது.

(ஆ) இல்லை.

# 181

## *லைனோ இயந்திரத்தில் பணிபுரியும் கூலிகளுக்கு முக்காலிகள் அளிக்கப்படவில்லை

589. சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்: (காஜி முகமது அகம்மது காஸ்மியின் சார்பில்) (அ) லைனோ இயந்திரத்தில் பணிபுரியும் கூலி களுக்கு முக்காலிகள் கொடுக்கப்படுவதில்லை என்பதும், நாள் முழுவதும் அவர்கள் நின்றுகொண்டே பணிபுரிய வேண்டியுள்ளது என்பதும், அவர்கள் விண்ணப்பங்கள் கொடுத்தும் எந்த நடவடிக் கையும் எடுக்கப்படவில்லை என்பதும் உண்மைதானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) கூலிகளிடமிருந்து 'பார்மென்' வேலை எடுக்கப்பட்டு அந்த பணி இடமே நீக்கப்பட்டு விட்டது என்பது உண்மையா?

(இ) கூலிகளின் இந்த மனக்குறைகளைத் தீர்க்க அரசு கவனம் செலுத்துமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) லைனோ டைப் இயந்திரத்தில் பணிபுரிபவர்கள் உண்மையிலேயே நின்று கொண்டு வேலை செய்வதில்லை. லைனோ இயந்திரங்களில் உள்ள பங்கீட்டு பாளத்தில் ஏற்படும் தடையை விடுவிக்க அவர் கள் லைனோ இயந்திரத்தின் மேலேஏறி, சரி செய்ய வேண்டியுள் ளது. அவர்கள் பணிக்கு முக்காலி உபயோகமற்றது. ஓய்வெடுக்க தொழிலாளர்கள் தரையிலேதான் உட்காருகிறார்கள்.

(ஆ) (இ) இந்திய அரசு அச்சகங்களில் 'பார்மென்' பணி இடமே கிடையாது. மேலும் அச்சகத்தில் ஒரு பொழுதும் இந்த பணி இடம் இருந்ததில்லை. எனவே இந்தக் கேள்விக்கு இடமில்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 22, 1944, பக்கம் 1395.

# 182

## *தொழிலாளர் இலாகாவுக்கு தொழிலாளர் ஆலோசகர்

+627. திரு.கே.எஸ். குப்தா: தொழிலாளர் ஆலோசகர் என்ற பணியிடம் தொழிலாளர் இலாகாவில் புதிதாக உருவாக்கப்பட்டுள்ள பணியிடமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க முடியுமா? அப்படி என்றால் எதற்காக அது உருவாக்கப்பட்டுள்ளது?

(ஆ) அந்தப் பணியிடம் ஏற்கனவே இருக்கிறது என்றால் கடைசியாக அந்தப் பதவியை வகித்தவர் யார்? என்ன சம்பளத்தில்?

(இ) மத்திய அரசின் தொழிலாளர் இலாகாவில் திரு. பி.எல். வாட்டர்ஸ் தொழிலாளர் ஆலோசகராக நியமிக்கப்பட்டுள்ளது உண்மையா என்பதை தெரிவிக்கமுடியுமா? அவருடைய சம்பளம் என்ன? வெளிநாட்டுப்படி மற்றும் வேறுபடிகள் ஏதாவது இருந்தால் எவ்வளவு?

(ஈ) திரு.வாட்டர்ஸின் நியமனம் போர்க்கால தேவையினால் எடுக்கப்பட்ட நடவடிக்கையா? பிரிட்டிஷ் தொழிலாளர் மற்றும் தேசியப்பணி அமைச்சகத்தில் அவர் பெற்றுவந்த சம்பளம் என்ன?

(உ) இந்தியச் சூழ்நிலையில் அவருக்குப் பணிசெய்து அனுபவம் இருக்கிறதா? அப்படியென்றால் இந்திய அரசின் எந்தத் துறையில்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ), மற்றும் (ஆ) தொழிலாளர் ஆலோசகர் என்ற பதவி 1942 டிசம்பரில் உருவாக்கப்பட்டது. 1943 ஜூன்வரை திரு டீ.டி. ஜேக் அந்தப் பதவியில் இருந்தார். இப்பொழுது திரு.பி.எல். வாட்டர்ஸ் இந்தப் பதவியில் உள்ளார். திரு. ஜேக் ரூ.2,750 மாதச்சம்பளம் பெற்று வந்தார்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 22, 1944, பக்கம் 1395.

+ கேள்வி நேரம் நடைபெறவில்லையாதலால் பதில்கள் அவையில் சமர்ப்பிக்கப்பட்டன.

தொழிலாளர் சட்டம் மற்றும் நிர்வாகம் குறித்த எல்லா முக்கிய விஷயங்களிலும் தொழிலாளர் ஆலோசகர் ஆலோசனை அளிப்பார். முக்கியமாக அரசின் கவனத்தில் உள்ள தொழிலாளர் பிரச்சினைகள், அல்லது எதிர்காலத்தில் தோன்றக்கூடிய பிரச்சினைகள் இங்கிலாந்தில் எவ்வாறு தீர்க்கப்பட்டுள்ளன என்பதைப் பற்றி ஆலோசனை வழங்குவார்.

(இ) ஆம். திரு.வாட்டர்ஸ் மாதம் ரூ.2000 ஊதியம் பெறுகிறார். அவருக்கு வெளிநாட்டுப்படியோ வேறு எந்த மாதந்திரப் படியோ வழங்கப்படவில்லை.

(ஈ) இந்தப் பதவிக்கு நியமிக்கப்படும்போது திரு.வாட்டர்ஸ் ஆண்டுக்கு 850 - 30 - 1000 என்ற சம்பள விகிதத்தில் பிரிட்டிஷ் தொழிலாளர் மற்றும் தேசியப் பணித்துறையில் பணியாற்றி வந்தார்.

(உ) இல்லை, ஐயா.

# 183

## *வடக்கு வளாகத்தில் எழுத்தாளர்களுக்கு கழிப்பிடங்களில் விளக்குகள் இல்லாமை

629. சர்தார் சாந்த் சிங்: (அ) 1943 மார்ச் 30 ஆம் தேதிய நட்சத்திரக் குறியிட்ட 432 ஆம் எண் கேள்விக்கு அளிக்கப்பட்ட பதில் தொடர்பாகப் பின்வருமாறு கேட்க விரும்புகிறேன்: வடமேற்கு முற்றத்துக்கு எதிர்ப்புறம் வடக்கு வளாகத்தின் முதல் தளத்தில் அதிகாரிகளின் கழிப்பிடத்தை அடுத்துள்ள எழுத்தர்களின் கழிப்பிடத்தில் கடந்த ஓராண்டுக்கும் மேலாக விளக்கு ஏதும் இல்லாதிருப்பது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) வடக்கு வளாகத்தின் தென் மேற்கு முற்றத்தின் எதிர்ப்புறம் எழுத்தர்களின் கழிப்பிடம் ஒன்று உள்ளது; அங்கு சில அறைகள் கட்டப்பட்டதால் இந்தக் கழிப்பிடத்தின் முகப்பு மறைக்கப்பட்டு, இருண்ட ஒரு குறுகிய ஊடு வழி அந்தக் கழிப்பிடத்துக்குச் செல்லு

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 27, 1944, பக்கம் 1561.

கிறது; கடந்த ஓர் ஆண்டு காலமாக இந்தக் கழிப்பிடத்தில் விளக்கும் ஏதும் பொருத்தப்படவில்லை என்பதை அவர் அறிவாரா?

(இ) மத்தியப் பொதுப்பணித்துறை அதிகாரிகள் என்னதான் மறுத்துக் கூறியபோதிலும், வடக்கு வளாகத்தில் அல்லது இந்திய அரசாங்கத்துக்குச் சொந்தமான இதர கட்டிடங்களில் உள்ள எழுத்தர்களின் கழிப்பிடங்களைச் சென்று பார்த்தால் அங்கும் பெரும்பாலும் இதே திருப்திகரமற்ற நிலைமையே நிலவுவதை எவரும் காணமுடியும் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(ஈ) மத்தியப் பொதுப்பணித்துறை அதிகாரிகள் அவரிடம் தெரிவிக்கும் தகவல்களின் மெய்த் தன்மையைச் சோதித்துப் பார்க்கும் பொருட்டு ஆறு மாதங்களுக்கு ஒரு முறையேனும் எதிர்பாரா விதமாக, திடீரென இந்தக் கழிப்பிடங்களைப் பார்வையிட மாண்புமிகு உறுப்பினர் முன்வருவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ), (ஆ) மற்றும் (இ), ஆம், தலைமைச் செயலகக் கட்டடங்களின் வடக்கு வளாகத்தில் உள்ள சில எழுத்தர்களின் கழிப்பிடங்களில் திருப்திகரமற்ற நிலைமை நிலவுவதை நான் அறிவேன். உண்மை நிலவரம் வருமாறு:

எழுத்தர்களின் கழிப்பிடங்களில் மின் விளக்குகள் தவறாது பொருத்தப்படுகின்றன. அவசியம் ஏற்படும்போது அவை மாற்றவும் படுகின்றன; அவற்றின் பாதுகாப்புக்கு எல்லா சாத்தியமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. பூட்டுகள் போடப்பட்ட போதிலும் பல்புகள் அடிக்கடி களவு போகின்றன. வடக்கு வளாகத்திலுள்ள ஆறு எழுத்தர்கள் கழிப்பிடங்களில் கடந்த அக்டோபர் முதல் 48 பல்புகளும், அதே எண்ணிக்கையிலுள்ள பூட்டுகளும் அங்கு பொருத்தப்பட்டன. எனினும் இவற்றில் 2 அல்லது 3 பல்புகள்தான் எஞ்சியுள்ளன; மற்றவை களவுபோய்விட்டன. ஒரு பல்பு சராசரியாக 1000 மணி நேரம் எரியும் என்று கணக்கிட்டுப் பார்க்கும்போது, இந்தக் காலப்பகுதியில் சாதாரணமாக 15 முதல் 16 பல்புகள்தான் வழங்கப்பட வேண்டும். பூட்டுகளால் திருட்டுகளைத் தடுக்க இயலவில்லை என்பதைத் தெரிந்து கொண்ட மின்விசைப் பொறியாளர் இந்தக் கழிப்பிடங்களில் விசேட வகையான விளக்குகளைப் பொருத்த ஏற்பாடு செய்து வருகிறார்.

(ஈ) தற்போது சில நடவடிக்கைகள் மேற்கொள்ள உத்தே

சித்திருக்கும் நிலைமையில், இந்தக் கழிப்பிடங்களைத் திடீர் சோதனையிட வேண்டிய அவசியம் ஏதுமில்லை என்று கருது கிறேன்.

# 184

## *புதுடில்லி டி.ஐ. இஜட் பகுதியில் எழுத்தர்களின் பழம்பாணிக் குடியிருப்புகளுக்கு முன்னாலுள்ள புல்வெளிகள்

630. *சர்தார் சாந்த்சிங்:* (அ) 1943 நவம்பர் 17 ஆம் தேதியிட்ட நட்சத்திரக் குறியிட்ட 232 ஆம் எண் கேள்விக்கு அளிக்கப்பட்ட பதில் தொடர்பாகப் பின்வருமாறு கேட்க விரும்புகிறேன்: புதுடில்லி டி.ஐ.இஜட் பகுதியில் எழுத்தர்களின் பழம்பாணிக் குடியிருப்பு களுக்கு முன்னாலுள்ள புல்வெளிகள் சம்பந்தமாக மத்தியப் பொதுப் பணித்துறை நிர்வாகம் அவருக்குத் தவறான தகவல் தந்திருக்கிறது என்பதை அவர் அறிவாரா?

(ஆ) (அ) கேள்விக்கான பதில் 'இல்லை' என்று இருக்குமாயின் பொதுப்பணித்துறை அதிகாரிகள் எவரையும் தம்முடன் அழைத்துச் செல்லாமல் இந்தப் புல்வெளிகள் சிலவற்றைப் பார்வையிடவும், மத்தியப் பொதுப்பணித்துறை நிர்வாகம் அவர் மூலம் இந்த அவைக்கு அளித்த தகவலின் உண்மையைக் கண்டறியவும் அவர் சித்தமாக இருக்கிறாரா?

(இ) (ஆ) பகுதிக்கான பதில் எதிர்மறையாக இருக்குமானால், மாண்புமிகு உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(i) எல்லா இடங்களிலும் குடியிருப்புகளின் வெளிச் சுவருக்கு அப்பால் புல்வெளி தொடங்கும் இடத்துக்கு மறுபுறம் ஒரு சாலை உள்ளதா?

(ii) இந்தப் புல்வெளிகளின் ஓரங்கள் குடியிருப்புகளின் சுவர் களுக்கு இணையொட்டி அதாவது குடியிருப்புக் கட்டிடங்கள் நேராகக் கட்டியிருக்கும் வரை நேராகவும், ஏதேனும் திருப்பம் இருந்தால் அதனையொட்டியும், ஆனால் அதேசமயம் எப்போதும் குடியிருப்புகளின் சுவர்களுக்கு இணையொட்டியே செல்லுகின்றன என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 27, 1944, பக்கம் 1561.

(iii) புல்வெளிகளது ஓரங்களின் இந்த நேரான ஒழுங்கமைப்பு இன்னமும் பராமரிக்கப்பட்டு வருகிறதா? அவ்வாறாயின் ஆரம்பத்தில் திட்டமிட்டு இடப்பட்டபடி குடியிருப்புகளுக்கும் புல்வெளிகளுக்கும் இடையே செல்லும் சாலைகளின் அகலமும் அதே போன்று பைர்ட் சதுக்கத்திலும், ஹேவ்லாக் சதுக்கத்திலும் உள்ள பெரும்பாலான குடியிருப்புகளுக்கு முன்னால் அல்லது மூலைகளில் அவற்றின் அகலமும் என்ன?

(iv) புல்வெளிகளின் நிலைமையைக் கண்டறியும் பொருட்டு மத்தியப் பொதுப்பணித்துறை அதிகாரி எவரேனும் எல்லாச் சதுக்கங்களையும் சென்று பார்த்தாரா? அவ்வாறாயின் அந்த அதிகாரி யார்? அல்லது இந்த விஷயம் சிறு அலுவலரின் பொறுப்பில் விடப்பட்டதா?

(v) புகார்கள் கூறப்பட்ட இடங்களை நேராகச் சென்று பார்வையிட மத்தியப் பொதுப்பணித்துறை அதிகாரிகளுக்கு ஆணைகள் பிறப்பிக்கவும், ஒவ்வொரு பகுதியையும் சேர்ந்த சுமார் ஒரு டஜன் குடியிருப்பாளர்களை அழைத்து, அவர்களது முறையீடுகளைக் கேட்டறியவும், இது சம்பந்தமாக அவர்களது கையெழுத்துகளைப் பெறவும் மாண்புமிகு உறுப்பினர் தயாராக இருக்கிறாரா? இல்லையென்றால், ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ). இல்லை. என்னிடம் அளிக்கப்பட்ட தகவல்கள் தவறானவையாக இருக்கும் என்று நம்புவதற்கு முகாந்தரம் ஏதுமில்லை.

(இ) (i) ஆம், பொதுவாக அவ்வாறுதான் இருக்கிறது.

(ii) புல்வெளிகள் சாதாரணமாக குடியிருப்புகளின் சுவர்களை இணையொட்டியே அமைந்துள்ளன.

(iii) புல்வெளிகளது ஓரங்களின் ஒழுங்கமைப்பு இன்னமும் பராமரிக்கப்பட்டு வருகிறது; பாதைகளின் அகலம் சுமார் 8 அடியாகும்.

(iv) சார்-பிரிவு அதிகாரி அடிக்கடிச் சென்று புல்வெளிகளைப் பார்வையிடுகிறார். தோட்டக்கலை மேலாளர் அவ்வப்போது சென்று பார்வையிடுகிறார்.

(v) ஏதேனும் முறையீடுகள் வந்தால் மத்தியப் பொதுப்பணித்துறை அதிகாரிகள் அவற்றின் மீது நடவடிக்கைகள் எடுத்துக் கொள்கின்றனர்; எனவே விசேட ஆணைகள் எதுவும் பிறப்பிக்க வேண்டிய அவசியமில்லை.

# 185

## *புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில் அச்சுப்படி திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுவோர், திருத்திய அச்சுப்படிகளை சரிபார்ப்போர் ஆகியோர் அச்சுப்படி திருத்துவோர் தேர்வில் தேர்ச்சி பெறுதல்

*646. மௌலானா ஜாபர் அலி கான்:* (அ) புதுடில்லி, இந்திய அரசு அச்சகத்தில் பணிபுரியும் சில காப்பிஹோல்டர்களும் (அச்சுப்படி திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுவோர்), திருத்திய அச்சுப்படிகளை சரிபார்ப்போரும் 1942 ஆம் ஆண்டில் அச்சுப்படி திருத்துவோருக்கான தேர்வில் மூன்றாவது சந்தர்ப்பத்தில் (கருணை சந்தர்ப்பம்) தேர்ச்சி பெற்றார்கள் என்பதும், அவ்வாறு அவர்கள் தேர்ச்சி பெற்றதால், முதலாவது மற்றும் இரண்டாவது சந்தர்ப்பங்களில் தேர்ச்சி பெற்று தகுதிபெற்ற அனைவருக்கும் இள நிலையிலேயேதான் அவர்கள் இருப்பார்கள் என்று உணர்த்தப் பட்டார்கள் என்பதும் உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) புதுடில்லி, இந்திய அரசின் அச்சகத்தில் 1942 மே மாதத்தில் தேர்வு நடந்தபோது தற்போதைய விதி நடைமுறையில் இருந்ததா?

(இ) மூன்றாவது வாய்ப்பின் போது தேர்வில் தேர்ச்சி பெற்றவர்கள் மற்ற அனைவரிலும் பணிமூப்புடையவர்கள் என்று அறிவிக்கப் படும் வகையில் காப்பிஹோல்டர்கள் மற்றும் அச்சுப்படி திருத்துவோர் பதவி உயர்வு தொடர்பான விதி கூடியவிரைவில் திருத்தம் செய்யப்படவிருக்கிறது என்பது உண்மையா? அப்படியாயின் இது ஏன்?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 27, 1944, பக்கம் 1567-68.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இல்லை.

(ஆ) ஆம்.

(இ) குவாஜி முகமது அகமது காஸ்மியின் 231 ஆம் எண் நட்சத்திரக் குறியிட்ட கேள்விக்கும் மற்றும் திரு.முகமது ஹுசைன் சவுத்ரியின் 501 ஆம் எண் கேள்விக்கும் வழங்கப்பட்டுள்ள பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

# 186

## *டில்லியில் வீட்டு உரிமையாளர்களின் அட்டூழியம்

647. திரு. கைலாஷ் பீகாரி லால்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து தெரிவிப்பாரா:

(அ) டில்லியிலிருந்து வெளிவரும் வைஷ்ய சமாச்சார் என்ற ஹிந்தி வார ஏட்டின் 1944 மார்ச் 12 தேதியிட்ட இதழில் ' 'டெல்லி மே மகந்தரான் கி நாதிர்ஷாகி'' என்ற தலைப்பில் பிரசுரிக்கப்பட்ட கட்டுரை அரசின் கவனத்துக்குக் கொண்டுவரப் பட்டதா?

(ஆ) அந்தக் கட்டுரையில் விவரிக்கப்பட்டிருப்பதைப் போல, போலீஸ் அதிகாரியுடன் சேர்ந்து கொண்டு செல்வாக்கும், பண பலமும் கொண்ட வீட்டு உரிமையாளர்கள் இத்தகைய அடக்கு முறைகளை அரங்கேற்றினார்களா? அரசு இதை உறுதி செய்கிறதா?

(இ) பழைய டில்லியில் மாலிவார்ஸ் மொஹல்லாவில் வீட்டு வாடகை 9 ரூபாயிலிருந்து 21 ரூபாய் 4 அணாவுக்கு உயர்ந்திருப்பதாக அரசுப் பத்திரிகையில் குறிப்பிட்டிருப்பது உண்மையா?

(ஈ) அப்படி உண்மையாயிருந்தால் பத்திரிகையில் விவரிக்கப் பட்டுள்ள குற்றச்சாட்டைப்பற்றி விசாரிக்கவும் பழைய டில்லி

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 27, 1944, பக்கம் 1571-72.

யில் வீட்டு வாடகை சம்பந்தப்பட்ட விஷயத்தில் கட்டவிழ்த்து விடப்பட்டுள்ள அளவுக்கு மீறிய அடக்குமுறையை தடுத்து நிறுத்த உசிதமான நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளுமா?

(உ) புதுடில்லியில் வாடகையை ஒழுங்குபடுத்தியும் கட்டுப் படுத்தியும் வருகிற அதே சட்டத்தை பழைய டில்லியில் அமலாக்கு வதில் அரசுக்கு என்ன சிரமங்கள் இருக்கின்றன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஸ்தல அதிகாரி களால் விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. கூடிய விரைவில் இந்த அவையில் இக்கேள்விகளுக்கான பதில்கள் தாக்கல் செய்யப்படும்.

# 187

## *உணவுத் துறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவம்

648. திரு. பியாரே லால் குரீல் : (அ) உணவுத் துறையிலும், நிர்வாக மற்றும் மாகாண அமைப்புகளிலும் அரசிதழ் பதிவு பெற்ற மற்றும் பதிவு பெறாத ஊழியர்களில் ஷெட்யூல்டு வகுப்பினர் உள்ளிட்டோருக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கடைபிடிக்கப் படுகிறதா?

(ஆ) உணவுத் துறையில் ஷெட்யூல்டு வகுப்பினருக்குத் தற்போது இருக்கும் பிரதிநிதித்துவம் குறித்து அரசு திருப்தியடைந் திருக்கிறதா? இல்லையெனில், மேற்கண்ட துறையில் அவர்களுக் குரிய பிரதிநிதித்துவத்தை உத்திரவாதம் செய்ய எத்தகைய நடை முறை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படவிருக்கின்றன?

(இ) மேற்குறிப்பிட்ட அரசிதழ் பதிவு பெற்ற மற்றும் பதிவு பெறாத பணியிடங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயத்தில் அவர்களின் கல்வித் தகுதிகளைக் குறைக்க அரசு உத்தேசித்திருக் கிறதா? இல்லையென்றால் அது ஏன்?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 27, 1944, பக்கம் 1571-72.

மாண்புமிகு சர் ஜுவால பிரசாத் ஸ்ரீவத்ஸவா :

(அ) I) அரசிதழ் பதிவு பெற்ற பணியிடங்கள் :

| | |
|---|---|
| ஐரோப்பியர் | 22 |
| ஆங்கிலோ-இந்தியர் | 1 |
| ஷெட்யூல்டு வகுப்பினர் அல்லாத இந்துக்கள் | 60 |
| முஸ்லீம்கள் | 22 |
| இதர சிறுபான்மை வகுப்பினர் | 8 |
| தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | 1 |

II) அரசிதழ் பதிவு பெறாத பணியிடங்கள் :

| | |
|---|---|
| ஐரோப்பியர்கள் | 3 |
| ஆங்கிலோ-இந்தியர்கள் | 3 |
| ஷெட்யூல்டு வகுப்பினர் அல்லாத இந்துக்கள் | 445 |
| முஸ்லீம்கள் | 149 |
| இதர சிறுபான்மை வகுப்பினர் | 52 |
| தாழ்த்தப்பட்ட வகுப்பினர் | 1 |

(ஆ) கேள்வியின் முதல் பகுதிக்கான பதில் 'இல்லை' என்பதாகும். இரண்டாம் பகுதியைப் பொறுத்தவரை உள்துறை தீர்மானம் எண். 23/5/42ஐ மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். 1943 ஆகஸ்ட் 11 ஆம் தேதியிட்ட அந்த தீர்மானத்தின்படி அனைத்துக் காலியிடங்களில் 8 1/3 சதவீதம் நேரடி நியமனத்தின் மூலம் ஷெட்யூல்டு வகுப்பு விண்ணப்பதாரர்களுக்கு ஒதுக்கீடு செய்யப்படவிருக்கிறது. அதுமட்டுமின்றி, வயது வரம்பு மற்றும் கட்டணம் விஷயத்தில் இத்தகைய விண்ணப்பதாரர்களுக்கு சில சலுகைகள் அளிக்கப்பட்டு வருகின்றன. அனைத்து விண்ணப்ப தாரர்களும் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காக காலி இடங்கள் பற்றிய விளம்பரங்கள் முக்கியமான செய்தித்தாள்களில் வெளியிடப்படுகின்றன.

*(இ) இல்லை. நான் மேலே குறிப்பிட்ட உள்துறை தீர்மானத்தின்கீழ் வழங்கப்பட்டுள்ள ஆணையின்படி அனைவர் விஷயத்திலும் குறைந்தபட்ச தகுதிகள் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. இதே போல், ஷெட்யூல்டு வகுப்பினருக்கு காலியிடங்களை ஒதுக்கீடு செய்வதும் வரையறுக்கப்படுகிறது.*

# 188

## *பழைய டில்லியிலும் ஷாதராவிலும் வாடகைதாரர்கள் அனுபவிக்கும் துன்பங்களும் துயரங்களும்

*191. திரு. முகமது அஸார் அலி : (அ) பழைய டில்லியிலும், ஷாதராவிலும் உள்ள வாடகைதாரர்கள் அனுபவிக்கும் துன்ப துயரங்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?*

*(ஆ) பஞ்சாப் நகர்ப்புற மற்றும் கிராமப்புற சட்டம் நடைமுறையிலிருந்தபோதிலும் அதையும் மீறி சில பணக்கார வீட்டுச் சொந்தக்காரர்கள் வீட்டு வாடகையை 150 சதவீதம் உயர்த்தியிருப்பது அரசுக்குத் தெரியுமா?*

*(இ) வாடகையை உயர்த்துவதற்காகவோ தங்களுக்கு சொந்தமான இடங்களிலிருந்து காலி செய்ய வைப்பதற்காகவோ, வாடகைதாரர்களை நிர்ப்பந்திக்க சில வீட்டுச்சொந்தக்காரர்கள் குடிநீர் இணைப்புகளையும், மின்சார இணைப்புகளையும் துண்டித்திருப்பது உண்மையா?*

*(ஈ) புதுடில்லி வாடகைதாரர்களைப் பாதுகாப்பதற்காக சமீபத்தில் அமலாக்கியுள்ள வாடகை கட்டுப்பாட்டு சட்டத்தின் விதிமுறைகளை பழைய டில்லி மற்றும் ஷாதராவிற்கும் விஸ்தரிக்க அரசு உத்தேசித்துள்ளதா? இல்லையென்றால், ஏன் இல்லை?*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி* II, *மார்ச் 27, 1944, பக். 1571-72.*

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். வாடகை காரர்கள் படும் துன்ப துயரங்களைப் பொதுவாக அறிவேன்.

(ஆ) மற்றும் (இ) வாடகைகள் உயர்த்தப்பட்டிருப்பதை நான் அறிவேன். ஆனால் 1941, பஞ்சாப் நகர்ப்புற வாடகை கட்டுப்பாடு சட்டத்தின்படி இவ்விஷயங்கள் நீதிமன்றங்களால்தான் தீர்மானிக் கப்பட வேண்டியுள்ளன.

(ஈ) 1939, புதுடில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு ஆணையை விரிவுபடுத்துவதில் நிர்வாகரீதியான சிரமங்கள் இருக் கின்றன. ஆனால் இதர நடவடிக்கைகள் அரசின் பரிசீலனையில் இருந்து வருகின்றன.

# 189

## *ஊதிய பட்டுவாடா சட்டத்தை அமல்செய்வதில் ஒழுங்கீனங்கள் நடைபெறுவதாக கிழக்கிந்திய ரயில்வேக்கு எதிராகக் குற்றச்சாட்டு

54. திரு. அனங்க மோகன் தாம் : (அ) 1938 ஆம் ஆண்டு முதல் கிழக்கிந்திய ரயில்வே ஊதிய பட்டுவாடா சட்டத்தின்கீழ் பல ஒழுங் கீனங்கள் செய்து வருவதாக ஆய்வாளர் அறிக்கை தந்துள் ளார்; அந்த ஒழுங்கீனங்களின் தன்மை குறித்து மாண்புமிகு தொழி லாளர் நலத் துறை உறுப்பினர் விளக்குவாரா? கூறப்படுகிற புகார்கள் குறித்து முறையே அரசாங்கத்தாலோ, ரயில்வே வாரியத்தாலோ, ரயில்வே நிர்வாகத்தாலோ ஏதாகிலும் நடவடிக்கை எடுக்கப்பட் டுள்ளதா? எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லையானால் அதற்கான காரணங்கள் என்ன?

(ஆ) ஒவ்வொரு ஆண்டும் இத்தகைய ஒழுங்கீனங்கள் திரும்பத் திரும்ப நடைபெறுகின்றனவா?

(இ) மேலே குறிப்பிட்ட (ஆ) பிரிவில் விவாதிக்கப்பட்ட ஒழுங்கீனங்கள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது? இல்லையேல் ஏன் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 30, 1944, பக். 358.

(ஈ) ஒழுங்கீனங்கள் திரும்பத் திரும்ப நடந்தும்கூட ஊதிய பட்டுவாடா சட்டத்தின் கீழ் ரயில்வே நிர்வாகத்திற்கு எதிராக எந்த நடவடிக்கையும் எடுக்கப்படாததற்கு காரணம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) மற்றும் (ஆ) விபரங்கள் கோரப்பட்டுள்ளன. கூடிய விரைவில் அவையில் அவை சமர்ப்பிக்கப்படும்.

(இ) கண்டுபிடிக்கப்பட்ட ஒழுங்கீனங்களை திருத்துவதற்காக ரயில்வே நிர்வாகத்தின் கவனத்திற்கு அவை கொண்டு செல்லப்பட்டுள்ளன.

(ஈ) தனிப்பட்ட விவகாரங்களில் திருப்திகரமான தீர்வு எட்ட முடியும் என்கிற போது சட்டப்படியான நடவடிக்கை தேவை என்று அரசு கருதவில்லை.

# 190

## *யுத்த நிபுணர்கள் பயிற்சிக்காக தொழில் நுட்ப நிபுணர்களை தேர்வு செய்தல்

222. (அ) டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது : (அ) யுத்த நிபுணர்கள் பயிற்சிக்காக இந்திய அரசால் தேர்வு செய்யப்பட்ட தொழில் நுட்ப நிபுணர்களின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? சம்பளம் மற்றும் இதர படிகள் உட்பட அவர்களது மாத ஊதியம் எவ்வளவு?

(ஆ) யுத்த நிபுணர்களுக்கான பயிற்சி மையங்கள் மொத்தம் எத்தனை இருக்கின்றன? இவற்றில் எத்தனை மையங்கள் பொறியியல் கல்லூரிகள் மற்றும் ரயில்வே பணிமனைகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு இருக்கின்றன?

(இ) பயிற்சியளிக்கும் நிபுணர்களில் எத்தனைபேர் பொறியியல் கல்லூரிகளோடும் ரயில்வே பணிமனைகளோடும் தொடர்புடைய யுத்த தொழில் நுட்ப மையங்களில் நியமனம் செய்யப்பட்டுள்ளார்கள்?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1944, பக்கம் 539.

(ஈ) இந்தியர்கள் ஏற்கெனவே பயிற்சி பெற்றுவிட்டதால் இந்த பயிற்சி ஆசிரியர்களை வேறு எங்காவது இன்னும் அதிகமாக பயன்படும் வரையில் பணியில் அமர்த்தலாம் அல்லவா?

(உ) கற்பிக்கும் பணியுடன் கூடுதலாக இதர மையங்களைப் பார்வையிடும் பணியும் இந்த பயிற்சியளிக்கும் நிபுணர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) பொதுவாக இது பிரிட்டிஷ் சிறப்புப் பயிற்சி அதிகாரிகளையே குறிக்கிறது. பிரிட்டிஷ் சிறப்பு பயிற்சி ஆசிரியர்கள் 100 பேர் சேர்க்கப்பட்டனர். அவர்களில் 87 பேர் இப்போது பணியில் இருக்கிறார்கள்.

பல்வேறு வசதிகள் கொண்ட இலவச குடியிருப்புகள் அல்லது வாடகைப்படி அத்துடன் அவ்வப்போது அளிக்கப்படும் போக்குவரத்துப் படியையும் சேர்த்து மாதத்திற்கு 620 ரூபாய் முதல் 872 ரூபாய் வரை அவர்களது ஊதியம் அமைந்துள்ளது.

(ஆ) தொழில் நுட்ப பயிற்சித் திட்டத்தின் கீழ்

| | |
|---|---|
| மொத்தமுள்ள பயிற்சி மையங்கள் ... | 270 |
| பொறியியல் கல்லூரிகளில் உள்ள மையங்கள் ... | 12 |
| ரயில்வே பணிமனைகளில் உள்ள மையங்கள் ... | 27 |

(இ) ஒவ்வொன்றிலும் 10 பேர்.

(ஈ) தொழில் நுட்பப் பணியாளர்களை பயிற்றுவிப்பதை விட மேலும் அதிகம் பயன்படும் வகையில் அவர்களை பணியில் அமர்த்த இயலாது என்பது அரசாங்கத்தின் கருத்து.

(உ) ஆம். ஒரு சில விஷயங்களில்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** கராச்சியில் ஏதேனும் மையம் நிறுவப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இக்கேள்விக்குப் பதிலளிக்க எனக்கு முன் அறிவிப்பு தரப்பட வேண்டும்.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* பொறியியல் கல்லூரிகளுடனும் அல்லது பணிமனைகளுடனும் இணைந்துள்ள மையங்களுக்கு அனுப்பப்பட்டுள்ள இந்த பயிற்சி நிபுணர்களுக்கு வெளியே உள்ள மையங்களை ஆய்வு செய்யும் பணியும் கூடுதலாக வழங்கப்பட்டுள்ளது என்பது உண்மையில்லையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* ஆம், நான் ஏற்கெனவே கூறியதுபோல் ஒரு சில இடங்களில் இவ்வாறு நடைபெறுகிறது.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது :* பொறியியல் கல்லூரிகளுடன் இணைந்துள்ள இந்த நிபுணர்கள் அரசின் ஒழுங்கு முறைக்கு கட்டுப்பட்டவர்களா? அல்லது சம்பந்தப்பட்ட கல்லூரி ஆசிரியர்களைப் போன்று அக்கல்லூரியின் ஒழுங்கு முறைக்குக் கட்டுப்பட்டவர்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இக்கேள்விக்குப் பதிலளிக்க முன்னறிவிப்பு தேவை.

*டாக்டர் சர் ஜியாவுத்தின் அகமது:* பொறியில் கல்லூரிகளுடன் இணைந்த இந்த நிபுணர்கள் தாங்கள் சார்ந்துள்ள பொறியியல் கல்லூரியின் ஆசிரியர் குழுவைச் சேர்ந்தவர்களாக கருதிக் கொள்ளவில்லை என்பதையும், ஆசிரியர் குழு உறுப்பினர்களுக்குள்ள கட்டுப்பாடு தங்களுக்கும் உள்ளது என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதையும் அரசு அறியுமா? இந்த நிபுணர்கள் மற்ற நிறுவனங்களைப் பார்வையிடுவதற்குப் பெரும்பாலான நேரத்தைச் செலவிடுகிறார்கள் என்பதையும், கற்பிக்கும் ஆசிரியர் தொழிலுக்கு மரியாதை இல்லை என்று அவர்கள் கருதுவதும் தங்களது ஆசிரியர் தொழிலில் அவர்களுக்கு ஆர்வமில்லை என்பதும் அரசுக்குத் தெரியுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எனது மதிப்பிற்குரிய நண்பர் சொன்னதை நான் விசாரிக்கிறேன்.

# 191

## *இந்திய அரசு அச்சகத்தில் வேலை நிறுத்தம்

230. காஜி முகமது அகமது காஸ்மி : (அ) அரசு அச்சகத்தின் ஊழியர்கள் மத்தியில் மிகப் பெருமளவு அதிருப்தி நிலவுவதன் விளைவாக 1942, டிசம்பர் முதல் தேதியன்று ஒரு வேலைநிறுத்தம் நடந்தது என்பதும், தொழிலாளர் நலத் துறை செயலாளர் மற்றும் தொழிலாளர் நலத்துறை அதிகாரி ஆகியோர் வந்து அவர்களைச் சமாதானப்படுத் தினார்கள் என்பதும், அவர்களிடம் தொழிலாளர்கள் தங்கள் முக்கிய குறைகளை தெரிவித்தார்கள் என்பதும் உண்மையா, இல்லையா என்பதை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரி விப்பாரா?

(ஆ) அவர்களின் குறைகளை குறிப்பாக கீழ்க்கண்ட குறை களைக் களைய அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டது:

(i) ரயில்வே ஊழியர்களுக்கு இணையாக அச்சக ஊழியர் களுக்கு அகவிலைப்படி தரப்பட வேண்டும்;

(ii) எல்லாத் தொழில்துறைத் தொழிலாளர்களுக்கும் நேர்வு விடுப்பு தரப்பட வேண்டும்;

(iii) அச்சகக் குடியிருப்புகளில் குடியமர்ந்த நாளைக் கணக்கில் கொள்ளாமல் அனைத்து ஊழி யர்களுக்கும் ஒரே சீராக 5 சதவீத வீட்டு வாடகை விதிக்கப்பட வேண்டும்;

(iv) பைண்டிங் பிரிவில் எண்ணற்ற ஊதிய விகிதங்கள் நிலவு கின்றன; வாழ்வூதியம் கிடைக்கும் வகையில் வேலை செய்யும் கால அளவைப் பொறுத்து இந்த ஊதிய விகிதத்தை மாற்றியமைக்க வேண்டும்;

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1944, பக். 546.

(V) குறைந்த பட்சம் பழைய ஊதிய விகிதத்தையாகிலும் அச்சகத்தின் அனைத்து ஊழியர்களுக்கும் வழங்க வேண்டும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : *(அ)* ஆம்.

*(ஆ)* (i) மற்றும் (iii). இந்த விஷயங்கள் அனைத்துப் பணித் துறையையும் பாதிக்கக் கூடியவையாக இருப்பதால் தனிப்பட்ட முறையில் அச்சக ஊழியர்களின் கோரிக்கைகளை ஏற்க இயலாது. அரசு குடியிருப்புகளில் வசிப்போர் செலுத்தும் வாடகையை நிர்ண யிப்பதில் அகவிலைப்படி சேர்க்கப்பட மாட்டாது என்று அவர்கள் முன்வைத்த கோரிக்கையின் அடிப்படையில் முடிவு செய்யப்பட் டுள்ளது.

(ii) மற்றும் (iv) இந்த இரண்டு பிரச்சினைகளும் தற்போது பரிசீலனையில் உள்ளன. இவற்றின் மீது விரைவில் ஒரு முடிவு காண தேவையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வரு கின்றன.

(v) ஊதிய விகிதத்தில் ஒரு பொதுவான மாற்றம் செய்வதற் கான சரியான சந்தர்ப்பம் இதுவல்ல. யுத்தம் முடிவடைந்ததும் யுத்தப் பிற்காலச் சூழல்களின் பகைப்புலனில் இத்தகைய ஒரு மாற்றம் மேற்கொள்ளப்படும்.

# 192

## *இந்திய அரசு அச்சகங்களில் தகுதிவாய்ந்த காப்பிஹோல்டர்களுக்கும் திருத்தப்பட்ட அச்சுப்படிகளை சரிபார்ப்போருக்கும் அச்சுப்படி திருத்துவோராக பதவி உயர்வு அளித்தல்

231. குவாஜி முகமது அகமது காஸ்மி : (அ) இந்திய அரசின் அச்சகங்களில் தகுதிபெற்ற காப்பி ஹோல்டர்களும், திருத்தப் பட்ட அச்சுப்படிகளை சரிபார்ப்போரும் அச்சுப்படி திருத்துவோ ராகப் பதவி உயர்வு பெறுவது குறித்த விதியை திருத்துவது என்கிற விஷயம், அச்சக மற்றும் எழுது பொருள்கள் கட்டுப்பாட்டு அதிகாரி அலுவலகத்தில் கடந்த 11/2 வருடங்களுக்கும் மேலாக கிடப்பில் போடப்பட்டிருப்பதாக கூறப்படுவது உண்மையா?

(ஆ) இந்திய அரசின் அச்சகங்கள், அவற்றின் பணிக்குழுக் கள், மற்றும் தொழிற்சங்கங்கள் ஆகியவை இவ்விஷயம் குறித்து தெரிவித்த கருத்துகள் அச்சக மற்றும் எழுது பொருள்கள் கட்டுப் பாட்டு அதிகாரியால் வரவழைக்கப்பட்டன என்பது உண்மையா?

(இ) ஒரு வரையறையற்ற காலத்திற்கு அதாவது காத்திருப் போர் பட்டியலில் உள்ள தகுதிவாய்ந்த நபர்கள் அச்சுப்படி திருத்து வோராக நிரந்தரமாக எடுத்துக்கொள்ளும் வரை, அச்சுப்படி திருத்து வோர் தேர்வை தள்ளி வைக்குமாறு அச்சக மற்றும் எழுது பொருள் கள் கட்டுப்பாட்டு அதிகாரி ஆலோசனை கூறியது உண்மையா?

(ஈ) 15 வருடங்களுக்கும் அதிகமான பணிக்காலம் கொண்ட தகுதி வாய்ந்த சில காப்பிஹோல்டர்களும் திருத்தப்பட்ட அச்சுப் படிகளை சரிபார்ப்பவர்களும் அதே தேர்வில் ஒன்றாக சேர்ந்து தேர்ச்சிபெற்றும் கூட, நான்கு அல்லது ஐந்து வருட பணித்துறை அனுபவம் உள்ளவர்களுக்குக் கீழ் நிலையில் அவர்கள் வைக்கப் பட்டிருப்பதாகக் கூறப்படுவது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1944, பக். 546-47.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (அ), (ஆ) மற்றும் (இ) ஆம். அபிப்பிராயம் தெரிவிக்கும்படி அழைக்கப்பட்ட பல்வேறு தரப்பினர் வெளியிட்ட கருத்துகள் பெருமளவுக்கு வேறுபட்டிருந் தமையால், எழுப்பப்பட்ட பிரச்சினைகள் குறித்து அரசாங்கம் இறுதி முடிவு எடுப்பதற்குத் தாமதமாகி விட்டது.

(ஈ) விதிகளை அமல் நடத்துவது சம்பந்தமான சில முறை கேடுகள் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டன. இந்த முறைகேடுகளைக் களைவதற்கான யோசனைகள் தற்போது பரி சீலனையில் உள்ளன.

(உ) இந்தக் கேள்வி இங்கு எழவில்லை. அச்சுப்படி திருத்து வோருக்கான பணியிடங்கள் பணி மூப்பு அடிப்படையிலன்றி, தேர்வில் பெற்ற தகுதியின் அடிப்படையில் நிரப்பப்படவில்லை.

(ஊ) மேலே (ஈ) கேள்விக்கான பதிலில் குறிப்பிட்டுள்ள படி, இந்த விஷயம் குறித்த விதிகளைத் திருத்துவது சம்பந்தமான யோசனைகள் வரப்பெற்று, அவை பரிசீலனையில் உள்ளன. 1944 மே மாதம் நடைபெறவிருக்கும் புதுடில்லி அரசு அச்சக அடுத்த அச்சுப்படி திருத்துவோர் தேர்வுக்கு முன்னர் இது சம்பந்தமான ஆணைகள் பிறப்பிக்கப்பட்டு விடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

# 193

## *புதுடில்லி வாடகைக் கட்டுப்பாட்டு ஆணைக்குத் திருத்தங்கள்

(அ) *மௌல்வி முகமது அப்துல் கனி:* (அ) புதுடில்லி வாடகை கட்டுப்பாட்டு ஆணையில் 1944 ஜனவரி 24ஆம் தேதி அறிவிக்கப்பட்ட திருத்தங்கள் செய்தியாளர் கூட்டம் ஒன்றில் இணைச் செயலாளர் திரு. மஜும்தார் அறிவித்த படியும், புதுடில்லி ஸ்டேட்ஸ்மன் பத்திரிகையில் ஜனவரி 27ஆம் தேதி வெளிவந் துள்ளபடியும் முன் தேதியிட்டு செயல்படுத்தப்படுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 28, 1944, பக். 657-58.

(ஆ) இந்த திருத்தங்கள் முன் தேதியிட்டு அமல் நடத்தப் படக்கூடியவை என டில்லி நீதிமன்றங்களால் வியாக்கியானம் செய்யப்பட்டன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(இ) இந்தத் திருத்தங்களை முன்தேதியிட்டு நடைமுறைப் படுத்தும் நோக்கம் அரசுக்கு இல்லையென்றால் புதுடில்லி நீதி மன்றங்கள் தமது வியாக்கியானங்களை வெளியிட்டிருக்கும் நிலைமையில் அரசு தனது நிலைப்பாட்டைத் தெளிவுபடுத்துமா? இல்லையேல் ஏன் இல்லை?

(ஈ) இந்தத் திருத்தங்கள் பிரசுரிக்கப்பட்ட ஜனவரி 24ஆம் தேதியிட்ட விசேட அரசிதழின் பிரதி ஒன்று - பொதுமக்களுக்கு இந்தப் பிரதிகள் கிடைக்காத சமயத்தில் - ''ஹிந்து'' நாளேட்டின் புதுடில்லி நிருபரான திரு. சிவ ராவுக்கு தனிப்பட்ட முறையில் தொழிலாளர் நலத்துறை அலுவலகத்தில் அளிக்கப்பட்டது என்பதை யும் டில்லி உரிமையியல் நீதிமன்றத்தில் அவர் சம்பந்தப்பட்ட ஒரு வழக்கு நடைபெற்று, ஜனவரி 25 ஆம் தேதி தீர்ப்புக் கூறப் படவிருந்த நிலைமையில் இதனை அவர் பயன்படுத்திக்கொள்ளவே இவ்வாறு செய்யப்பட்டது என்பதையும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(உ) பாரகம்பா சாலையில் 7ஆம் எண் வீட்டில் வாடகை காரராக வசிக்கும் திரு. சிவ ராவ் உரிமையியல் நீதிமன்றத்தில் அவரது வீட்டு உரிமையாளருக்கு சாதகமாக தீர்ப்பு அளிக்கப் பட்டு அதன் அடிப்படையில் சிவ ராவ் வெளியேற்றப்படும் நிலை ஏற்படுமேயானால் அதைத் தடுப்பதற்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறையின் இணைச் செயலாளர் திரு. மஜூம்தார் இந்த ஆணை களைப் பிறப்பித்தார் என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரி யுமா? இந்தக் குற்றச்சாட்டுகள் உண்மையாய் இருந்தால் அரசு ஊழியர்களின் ஒரவஞ்சனை பற்றி மாண்புமிகு உறுப்பினர் விசாரணை நடத்த முன்வருவாரா?

(ஊ) திரு. சிவ ராவ் வெளியேற்றப்படுவாரேயானால் மூன்று அறைகள் கொண்ட வீடு ஒன்றை அரசு அவருக்குத் தர வேண்டும்

என்று திரு. மஜூம்தார் ஆணை பிறப்பித்தார் என்பது உண்மையா? புதுடில்லியில் இதர பத்திரிகைகளுக்கும் அரசு இதே வசதிகள் செய்து தருகிறதா? இல்லையென்றால், ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தொழிலாளர் நலத்துறை இணைச் செயலாளரால் இத்தகைய அறிக்கை எதுவும் வெளியிடப்படவில்லை.

(ஆ) இவ்விஷயத்தில் எங்களுக்கு எந்தத் தகவலும் இல்லை.

(இ) இல்லை. ஆணைகள் மற்றும் சட்டங்கள் சம்பந்தமாக வியாக்கியானம் செய்யும் உரிமை நீதிமன்றங்களுக்கே உண்டு; அரசினுடையது அல்ல.

(ஈ) இல்லை. இந்த குற்றச்சாட்டு தவறானது.

(உ) ஆம். குறிப்பிடப்பட்ட அந்த சம்பவத்தில் அந்த வீடு காலியானால் அரசின் உபயோகத்திற்கு அது கிடைக்கும் என்பதால் அந்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. திரு. சிவ ராவிற்காக அதைக் கையகப்படுத்த வேண்டும் என்பதல்ல அரசின் நோக்கம். டில்லியில் காலியாகும் எல்லா குடியிருப்புகளையும் தன் வசம் எடுத்துக்கொள்ள வேண்டும் என்பதுதான் அரசின் கொள்கை.

(ஊ) இல்லை.

**மாண்புமிகு யாமின் கான் :** அரசின் நோக்கம் என்ன? இந்தத் திருத்தங்கள் முன்தேதியிட்டு நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்று அரசு விரும்புகிறதா? இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சட்டரீதியான நோக்கம் பற்றி வியாக்கியானம் செய்வதற்கான உரிமை எப்போதுமே நீதிமன்றங்களுக்குத்தான் உண்டு.

**சர் முகமது யாமின் கான் :** சந்தேகமின்றி நீதிமன்றங்கள் தான் வியாக்கியானம் செய்யவேண்டும். ஆனால் அரசின் ஆணை என்ன? அது முன்தேதியிட்டு அமல்படுத்தப்படுமா? அல்லது இனி மேல்தான் அமல்படுத்தப்படுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அது நீதிமன்றங்களுக்கு விடப்பட வேண்டிய விஷயமாகும்.

*திரு. என்.எம். ஜோஷி:* டில்லியிலுள்ள வீட்டுச் சொந்தக்காரர்கள் நெருக்கடியை உருவாக்கி கொள்ளை லாபம் அடிப்பதற்காக வாடகைதாரர்களை துன்புறுத்துகிறார்கள் என்பது உண்மையில்லையா? அதை தடுத்து நிறுத்த அரசு என்ன நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* வீட்டு உரிமையாளர்கள் கொடுமை செய்கிறார்கள் என்ற தகவல் என்னிடம் இல்லை. ஆனால் வாடகைதாரர்களின் ஒரு தூதுக்குழு எங்களை சந்தித்தது. அரசின் முன் சில புகார்களை அது முன்வைத்தது. அவர்களது சில குறைகளை நிவர்த்தி செய்யவே புதுடில்லி வாடகை கட்டுப்பாட்டு ஆணையில் திருத்தம் செய்யப்பட்டது.

*சர் முகமது யாமின் கான்:* இந்தக் குறிப்பிட்ட சம்பவத்தைப் பொருத்தவரையில் வீட்டு உரிமையாளர் ராய் பகதூர் துர்காதாஸ் ஓர் ஓய்வு பெற்ற நிர்வாகப் பொறியாளர். அவருடைய குடும்பம் மிகப் பெரியது. 20 பேரைக் கொண்டது. எங்கேயும் அவர்களை அவரால் குடியமர்த்த முடியாது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இது குறித்து எனக்குத் தகவல் ஏதும் இல்லை.

*மௌல்வி முகமது அப்துல் கனி:* அரசின் ஆணை தெளிவாக இல்லை என்று நீதிமன்றம் கருதினால் அதை தெளிவுபடுத்த வேண்டும் என்ற எண்ணம் அரசுக்கு உண்டா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* மதிப்பிற்குரிய உறுப்பினரின் கேள்வியை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

*மௌல்வி முகமது அப்துல்கனி :* தான் பிறப்பித்த ஆணை முன்தேதியிட்டு நடைமுறைப்படுத்துவதற்குரிய தன்மை உடையது என்பதை நீதிமன்றத்திற்கு அரசு தெளிவுபடுத்துமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* நிச்சயமாக.

அரசின் ஆணையில் ஏதாவது ஐயப்பாடு இருக்குமேயானால் அதை தெளிவுபடுத்த வேண்டியது அரசின் கடமை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: ஆணை மிகவும் தெளிவாக இருக்கிறதா? அல்லது அதற்கு ஏதாவது விளக்கம் தேவைப்படு கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அதன் நகல் ஒன்றை மதிப்பிற்குரிய நண்பருக்கு தருவேன்.

திரு. லால்சந்த் நாவல்ராய் : எனது கேள்வி இதுதான் : அந்த ஆணை தெளிவாக இருக்கிறதா? அல்லது விளக்கம் அளிக்கக்கூடிய அளவு சிக்கலானதா? நீதிமன்றம் அதை வியாக்கியானம் செய்யும் என்று மாண்புமிகு உறுப்பினர் சொல்கிறார். வியாக்கியானம் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டால் மட்டுமே நீதிமன்றம் சந்தேகமில் லாமல் அதைச் செய்யும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மதிப்பிற்குரிய எனது நண்பர் என்ன சொல்ல விரும்புகிறார் என்று எனக்குத் தெரிய வில்லை

திரு. லால்சந்த் நாவல்ராய் : எனது கேள்வி இதுதான்: நீதி மன்றத்தால் அந்த அரசாணை வியாக்கியானம் செய்யப்படும் என்று மாண்புமிகு உறுப்பினர் கூறுகிறார். ஆனால் அந்த ஆணையே வியாக்கியானம் செய்யத்தக்க வகையில் பிரச்சினைக்குரியது ஆகும். ஆனால் மாண்புமிகு உறுப்பினரோ நீதிமன்றத்திற்கு....

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : இது ஒரு விவாதம்.

திரு. லால்சந்த் நாவல்ராய்: நான் கேள்வியை முன்வைக் கிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) ஒழுங்கு, ஒழுங்கு.

# 194

## *நிலக்கரி சுரங்கங்களில் நிலத்தடி பணிக்கு பெண்களை வேலைக்கு அமர்த்தல்

*701. திரு. கே.எஸ். குப்தா : (அ) இந்தியாவில் நிலக்கரி சுரங்கங்களில் பெண்களை வேலைக்கு அமர்த்துவது மிகவும் அபாயகரமானது என்று திரு. சோரன்சென் கூறியிருப்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?*

*(ஆ) நிலக்கரி சுரங்கங்களில் பெரும்பாலானவற்றில் ஊதியம் யுத்தத்திற்கு முந்தைய ஊதியத்தில் இப்போது 50 சதவீதத்திற்கும் குறைவாகவே இருக்கிறது என்பதும் ஆனால் அதேசமயம் உணவுப் பொருட்கள் மற்றும் வாழ்க்கைக்குத் தேவையான அத்தியாவசியப் பண்டங்கள் நான்கிலிருந்து ஐந்து மடங்கு உயர்ந்திருப்பது என்பதும் உண்மையில்லையா?*

*(இ) சுரங்கங்களில் வேலை செய்வதற்கு போதுமான எண்ணிக்கையில் ஆண்கள் கிடைக்காததால்தான் நிலக்கரி சுரங்கங்களில் வேலை செய்வதற்கு பெண்கள் அனுமதிக்கப்படுகிறார்கள் என்பது உண்மையா?*

*(ஈ) நிலக்கரி சுரங்கங்களில் வேலை செய்வதற்கான அடிப்படை வசதிகள் தேவைக்கு மிகவும் குறைவாக இருப்பதால் நல்ல சம்பளத்திற்காகவும் சிறந்த எதிர்காலத்திற்காகவும், நிலக்கரி சுரங்கங்களை விடுத்து வேறு இடங்களில் ஆண்கள் வேலை தேட நிர்பந்திக்கப்படுகிறார்கள் என்பது உண்மையா?*

*(உ) அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் நிலக்கரி சுரங்கங்*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கம் 1745*

களில் பெண்கள் வேலை செய்வது தடுக்கப்பட்டிருப்பது உண்மை யில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இது சம்பந்தமான பத்திரிகை செய்திகளைப் பார்த்தேன்.

(ஆ) நிலக்கரி சுரங்கங்களில் வாழ்க்கைச் செலவு உயர்ந் திருப்பது குறித்து நிச்சயமான தகவல் என்னிடம் இல்லை. நிலக்கரி சுரங்கத்தில் பணிபுரிவோருக்கு சலுகை விலையில் உணவுப் பண் டங்கள் வழங்கப்படுகின்றன.

(இ) ஆம்.

(ஈ) சுரங்கத் தொழிலாளி நிலக்கரி சுரங்கங்களில் வேலை செய்வதைவிட நிலக்கரி சுரங்கங்களுக்கு அருகில் நடைபெறும் ராணுவப் பணிகளில் ஈடுபடவே விரும்புகிறார் என்பதற்கு ஆதாரம் இருக்கிறது. வசதிகளைப் பொருத்தவரை 1944 மார்ச் முதல் தேதி யன்று மதிப்பிற்குரிய உறுப்பினரின் 273-வது கேள்வியின் (இ) பகுதிக்கு நான் அளித்த பதிலைப் பார்க்குமாறு கேட்டுக்கொள் கிறேன்.

(உ) பிரிட்டனில் நிலத்தடி பணிகளில் பெண்கள் அனுமதிக்கப் படுவதில்லை. இருப்பினும் நிலக்கரி சுரங்கங்களில் சில மேல்தளப் பணிகளில் பெண்கள் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்கள். அமெரிக் காவைப் பற்றி என்னிடம் தகவல் இல்லை.

என்.எம். ஜோஷி : யுத்தத்திற்கு முந்தைய நாட்களில் அரிசி யின் விலை ரூபாய்க்கு 12 சேராக இருந்தது என்பதும், நிலக்கரிச் சுரங்கப் பகுதிகளில் சுரங்கத் தொழிலாளர்களுக்கு தற்போது அரிசி விலை ரூபாய்க்கு 6 சேராக இருக்கிறது என்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இவ்விஷயத்தில் நிச்சயமான தகவல் ஏதும் என்னிடம் இல்லை.

# 195

## *நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடிப் பணியில் பெண்களை வேலைக்கு அமர்த்துவது

702. திரு. கே.எஸ். குப்தா: (அ) நிலத்தடியில் பெண்கள் பணியாற்றுவதற்கு இருந்த தடையை நீக்கியதற்கான காரணம் நிலக்கரி பற்றாக்குறைதானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா? இதுதான் காரணம் என்றால் மனித உயிர் நிலக்கரி உற்பத்தியை விட மிகவும் மதிப்பு வாய்ந்தது என்பதை அரசாங்கம் கருத்திற் கொண்டதா?

ஆ) இங்கிலாந்திலோ அல்லது வேறு எந்த நாட்டிலோ இத்தகைய அவலத்தை ஒரு விநாடி கூட அனுமதிக்க மாட்டார்கள் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) இந்திய நிலக்கரிச் சுரங்கங்களில் தொழிலாளர்களுக்கு கண்ணியமான வாழ்க்கை நிலைமைகளோ போதுமான ஊதியமோ கிடைப்பதில்லை என்பது உண்மையல்லவா?

(ஈ) பிரிட்டனில் அல்லது அமெரிக்காவில் நிலக்கரியை விஞ்ஞான முறையில் பிரித்தெடுப்பது இந்தியாவில் கிடையாது என்பது உண்மையல்லவா?

(உ) போதுமான தற்காப்பு ஏற்பாடுகள் இல்லாததாலும் கனிமத்தைப் பிரித்தெடுக்கும் முறைகள் பழம்பாணியானவையாக நிலவுவதாலும் மற்ற இடங்களை விட இந்திய நிலக்கரிச் சுரங்கங்களில் மிக அடிக்கடி மண் சரிவும் நிலக்கரி வாயுவின் திடீர் வெடிப்புகளும் ஏற்படுகின்றன என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அ) கேள்வியின் இரு பகுதிகளுக்கும் விடை 'ஆம்' ஆகும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கங்கள் 1745-46.

(ஆ) பிரிட்டனில் நிலத்தடியில் பெண்கள் அனுமதிக்கப் படுவதில்லை. மற்ற நாடுகளைப் பற்றிய தகவல் எதுவும் என்னிட மில்லை.

(இ) 1944 மார்ச் 1 ஆம் தேதி மதிப்பிற்குரிய உறுப்பினரின் கேள்வி எண் 274க்கான பதிலில் நான் கூறியுள்ளபடி, சுரங்கங்களில் வேலை நிலைமைகள் மிகவும் திருப்திகரமாக இல்லை. வாழ்க்கை நிலைமைகள் அபிவிருத்தி அடைவதற்கும் போதுமான ஊதியம் கொடுக்கப்படுவதற்குமான எல்லா முயற்சியும் மேற்கொள்ளப் பட்டு வருகிறது.

(ஈ) இந்தியச் சுரங்கங்களை எந்திரமயமாக்கும் பணி பிரிட் டனில் அல்லது அமெரிக்காவை போல் அவ்வளவாக முன்னேற வில்லை.

(உ) நிலக்கரி படுகைகள் பூமியின் மேற்பரப்புக்கு அருகில் உள்ள மற்ற நாடுகளை விடவும், மண் அமிழ்வதோ, சரிந்து விழு வதோ இந்தியச் சுரங்கங்களில் அடிக்கடி நிகழ்வதில்லை. அவ்வாறே, பெரும்பாலான மற்ற நாடுகளில் உள்ள நிலக்கரிச் சுரங்கங்களை போல் வாயு வெடிப்புகள் அவ்வளவு அடிக்கடி ஏற்படுவதில்லை. இந்த நாட்டில் மேற்கொள்ளப்பட்டுள்ள பாதுகாப்பு முன்னெச் சரிக்கை நடவடிக்கைகள் வேறு எந்த நாட்டுடனும் ஒப்பிடும்போது சாதிகமாகவே உள்ளன.

# 196

## *புது டில்லியின் டி.ஐ.இஜட் வட்டாரச் சதுக்கங்களில் உள்ள நுழைவு வாயில்கள் மூடப்பட்டிருப்பது குறித்து

704. சர்தார் சாந்த் சிங்: புதுடில்லியின் டி.ஐ.இஜட்டில் உள்ள பல்வேறு சதுக்கங்களின் மூலைகளிலும் நடுவிலும் உள்ள நுழை

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கங்கள் 1746.

வாயில்கள் மூடப்பட்டதன் காரணங்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து எடுத்துக் கூறுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த வழிகள் மூடப்பட்டதற்கான காரணம் அவற்றை மக்கள் தவறான முறையிலும் அசிங்கப்படுத்தும் விதத்திலும் பயன்படுத்துவதைத் தடுப்பதேயாகும். பொது சுகாதார இலாகாவின் ஆலோசனையின் மீது இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

# 197

## *கராச்சித் துறைமுகப் பொறுப்புக் கழகத்தில் தொழிலாளர் அமைதி இன்மை

715. சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்: (அ) ''கராச்சித் துறைமுகப் பொறுப்புக் கழகத்தில் நிலவும் தொழிலாளர் அமைதியின்மை பற்றிய சில உண்மைகள்'' என்ற தலைப்பில் சிந்து மாகாணத் தொழிற்சங்கக் காங்கிரசின் பொதுச் செயலாளர் காஸி முகமது முஸ்தபா வெளியிட்டுள்ள அறிக்கை தமது கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து கூறுவாரா?

(ஆ) தங்கள் கோரிக்கைகளைப் பற்றிப் பரிசீலிக்க ஒரு நடுவர் நியமிக்கப்பட வேண்டுமென்று கராச்சித் துறைமுகப் பொறுப்புக் கழகத்தின் 2,384 தொழிலாளர்கள் கோரியுள்ளார்கள் என்பது உண்மையா?

(இ) தமது கராச்சி வருகைக்குப் பின்னர் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை அதிகாரி சில பரிந்துரைகளை அளித்துள்ளார் என்பது உண்மையா?

(ஈ) மேற்சொன்னதற்கு பதில் ஆம் என்றால், இந்த விஷயத்தில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது அல்லது எடுக்க உத்தேசித்துள்ளது?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கங்கள் 1746.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மாண்புமிகு யுத்தப் போக்குவரத்துத் துறை உறுப்பினர் இந்தக் கேள்விக்கு பதில் அளிக்க இசைந்துள்ளார்.

# 198

## *சிவில் முன்னணிப் படைப்பிரிவை துணைமுன்னணிப் படைப்பிரிவாக மாற்றும் யோசனை

*717. திரு பியாரி லால் குரீல்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின்கண்ட விவரங்களைக் கூறுவாரா?

(அ) சிவில் முன்னணிப் படையை (ராணுவத்திற்கு முன் சென்று வழி செப்பனிடும் முன்னணிப் படைப்பிரிவு) துணை முன்னணிப் படையாக மாற்ற அரசாங்கம் உத்தேசித்துள்ளதா?

(ஆ) பிரிவுக்கு பதில் 'ஆம்' என்றால், சிவில் முன்னணிப் படையை துணை முன்னணி படையாக எப்பொழுது அரசாங்கம் மாற்ற உத்தேசித்துள்ளது? யுத்த காலத்திலா அல்லது யுத்தத்திற்குப் பின்னரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) இல்லை.

(ஆ) எழவில்லை.

# 199

## *முன்னணிப் படைப் பிரிவிலுள்ள படைவீரர்களுக்கான சம்பளம் பற்றி

*718. திரு. பியாரி லால் குரீல்:* (அ) தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து தெரிவிப்பாரா? ஒரு படைவீரரின் சம்பளம் மாதம் ஒன்றுக்கு ரூ. 15 மட்டுமே என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கம் 1752.
★ மேற்படி தொகுதி, அதே பக். 1752.

(ஆ) நாட்டின் இன்றையப் பொருளாதார நிலையில் ஒரு முன்னணிப் படைவீரரின் இன்றையச் சம்பளம் போதுமானது என்று மாண்புமிகு உறுப்பினர் கருதுகிறாரா?

(இ) இந்திய ராணுவத்தில் உள்ள படைவீரர்களுக்கு செய்துள்ளதுபோல முன்னணிப் படைவீரர்களின் சம்பளத்தை உயர்த்த அரசாங்கம் உத்தேசித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) சிவில் முன்னணிப் படையிலுள்ள ஒரு வீரரின் அடிப்படைச் சம்பள விகிதம் மாதம் ஒன்றுக்கு ரூ. 15. அவர் போர் நடைபெறும் பிரதேசத்தில் பணியாற்றி வருவாராயின், பாதுகாப்பு படையில் உள்ளவர்களுக்கு அனுமதிக்கப்படுவது போல், அவருக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. 3-8-0 உதவிப்படி அனுமதிக்கப்படுகிறது.

(ஆ) அவரது சம்பளத்திற்குக் கூடுதலாக இலவச ரேஷன்கள் (உணவுப் பொருளும் மற்ற அத்தியாவசியப் பொருட்களும்) இலவசக் குடியிருப்பு, இலவச சீருடையும் உபகரணங்களும் வழங்கப்படுவதால் சம்பளம் போதுமானதே.

(இ) போர் நடைபெறும் வட்டாரத்தில் பணிபுரியும் நபர்கள் சம்பந்தப்பட்டவரை இந்த விஷயம் பரிசீலிக்கப்படும்.

# 200

## *சிவில் முன்னணிப் படைப்பிரிவில் உள்ள தையல் தொழிலாளிகளுக்கு உதவித்தொகை கொடுக்கப்படாதது பற்றி

719. திரு. பியாரே லால் குரீல்: (அ) ஐக்கிய மாகாண சிவில் முன்னணிப் படைப்பிரிவின் எழுத்தர்கள், துப்புரவுத் தொழிலாளர்கள், சலவையாளர்கள் ஆகியோர் மாதம் ஒன்றுக்கு ரூ.5 வீதம் படியாகப் பெறுகிறார்களா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1752.

(ஆ) (அ) கேள்விக்கு 'ஆம்' என்பது பதிலானால், இந்தப் படைப் பிரிவைச் சேர்ந்த தையற்காரர்களுக்கு இந்தப் படி கொடுக்கப் படாதது ஏன்?

(இ) இதுபற்றிய தையற்காரர்களின் குறையைத் தீர்க்க மாண்புமிகு உறுப்பினர் உத்தேசித்துள்ளாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) முடி ஒப்பனையாளர், சலவையாளர், துப்புரவாளர் ஆகியோரைப் புதிதாக வேலைக்குச் சேர்த்துக் கொள்வதில் உள்ள கஷ்டத்தின் காரணமாக, மாகாணங்களில் உள்ள நிலைமைகளுக்கேற்ப இந்தப் பிரிவுகள் ஒவ்வொன்றிற்கும் அதிகபட்சம் மாதம் ரூ. 5 வரை தொழில் சார்ந்த விசேட உதவித் தொகை வழங்க மாகாண அரசாங்கங்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன. மேலே சொன்ன பிரிவுகளில் இடம் பெறாத தையல்காரர் உட்பட்ட பிற பிரிவினருக்கும் தொழில் சார்ந்த உதவித் தொகை வழங்க மாகாண அரசாங்கங்கள் அனுமதிக்கப் பட்டுள்ளன. மேலே சொன்ன பிரிவுகளில் இடம்பெறாத தையல் காரர் உட்பட்ட பிற பிரிவினருக்கும் தொழில்சார்ந்த உதவித் தொகை வழங்க மாகாண அரசாங்கங்கள் சிபாரிசு செய்யலாம்.

(ஆ) தையல்காரர்களுக்கு சிறப்பு உதவித் தொகை வழங்குவது பற்றி ஐக்கிய மாகாண அரசாங்கம் சிபாரிசு எதுவும் செய்யவில்லை.

(இ) இது விஷயத்தில் எந்த நடவடிக்கையும் அவசியம் என்று இந்திய அரசாங்கம் கருதவில்லை.

# 201

## *ரயில்வே நிர்வாகம் சட்டத்திற்கு புறம்பாகப் பிடித்தங்கள் செய்வது முதலியவற்றிற்கு எதிராக ஊதிய பட்டுவாடா சட்டத்தின்படி செய்யப்பட்டுள்ள முறையீடுகள்

222. திரு. முகமது அஸார் அலி: ஊதிய பட்டுவாடா சட்டம், 1936, ஷரத்து 15 (2)ல் குறிப்பிடப்பட்டுள்ள நபர்கள் ரயில்வே

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1757.

நிர்வாகத்தால் சட்டவிரோதமாக பிடித்தம் செய்வதற்கும் கால தாமதமாக சம்பளப் பட்டுவாடா செய்வதற்கும் எதிராக 1938 ஏப்ரல் 1ம் தேதியிலிருந்து சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் சமர்ப் பித்துள்ள முறையீடுகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து அளிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஊதிய பட்டு வாடா சட்டத்தின் 15 (2) பிரிவின்படி ரயில்வே சிப்பந்திகள் சமர்ப் பித்துள்ள முறையீடுகளின் எண்ணிக்கை பற்றிய தகவல் எதுவும் அரசாங்கத்திடம் இல்லை. தகவலைச் சேகரிப்பதற்கு தேவைப்படும் உழைப்பு அதனால் கிட்டும் பலனுக்கு ஏற்றதாக இருக்காது.

# 202

## *தொழிற்சாலைச் சட்டத்திற்கு உட்படாத ரயில்வே சிப்பந்திகள் விஷயத்தில் வேலை நேரம் மீறப்படும் நிகழ்வுகள்

223. திரு. முகமது அஸார் அலி: தொழிற்சாலைச் சட்டத் துக்கு உட்படாத ரயில்வே சிப்பந்திகளின் வேலை நேரம் 1931 லிருந்து மீறப்படும் நிகழ்வுகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா? அவற்றின் மீது எத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தகவல்கள் சேக ரிக்கப்பட்டு வருகின்றன. உரிய காலத்தில் அவைமுன் வைக்கப் படும்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1757.

# 203

## *மத்திய மின்வாரியத்தின் செயல்பாடுகளும் கடமைகளும்

224. திரு. முகமது அஸார் அலி: (i) மத்திய மின் வாரியம்,

(ii) டில்லி மத்திய மின்சக்தி ஆணைக்குழு,

(iii) மத்திய மின்சக்தி கட்டுப்பாட்டு வாரியம்

இவற்றின் செயல்பாடுகள், கடமைகள் பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (i) இந்திய மின்சாரச் சட்டம், 1910, ஷரத்து 36-Aன் படி, அந்தச் சட்டத்தின் ஷரத்து 37ன் கீழ் விதிமுறைகளை வகுப்பதற்காக அமைக்கப்பட்ட அதிகாரக் குழு மத்திய மின்வாரியம்.

(ii) டில்லி மத்திய மின்சக்தி ஆணைக்குழு லிமிடெட் ஒரு தனியார் நிறுவனம்; பெருமளவில் மின் சக்தியை உற்பத்தி செய்வது அல்லது விலைக்கு வாங்குவது, பெரும் அளவில் உபயோகிக்கும் நுகர்வோர்களுக்கு - ஆண்டு ஒன்றுக்கு 50,000 யூனிட்டுகளுக்கு குறையாமல் உபயோகிப்பவர்கள் அல்லது அந்த யூனிட்டுகளுக்கு குறையாமல் பணம் செலுத்துவதாக உத்திரவாதம் செய்பவர்களுக்கு - அதை வினியோகிப்பது ஆகியவற்றிற்காக டில்லியில் ஒரு மத்தியப்படுத்தப்பட்ட நிறுவனமாக அது செயல்படுகிறது.

(iii) மத்திய மின்சக்திக் கட்டுப்பாட்டு வாரியத்தின் செயல்பாடுகளாவன:

(அ) எந்த ஒரு பொது மின்சக்தி வழங்கும் நிறுவனமும் மின்சக்தி வழங்குவதில் கடைப்பிடிக்க வேண்டிய கட்டுப்பாடுகள் பற்றி இந்திய அரசாங்கத்திற்கு ஆலோசனை வழங்குவது;

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1757.

(ஆ) எந்த ஒரு பொது மின்சக்தி வழங்கும் நிறுவனத்தைப் பொறுத்தவரையிலும் இந்திய அரசாங்கம் அங்கீகரித்துள்ள கட்டுப் பாட்டை நடைமுறைப்படுத்துவது குறிப்பாக இந்திய அரசாங்கம் வகுத்துள்ள பொதுக் கோட்பாடுகளுக்கு ஏற்ப, புதிதாக மின் சக்தி வழங்குவதற்கு அனுமதி வழங்குவது, இப்பொழுது வழங்கப்படும் மின்சக்தி அளவின் மீது கட்டுப்பாடு ஏற்படுத்துவது;

(இ) கட்டுப்பாடுகள் குறித்தும், எந்த வட்டாரங்களில் மின் சக்தி உபரியாக கிடைக்க வாய்ப்புள்ளது என்பது குறித்தும் மத்திய அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறுவதற்கு அவசியமான தகவல் களை பொது மின்சக்தி வழங்கும் நிறுவனங்களிலிருந்து பெறுவது;

(ஈ) யுத்த முயற்சியின் மற்றும் இந்தியாவின் தொழில் வளர்ச் சியின் பொது நலன்களை முன்கொண்டு செல்வதற்காக, மின்சக்தி உற்பத்தியையும் மின்சக்தியைப் பயன்படுத்துவதையும் ஒன்றிணைத் துச் செல்லப் பயன்படும் தகவல்களைச் சேகரிப்பது.

# 204

## *டில்லி ஷாதராவிலுள்ள நுகர்வோர்கள் செலுத்தும் மின்விசைக் கட்டணம் பற்றி

225. திரு. முகமது அஸார் அலி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் தகவல்களை தயவு செய்து அளிப்பாரா?

(அ) (1) மத்திய மின்வாரியம்

(2) டில்லி மத்திய மின்சக்தி ஆணைக்குழு

(3) மத்திய மின்சக்தி கட்டுப்பாட்டு வாரியம் ஆகியவை ஷாதரா நகரத்திற்கு மின்சாரம் வழங்கும் விஷயத்தில் மேற்பார்வை செய்யும் அதிகாரத்தையும் கட்டுப்பாடு செய்யும் அதிகாரத்தையும் பெற்றிருக்கின்றன என்பது உண்மையா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1757-58

(ஆ) டில்லி மாகாண எல்லைக்குள் மின்சக்தி உபயோகிப் பதில் ஒரே மாதிரியான கட்டணம் வசூலிக்க வேண்டுமென்று பித்கீத்திலி அறிக்கை சிபாரிசு செய்தது என்பது உண்மையா?

(இ) ஷாதரா பட்டணத்திற்கு மின்சக்தியை வினியோகிப் பதற்கு மேல் யமுனை பள்ளத்தாக்கு மின்சார நிறுவனத்துக்கு உரிமம் வழங்கப்பட்டது பித்கீத்லி அறிக்கைக்கு முந்திய ஒரு தேதி யில் என்பது உண்மையா; அப்படியாயின், அந்த அறிக்கையின் சிபாரிசின்படி உரிமத்தைத் திருத்தம் செய்து, ஒரு யூனிட்டுக்கு 6 அணா என்றிருந்த கட்டணத்தை 4 அணாவாகக் குறைக்காததற்குக் காரணங்கள் யாவை?

(ஈ) ஒப்பந்தப்புள்ளி ஏற்பாட்டின் மூலம் குறைந்த செலவில் சேவை செய்யக்கூடிய ஒரு நிறுவனத்துக்கு வினியோக உரிமத்தை வழங்க அரசாங்கம் உத்தேசித்துள்ளதா? இல்லையெனில், ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ) ஷாதரா நகரத்திற்கு மின்சக்தி வழங்குவதற்கான நிபந்தனைகள், கட்டணங் கள் சம்பந்தமான மேற்பார்வை மற்றும் கட்டுப்பாடு அதிகாரம் பற்றியே மதிப்புக்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என்று வைத்துக் கொண்டால் மேலே சொல்லப்பட்ட அதிகார அமைப்புகளுக்கு இந்த விஷயத்தில் பொறுப்பு ஏதுமில்லை.

(ஆ) இல்லை.

(இ) கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்பதே பதிலாகும். இரண்டாம் பகுதியைப் பொறுத்தவரை உரிமம் திருத்தப்பட வேண்டு மென்று அறிக்கை சிபாரிசு செய்யவில்லை.

(ஈ) ஷாதராவில் உரிமம் பெற்றிருப்பவருக்கு மத்திய மின்சக்தி நிலையத்திலிருந்து மின்சக்தி வழங்குவதற்கான சந்தர்ப் பம் கிட்டும் வரை, ஷாதராவில் உரிமம் பெற்றிருப்பவர் கோரும் கட்டண விகிதங்கள் (அவை அவரது உரிமப் பத்திரத்தில் உள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டே உள்ளன) அதிகமானவை என்று கருத முடியாது. அந்த வட்டாரத்தில் வேறு ஒருவருக்கு இரண்டாவது வினியோக உரிமம் வழங்குவது என்ற பிரச்சினைக்கே இடமில்லை.

# 205

## *டில்லி ஷாதராவிலுள்ள நுகர்வோர் செலுத்தும் மின் கட்டணங்கள்

226. திரு. முகமது அஸார் அலி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து பின்கண்ட வினாக்களுக்குப் பதில் கூறுவாரா:

(அ) மேல் யமுனை பள்ளத்தாக்கு மின்சாரக் கம்பெனி லிமிடெட் மின்சக்தி வழங்கீட்டுக்கு ஒரு யூனிட்டுக்கு அணா -12/6 வீதம் ஐக்கிய மாகாண அரசாங்கத்திற்கு கொடுக்கிறது என்பது உண்மையா?

(ஆ) ஷாதரா நுகர்வோர்களுக்கு மேற்படி கம்பெனி ஒரு யூனிட்டுக்கு அணா -/6/- வீதம் வசூலிக்கிறது என்பது உண்மையா?

(இ) தனது செயல்பாடுகளுக்கான செலவுகளை கம்பெனி எந்த விகிதத்தில் கணக்கிடுகிறது?

(ஈ) 1939லிருந்து ஒவ்வொரு ஆண்டும் நுகர்வோர்களின் எண்ணிக்கை எவ்வளவு? மேற்கண்ட நிறுவனம் தனது பணிகளை ஆற்றுவதற்கு ஒவ்வொரு ஆண்டும் ஆகும் செலவுத் தொகை என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) ஆம்.

(இ) அரசாங்கத்திடம் தகவல் எதுவும் இல்லை.

(ஈ) நுகர்வோர் எண்ணிக்கை பற்றிய பட்டியல் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.

''பணிகளை ஆற்றுவதற்கு ஆகும் செலவு'' என்பது எந்தப் புள்ளி விவரங்களும் கொடுப்பதற்கு உதவும் முறையில் திட்டவட்டமாக இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக். 1758.

| | | நுகர்வோர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1939 மார்ச் 31 உடன் முடியும் ஆண்டு | ... | 114 |
| 1940 மார்ச் 31 உடன் முடியும் ஆண்டு | ... | 118 |
| 1941 மார்ச் 31 உடன் முடியும் ஆண்டு | ... | 131 |
| 1942 மார்ச் 31 உடன் முடியும் ஆண்டு | ... | 141 |
| 1943 மார்ச் 31 உடன் முடியும் ஆண்டு | ... | 143 |

# 206

## *தொழிற்சாலைகள் (இரண்டாவது திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): 1934 ஆம் வருடத் தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான (இரண்டாவது திருத்தம்) மசோதாவை அறிமுகப்படுத்த அனுமதி வேண்டுகிறேன்.*

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): தீர்மானம் என்னவெனில்,*

*''1934 ஆம் வருடத் தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான (இரண்டாவது திருத்தம்) மசோதாவை அறிமுகப்படுத்துவதற்கு அனுமதி கோரப்படுகிறது.''*

*தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, மசோதாவை இப்போது அறிமுகப்படுத்துகிறேன்.*

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 3, 1946, பக். 1870.

# 207

## *புதுடில்லி இர்வின் சாலையில் குடியிருப்புகளுக்கு இடையே உள்ள வெளி வளைவுகள் மூடப்பட்டது குறித்து

771. திரு. முகமது அஸார் அலி: (அ) புதுடில்லி இர்வின் சாலையில் உள்ள அரசாங்கக் குடியிருப்புகளுக்கு இடையே மேலே கவான் அமைந்த பாதைகளில் சில சிறிது காலத்திற்கு முன் வாகன போக்குவரத்து முதலியவற்றிற்கு மூடப்பட்டன என்பது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) சிறிய சிமெண்ட் தூண்களை நட்டும், 'V' வடிவுடன் இரும்பு கம்பிகளாலான சுழலும் வாயில்களை அமைத்தும் இவற்றில் சில பாதைகள் மூடப்பட்டன என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) 'V' வடிவ கட்டமைப்புகள் வாகனப் போக்குவரத்தை சுலபமாக தடைசெய்ய முடியும்போது, இரும்புக் கம்பிகளாலான வாயில்களை அமைப்பதன் நோக்கமும் பயனும் என்ன?

(ஈ) மேலும் குழந்தைகள் விளையாடும்போது இந்த இரும்பு கம்பி வாயில்களால் காயப்படுத்தப்படுகின்றனர்; சில சமயம் மிகக் கடுமையாகவே காயமடைகின்றனர் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(உ) இந்த இரும்புக் கம்பி வாயில்களை உடனடியாக அப்புறப்படுத்தி அவற்றை வேறு வழிகளில் பயன்படுத்துவது பற்றி பரிசீலிக்க மாண்புமிகு உறுப்பினர் உத்தேசித்துள்ளாரா? இல்லையெனில், ஏன் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 3, 1944, பக். 1914.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) ஆம்.

(இ) சைக்கிள் போக்குவரத்தைத் தடுக்க.

(ஈ) இல்லை.

(உ) மதிப்பிற்குரிய உறுப்பினரின் யோசனையைப் பரிசீலிக்க அரசாங்கம் தயாராக இருக்கிறது.

# 208

## *மத்திய எழுதுபொருள் அலுவலகத்தில் முஸ்லீம் அதிகாரிகள் இல்லாதது

773. திரு. முகமது நௌமான்: (அ) மத்திய எழுதுபொருள் அலுவலகத்தின் அதிகாரிகளில் முஸ்லீம் யாரும் இல்லை என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) எழுதுபொருள் உதவிக் கட்டுப்பாட்டு அதிகாரி என்ற ஒரு புதிய பணியிடம் அங்கீகரிக்கப்பட்டது என்பதும் அது இன்னமும் நிரப்பப்படவில்லை என்பதும் உண்மையா? அப்படியாயின், அதை ஒரு முஸ்லீமுக்கு ஒதுக்க மாண்புமிகு உறுப்பினர் முனைவாரா? இல்லையெனில், ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்பதே பதில்.

(இ) இரண்டாவது பகுதிக்குப் பதில், வகுப்புவாரி பிரதிநிதித்துவ விதிகளின்படி அந்த இடம் நிரப்பப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக். 1914.

# 209

# *அச்சு, எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரியின் அலுவலகத்திற்கு ஒரு தொழில்நுட்ப அலுவலரை நியமிக்கும் உசிதம் குறித்து

*774. திரு. முகமது நௌமான்:* மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து கூறுவாரா?

(அ) இந்திய அரசாங்கத்தின் அச்சகங்களில் நடைபெறும் வேலை தொழில்நுட்பத் தன்மை வாய்ந்தது என்பது உண்மையா?

(ஆ) அச்சு, எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரியின் அலுவலகத்தில் உள்ள அதிகாரிகளில் யாரும் தொழில்நுட்பத் துறையிலிருந்து தெரிந்தெடுக்கப்படவில்லை என்பது உண்மையல்லவா?

(இ) கேள்விகள் (அ)வுக்கும் (ஆ)வுக்கும் பதில்கள் 'ஆம்' என்றால், கட்டுப்பாட்டு அதிகாரியின் அலுவலகத்தில் ஒரு தொழில் நுட்ப அதிகாரியை நியமிப்பது விரும்பத்தக்கது என்பதை அவர் பரிசீலிக்க உத்தேசித்திருக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம், பெரும் பாலானவை.

(ஆ) ஆம்.

(இ) இல்லை. காரணம், அவரது அலுவலகத்தில் அச்சு வேலைக்கு விரிவான தொழில்நுட்ப மேற்பார்வையோ ஆழ்ந்த பரிசீலனையோ அவசியமில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக். 1915.

# 210

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அரசாங்கத்தின் பங்களிப்பு

776. திரு. லால்சந்த் நாவல்ராய்: (அ) திரு. எம்.என். ராய் மூலம் இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அவரது இலாகா மாதம் ரூ. 13,000ஐ உதவித் தொகையாக வழங்குகிறது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா? அப்படியாயின், எந்த நோக்கத்திற்காக இந்த உதவி அளிக்கப்படுகிறது? உதவித் தொகை கிட்டத்தட்ட இதுவாக இருந்தால், சரியான தொகையை மாண்புமிகு உறுப்பினர் தயவு செய்து சொல்வாரா?

(ஆ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு இவ்வாறு அளிக்கப்பட்ட உதவித் தொகைக்கு கணக்கு ஏதும் அளிக்கப்பட்டுள்ளதா? இல்லை எனில், ஏன் இல்லை?

(இ) மேலே கண்ட (அ) கேள்வியின் முதல் பகுதிக்கு பதில் 'ஆம்' என்றால், கடந்த 6 மாதங்களுக்கான கணக்கு அறிக்கையின் நகல்களை மாண்புமிகு உறுப்பினர் அவையில் சமர்ப்பிப்பாரா? இல்லை எனில், ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்களின் ஒழுங்குணர்வை வலுப்படுத்தப் பிரசாரம் செய்வதற்காக இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு மாதம் ரூ. 13,000 மானியமாகக் கொடுக்கப்படுகிறது.

(ஆ) ஆம். ஐயா.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக். 1915-16.

(இ) எல்லாப் பொது கணக்குகளையும் போல் இந்தக் கணக்குகளும் பரிசீலனைக்கு உட்படுத்தப்படுகின்றன; அவற்றை அவையில் சமர்ப்பிப்பதால் எந்த பயனுள்ள நோக்கமும் நிறைவேறப் போவதில்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** பிரசார நோக்கத்திற்கு மற்றவர்களுக்கு அந்தப் பணத்தை வினியோகிக்க அவருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவருக்கு அது அளிக்கப்படவில்லை; இந்திய தொழிலாளர் சம்மேளனத்திற்கு மானியம் வழங்கப்படுகிறது.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** அப்படியெனில், சம்மேளனத்திற்கு பொறுப்பாக இருப்பவர், பிரசாரம் செய்யும்படி கேட்டுக் கொண்டு மற்றவர்களுக்கு அந்தப் பணத்தைப் பகிர்ந்தளிக்க முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பணம் எவ்வாறு பகிர்ந்தளிக்கப்படுகிறது என்பது பற்றி என்னிடம் எந்தத் தகவலும் இல்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** மாண்புமிகு உறுப்பினர் இது பற்றி விசாரிப்பாரா? ஏனெனில், அவசியம் கணக்கு வைக்கப்பட வேண்டும் அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மற்ற எல்லாப் பொதுக் கணக்குகளைப் போலவே இந்த கணக்குகளும் தணிக்கை செய்யப்படுகின்றன.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இந்த பணம் எவ்வாறு வினியோகிக்கப்படுகிறது எனக் காண்பிக்கப்படுகிறதா? தணிக்கை அறிக்கையில் இது காண்பிக்கப்படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னிடம் தகவல்

இல்லை; ஆனால் கணக்குகள், மற்ற எல்லா பொதுக் கணக்குகள் போலவே சோதனைக்கு உட்படுத்தப்படுகின்றன.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* இந்த மானியம் எந்த முறையில் செலவிடப்பட வேண்டுமென்பதை முறைப்படுத்தும் விதிமுறை எதையும் சம்மேளனம் வகுத்து, அரசாங்கத்திற்கு சமர்ப் பித்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதுகுறித்து எனக்குத் தகவல் ஏதும் இல்லை.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* மாண்புமிகு உறுப்பினர் இது பற்றி விசாரிப்பாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர் கேள்வி எழுப்பினால் நான் விசாரிக்கிறேன்.

*டாக்டர் ஜியாவுத்தீன் அகமது:* வினியோகத்திற்கான விதி கள் இல்லையெனில், கணக்குகள் எப்படித் தணிக்கை செய்யப் படும் என்பது எனக்குத் தெரியவில்லை.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* சில விதிகள் உள்ளன என்றும், அவற்றின்படி பணம் செலவிடப்படுகிறது என்றும் பொதுகணக்குகளின் தணிக்கை அதிகாரி தம்மை திருப்திப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும் என்றும் உறுதியாகக் கருதுகிறேன்.

*திரு. பத்ரிதத் பாண்டே:* இவ்வாறு பணம் பெற்றுவரும் வேறு ஸ்தாபனங்கள் உள்ளனவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கேள்விக் குப் பதிலளிக்க எனக்கு அவகாசம் வேண்டும்.

*டாக்டர் சர் ஜியாவுதீன் அகமது:* பணம் முழுவதையும் தமது நண்பர்களுக்காக திரு. ராய் செலவு செய்யாமல் இருப்பதை உறுதிசெய்ய சில விதிகள் அவசியம் இருக்க வேண்டும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விதிகள் எவையும் இல்லை என்று ஊகிப்பதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினரிடம் ஏதேனும் ஆதாரம் உள்ளதா என்பது எனக்குத் தெரியவில்லை.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: இம்மாதிரி கருத்துத்தான் ஒருவருக்கு ஏற்படுகிறது; அரசாங்கத்தின் அலட்சியப்போக்கே இதற்குக் காரணம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அரசாங்கம் அலட்சியம் ஏதும் காண்பிக்கவில்லை. கணக்குகள், மற்றப் பொதுக் கணக்குகள் போலவே, சோதனைக்கு உட்படுத்தப்படுகின்றன என்று ஏற்கெனவே பதில் கூறியிருக்கிறேன்.

திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி: தொழிலாளர்களின் ஒழுங்குணர்வை நிலைநிறுத்த அரசாங்கத்திற்கு உதவக்கூடியது இந்த ஒரே ஒரு ஸ்தாபனம்தான் என்பதை மாண்புமிகு உறுப்பினர் தம்மை தாமே திருப்திப்படுத்திக் கொண்டாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னிடம் தகவல் எதுவும் இல்லை. இந்தக் கேள்விக்கு எனக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 211

## *வாடகைக்குக் குடியிருப்போர் வெளியேற்றப்படுவது பற்றி டில்லி நீதிமன்றங்களில் வழக்குகள்

782. +கான்பகதூர் ஷேக் பசில்-இ-ஹக் பிராச்சா: (அ) பஞ்சாப் வாடகைக் கட்டுப்பாடு சட்டம் டில்லி மாகாணத்திற்கு நீட்டிக்கப் பட்டபின் வாடகைதாரர்கள் வெளியேற்றப்படுவது பற்றி டில்லி உயர்நீதிமன்றத்தில் தொடுக்கப்பட்டுள்ள வழக்குகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக்கங்கள் 1919-20.

+ கேள்வி கேட்டவர் அவையில் இல்லாததால் இந்தக் கேள்விக்கான பதில் அவையின் முன்வைக்கப்பட்டது.

செய்து தெரிவிப்பாரா? எத்தனை வழக்குகளில் தீர்ப்புகள் வழங்கப் பட்டன? எத்தனை வழக்குகள் இன்னமும் முடிவு பெறாமல் உள்ளன?

(ஆ) பஞ்சாப் வாடகைக் கட்டுப்பாடு சட்டம் டில்லி நகரசபை வட்டாரத்தில் அமல் நடத்தப்பட்ட உடனேயே, தங்களது குடியிருப்பு வீடுகளும், அடுக்கு மாடிக் குடியிருப்புகளும் தங்களது சொந்த உபயோகத்திற்கு வேண்டுமென அவற்றின் சொந்தக்காரர் கள் ஏராளமான வாடகைதாரர்களைக் காலி செய்யும்படி கோரியுள் ளார்கள் என்பதை அவர் அறிவாரா? இம்மாதிரியான உரிமை கோரல்களில் பெரும்பாலானவை பொய்யானவை என்பதும், பகடிப் பணம் (நஸ்ரானா) வாங்கிக் கொண்டு இக்குடியிருப்புகள் அவற்றில் குடியிருந்தவர்களுக்கோ அல்லது வேறு நபர்களுக்கோ வாடகைக்கு விடப்படுகின்றன என்பதும் அரசாங்கத்திற்குத் தெரியுமா?

(இ) டில்லி மாகாணம் முழுவதிலும் வாடகைதாரர் நிர்ண யிக்கப்பட்டுள்ள வாடகையை கொடுத்து வரும்வரை அல்லது கொடுக்கத் தயாராக இருக்கும் வரை எந்தக் குடியிருப்பு வீடோ அல்லது அடுக்கு மாடிப் பகுதியோ காலி செய்யப்படக்கூடாது என்ற கட்டுப்பாட்டு உத்தரவை அமுல் நடத்தும்படி மாண்புமிகு உறுப்பினர் ஆணைகள் பிறப்பிப்பாரா?

(ஈ) கட்டுப்பாட்டு உத்தரவுகள் அமுலாக்கப்படத் தொடங் கியதிலிருந்து, பொதுவாக டில்லியிலுள்ள வீட்டுச் சொந்தக்காரர் கள் தங்கள் வீடுகளில் பழுதுபார்ப்புப் பணிகள் எவற்றையும் செய் வதில்லை என்பதை அவர் அறிவாரா? அப்படியாயின், தங்கள் வீட்டை பழுது பார்க்க மறுக்கும் வீட்டுச் சொந்தக்காரர்களை சட்டப் படி தண்டிக்க எத்தகைய நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்துள் ளார் என்பதை தயவு செய்து அவர் கூற முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1944 மார்ச் 28ம் தேதிவரை பதிவு செய்யப்பட்ட வழக்குகளின் எண்ணிக்கை 1,444. அவற்றில் 888 பைசல் செய்யப்பட்டு விட்டன. முடிவு செய்யப் படாமல் இருப்பவை 556.

(ஆ) ஆம். இம்மாதிரியான புகார்களை ஸ்தல அதிகாரிகள் பெற்றிருக்கிறார்கள் என்று அறிகிறேன்.

(இ) சில நடவடிக்கைகள் அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளன.

(ஈ) சில புகார்கள் ஸ்தல அதிகாரிகளிடம் வந்துள்ளன; விஷயம் பரிசீலனையில் உள்ளது.

# 212

## *ரயில்வேத் தொழிலாளர்களது மேற்பார்வையாளரின் ஆண்டு அறிக்கை பிரசுரம்

262. திரு. லால்சந்த் நாவல்ராய்: ரயில்வேத் தொழிலாளர்களது மேற்பார்வையாளரின் ஆண்டு அறிக்கை பிரசுரிப்பது சம்பந்தமாக, 1943 பிப்ரவரி 10ம் தேதி கேட்கப்பட்ட நட்சத்திரக் குறியிடப்படாத கேள்வி எண் 43-க்கு மாண்புமிகு உறுப்பினர் அளித்த பதிலைப் பொறுத்தவரை, சம்பந்தப்பட்டவர்களுக்குத் தகவல் தெரிவதற்காக அந்த அறிக்கையை சுருக்கமாக பிரசுரிக்க மாண்புமிகு உறுப்பினர் ஏற்பாடு செய்வாரா? இல்லையென்றால், ஏன் இல்லை?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1944 பிப்ரவரி 10ம் தேதி கேட்கப்பட்ட நட்சத்திரக் குறியிடப்படாத கேள்வி எண் 43 பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என்று தோன்றுகிறது.

ரயில்வே தொழிலாளர்களது மேற்பார்வையாளரின் ஆண்டு அறிக்கைகளை பத்திரிகைகளில் வெளியிடும் விஷயம் அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக்கம் 1924-25.

# 213

## *டில்லி ஷாதரா எல்லைக்குள் சாலைகளைப் பராமரித்தல்

263. திரு. ஜி. ரங்கையா நாயுடு: ஷாதரா நகர எல்லைக்குள் சாலைகளை நன்கு பேணுவதற்குப் பொறுப்பானது (நகரசபைக் குழு அல்லது மத்தியப் பொதுப்பணித்துறை) எது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஷாதராவின் பிரகடனப்படுத்தப்பட்ட வட்டாரக் குழுதான் ஷாதரா நகர எல்லைக்குட்பட்ட சாலைகளைப் பேணிக்காப்பதற்குப் பொறுப்பானது.

# 214

## +கிழக்கு இந்திய மற்றும் வடமேற்கு ரயில்வேக்களில் சட்டவிரோதமான பிடித்தத்திற்கு எதிராக ஊதியப் பட்டுவாடா சட்டத்தின்படி முறையீடுகள்

266. திரு. அனங்கமோகன் தாம்: பிடித்தங்களை திருப்பிக் கொடுக்கவும் காலதாமதமாகியுள்ள ஊதியத்தைப் பட்டுவாடா செய்யவும் உத்திரவு இடும்படி கோரி முறையே கிழக்கு இந்திய மற்றும் வடமேற்கு ரயில்வே நிர்வாகங்களுக்கு எதிராக ஊதிய பட்டுவாடாச் சட்டத்தின்கீழ் ரயில்வே சிப்பந்திகளிடமிருந்து வந்துள்ள முறையீடுகளின் எண்ணிக்கையையும் அத்துடன் அந்த முறையீடுகள் எவ்வாறு பைசல் செய்யப்பட்டன என்பதையும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக்கம் 1925.

+ அதே தொகுதி பக்கம் 1925.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1944 மார்ச் 30ம் தேதியன்று திரு. முகமது அஸார் அலியின் நட்சத்திர குறியிடப் படாத கேள்வி 222க்கு அளிக்கப்பட்ட பதில் மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்திற்குக் கொண்டுவரப்படுகிறது.

# 215

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அரசாங்கத்தின் உதவித் தொகை

31. திரு. லால்சந்த் நாவல்ராய்: (அ) 1944 ஏப்ரல் 4ம் தேதி எனது நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 776க்கு அளித்த பதில் தொடர்பாக பின்வரும் விவரங்களை அறிய விரும்புகிறேன்: இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு மாதந்தோறும் கொடுக்கப் படும் ரூ. 13,000 சம்மேளனத்தின் தலைவர், துணைத்தலைவர் மற்றும் ஏனைய நிர்வாகிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகிறதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா? அப்படியாயின், எந்த விகிதாச்சாரத்தில்?

(ஆ) இந்தப் பணம் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என் பதைக் கண்டறிய மாண்புமிகு உறுப்பினர் சம்மேளனத்தின் தணிக்கை செய்யப்பட்ட கணக்குகளை ஆராய்ந்தாரா? அப்படி இல்லை எனில் ஏன் இல்லை? இந்திய தொழிலாளர் சம்மேளனத்துக்கு மாதம் ரூ. 13,000/- மானியமாக வழங்கப்பட்ட தேதியிலிருந்து இன்றுவரை யிலான தணிக்கை செய்யப்பட்ட கணக்குகளை அவையில் சமர்ப்பிக் கும் உத்தேசம் அவருக்கு உண்டா?

(இ) பிலடெல்பியாவில் கூடிய சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டில், இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் மற்றும் அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸ் ஆகியவற்றின் பிரதிநிதித்துவத் தன்மையை ஒப்புநோக்கும் வடிவத்தில் இந்தப் பிரச்சினை எழுப் பப்பட்டது என்பது உண்மையா? மாநாட்டின் முடிவு என்ன?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 2, 1944, பக்கங்கள் 111-13.

மானியத்தில் வாழாத ஒரு ஸ்தாபனத்திற்கு சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டில் இந்தியத் தொழிலாளர்கள் சார்பில் எதிர்காலத்தில் பிரதிநிதித்துவம் அளிப்பது குறித்து என்ன முடிவு செய்யப்பட்டது?

(ஈ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அளிக்கப்பட்ட எல்லா நிதியும் எந்த நோக்கத்திற்காக கொடுக்கப்பட்டதோ அதற்காகச் செலவழிக்கப்பட்டதா? அப்படியாயின், இந்த விஷயத்தில் சம்மேளனத்தின் செயல்பாடுகள் பற்றி சுருக்கமான விவரத்தை அவர் அளிப்பாரா? எந்த நோக்கத்திற்காக மானியம் வழங்கப்பட்டதோ, அதில் எந்தப் பகுதியாவது அந்த நோக்கத்திற்காக பயன்படுத்தப்படவில்லையெனில், அந்தப் பகுதியை அரசாங்கத்திற்குத் திரும்பப் பெறுவதற்கு மாண்புமிகு உறுப்பினர் நடவடிக்கைகள் எடுப்பாரா? இல்லையெனில், ஏன் இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஒரு ஸ்தாபனம் என்ற முறையில், இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு மானியம் அளிக்கப்படுகிறது; அது அதன் பல்வேறு நிர்வாகிகளிடையே வினியோகிக்கப்படவில்லை.

(ஆ) மற்றும் (ஈ) (முதல் பகுதி). சம்மேளனத்தின் கணக்குகளைப் பற்றி அரசாங்கம் அக்கறை கொள்ளவில்லை; ஆனால் அரசாங்கத்தின் உதவித் தொகை சம்மேளனத்தால் எம்முறையில் செலவழிக்கப்படுகிறது என்பதில்தான் அக்கறை கொண்டுள்ளது. ஆரம்ப காலத்திற்கு, முழுவதும் முறையானதுமான கணக்குகள் கிடைக்கவில்லை என்றாலும், எந்த நோக்கங்களுக்காக மானியம் அளிக்கப்பட்டதோ அந்த நோக்கத்துக்காக மானியம் செலவிடப்பட்டுள்ளது என்பது பற்றி அரசாங்கம் திருப்தி கொண்டுள்ளது. 1944 ஜூன் 1ம் தேதியிலிருந்து, ஒரு தகுதி பெற்ற கணக்கரால் சம்மேளன அலுவலகத்தில் கணக்குகள் தயாரிக்கப்படும்; இவை வழக்கமான முறையில் தணிக்கை செய்வதற்குக் கிடைக்கும்.

(இ) இந்தியத் தூதுக்குழுவில் உள்ள தொழிலாளர் பிரதிநிதிகளின் தகுதிச் சான்றுகள் பற்றி, சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்திற்கு அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் அனுப்பிய ஓர் ஆட்சேபனையில் மானியம் பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்தது. தகுதிச்

சான்றுகள் பரிசீலனைக் குழுவின் அறிக்கையை மாநாடு ஏற்றுக் கொண்டது; மாநாட்டின் இந்தக் கூட்டத் தொடரில் பங்குகொள்ள வந்துள்ள இந்தியாவின் தொழிலாளர்களது பிரதிநிதியையும் அவரது ஆலோசகர்களையும் முறையாக ஏற்றுக் கொள்ளப்பட்டவர்களாக கருதும்படி அக்குழு கேட்டுக்கொண்டது. குழுவின் அறிக்கையில் மானியம் பற்றி குறிப்பிடவில்லை; ஆனால் அது பின்வருமாறு குறிப்பிட்டது:

''மாநாட்டின் எதிர்காலக் கூட்டங்களில் இரண்டு ஸ்தாபனங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க இந்திய அரசாங்கம் அதன் முயற்சிகளை உரிய முறையில் தொடர்ந்து மேற்கொள்ளும் என்பதில் குழுவிற்கு சந்தேகம் இல்லை; இரண்டு ஸ்தாபனங்களும் ஓர் ஒப்பந்தத்தை செய்து கொள்ளும் என்று உறுதியாக அது நம்புகிறது; சர்வதேசத் தொழிலாளர் அமைப்பில் இந்தியத் தொழிலாளர் இயக்கத்தின் எல்லாப் பிரிவுகளின் பிரதிநிதிகளும் பயனுள்ள முறையில் பங்குபெற அந்த ஒப்பந்தம் உத்திரவாதம் செய்ய வேண்டும். அத்தகைய ஒப்பந்தம் ஏற்பட முடியாவிடில், அடுத்த மாநாட்டில் கலந்து கொள்ளும் தொழிலாளர் பிரதிநிதி, அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸுடன் உடன்பாடு செய்து கொண்டு நியமிக்கப் படுவார் என்று குழு கருதுகிறது.''

(ஈ) (இரண்டாவது பகுதி) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு அளிக்கப்படும் மாதாந்திர மானியம் பிரசுரங்கள் அச்சிட்டு வெளியிடுவது, வாய்மூலம் பிரசாரம் செய்வது, காட்சிகள் மூலம் பிரசாரம் செய்வது, நம்பிக்கை ஏற்படுத்தும் செய்திகளைப் பரப்புவது ஆகியவற்றிற்குச் செலவளிக்கப்படுகிறது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** இந்த மானியம் அளிக்கப்படுவதன் நோக்கம் யாது என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்கான பதில் கேள்வி (ஈ)க்கு அளிக்கப்பட்ட பதிலின் இரண்டாவது பகுதியில் காணலாம்; பிரசுரங்கள் அச்சிட்டு வெளியிடுவது, வாய் மூலம்

பிரசாரம் செய்வது, காட்சிகள் மூலம் பிரசாரம் செய்வது, நம்பிக்கை ஏற்படுத்தும் செய்திகளை பரப்புவது ஆகியவற்றிற்குச் செலவழிக்கப்படுவதாக அது கூறுகிறது.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: எந்த நோக்கங்களுக்காக பணம் அளிக்கப்படுகிறதோ அந்த நோக்கங்களுக்காக மட்டுமே அது செலவிடப்படுகிறது என்பது பற்றி அரசாங்கத்தார் திருப்தியடைந்துள்ளார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். அவர்கள் திருப்தியடைந்துள்ளனர்.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: இந்தப் பணத்தின் ஒரு பகுதி காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரத்திற்காகச் செலவிடப்படுகிறது என்பதை அரசாங்கம் அறியுமா என்று நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்தமாக அரசாங்கத்துக்குத் தகவல் இல்லை.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: அவர்கள் இதுபற்றி விசாரிப்பார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1942 ஜூன் 1ம் தேதி முதல் சம்மேளனத்தின் அலுவலகத்தில் கணக்குகள் ஒரு தகுதி வாய்ந்த கணக்கரால் தயாரிக்கப்பட்டு அவை வழக்கமான முறையில் தணிக்கைக்குக் கிடைக்கும் என்று ஏற்கெனவே என் பதிலில் குறிப்பிட்டிருக்கிறேன்.

திரு. சர்தார் மங்கள் சிங்: பணம் அளிக்கப்படுவது மாதா மாதமா அல்லது வருடத்திற்கு ஒரு முறையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதற்கான தகவல் என்னிடம் இல்லை. அது மாதந்தோறும் அளிக்கப்படுகிறது என்றுதான் எண்ணுகிறேன்.

திரு. சர்தார் மங்கள்சிங்: அந்தப் பணம் செயலாளரிடமா அல்லது தலைவரிடமா கொடுக்கப்படுகிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சம்பந்தப்பட்ட ஸ்தாபனத்தின் ஒரு பொறுப்பான நிர்வாகியிடம் அது தரப்படுகிறது.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: எந்தப் பொருள் பற்றி பிரசாரம் செய்யப்படுகிறது, பிரசுரங்கள் வெளியிடப்படுகின்றன என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: யுத்தத்திற்கு ஆதரவான பிரசாரம்; யுத்தத்திற்கு ஆதரவான பிரசுரங்கள்.

திரு. பத்ரி தத் பாண்டே: தணிக்கை செய்யப்பட்ட கணக்குகளை அவையில் சமர்ப்பிக்க மாண்புமிகு உறுப்பினர் தயாராக இருக்கிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கணக்குகள் தணிக்கை செய்யப்பட்ட பின், அவையில் சமர்ப்பிக்கப்படும்; வழக்கம் போல் உறுப்பினர்களுக்கும் கிடைக்கும்.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: கணக்குகள் எதுவும் இல்லாமல் எப்போது இருந்தது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆரம்ப காலத்தில் அவ்வாறு இருந்தது. அப்போது துல்லியமான கணக்குகள் நம்மிடம் இல்லை; தணிக்கை இலாகாவின் ஒரு அதிகாரியினால் கணக்குகள் வைக்கப்படுவதற்கு இப்பொழுது ஏற்பாடு செய்துள்ளோம்.

திரு. லால்சந்த் நாவல்ராய்: இது சம்பந்தப்பட்ட தொகை எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: புள்ளிவிவரம் கொடுக்க என்னால் இயலவில்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: ஆரம்ப காலத்தில் இந்தக்

கணக்குகளை வைத்துக் கொள்ளாமல் இருந்ததற்கு யார் பொறுப் பாளி? மாண்புமிகு உறுப்பினரா, அரசாங்கமா அல்லது அவர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** சில காலத்திற்கு கணக்கு கள் எதுவும் வைக்கப்படவில்லை என்று மாண்புமிகு உறுப்பினர் கூறினார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கணக்குகள் எதுவும் வைக்கப்படவில்லை என்று நான் கூறவில்லை. நான் கூறியது இதுதான்:

மானியத்தின் ஆரம்ப காலத்தில் முழுமையான, முறையான கணக்குகள் வைக்கப்படாவிடினும், எந்த முறையில் அது செல வழிக்கப்பட வேண்டுமென்று அரசாங்கத்தார் விரும்பினார்களோ அதே முறையில் பணம் செலவழிக்கப்பட்டது என்று அவர்கள் திருப்தியடைந்திருந்தனர்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** பணம் முறையாகச் செலவழிக் கப்படுகிறது என்று அரசாங்கம் திருப்தியடைந்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்கு மாறாக கருதுவதற்கு காரணம் எதுவும் இல்லை.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** மாண்புமிகு உறுப்பினர் இதற்கு மாறாக கருதுகிறாரா இல்லையா என்பதல்ல இங்கு கேள்வி.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) :** மதிப்பிற்குரிய உறுப்பினர் வாதம் செய்து கொண்டிருக்கிறார்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** பணம் முறையாக செலவு செய்யப்படுகிறது என்று நினைப்பதற்கு மாண்புமிகு உறுப்பினரிடம் என்ன ஆதாரம் உள்ளது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதற்கு மாறாக கருதுவதற்கு எனக்குக் காரணம் எதுவுமில்லை.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* என்னுடைய கேள்வி வேறானது. இவ்விதம் அல்லது அவ்விதம் என்று மாண்புமிகு உறுப்பினர் எவ்வாறு கருதமுடிகிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* பணம் முறையாகச் செலவிடப்படவில்லை என்று நம்ப என்னிடம் காரணம் எதுவு மில்லை.

*திரு. சர்தார் சாந்த் சிங்:* மாண்புமிகு உறுப்பினர் திருப்தி யடைந்துள்ளது மட்டும் போதுமா? இந்தப் பணம் எவ்வாறு செல வழிக்கப்படுகிறது என்பது பற்றி பொதுமக்களும் திருப்தியடைய வேண்டும் என்பதை அவர் கணக்கில் எடுத்துக் கொண்டாரா? பொதுமக்களை உறுப்பினர் எவ்வாறு திருப்திபடுத்தினார்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* பொதுமக்களை எவ்வாறு திருப்திப்படுத்த முடியும் என்பது எனக்குத் தெரியாது; ஆனால் பணத்தைக் கொடுத்த அரசாங்கம் திருப்தியடைந்துள்ளது.

*திரு. சர்தார் சாந்த் சிங்:* அரசாங்கம் கொடுத்துள்ள பணம் வரி கொடுப்போரின் பணம். ஆகவே பணம் விதிமுறைகளின்படி செலவழிக்கப்பட்டுள்ளது என்று வரி கொடுப்போரை அரசாங்கம் எவ்வாறு திருப்தி செய்யப்போகிறது?

(பதில் இல்லை)

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* கணக்குகள் சரியாகவே இருக்கின்றன என்று நிதித்துறை உறுப்பினர் திருப்தியடைந்தாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தக் கேள்வியை மாண்புமிகு நிதித்துறை உறுப்பினரிடம்தான் கேட்க வேண்டும்.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* இந்தத் தொழிலாளர் சம்மேள

னத்தின் செயலாளர் யார், தலைவர் யார்? அவர்களுக்கு ஏதாவது சம்பளமோ அல்லது பணமோ இந்த நிதியிலிருந்து கொடுக்கப் படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்வி இங்கு எழவில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினர் முன்னறிவிப்பு அளித்தால், அவருக்காகத் தகவல் சேகரித்துத் தருகிறேன்.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** நான் ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்பலாமா? சர் ஜியாவுத்தீன் அகமது நிதித்துறை உறுப்பினர் திருப்தியடைந்தாரா என்று கேட்டார். இந்தக் கேள்வி நிதித்துறை உறுப்பினரிடம் கேட்கப்பட வேண்டும் என்று தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளித்தார். நிதித் துறை உறுப்பினர் திருப்தியடைந்தாரா இல்லையா என்பதை பொறுப்பில் உள்ள உறுப்பினர் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். இதுதான் நியாயம். எனவே, அவர் அவசியம் பதிலளிக்க வேண்டும்.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):** அவர் பதில் அளித்துவிட்டார். ஒரு குறிப்பிட்ட முறையில் பதிலளிக்க வேண்டு மென்று மாண்புமிகு உறுப்பினரை நான் கேட்க முடியாது.

# 216

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அரசாங்கத்தின் உதவித் தொகை

32. **திரு. லால்சந்த் நாவல்ராய்:** 1944 ஏப்ரல் 4 ஆம் தேதி எனது நட்சத்திரக் குறியிட்ட கேள்விக்கு அளித்த பதில் சம்பந்தமாக, சென்ற டிசம்பரில் பம்பாயில் நடைபெற்ற இந்தியத் தொழிலாளர் சம்மேள னத்தின் முதலாவது ஆண்டு மாநாட்டில் சம்மேளனத் தின் தலைவர் செய்த அறிவிப்பு தமது கவனத்திற்குக் கொண்டு

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 2, 1944, பக்கம் 111.

வரப்பட்டதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா? அரசாங்கத்திடமிருந்து தாங்கள் மாதம் ஒன்றுக்கு ரூ. 13,000 வீதம் பெற்றுக் கொண்டிருப்பதாகக் கூறுவது பச்சைப் பொய் என்று அந்த அறிவிப்பு கூறுகிறது.

(ஆ) சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டில் கலந்து கொள்ள பில்டெல்பியா கிளம்பும்போது, ரூ. 13,000 ஐ சர்க்கார் மானியமாகப் பெற்றதாகக் கூறப்படுவதை மறுத்து சம்மேளனத்தின் தலைவர் திரு. ஜம்னாதாஸ்மேத்தா விடுத்த அறிக்கை மாண்புமிகு உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(இ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு ரூபாய் 13,000/- கொடுக்கப்பட்டு வருகிறது என்ற உண்மையை ஊர்ஜிதம் செய்து 1944 ஏப்ரல் 4ம் தேதி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அவையில் செய்த அறிவிப்புக்கு பதிலாக இந்த அறிக்கை வெளியிடப்பட்டது என்பதும் உண்மையா?

(ஈ) மானியத் தொகை ரூ. 13,000 இரகசியமாக திரு. எம்.என். ராய்க்கு கொடுக்கப்படுகிறது என்பது உண்மையா? இது உண்மையானால், இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு அளிக்காமல் ஒரு தனி நபருக்கு ஏன் இவ்வளவு பெரும் தொகை அளிக்கப்படுகிறது?

(உ) இந்த மானியத்தை பெற்றுவரும் காலத்தில், அதன் நோக்கத்தை உதாரணமாக தொழிலாளர்களின் ஒழுங்குணர்வைப் பாதுகாப்பதற்காக, இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றி ஒரு சுருக்கமான அறிக்கையை மாண்புமிகு உறுப்பினர் சமர்ப்பிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ), (ஆ), (இ). மேலே குறிப்பிடப்பட்ட அறிக்கைகள் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளன. இந்த மானிய ஏற்பாடு ஆரம்பத்திலிருந்தே இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துடன்தான்; எந்தத் தனி நபருடனுமல்ல. திரு. மேத்தாவின் அறிக்கைகள் பற்றி சம்மேளனத்தின் கவனத்திற்கு கொண்டுவரப்பட்டது; இதற்கு அளிக்கப்

பட்ட பதிலில் இந்த ஏற்பாடு சம்மேளனத்துடன் என்று சம்மேளனம் மீண்டும் உறுதி செய்துள்ளது.

(ஈ) ஏற்கனவே, இதற்கு முந்தைய கேள்விக்கு கூறியது போலவே, மானியம் வெளிப்படையாக இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அளிக்கப்பட்டது; திரு. எம்.என். ராய்க்குத் தனிப் பட்ட முறையில் அல்ல.

(உ) முந்தைய கேள்வி (ஈ)யின் இரண்டாவது பகுதிக்கு அளித்த என் பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** மாண்புமிகு உறுப்பினர் தமது பதிலில் பணம் கொடுக்கப்பட்டது என்று கூறியுள்ளார்; பிலடெல் பியாவுக்கு போகும்முன், பணம் கொடுக்கப்படவில்லை என்று திரு. ஜம்னாதாஸ் மேத்தா ஒரு அறிக்கை வெளியிட்டார். இந்த முரண்பாட்டை மாண்புமிகு உறுப்பினர் எவ்வாறு இணக்குவிக்கப் போகிறார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரண்டு அறிக்கை களையும் இணக்குவிப்பது எனது வேலையல்ல.

**திரு. லால்சந்த் நாவல்ராய்:** இவ்வாறு மதிப்பிற்குரிய உறுப் பினர் அறிக்கை வெளியிட்டது சரியா, தவறா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு நான் பதிலளிக்க வேண்டியதில்லை.

**திரு. சர்தார் சாந்த் சிங்:** இந்தப் பச்சைப் பொய்யைக் கூறிக் கொண்டிருப்பது யார், சம்மேளனமா அல்லது இந்திய அரசாங்கமா என நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தாம் விரும்புகிற எந்த முடிவுகளுக்கும் வருவதற்கு எனது மதிப்பிற்குரிய என் நண்ப ருக்கு உரிமை உண்டு.

# 217

# *புது டில்லியில் கட்டப்பட்ட தற்காலிக கட்டிடங்களை யுத்தம் முடிவுற்றதும் அகற்றுவது குறித்து

*50. சர் எப்.இ. ஜேம்ஸ்: (அ) டில்லி நகரசபை 16.10.1943ல் அளித்த பிரிவு உபசாரத்துக்கு பதிலளிக்கையில் லின்லித்கோ பிரபு பின்வரும் அறிவிப்பை வெளியிட்டார்:*

(i) *யுத்தத்திற்குப் பின் பல தற்காலிக கட்டிடங்களை அகற்றுவது பற்றிய உங்கள் கவலையை வெளியிட்டீர்கள்; இவை நகரின் அழகிற்குப் பங்கம் விளைவிக்கின்றன என்பதை ஒப்புக் கொண்டாக வேண்டும். இரு சட்டமன்றங் களில் அண்மையில் ஆற்றிய எனது சொற்பொழிவில் நான் வெளி யிட்டதுபோல இந்த கட்டிடங்களை எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அகற்ற வேண்டு மென்பதுதான் இந்திய அரசாங்கத்தின் திட்டவட்டமான கொள்கையாகும். தலைமைச் செயலகத்தைச் சுற்றிலும், இர்வின் விளையாட்டு அரங்கத்தில் வில்லிங்டன் விமான நிலையத்துக்கு அருகிலும், கன்னாட் சர்க்கஸை அடுத்துள்ள சுற்றுப்புறத்திலும், புதுடெல்லி வளர்ச்சி திட்டத்தின்படி பல்வேறு காரணங்களுக்காக பிரித்துக் கொடுக்கப்பட்ட வளாகங்களிலும் அலுவலகங்களுக்காகவும் தங்கும் விடுதி களுக்காகவும் கட்டப்பட்ட தற்காலிக கட்டிடங்கள் அனைத்தையும் யுத்தம் முடிந்ததும் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அகற்றப்பட வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கமாகும்.*

(ii) *1943 அக்டோபர் 30ம் தேதி டில்லி நகரசபை வாசித்தளித்த வரவேற்புப் பத்திரத்திற்கு அளித்த பதிலில் மேதகு வேவல் பிரபு கீழ்க்கண்ட அறிவிப்பை வெளியிட்டார்:*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி* IV, *நவம்பர் 2, 1944, பக்கங்கள் 128-29.*

யுத்தத்திற்குப் பின் தற்காலிக கட்டிடங்களை அகற்றுவது பற்றிய விஷயத்தில் மேதகு ராணியாரும் நானும் உங்களுடன் ஒன்றுபட்டு இருக்கிறோம் என்று உங்களுக்கு உறுதியளிக்க முடியும். இந்திய அரசாங்கத்தின் சார்பாக லின்லித்கோ பிரபு உங்களுக்கு அளித்த வாக்குறுதி உங்களுக்கு நினைவு இருக்கும்.

இவ்வாறு கூறப்பட்டதை எல்லாம் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) 1943 அக்டோபரிலிருந்து கட்டிட நிர்மாணத் திட்டம் மேற்கொள்ளப்பட்டுவரும் நிலைமையில் லின்லித்கோ பிரபு அறிவித்துள்ளபடி இந்திய அரசாங்கத்தின் நோக்கங்கள் எந்தக் கட்டிடங்களுக்கு இன்று பொருந்தும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) டில்லியின் எதிர்கால வளர்ச்சிக்கு இடைஞ்சலாக உள்ள தற்காலிக அடிப்படையில் கட்டப்பட்ட கட்டிடங்களுக்கு இது பொருந்தும். 1941ல் கட்டப்பட்ட லோடி சாலை அதிகாரிகளின் பங்களாக்களுக்கும் சமீபத்தில் கட்டப்பட்ட எழுத்தர்களின் குடியிருப்புகளுக்கும் இது பொருந்தாது. அதுவும், லோடி சாலைக்குத் தெற்கே வானிலை ஆய்வுக்கூடத்திற்கு பின்புறம் இப்பொழுது கட்டப்பட்டு வரும் எழுத்தர்களின் குடியிருப்புகளுக்கு குறிப்பாக இது பொருந்தாது.

**சர் எப்.இ. ஜேம்ஸ்:** ஐயா, இப்பொழுது கட்டப்பட்டு வரும் தற்காலிகக் கட்டிடங்கள் டில்லியின் வளர்ச்சிக்கு இடைஞ்சலாக இருக்குமா, இருக்காதா என்பதை யார் முடிவு செய்வார்கள் என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்திய அரசாங்கம்தான் என்பது தெள்ளத் தெளிவு.

**சர் எப்.இ. ஜேம்ஸ்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தமது பதிலில் குறிப்பிட்ட, 'தற்காலிக' கட்டிடங்கள் என்பதில் உட்படுத்தப்படாத கட்டிடங்கள், அவற்றை நிரந்தரக்

கட்டிடங்கள் என்று பாதுகாத்து வைக்கப்படுவதை நியாயப்படுத்தும் வகையில் விதிமுறைகளின்படி தரமானவையாகக் கட்டப்பட்டு வருகின்றனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நிச்சயமாக அவ்வாறுதான் கட்டப்பட்டு வருகின்றன.

திரு. லால்சந்த் நாவல்ராய்: அமெரிக்கர்களுக்காகக் கட்டப்பட்ட மாளிகைகள் போன்ற தோற்றமுடைய எல்லா கட்டிடங்களும் நகரின் அழகிற்குப் பங்கம் விளைவிக்கும் என்று மாண்புமிகு உறுப்பினர் கருதுகிறாரா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா? அவை தற்காலிகமானவையா? யுத்தம் முடிந்ததும் அவை அகற்றப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கட்டிடங்களுக்கும் இவற்றுக்கும் சம்பந்தமில்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: சம்பந்தம் இருக்கிறது. இந்தக் கட்டிடங்களும், மத்திய சட்டமன்றத்திற்கு அருகே கட்டப்பட்டவை போன்று நகரின் அழகிற்கு பங்கம் விளைவிக்கின்றன.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அமெரிக்கப் படைவீரர்களுக்காகக் கட்டப்பட்ட கட்டிடங்கள் பற்றி இந்தக் கேள்வி குறிப்பிடவில்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: இந்தக் கட்டிடங்கள் எல்லாமே அரசாங்கத்தால் கட்டப்பட்டு வருகின்றன...

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அமெரிக்கத் துருப்புகளுக்காகக் கட்டப்பட்ட கட்டிடங்களை இந்தக் கேள்வி குறிக்கவில்லை. எனவே இந்தக் கேள்வி இங்கு எழவில்லை.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அடுத்த கேள்வி.

# 218

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தைத் தவிர மற்ற அமைப்புகளுக்கு அரசாங்கத்தின் உதவித் தொகை

59. திரு. பத்ரி தத் பாண்டே: (அ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு மாதம் ரூ. 13,000 மானியம் வழங்குவது பற்றிய 1944 ஏப்ரல் 4ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 776 சம்பந்தமாக எனது உப கேள்விக்கு, அதாவது, சம்மேளனத்தைப் போல பணம் பெறுகிற பிற அமைப்புகள் உள்ளனவா என்பதற்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து பதில் அளிப்பாரா?

(ஆ) இந்தப் பணம் பொது நோக்கங்களுக்காக பயன்படுத்தப் படுகிறதா என்பதைக் கண்டறிய அரசாங்கம் எத்தகைய கட்டுப் பாட்டை கடைப்பிடித்து வருகிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்த நோக் கத்திற்காக வேறு எந்தத் தொழிலாளர் அமைப்பும் அரசாங்கத் திடமிருந்து நிதி உதவி பெற்றுக் கொள்ளவில்லை. தொழிலாள ரிடையே ஒழுங்குணர்வைப் பாதுகாப்பதற்காக பிரசாரம் செய்யும் விஷயத்தில் அரசாங்கத்திடமிருந்து உதவி தருவதாகக் கூறும் கடிதம் அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸுக்கும் இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கும் அனுப்பப்பட்டது. அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் தனது பதிலில் எந்த உதவியையும் கோர வில்லை.

(ஆ) திரு. லால்சந்த் நாவல் ராய் எழுப்பிய கேள்விகளுக்கு அளித்த பதில்களை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 2, 1944, பக்கம் 134.

# 219

## *ஷாதரா (டில்லி) சகரன்பூர் ரயில்வே நிர்வாகத்துக்கும் அதன் சிப்பந்திகளுக்கும் இடையே ஏற்பட்ட தொழில் தகராறு சம்பந்தமாக நடுவர் நியமனத்தில் அரசாங்கத்தின் அரசியல் சட்டத்திற்குப் புறம்பான செயல்

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அடுத்த தீர்மானம் திரு. அனங்கமோகன் தாம் பெயரில் உள்ளது. அவர் விவாதிக்க விரும்புவது இதுதான்: ''ஷாதரா ரயில்வே நிர்வாகத்திற்கும் அதன் சிப்பந்திகளுக்கும் இடையே உள்ள தொழில் தகராறில் நடுவரை நியமித்ததில் மத்திய அரசாங்கம் சட்டத்திற்குப் புறம்பாக செயல் பட்டிருக்கிறது; மேலும் அந்த நடுவரது தீர்ப்பின் மீதான உத்தரவை கிழக்கு ரயில்வே சிப்பந்திகளுக்கு நீடிக்கத் தவறி விட்டது; அதாவது மலிவு விலை தானியங்களை வடமேற்கு ரயில்வே அளிக்கும் விலையில், ஷாதரா (டில்லி) சகரன்பூர் ரயில்வே சிப்பந்திகளுக்கு கிடைக்கச் செய்துள்ளதுபோல கிழக்கு ரயில்வே சிப்பந்திகளுக்கு கிடைக்க ஏற்பாடு செய்யவில்லை.''

உங்களது திட்டவட்டமான புகார்தான் என்ன? மற்ற சில இடங்களை போல் ஏதாவது படி அளிக்கப்பட வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்களா?

திரு. அனங்க மோகன் தாம் (சுமாப் பள்ளத்தாக்கும் ஷில்லாங்கும் சேர்ந்த முகமதியரல்லாத தொகுதி): ஐயா, தகராறில் சம்பந்தப்பட்ட இருசாராரும் தகராறை நீதிமன்றத் தீர்ப்புக்கு விடுமாறு கோரவேண்டும் என்று விதி கூறுகிறது. அவ்வாறே செய்யப்பட்டுள்ளது; ஆனால் வடமேற்கு ரயில்வேக்கு நீட்டிக்கப் பட்ட மலிவுவிலை தான்ய சலுகைகள் கிழக்கு இந்திய ரயில்வேக்கு நீட்டிக்கப்படவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 3, 1944, பக். 218.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): கிழக்கு இந்திய ரயில்வே சிப்பந்திகளுக்கும் அதே சலுகைகள் நீட்டிக்கப் பட வேண்டுமென்று தாங்கள் விரும்புகிறீர்கள், அப்படித்தானே?

திரு. அனங்க மோகன்தாம்: ஆம். ஐயா.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா! தீர்மானத்தை எதிர்க்கிறேன். உண்மை கள், சூழ்நிலைகள் பற்றி எனது மதிப்பிற்குரிய நண்பர் கணிச மான அளவு தவறான தகவல்களைப் பெற்றிருக்கிறார் என்று நான் கூறியாக வேண்டும். இந்த நடுவர் தீர்ப்பு விதி 81ஏபடி நடைபெற்றது.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அவையின் முன் உள்ள ஒரே கேள்வி இந்தத் தீர்மானம் முறையானதாக உள்ளதா என்பதுதான்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: உண்மை விபரங் களை நான் கூறுகிறேன். இந்தியப் பாதுகாப்பு விதிகள் 81-ஏ விதிப்படி இந்த நடுவர் தீர்ப்பு அளிக்கப்பட்டது; நடுவரை நியமிக் கும் அதிகாரம் முற்றிலுமாக இந்திய அரசாங்கத்திடம் உள்ளது. எனவே, குறிப்பாக ஐக்கிய மாகாணம், டில்லி ஆகிய இரு மாகா ணங்களில் இயங்கும் ரயில்வே சம்பந்தப்பட்டதாக இந்தத் தகராறு இருந்துவரும் நிலைமையில், நடுவரை நியமிக்க எந்த ஒரு தனிப் பட்ட மாகாணத்துக்கும் உரிமையில்லாத நிலைமையில் இந்திய அரசாங்கம் நடுவரை நியமித்ததில் அரசியல் சட்டத்திற்குப் புறம் பானது எதுவுமில்லை. ஆதலால் இந்த நடவடிக்கை எடுத்ததில் அரசியல் சட்டத்திற்குப் புறம்பானது எதுவுமில்லை என்று பணி வோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

கேள்வியின் இரண்டாவது பகுதியைப் பொறுத்தவரை, எனது மதிப்பிற்குரிய நண்பர் இதுபற்றி தவறான தகவல்களைப் பெற்றி ருக்கிறார் என்பது என் வாதம். ஏனெனில், வேறு எந்த ரயில்வே யைப் பொறுத்தவரையிலான எந்தத் தகராறையும் நடுவரின் தீர்ப்பு விலக்கி வைக்கவில்லை. தகராறில் சம்பந்தப்படாத ஒரு ரயில் வேக்கு தீர்ப்பின் ஷரத்துக்களை நீட்டிப்பது என்பது நிச்சயமாக அரசாங்கத்தின்முன் எழவில்லை. தகராறு ஷாதரா சகரான்பூர்

ரயில்வே சம்பந்தப்பட்டது மாத்திரமே, கிழக்கு இந்திய ரயில்வேயைப் பற்றியதல்ல.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): கிழக்கு இந்திய ரயில்வே சிப்பந்திகள் சார்பில் இத்தகைய கோரிக்கை எதுவும் முன்வைக்கப்படவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக இல்லை, ஐயா.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அளித்த விவரங்களை வைத்துப் பார்க்கும்போது தீர்மானத்திற்கு நியாயம் எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. எனவே, அது அனுமதிக்கப்படவில்லை.

# 220

## *டில்லியில் கட்டிடங்களுக்கு ஆகும் செலவு

132. +டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: (அ) டில்லியில் நிரந்தரமான கட்டிடங்களுக்கும் தற்காலிகமான கட்டிடங்களுக்கும் இந்திய அரசாங்கம் எவ்வளவு பணம் செலவு செய்துள்ளது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

(ஆ) (i) கடன்கள், (ii) அரசு வருமானம், (iii) நிலக்குத்தகை மூலம் எவ்வளவு பணம் திரட்டப்பட்டது?

(இ) யுத்தத்திற்குப் பின் இந்தக் கட்டிடங்கள் என்ன ஆகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) நிரந்தரமான, தற்காலிக அலுவலக கட்டிடங்களையும் குடியிருப்புகளையும் கட்டுவதற்கு 1939லிருந்து ஆன மொத்த செலவு ரூபாய் 6.38 கோடிகள்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கம் 319.

+ கேள்வி கேட்டவருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்துவிட்டதால் இந்தக் கேள்விக்கான பதில் அவையில் முன்வைக்கப்படுகிறது.

(ஆ) கேட்ட தகவல்கள் உடனடியாகக் கைவசம் இல்லை.

(இ) நிரந்தரக் கட்டிடங்கள் யுத்தத்திற்குப் பின் பாதுகாத்து வைத்துக் கொள்ளப்படும். தற்காலிகக் கட்டிடங்களைப் பொறுத்த வரை, யுத்தத்திற்குப் பின் எவ்வளவு சீக்கிரம் சாத்தியமோ அவ்வளவு சீக்கிரம், டில்லியின் வளர்ச்சிக்கு அந்த இடங்கள் எவ்வப்போது தேவைப்படுகிறதோ, அதற்கேற்ப அவற்றை இடித்துத் தள்ளுவது என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

# 221

## *தற்காலிகக் கட்டிடங்களை இடிப்பது

133. **டாக்டர் ஜியாவுத்தீன் அகமது:** (அ) கட்டப்படவிருக்கும் கட்டிடங்களை யுத்தத்திற்குப்பின் இடித்துத் தள்ளப்படக்கூடிய முறையில் கட்டப்பட வேண்டும்; இதற்கு கூடுதலாக பணம் செலவாகும் என்று தமது துறைக்கு மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் ஆலோசனை கூறியுள்ளாரா?

(ஆ) தற்காலிகக் கட்டிடங்களை இடிப்பது என்று அரசாங்கத்தார் உத்தேசித்துள்ளனரா? இடிப்பதற்கான செலவு எவ்வளவு ஆகும்? எம்முறையில் இந்தக் கட்டிடங்கள் இடித்துத் தள்ளப் படும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இல்லை. இத்தகைய கட்டிடங்களைக் கட்டுவதன் முதன்மையான நோக்கம் யுத்தத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதுதான்; இத்தேவைகளை நிறைவேற்றும் முறையில் பொருத்தமான இடங்களில் அவை கட்டப்பட்டன. பெரும்பாலான இடங்கள் யுத்தத்திற்குப் பின் மற்ற நோக்கங்களுக்காகத் தேவைப்படும். அவற்றில் கட்டப்பட்டவை தற்காலிக கட்டிடங்கள். இந்த இடங்களை பயன்படுத்துவதற்கான திட்டம் டில்லியின் வளர்ச்சி இவற்றை பொறுத்துத்தான் இந்த கட்டிடங்களை இடிப்பதற்கான உத்தரவுகள் அமைந்திருக்கும்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கம் 319-20.

(ஆ) ஆம். இடிப்பதற்கான செலவு எவ்வளவு ஆகும் என்று மதிப்பீடு கொடுப்பதோ, இந்த கட்டிடங்கள் எம்முறையில் இடிக்கப்படும் என்பதைக் கூறுவதோ இப்பொழுது சாத்தியமல்ல.

# 222

## *டில்லியிலும் புது டில்லியிலும் கட்டப்பட்ட அலுவலகக் கட்டிடங்களும் குடியிருப்புகளும்

+135. சர் எப்.இ. ஜேம்ஸ்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவுசெய்து பின்வரும் விவரங்களைக் கூறுவாரா:

(அ) யுத்தம் துவங்கியதிலிருந்து பொதுப்பணித் துறையால் டில்லியிலும் புது டில்லியிலும் எத்தனை (i) அலுவலகங்களும், (ii) குடியிருப்புகளும் கட்டப்பட்டு உள்ளன? இதற்கான மதிப் பீட்டுச் செலவு எவ்வளவு?

(ஆ) இவ்வாறு கட்டப்பட்ட (i) தற்காலிக (ii) கட்டிடங் களுக்கு ஆன மொத்தச் செலவு எவ்வளவு?

(இ) இப்பொழுது என்ன தற்காலிக அலுவலகக் கட்டிடங் களும் குடியிருப்புகளும் கட்டப்பட்டு வருகின்றன? இதற்கான மதிப் பீட்டுச் செலவு எவ்வளவு?

(ஈ) மேலும் பல தற்காலிகக் கட்டிடங்கள் கட்டுவது பற்றிப் பரிசீலனையில் உள்ளதா; அப்படியாயின் எந்த நோக்கத்திற்காக?

(உ) தற்காலிகக் கட்டிடங்களை யுத்தத்திற்குப் பின் அகற்ற என்ன திட்டங்கள் தயார் செய்யப்படுகின்றன? இவற்றின் தளவாடப் பொருள்கள் எவ்விதம் பயன்படுத்திக் கொள்ளப்படும்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கம் 321-22.

+ கேள்வி கேட்டவர் வராததால் இந்தக் கேள்விக்கான பதில் அவையில் சமர்ப்பிக்கப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) யுத்தம் துவங் கியதிலிருந்து அலுவலக இடவசதிக்காக 12,24,516 சதுர அடியும், 969 அதிகாரிகளுக்கும், 745 எழுத்தர்களுக்கும் குடியிருப்பு களும் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. பிரிட்டிஷ் செய்தித்துறை அமைச் சகத்துக்கும், கிழக்கு ஆசியப் படை தலைமைக்கும், அமெரிக்கப் படைகளுக்கும் செய்து கொடுக்கப்பட்ட இடவசதி இந்த புள்ளி விவரங்களில் உட்படவில்லை. எத்தனை அதிகாரிகள் மற்றும் பணி யாளர்களுக்கு அலுவலக இடவசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது என்பது பற்றிய தகவல்கள் உடனடியாகக் கிடைக்கவில்லை.

(ஆ) அலுவலர் குடியிருப்பு வசதிக்காக 1939 முதல் கட்டப் பட்டவைக்கான செலவு வருமாறு: (i) தற்காலிக இட வசதிக்கு ரூ. 5.29 கோடியும், (ii) நிரந்தர இடவசதிக்கு ரூ. 1.09 கோடியும் ஆகும்.

(இ) தேவைப்படும் தகவலும் இப்பொழுது கட்டப்பட்டு வரும் நிரந்தரக் கட்டிடங்கள் பற்றிய தகவலும் கொண்ட அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

(ஈ) மேற்கொண்டு எந்தத் திட்டமும் இன்னும் அங்கீகரிக்கப் படவில்லை.

(உ) யுத்தம் முடிந்ததும் தற்காலிகக் கட்டிடங்களை அப்புறப் படுத்துவது என்று முடிவு செய்யப்பட்டுள்ளது. அவற்றின் தளவாடப் பொருள்களை எவ்வாறு பயன்படுத்திக் கொள்வது என்னும் விஷயம் பரிசீலனையில் உள்ளது.

**தற்போது கட்டப்பட்டுவரும் தற்காலிக மற்றும் நிரந்தர அலுவலகக் கட்டிடங்களும் குடியிருப்புகளும் அவற்றிற்கான மதிப்பீட்டுச் செலவும் பற்றிய விவரப் பட்டியல்**

| இட வசதி பற்றிய விவரம் | மதிப்பீட்டுச் செலவு ரூபாயில். |
|---|---|
| I. தற்காலிகமானது — | |
| 1. ஜி.எச்.க்யூ. சிக்னல் அதிகாரிகளுக்கு அதிகப்படியான குடியிருப்பு இடவசதி | புள்ளிவிவரம் கிடைக்கவில்லை. |

| | | |
|---|---|---|
| 2. | கிச்சேனர் சாலையில் திருமணமாகாத 1000 எழுத்தர்களுக்குக் குடியிருப்புகள் | 23,41,000 |
| 3. | அஸ்மாரா, மசாவா பகுதிகளில் 367 எழுத்தர்களுக்கு இடவசதி (ஏற்கனவே உள்ள தற்காலிக கட்டிடங்களில் மாற்றங்கள் செய்து) | |
| 4. | திப்பியா கல்லூரி மாணவர் தங்கும் விடுதிகள் வளாகத்தில் திருமணமான 68 எழுத்தர்களுக்குக் குடியிருப்புகள், திருமணமாகாத 224 எழுத்தர்களுக்குக் குடியிருப்புகள் | 21,00,000 |
| 5. | விவாகமாகாத 200 அதிகாரிகளுக்கு அரசாங்கத்தின் தங்கும் விடுதிகளில் தங்கும் வசதி | 7,80,000 |
| 6. | கிங் எட்வர்டு சாலையில் 160 திருமணமான அதிகாரிகளுக்கு தங்கும் விடுதி | புள்ளி விவரம் கிடைக்கவில்லை. |
| 7. | அலுவலகங்களுக்கான இடவசதி 3,05,043 சதுர அடி | 39,65,559 |

I. நிரந்தரமானது —

| | | |
|---|---|---|
| 1. | மின்டோ சாலையின் அருகில் ரயில்வேக்குச் சொந்தமான நிலத்தில் எழுத்தர்களுக்கான 50 'டி' வகை மற்றும் 168 'இ' வகைக் குடியிருப்புகள் | 23,67,386 |
| 2. | லோதி சாலையில் 2,468 எழுத்தர்களுக்குக் குடியிருப்புகள் | 2,94,00,000 |

| | | |
|---|---|---|
| 3. | திருமணமான 228 எழுத்தர்களுக்கு கரோல்பாக்கில் 12 ஏக்கர் நிலத்தில் குடியிருப்புகள் | 32,00,000 |
| 4. | ஆரம்பாக்கில் எழுத்தர்களுக்கான 8 'இ' வகை குடியிருப்புகள் | 80,000 |
| 5. | சித்திர குப்தா சாலையில் 120 எழுத்தர் களுக்கு மூன்று மாடி அடுக்குக் குடியிருப்புகள் | 15,00,000 |

# 223

## *மத்தியத் தொழில்நுட்ப மின்சக்தி வாரியம் அமைத்தல்

139. திரு. கே.ஸி. நியோகி: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவுசெய்து பின்வரும் கேள்விகளுக்குப் பதி லளிப்பாரா:

(அ) ஒரு மத்திய தொழில்நுட்ப மின்சக்தி வாரியத்தை அமைக்கும் திட்டங்கள் எதுவும் அரசாங்கத்திடம் உள்ளதா?

(ஆ) பிரிட்டிஷ் தொழில் நிறுவனம் மெர்ஸ் அண்டு மெலேலனின் முன்னாள் அலுவலருக்கு வாரியத்தின் தலைவர் பதவியை அளிக்க முன்வந்திருப்பதும், வாரியத்தின் இரண்டு இடங்களில் ஒன்றில் ஓர் அமெரிக்கப் பொறியாளர் அமர்த்தப் பட்டிருப்பதும் உண்மையா;

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கங்கள் 325- 326.

(இ) மெர்ஸ் அண்டு மெலேலன் நிறுவனத்தாரையும் அமெரிக்க பாண்ட் அண்ட் ஷேர் கம்பெனியையும் ஆலோசனை வழங்கும் பொறியாளர்களாக நியமிக்க அரசாங்கத்தார் பரிசீலனை செய்து வருகிறார்கள் என்று வந்த செய்திகள் அவரது கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டனவா? அவ்வாறாயின், அவை உண்மையா?

(ஈ) இந்தியாவில் மின்சக்தி நிலையங்களை கட்டி அமைப்பதிலோ அல்லது நிர்வகிப்பதிலோ இதுவரை இந்த இரு அமெரிக்க, பிரிட்டிஷ் நிறுவனங்கள் உரிமைகள் எதையும் பெற்றிருக்கின்றனவா? அவை யாவை?

(உ) இந்த ஆண்டு அரசாங்கம் நியமித்த பிரபல மின்சக்தி பொறியாளர்கள் குழு, ரூ. 400 கோடி மதிப்புள்ள மின் நிலையங்கள் இந்தியாவுக்குத் தேவைப்படும் என்று அறிக்கை கொடுத்திருக்கிறார்கள் என்பதும், அரசாங்கத்தார் இந்தப் பரிந்துரையை ஏற்றுக் கொண்டார்கள் என்பதும் உண்மையா?

(ஊ) மேலே குறிப்பிட்ட குழுவின் பரிந்துரைகளது முழு விவரங்களை அரசாங்கத்தார் பிரசுரம் செய்வார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) ஆம். ஆனால் முந்தியவரைப் பொறுத்தவரை, கடந்த 3 வருடம் ஆறு மாதங்களாக அவர் இந்திய அரசாங்கத்தின் பணியில் மின்விசை ஆணையராக உள்ளார்.

(இ) இது சம்பந்தமான பத்திரிகைச் செய்திகளை அரசாங்கத்தார் பார்த்துள்ளனர்; ஆனால் ஆலோசகப் பொறியாளர்களை நியமிக்கும் விஷயம் அவர்களின் பரிசீலனைக்கு இன்னமும் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

(ஈ) மெர்ஸ் அண்டு மெலேலன் நிறுவனத்தைப் பொறுத்தவரை இல்லை என்பதுதான் பதில். அமெரிக்காவின் எலக்ட்ரிக் பாண்ட் அண்ட் ஷேர் கம்பெனி (அமெரிக்கன் பாண்ட் அண்ட் ஷேர் கம்பெனி அல்ல) டாட்டா ஹைட்ரோ எலக்ட்ரிக் ஏஜென்ஸியிலும் யுனைடெட் ஈஸ்ட்டேர்ன் ஏஜென்சியிலும் கணிசமான உரிமை பெற்றுள்ளனர் என அரசாங்கத்தார் அறிகிறார்கள்; அவை கராச்சி, புரோச், நாசிக்-தியோலாலி, புனா ஆகிய இடங்களிலுள்ள மின்சக்தி வழங்கும் நிலையங்களின் மேனேஜிங் ஏஜெண்டுகள்.

(உ) இல்லை.

(ஊ) மாநாட்டின் நிகழ்ச்சி குறிப்பேடுகளை வெளியிட நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

திரு. கே.ஸி. நியோகி: இந்தப் பரிந்துரைகளை எப்பொழுது நாங்கள் எதிர்பார்க்கலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சுமார் ஒரு வாரத்திற்குள் என்று எண்ணுகிறேன்.

திரு. மனு சுபேதார்: கேள்வியின் (இ) பகுதி சம்பந்தமாக, அது ரூ. 400 கோடி இல்லையெனில், தொகையைப் பற்றிய ஒரு மதிப்பீட்டை மாண்புமிகு உறுப்பினர் எங்களுக்குக் கொடுக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னிடம் விவரங்கள் இல்லை.

# 224

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அரசாங்கத்தின் உதவித் தொகை

152. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: தொழிலாளர்கள் மத்தியில் பிரசாரம் செய்வதற்காக மாதம் 13,000 ரூபாய் பிடிக்கும் எம்.என். ராயின் திட்டத்துக்கு தொழிலாளர் நலத்துறையின் 1942 மார்ச் 3ம் தேதிய கடிதம் எண் எல் 1882ன்படி அனுமதி வழங்கப்பட்டது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா?

(அ) இந்தத் தொகை திட்டமிட்டபடி செலவழிக்கப்படுகிறது என்று அரசாங்கம் திருப்தி அடைந்துள்ளதா?

(ஆ) இந்தப் பணம் பயன்படுத்தப்படும் முறை பற்றி திரு. எம்.என். ராயிடமிருந்து அல்லது அவரது தொழிலாளர் ஸ்தாபனத்திலிருந்து ஏதாவது அறிக்கைகளை அரசாங்கம் பெற்றுள்ளதா?

(இ) இவர்களது பணியையும், அறிக்கையையும் பற்றி அரசாங்கம் ஏதாவது முடிவுகளுக்கு வந்துள்ளதா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கங்கள் 337-38.

(ஈ) தணிக்கை ஏதாவது உள்ளதா; அப்படியாயின் யாரால் செய்யப்படுகிறது?

(உ) இம்மாதிரி மானியங்கள் வேறு எந்தத் தனி நபர்களுக்கோ ஸ்தாபனங்களுக்கோ அளிக்கப்பட்டு வருகிறதா; அப்படியாயின் அவர்கள் யார்? எவ்வளவு தொகைகள் அளிக்கப்படுகின்றன? அவற்றின் பயன் என்ன?

(ஊ) இந்த உதவித் தொகைகளைத் தொடர அரசாங்கம் விரும்புகிறதா?

(எ) இந்த மானியங்கள் பணித்துறை உதவித் தொகையா? அப்படியாயின் எந்த அடிப்படையில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) திரு. லால்சந்த் நாவல்ராய் எழுப்பிய கேள்வி எண் 31ன் (ஈ) பகுதிக்கு நான் அளித்த பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினர் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

(ஆ) ஆம்.

(இ) முந்திய கேள்விக்கு அளித்த பதிலில் கூறியிருப்பது போல, செலவழிக்கப்பட்ட பணத்திற்கு போதுமான பலன் கிடைத்துள்ளது என்று அரசாங்கம் திருப்தியடைந்திருக்கிறது. மாதாந்திர மானியத் தொகை பிரசுரங்களை அச்சிட்டு வெளியிடுவது, வாய்வழிப் பிரசாரம், காட்சிகள் மூலம் விளம்பரம், நம்பிக்கையூட்டும் செய்திகளைப் பரப்புவது ஆகியவற்றிற்காகச் செலவழிக்கப்படுகிறது.

(ஈ), (உ) இந்தச் செலவும், மற்ற எல்லாச் செலவுகளையும் போல் அரசாங்கத்தின் தணிக்கைக்கு உட்படுத்தப்படுகிறது; விமர்சனங்கள் ஏதாவது செய்யப்பட்டால், தணிக்கை அறிக்கையில் அவை இடம்பெறும்.

(உ) இல்லை.

(ஊ) ஆம். இப்போதைக்கு சம்மேளனத்திற்கு அளிக்கும் உதவித் தொகையை தொடர வேண்டும் என்பதுதான் நோக்கம்.

(எ) அவை பணித்துறை உதவித் தொகை அல்ல. அரசாங்கத்தின் வேண்டுகோளுக்கு ஏற்ப ஸ்தாபனம் ஆற்றிய குறிப்பிட்ட பணிக்காக இந்த மானியம் கொடுக்கப்படுகிறது.

# 225

# *மத்தியப் பொதுப்பணித் துறையின் கிழக்கு மண்டலத்தில் முஸ்லீம்களுக்குப் போதிய பணியிடங்கள் இல்லாமை

154. கான்பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிரச்சா: (அ) மத்தியப் பொதுப்பணித்துறை கிழக்கு மண்டலம், மேற்கு மண்டலம் என்று பிரிக்கப்பட்டுள்ளது என்பது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா?

(ஆ) கிழக்கு மண்டலத்தில் புதிதாக வேலைக்கு ஆட்கள் எடுப்பதில் முஸ்லீம்கள் குறைவாகவே எடுக்கப்பட்டுள்ளார்கள் என்பது உண்மையா? அவ்வாறாயின் இந்த முறையீட்டைப் போக்க அரசாங்கம் ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துள்ளதா? அப்படியென்றால் அந்த நடவடிக்கைகள் என்ன? இல்லை எனில், ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) கிழக்கு மண்டலத்தையும் மேற்கு மண்டலத்தையும் தனித் தனியாக எடுத்துக் கொண்டால் கிழக்கு மண்டலத்தில் கீழ் நிலைப் பணியாளர் பணியிடங்களில் முஸ்லீம்கள் குறைவாகவே வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்; மேற்கு மண்டலத்தில் அதிகமாக எடுக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், மத்தியப் பொதுப் பணித் துறையை மொத்தமாகக் கணக்கில் கொண்டால் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முஸ்லீம்களின் எண்ணிக்கை அப்படி ஒன்றும் குறைவானதல்ல.

தற்காலிக பொறியாளர்கள் விஷயத்தில், மேற்கு மண்டலத்தில் முஸ்லீம்கள் அதிகமாக வேலைக்கு எடுக்கப்பட்டுள்ளனர்; கிழக்கு மண்டலத்தில் குறைவாக எடுக்கப்பட்டிருக்கிறார்கள்; வேலைக்கு ஆள் எடுக்கும் சமயத்தில் தகுதி வாய்ந்த முஸ்லீம் வேட்பாளர்கள் இல்லா திருந்ததே இதற்கு காரணம். தகுதி வாய்ந்த முஸ்லீம்கள் கிடைக்கும் போது, கிழக்கு மண்டலத்தின் குறைபாடு படிப்படியாகப் போக்கப் படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கம் 339.

வேறு எந்தப் பணிப் பிரிவிலும் கிழக்கு அல்லது மேற்கு மண்டலத்தில் முஸ்லீம்கள் பற்றாக்குறை எதுவும் இல்லை.

# 226

## *பொதுத் தகவல் துறைக்கு ஆண்டுதோறும் வழங்கப்படும் காகிதம்

*39. திரு. பாய் பரமானந்த்:* 1941லிருந்து ஒவ்வொரு ஆண்டும் (i) பொதுத் தகவல்துறை (ii) எதிர்-பிரச்சார இயக்குநரகம், (iii) திரைப் படப் பிரசாரம் (iv) அயல் பிரசாரம் (v) வெளிநாடுகளில் பிரசாரம் - இவை ஒவ்வொன்றுக்கும் வழங்கிய காகிதம் எவ்வளவு என்பதை மாண்புமிகு தொழிலாளர் மற்றும் அத்தியாவசியப் பொருட்கள் வழங்கீட்டுத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* கேள்வி தொழிலாளர் துறை சம்பந்தப்பட்டதால், நான் பதிலளிக்கிறேன். கைவச முள்ள தகவல்கள் கீழ்க்கண்ட விவர பட்டியலில் கொடுக்கப்பட் டுள்ளன:

விவரப் பட்டியல்

| காகிதம் எதற்காகப் பெறப்பட்டது | 1-4-43 முதல் 31-3-44 வரை பயன்படுத்திய காகிதம் டன்னில் | 1-4-44 முதல் 31-8-44 வரை பயன்படுத்திய காகிதம் டன்னில் |
|---|---|---|
| (i) பொதுத் தகவல் துறை | 162 | 55 |
| (ii) எதிர் -பிரசார இயக்குநரகம் | 50 | 23 |
| (iii) திரைப்படப் பிரசாரம் | கிடைக்கவில்லை | 1 |
| (iv) அயல் பிரசாரம் | 18 | - |
| (v) வெளிநாடுகளில் பிரசாரம் | 99 | 17 |

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 7, 1944, பக்கம் 371.

குறிப்பு: (1) திரைப்படப் பிரசாரம் சம்பந்தமான புள்ளிவிவரங்கள் 1944 ஏப்ரல் 1க்கு முன்னாலும் மற்றவற்றிற்கு 1943 ஏப்ரல் 1க்கு முன்னாலும் கிடைக்கவில்லை. இங்கு தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் நிதி ஆண்டுகளுக்குரியவை.

(2) மேலே உள்ள எண் (iv)ல் அளிக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் பிரிட்டிஷ் தகவல்துறை அமைச்சகம் பயன்படுத்திய காகித அளவைக் குறிக்கின்றன.

(3) எண் (iii), (v) உள்ள புள்ளிவிவரங்கள் ''இந்தியாவின் தகவல்துறை திரைப்படங்கள்'' ''(வெளிநாடுகளில்) பிரசார அதிகாரி முறையே பயன்படுத்திய காகிதத்தின் அளவை குறிக்கின்றன.

# 227

## *வேலை இல்லாத் தொழிலாளர்கள் பற்றிய புள்ளி விவரங்கள்

221. திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து தெரிவிப்பாரா:

(அ) இந்தியாவில் வேலையில்லாத் திண்டாட்டத்தில் உழலும் தொழிலாளர்களைப் பற்றிய ஏதேனும் புள்ளிவிவரங்கள் உள்ளனவா? அப்படியாயின் அவர்களது எண்ணிக்கை எவ்வளவு? அது எவ்வாறு வகைப்படுத்தப்பட்டுள்ளது?

(ஆ) இத்தகைய புள்ளிவிவரங்கள் இல்லையெனில், எப்பொழுது அவற்றைச் சேகரிக்கவும், தொழில்கள் வாரியாகவும், ''படித்தவர்கள்'', ''படிக்காதவர்கள்'' என்ற தலைப்புகளில் வகைப் படுத்தவும் அரசாங்கம் உத்தேசித்துள்ளதா?

(இ) தங்கள் நாடுகளில் உயர்ந்த அளவில் வேலை வாய்ப்பை நிலைநிறுத்த ஐக்கிய நாடுகள் நடவடிக்கைகளை எடுத்து வரு கின்றன என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா? அப்படியாயின்,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 10, 1944, பக்கம் 546.

அவற்றைப் பின்பற்றி செயல்படுத்துவதற்கு இந்த அரசாங்கம் எப்பொழுது, என்ன நடவடிக்கைகளை எடுக்க உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) முதல் பகுதிக்கு விடை 'இல்லை' என்பதாகும். பின்பகுதி எழவில்லை.

(ஆ) சில தொழில்களில் வேலைவாய்ப்பு பற்றிய புள்ளி விவரங்களை அரசாங்கம் இப்போது சேகரித்து வருகிறது; இந்தப் புள்ளி விவரங்களைச் சேகரிப்பதை அபிவிருத்தி செய்யவும் துரிதப் படுத்தவும் நடவடிக்கைகளை எடுக்க அரசாங்கம் உத்தேசித்துள் ளது. எனினும், வேலையில்லாத் திண்டாட்டம் பற்றி புள்ளி விவ ரங்களைச் சேகரிப்பது இப்போதைக்குச் சாத்தியமல்ல.

(இ) யுத்தத்திற்குப் பின்னரும் வேலை வாய்ப்பை உயர் மட்டத்தில் நிலைநிறுத்த ஐக்கிய நாடுகளில் சில திட்டங்களைத் தீட்டி வருகின்றன என்பது அரசாங்கத்திற்குத் தெரியும். இந்திய அரசாங்கத்தின் புனர் நிர்மாணத் திட்டங்கள், வேலைவாய்ப்பு உயர் மட்டத்தில் பாதுகாக்கப்பட வேண்டியதன் அவசியத்தையும் கணக்கில் எடுத்துக் கொள்ளும்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: யுத்தத்திற்குப் பிந்தைய புனர் நிர்மாணத்தில், இந்தியாவிலுள்ள ஒவ்வொரு நபருக்கும் அவசியம் ஒரு வேலை கிடைக்குமாறு பார்த்துக் கொள்வதில் மாண்புமிகு உறுப்பினர் இடையறா விழிப்போடு இருக்கிறாரா என்று நான் கேட்கலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

டாக்டர் சர் ஜியாவுதீன் அகமது: யுத்தத்திற்கு பிந்தைய புனரமைப்புத் திட்டத்தில், மாண்புமிகு உறுப்பினர் தொழிலாளர் நலன்களை நன்கு கவனித்து, எந்த நபரும் வேலையில் இல்லாமல் இருக்காதபடிப் பார்த்துக் கொள்வாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது அவசியம் நமது லட்சியமாக இருக்க வேண்டும் என்பதை ஒப்புக்கொள் கிறேன்.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதில் கஷ்டம் என்ன? ஒரு ஆண்டுக்கு முன் புள்ளிவிவரங்கள் பற்றிய ஒரு கேள்வியை எழுப்பியதன் மூலம் இந்தத் துறையைச் செயல்பட வைத்தேன் என்று எண்ணினேன். புள்ளிவிவரங்களைச் சேகரிக்கும் பணி இன்னமும் துவங்கவில்லையா என்று கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் இப்பொழுது தான் துவங்கியுள்ளேன்; நாங்கள் ஒரு நல்ல துவக்கத்தைச் செய்துள்ளோம் என்று நினைக்கிறேன்.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: கடந்த ஓர் ஆண்டுகாலமாக அவர் என்ன செய்து கொண்டிருந்தார் என்று நான் கேட்கலாமா? அவர் எப்பொழுது தொடங்கியுள்ளார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதைத் தவிர செய்ய வேண்டிய பல காரியங்கள் எங்களுக்கு இருந்தன. ஒரு நல்ல தொடக்கத்தை நாங்கள் செய்துள்ளோம்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: பல்வேறு தொழில் துறைகளிலும் வேலையில்லாத் திண்டாட்டம் பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதைத் தொடங்க விரைவான நடவடிக்கைகள் எடுக்கப்படுமா என்று கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: புள்ளிவிவரங்களைச் சேகரிக்கும் கொள்கையை துவக்கியுள்ளோம் என்று ஏற்கனவே கூறியுள்ளேன்.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதில் சென்ற தடவை எனக்கு அளித்த வாக்குறுதிகளை நடைமுறைப்படுத்த ஏதாவது செய்யப்பட்டதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒரு ஆரம்பம் செய்யப்பட்டுள்ளது என்று ஏற்கனவே கூறியுள்ளேன்.

# 228

## *சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்களை வேலைக்கு அமர்த்துவது

239. திரு. மனு சுபேதார்: (அ) பெண்களை நிலத்தடியில் வேலைக்கு அமர்த்துவது, இந்திய அரசாங்கத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஜெனிவா ஒப்பந்தத்திற்கு எதிரானது என்பது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

(ஆ) யுத்த தேவைக்கான நிர்ப்பந்தங்கள் இருந்தபோதிலும் பிரிட்டனில் இவ்வாறு வேலைக்கு அமர்த்துவது நிகழவில்லை என்று அரசாங்கத்திற்குத் தெரியுமா?

(இ) சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வதற்கு இருந்த தடையை அரசாங்கம் எப்போது தளர்த்தியது? ஏன் அவ்வாறு செய்தது?

(ஈ) நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்களை வேலைக்கு அமர்த்துவதை எவ்வளவு காலத்திற்கு விடாது தொடர அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது?

(உ) எத்தனை பெண்கள் இவ்வாறு வேலையில் உள்ளனர்?

(ஊ) சுரங்கங்களில் நிலத்தடியில் வேலை செய்யும் பெண்கள் பெறும் ஊதியம் என்ன? மற்ற தொழில்களில் வேலை பார்க்கும் பெண்களின் ஊதியத்தோடு ஒப்புநோக்கினால் இது எந்த அளவில் இருக்கிறது?

(எ) நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் வேலைக்கமர்த்தப் பட்ட பெண்களின் உடல் நலம், வேலையில் உற்சாகம் ஆகியவற்றை பாதுகாக்க அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை எடுத்துள்ளது?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 10, 1944, பக்கம் 559-61.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) ஆம்.

(இ) மத்திய மாகாணங்களிலும் பேராரிலும் உள்ள நிலக்கரிச் சுரங்கங்களில் 1943 ஆகஸ்டிலிருந்தும், வங்காளம், பீஹார் பொறுத்த வரை 1943 நவம்பரிலிருந்தும், ஒரிசாவில் 1943 டிசம்பரிலிருந்தும் இந்தத் தடை தளர்த்தப்பட்டது. இந்த நிலக்கரிச் சுரங்கங்களில் ஆண் தொழிலாளர்கள் மிகவும் பற்றாக்குறையாக இருந்ததே இதற்குக் காரணம்.

(ஈ) இத்தகைய தடையை மீண்டும் கொண்டு வரும் அளவுக்கு நிலக்கரி உற்பத்தி ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தை எட்டியதும், எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அந்தத் தடையை மீண்டும் கொண்டுவர அரசாங்கம் மிகவும் அக்கறை கொண்டுள்ளது.

(உ) நிலத்தடியில் வேலை செய்யும் பெண்களின் மொத்த எண்ணிக்கை பற்றிய துல்லியமான புள்ளிவிவரங்களை தர இயலாது; காரணம் இந்த இலக்கம் தினம் தினம் மாறுபடுகிறது. என்றாலும், வங்காளம், பீஹார், மத்திய மாகாணங்கள், ஒரிசாவிலுள்ள எல்லா நிலக்கரிச் சுரங்கங்களிலும் சுமார் 16,000 பெண்கள் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள் என்று கணிக்கப்படுகிறது.

(ஊ) நிலத்தடியில் வேலை பார்க்கும் பெண்கள் அதே மாதிரி வேலை செய்யும் ஆண்களுக்கு அளிக்கப்படும் அதே ஊதியம் பெறுகின்றனர். நிலத்தடியில் வேலைக்கமர்த்தப்படும் பெண்களுக்கு ஊதியம் அணா 0-12-0லிருந்து அணா 0-15-0 வரை தினம் கிடைக்கும்; இதுதவிர இலவசமாக அரிசியும் வழங்கப்படும். மற்ற தொழில்களில் பெண்களின் ஊதியம் பற்றிய இன்றைய வரையிலான தகவல் உடனடியாகக் கிடைக்கவில்லை.

(எ) 51/2 அடி உயரத்திற்கு குறைவாய் உள்ள சுரங்க நிலவறை வழிகளில் பெண்கள் வேலை செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. 1941 ஆம் வருட மகப்பேறு நல உதவி சட்டத்தின்படி பல்வேறு அனுகூலங்களைப் பெறவும் அவர்களுக்கு உரிமை உண்டு. இந்தச் சட்டத்தின்படியான விதிமுறைகளை நடைமுறைப்படுத்த மூன்று மேற்பார்வையாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். இதுவன்றி, மூன்று சேம நலப்பாதுகாப்பு அதிகாரிகளும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

சுரங்கங்களின் ஒரு பெண் சேமநலப் பாதுகாப்பு அதிகாரியும் நிய மிக்கப்பட இருக்கிறார்.

**திரு. மனு சுபேதார்:** நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் பற்றி பிரிட்டனில் வெளிவந்த பத்திரிகைச் செய்தியை மாண்புமிகு உறுப்பினர் பார்த்திருக்கிறாரா; எந்த ஒரு பெண்ணும் இடுப்புக்கு மேல் எந்த உடையும் அணிந்து வேலை செய்யக்கூடாது என்று அதில் கூறப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**திரு. மனு சுபேதார்:** பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் அல்லது பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகள் எதிலும், யுத்தத்தின் நிர்ப் பந்தம் இருந்தாலும் நிலத்தடியில் பெண்கள் வேலைக்கு அமர்த்தப் படுவதில்லை என்றிருக்கும்போது, இந்த மானக்கேடான நடை முறைக்கு மாண்புமிகு உறுப்பினர் ஏன் துணைபோனார் என்பதை கூறுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிலக்கரிப் பற்றாக் குறையின் காரணமாக.

**திரு. என்.எம். ஜோஷி:** ஓர் ஆண் பெறும் அதே சம்பளத்தை ஒரு பெண் பெற உரிமை பெற்றிருக்கிறாள் என்றும், ஒரு பெண் சராசரியாக 12 அணாக்கள் பெறுகிறாள் என்றும் மாண்புமிகு உறுப்பினர் கூறினார். இந்த புள்ளிவிவரத்தில் எனக்கு உடன் பாடில்லை. எனக்குத் தெரிந்தவரை நிலக்கரிச் சுரங்கங்களில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் கூட்டாகப் பணியாற்றி கூட்டாக ஊதியம் பெறுகிறார்கள். இந்தக் கூட்டு ஊதியத்தில் எந்தப் பகுதியை ஆண், பெண்ணுக்குக் கொடுக்கிறான் என்பதை இந்திய அரசாங்கம் எவ்வாறு உறுதி செய்து கொள்கிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேலையாட் களின் தொகுதி அடிப்படையில் ஊதியம் வினியோகிப்பதன் மூலம் இந்த விவரத்தை தெரிந்து கொள்வது சுலபம்.

**திரு. என். எம். ஜோஷி:** ஆண் பெறும் அதே ஊதியத்தைப் பெண் பெறுகிறாள் என்பதை அவர் எவ்வாறு உறுதி செய்கிறார் என்பதை மாண்புமிகு உறுப்பினரிடம் கேட்கலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஒரே வேலைக்கு ஆண் தொழிலாளி பெறும் அதே ஊதியத்தைப் பெறுவதற்குப் பெண் தொழிலாளிக்கு உரிமை உண்டு என்று ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறேன்.

*திரு. என். எம். ஜோஷி:* ஆண் தொழிலாளி, தான் அதிகம் எடுத்துக் கொள்ளாமல் பெண்ணுக்குப் பாதி ஊதியத்தைத் தருகிறான் என்று நிச்சயமாகக் கூறமுடியுமா என மாண்புமிகு உறுப்பினரை மீண்டும் கேட்க விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் அறியேன்; ஆனால், கூட்டாக வேலை செய்யும் ஆணும் பெண்ணும் கணவனும் மனைவியும் என்று நினைக்கிறேன்; அவர்களுடைய கூட்டு ஊதியத்தை கறாராகக் கணக்குப் பார்த்து பிரித்துக் கொள்வதில் அவர்கள் அதிகம் அக்கறை கொள்வார்களா என்று நான் வியக்கிறேன்.

*திரு. என்.எம். ஜோஷி:* மாண்புமிகு உறுப்பினர் தமக்குத் தெரியாது என்று கூறியதால், ஆணுக்குச் சமமான ஊதியத்தைப் பெற ஒரு பெண் உரிமை பெற்றிருக்கிறாள் என்று அவர்களின் கூற்றை வாபஸ் பெறும்படி இந்திய அரசாங்கத்தாரை நான் கேட்டுக் கொள்ளலாமா? ஆணுக்குச் சமமான ஊதியத்தை பெண் பெற்று வருகிறாள் என்று மாண்புமிகு உறுப்பினர் பிரகடனப்படுத்திக் கொண்டிருக்கவில்லையா? ஆணுக்குச் சமமான ஊதியத்தைப் பெண் பெறுகிறாள் என்பதை அவர் உறுதி செய்து கொள்ள முடிந்தாலன்றி, இத்தகைய அறிவிப்பை வெளியிட அவருக்கு உரிமையில்லை; ஏனெனில் அது தவறான எண்ணத்தை ஏற்படுத்துகிறது.

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இது மதிப்பிற்குரிய உறுப்பினரின் சொற்சிலம்பமே தவிர வேறல்ல.

*திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்:* சென்ற கூட்டத் தொடரில் அளித்த வாக்குறுதியின்படி, அரசாங்கம் நிலைமையை மறுபரிசீலனை செய்து சுரங்கங்களில் பெண்களை வேலைக்கமர்த்தும் கொடூரமான வழக்கத்தைத் தொடருவது முற்றிலும் அவசியம் என்று தங்களைத் திருப்தி செய்து கொண்டார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : நிலைமையை அரசு மறுபரிசீலனை செய்து வருகிறது.

சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர் : கருவுற்ற பெண்கள் நிலத்தடியில் வேலைக்குச் செல்ல ஏதாவது கட்டுப்பாடு உள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தமாதிரி ஏதாவது கட்டுப்பாடு விதிப்பது மிகவும் கஷ்டமான விஷயம். ஏனெனில் பல பெண்களிடம் கர்ப்பம் எந்த நிலையை எட்டியுள்ளது என்பதைக் கண்டுபிடிப்பது சிக்கலானது என்பது மதிப்பிற்குரிய நண்பருக்குத் தெரியும்.

சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர் : அது அவ்வளவு கஷ்டமான விஷயமில்லை என்பதை நிச்சயமாக மாண்புமிகு உறுப்பினர் அறிவார். மற்றத் தொழில் துறைகளில் இது சாத்தியமாக உள்ளது. இங்கும் இதை ஏன் செயல்படுத்தமுடியாது? கருவுற்ற பெண்கள் நிலத்தடியில் பணிக்குச் செல்லக் கூடாது என்பது நடைமுறையில் இல்லாவிட்டாலும் கொள்கை அளவிலாவது ஏன் கட்டுப்பாடு விதிக்கக்கூடாது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்த விஷயம் தீவிர கவனத்தில் இருந்து வருகிறது என்பதை எனது மரியாதைக்குரிய நண்பருக்கு உறுதி கூறுகிறேன்.

திருமதி கே. ராதாபாய் சுப்பராயன் : இந்தப் பெண் தொழிலாளர்களின் கைக்குழந்தைகள் மற்றும் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள அரசு ஏதாவது ஏற்பாடு செய்துள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நிலக்கரித் தொழிலாளர்களின் நல்வாழ்வு நிதி ஒன்று நிறுவப்பட்டுள்ளது. இந்தக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள இந்த நிதி பயன்படுத்தப் படும்.

திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்: இந்தப் பெண்

களின் கைக்குழந்தைகளையும், குழந்தைகளையும் கவனித்துக் கொள்ள அரசு ஏதாவது குறிப்பிட்ட ஏற்பாடுகளைச் செய்துள்ளதா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சட்ட ரீதியாக உருவாக்கப்பட்ட அமைப்பு இது. பெண் தொழிலாளர்களின் கைக்குழந்தைகளையும், குழந்தைகளையும் கவனிக்கவேண்டியது அதன் கடமைகளில் ஒன்றாகும்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : சுரங்கங்களில் வேலை செய்யும் பெண்களின் எண்ணிக்கையைக் குறைக்கவும் அங்கு வேலை செய்யும் ஆண்களின் எண்ணிக்கையை அதிகரிக்கவும் ஏதாவது பய னுள்ள நடவடிக்கைகளை அரசு எடுத்துள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அதுவும் அரசின் கவனத்தில் உள்ளது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : இவ்வகையில் நடவடிக்கை கள் ஏதேனும் எடுக்கப்பட்டுள்ளனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளைப்பற்றி ஆலோசனை நடைபெற்று வருகிறது.

டாக்டர் ஜி.வி. தேஷ்முக் : கருவுற்ற பெண்களையும் குழந்தை களையும் கவனிக்க, சட்டரீதியான ஏற்பாடுகளைத் தவிர வேறு ஏதாவது ஏற்பாடுகள் உள்ளனவா என்பது பற்றி அரசுக்குத் தெரியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : புத்திசாலித்தனம் என்பது அவருடைய ஏகபோகமல்ல என்பதை தெரிவித்துக் கொள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர் என்னை அனுமதிப்பார் என உறுதி யாக நம்புகிறேன்.

டாக்டர் ஜி.வி. தேஷ்முக் : அரசின் ஏகபோகமுமல்ல அது.

# 229

## *நிலக்கரிச் சுரங்கங்களில் தொழிலாளர் பற்றாக்குறை

*240. திரு. மனு சுபேதார் : (அ)* விமான நிலையங்கள் கட்டுவது போன்ற வேலைகளுக்கு ராணுவ ஒப்பந்தக்காரர்கள் அதிக ஊதியம் அளிப்பதனாலேயே நிலக்கரிச் சுரங்கங்களில் தொழிலாளர் பற்றாக்குறை ஏற்பட்டுள்ளது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா?

(ஆ) யுத்தத்திற்கு முன்பு நிலக்கரிச் சுரங்கங்களில் அளிக்கப் பட்டுவந்துள்ள ஊதியத் தொகை எவ்வளவு? அதேபோல் யுத்தம் நடைபெற்றுவரும் இந்த ஐந்தாண்டுகளில் ஒவ்வொரு ஆண்டும் அளிக்கப்பட்டு வரும் ஊதியத் தொகை எவ்வளவு?

(இ) விலைவாசி ஏற்றத்தைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, சரியான ஊதியம் கொடுக்க நிலக்கரிச் சுரங்கச் சொந்தக்காரர்கள் தயங்குவதே, சுரங்கங்களில் நிலக்கரி உற்பத்தியின் வீழ்ச்சிக்குக் காரணம் என்பது உண்மையா?

(ஈ) (i) தொழிலாளர் பற்றாக்குறை, மற்றும் (ii) நிலக்கரி பற்றாக்குறையினால் உருவான நிலைமைகளை சமாளிக்க அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) அதிக ஊதிய மளித்து ராணுவ ஒப்பந்தக்காரர்கள் தொழிலாளர்களை வேலைக்குச் சேர்த்துக்கொள்வது, நிலக்கரிச் சுரங்கங்களில் தொழி லாளர் பற்றாக்குறைக்கான துணைக் காரணந்தான்.

(ஆ) அவையின் முன் ஓர் அறிக்கை அளிக்கப்பட்டுள்ளது.+

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 10, 1944, பக்கம் 561.

+ அந்த அறிக்கை இங்கு பிரசுரிக்கப்படவில்லை.

(இ) அதிகரித்துள்ள விலைவாசி ஏற்றத்தை போதுமான அளவு ஈடுகட்டுமளவுக்கு, சுரங்கத் தொழிலாளர்களின் ஊதியம் உயர்த்தப்படவில்லை என்பது உண்மைதான். தொழிலாளர் பற்றாக் குறைக்கு இதுவும் ஒரு காரணமாகும்.

(ஈ) திரு.நியோகியின் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண். 17-ன் (அ), (ஆ), (ஈ), (உ) மற்றும் (ஊ) பிரிவுகளுக்கு மாண்புமிகு வழங்கீட்டுத்துறை உறுப்பினர் சட்டமன்றத்தில் அளித்த பதிலை மரியாதைக்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். நிலக்கரி பற்றாக்குறை மற்றும் தொழிலாளர் பற்றாக் குறையினால் ஏற்பட்டுள்ள நிலைமைகளைச் சமாளிக்க எடுக்கப் பட்டுள்ள பல்வேறு நடவடிக்கைகளை இது விவரிக்கிறது.

1943 டிசம்பரில் தான்பாத் நகரில் நடைபெற்ற கூட்டத்தில் சுரங்கத் தொழிலாளரின் ஊதியத்தை அதிகரிக்கவும், உணவுப் பொருள்களை மலிவுவிலையில் கொடுக்கவும் நிலக்கரித் தொழில் துறையின் பிரதிநிதிகள் ஒப்புக் கொண்டுள்ளனர்.

**திரு. மனு சுபேதார்:** யுத்தத்திற்கு முந்திய ஊதியத்துடன் ஒப்பிடும்போது இப்பொழுது எவ்வளவு அதிகமாக தொழிலதிபர்கள் ஊதியம் கொடுக்க வேண்டியது உள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விவரத்தைக் கொடுக்க முடியாததற்கு வருந்துகிறேன். இங்கு என்னிடம் ஓர் அறிக்கை உள்ளது. அது புள்ளிவிவரங்கள் நிரம்பி உள்ளது. மதிப்பிற்குரிய உறுப்பினர் விரும்பும் தகவல்களை இதிலிருந்து பெற்றுக் கொள்ள முடியும்.

**திரு. மனு சுபேதார்:** மற்ற தொழில் துறைகளில் பணியாற்றும் பெண்களை விட, நிலத்தடியில் வேலை செய்ய வேண்டிய கட்டாய நிலையிலுள்ள பெண்களுக்கு சற்று அதிகமாக ஊதியம் கிடைக்கவாவது அரசாங்கம் ஏதாவது ஏற்பாடுகள் செய்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிலக்கரிச் சுரங்கங்களில் ஊதியம் 50 சதவிகிதத்துக்கும் அதிகமாக உயர்ந்துள்ளது என்பதை எனது மதிப்பிற்குரிய நண்பருக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

*திரு. மனு சுபேதார்:* சுரங்க உரிமையாளர்களை கீழ்ப்படியச் செய்ய அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை எடுத்துள்ளது? யுத்தத்துக்கு முன்பு கொடுக்கப்பட்டுவந்த ரூ. 3-8-0 என்பதற்கு பதிலாக இப்பொழுது நிலக்கரிக்கு ரூ.9-8-0 கொடுக்கப்படுகிறது. நிலக்கரிக்கு இவ்வளவு அதிகமாக நீங்கள் அளிக்கும்போது, அதிகப்படியான இந்தத் தொகையிலிருந்து ஒரு பங்கை சுரங்கங்களில் வேதனை மிக்க முறையில் பணியாற்ற வேண்டிய கட்டாயத்துக்குட்பட்ட பெண்களுக்கு அவர்கள் வழங்கவேண்டுமென ஏதாவது நிபந்தனை விதிக்கப்பட்டுள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டுள்ளதாக நினைக்கிறேன்.

*திரு. என்.எம்.ஜோஷி:* வயிற்றுப் பிழைப்பிற்காக சுரங்கத் தொழிலாளர்கள் சுரங்கத்தில் எப்படியும் பணியில் ஈடுபட வேண்டுமென்பதற்காக, ராணுவ ஒப்பந்தக்காரர்கள் சுரங்கத் தொழிலாளர்களுக்கு வேலை அளிப்பதைத் தடுக்க அரசு நடவடிக்கைகள் எடுத்துள்ளது என்பது உண்மையல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* முந்தைய கேள்வியிலிருந்து இந்தப் பிரச்சினை எழவில்லை.

*பேராசிரியர் என்.ஜி.ரங்கா:* இந்த நாட்டில் ஆண்கள் பெற முடியாத எந்தச் சிறப்புத் தகுதிகளை, திறைமைகளை சுரங்கங்களில் கட்டாயமாக பணியாற்ற வேண்டியுள்ள இந்த 16,000 பெண்கள் பெற்றிருக்கிறார்கள்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவர்கள் கட்டாயப்படுத்தப்படவுமில்லை, கேட்டுக் கொள்ளப்படவுமில்லை. தங்கள் பரம்பரையான பணிகளில் பணிபுரிய அவர்கள் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள், அவ்வளவுதான்.

*திரு. என்.எம். ஜோஷி:* யுத்தத்திற்கு முந்திய காலத்தை விட இன்றைய நிலக்கரி உற்பத்தியின் அளவு சரிந்துள்ளது உண்மையா என்பதை தெரிந்து கொள்ளலாமா? சுரங்கத் தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் குறைந்த ஊதியமே நிலக்கரி உற்பத்தியின் சரிவுக்குக் காரணமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு தமது விருப்பப்படி முடிவுக்குவர உரிமையிருக்கிறது.

# 230

## *தீவிர ஜனநாயகக் கட்சிக்கும் இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கும் மாகாண அரசுகளின் நிதி உதவி

252. சர் அப்துல் கலீம் குஸ்னாவி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்களைப் பற்றித் தெரிவிப்பாரா :

(அ) மத்திய அரசு மாதந்தோறும் அளிக்கும் ரூ.13,000 தவிர பல்வேறு மாகாண அரசுகளிடமிருந்து, இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் அல்லது தீவிர ஜனநாயகக்கட்சியின் நிர்வாகிகளோ, தனிநபர்களோ பண உதவி பெறுகிறார்களா?

(ஆ) ஐக்கிய மாகாணங்கள் அரசிடமிருந்து இந்த இரு அமைப்புகளும் மாதந்தோறும் ரூ.75,000 பெறுகின்றன என்பதை அவர் அறிவாரா?

(இ) இந்த இரு அமைப்புகளுக்கு மட்டும் பண உதவி அளிப்பதில் அரசின் நோக்கம் யாது?

(ஈ) அரசிடமிருந்து வேறு எந்தத் தொழிலாளர் அமைப்புகள் பண உதவி பெறுகின்றன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) அரசிடம் எந்தத் தகவலும் இல்லை. தீவிர ஜனநாயகக்கட்சிக்கு நிதி உதவி ஏதும் அளிக்கப்படவில்லை. இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு 13,000 நிதி உதவி அளிக்கப்பட்டு வருகிறதேயன்றி அரசின் நிதி உதவி பற்றிய கடிதம் அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் மற்றும் இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் ஆகிய இரு அமைப்புகளுக்கும் அனுப்பட்டது. அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் தனது பதிலில் எந்த நிதி உதவியையும் கோரவில்லை.

(ஆ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு ஐக்கிய மாகாணங்கள் அரசு ஏதாவது நிதிஉதவி அளிக்கிறதா என்பதைப் பற்றி எனக்குத் தெரியாது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 10, 1944, பக்கம் 568.

(இ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு நிதி உதவி அளிப்பதில் மட்டுமே தொழிலாளர் நலத்துறைக்கு அக்கறை உள்ளது. தொழில்துறைத் தொழிலாளர்களின் ஒழுங்குணர்வை ஊக்குவிக்க சம்மேளனம் பிரசாரம் செய்வதற்கு ஏதுவாகவே இந்த நிதி உதவி அளிக்கப்பட்டு வருகிறது.

(ஈ) மத்திய அரசிடமிருந்து வேறு எந்த தொழிலாளர் அமைப்புகளும் நிதி உதவி பெறவில்லை.

# 231

## *எண்ணெய் வள ஆய்வுக்கும் எண்ணெய் உற்பத்திக்கும் பிரிட்டிஷ், அமெரிக்க நிறுவனங்களுக்கு உரிமங்கள்

48. திரு. கே.சி. நியோகி: (அ) பிரிட்டிஷ் இந்தியாவில் எண்ணெய் வள ஆதாரங்கள் குறித்து ஆய்வு மேற்கொள்வது, மற்றும் எண்ணெய் எடுப்பது சம்பந்தமாக பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க நிறுவனங்களுக்கு அளித்த சலுகைகளைப்பற்றி 1943 ஆகஸ்டு 2ல் இந்த அவையில் அளித்த அறிக்கையில் கொடுத்த தகவல்களை, இன்றையநிலைமைக்கு தக்க மாறுதலுடன் செழுமைபடுத்தி, ஒரு புதிய அறிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அவைக்கு அளிப்பாரா?

(ஆ) மண் இயற்பியல் ஆய்வுக்காக பல மாகாண அரசுகள் உரிமங்கள் வழங்கியுள்ளது உண்மையா? இம்மாதிரி உரிமம் வழங்கும் முன்பு, சம்பந்தப்பட்ட மாகாண அரசுகள், மத்திய அரசைக் கலந்து செயல்பட்டனவா?

(இ) எந்தெந்த நிறுவனங்களுக்கு இந்த உரிமங்கள் வழங்கப் பட்டுள்ளன? எந்த பகுதிகளுக்காக, எத்தகைய நிபந்தனைகளின் அடிப்படையில் அவை வழங்கப்பட்டன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தகவல்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன. உரிய நேரத்தில் அறிக்கை அவை முன்பு வைக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 10 நவம்பர், 1944, பக்கம் 574.

# 232

## *இந்திய தொழிற்சங்கங்கள் (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): என் பெயரிலுள்ள இத்தீர்மானத்தை நான் முன்மொழியப்போவதில்லை.

# 233

## +டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி

419. திரு.கே.சி. நியோகி: (அ) டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட் இந்தியாவிற்கு வெளியில் நிறுவப்பட்ட நிறுவனம் என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

டில்லி மாகாணத்தில் எத்தனை ஆண்டுகளாக இந்த நிறுவனம் செயல்பட்டு வருகிறது? எந்தெந்த இடங்களில் இதன் சேவை இருந்து வருகிறது?

(ஆ) தன் சொந்தத் தேவைகளுக்காக எத்தனை யூனிட்டுகள் மின்சக்தியை இந்த நிறுவனம் உபயோகித்து வருகிறது? கடந்த பத்து மாதங்களில் தன் வினியோகப் பகுதிகளில் எத்தனை யூனிட் மின்சக்தியை இந்த நிறுவனம் விற்றுள்ளது? மொத்தம் வினியோகம் செய்யும் யூனிட்டுகளில் இந்த நிறுவனம் தனது மின் நிலையத்தில் உற்பத்தி செய்யும் யூனிட்டுகள் எத்தனை? டில்லி மத்திய மின் விசை ஆணையத்திடமிருந்து எத்தனை யூனிட்டுகள் இந்த நிறுவனம் விலைக்கு வாங்குகிறது?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 10, 1944, பக்கம் 574.

+ மேற்படி அதே தொகுதி, ப. 730.

*(இ) டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட் பல ஆண்டுகளாக தன் மின் நிலையத்தில் உற்பத்தியாகும் மின்சக்தியை கணிசமான அளவுக்கு அதிகரிக்கவில்லை என்பது உண்மையா? அண்மை காலங்களில் எல்லா நடைமுறைத் தேவைகளுக்கும் டில்லி மத்திய மின்விசை ஆணையத்தின் கீழுள்ள அரசு மின் நிலையத்தையே அது நம்பியிருக்கிறதா?*

*(ஈ) டில்லி மத்திய மின்விசை ஆணையம் அரசின் ஆதரவில் ஆரம்பிக்கப்பட்டு, ஆதாயநோக்கத்துடன் நடத்தப்படாத நிறுவனம் என்பது உண்மையா?*

*(உ) டில்லி மத்திய மின்விசை ஆணையம் வினியோகம் செய்யும் மின்சாரத்திற்கு டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட் ஒரு யூனிட்டுக்குக் கொடுக்கும் விலை என்ன? இந்த நிறுவனம் தனது பல்வேறு வகைப்பட்ட வாடிக்கையாளர்களுக்கு என்ன விலைகளில் மின்சக்தி விற்கிறது?*

*(ஊ) பிப்ரவரி 1945ல் டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் நிறுவன லிமிடெட்டுக்கு அந்த நிறுவனத்தின் உரிமம் முடியும் தேதியான 1945 பிப்ரவரியில், முன் அறிவிப்புக் கடிதம் அனுப்புவதன் மூலம் அந்த நிறுவனத்தை அரசு விலைக்கு வாங்கும் வாய்ப்பு உள்ளது என்பது உண்மையா?*

*(எ) இந்த நிறுவனத்தை வாங்க அரசு தீர்மானித்தால் அதற்கு எவ்வளவு தொகை கொடுக்க வேண்டும்? இந்த நிறுவனத்தை வாங்குவதன் மூலம் இந்தியாவின் கணக்கில் இங்கிலாந்தில் இருக்கும் ஸ்டெர்லிங் இருப்பை எவ்வளவு தூரம் உபயோகிக்க முடியும்?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். 1905 மார்ச் மாதத்திலிருந்து இந்த நிறுவனத்துக்கு உரிமம் வழங்கப் பட்டுள்ளது. தற்பொழுதுள்ள வினியோகப் பகுதிகள் வருமாறு:*

*i. டில்லி நகரசபையின் அதிகாரத்துக்குட்பட்ட எல்லாப் பகுதிகளும்;*

*ii. டில்லி சிவில் நிலைய பிரகடனப்படுத்தப்பட்டுள்ள நிலப் பகுதி முழுவதும்;*

iii. மேற்கு டில்லியில் பிரகடனப்படுத்தப்பட்டுள்ள பகுதி முழுவதும்;

iv. டில்லி மாவட்ட போர்டின் அதிகாரத்திலுள்ள ஒரு பகுதி;

*(ஆ) கேட்கப்பட்ட விவரங்களை அளிப்பது யுத்த காலத்தில் பொதுநலனுக்கு உகந்ததல்ல.*

*(இ) ஆம். நிறுவனத்தின் மின் உற்பத்தி இயந்திரம் அவசரத் தேவைக்கு மட்டும் பயன்படுத்தப்பட்டு வருகிறது.*

*(ஈ) ஆம்.*

*(உ) அவையில் ஓர் அறிக்கை அளிக்கப்பட்டுள்ளது.*

*(ஊ) ஆம். டில்லி தலைமை ஆய்வாளரின் பரிசீலனையில் இந்தப் பிரச்சினை உள்ளது.*

*(எ) 1910 ஆம் வருட இந்திய மின்விசைச் சட்டம், பிரிவு 7 ன் துணைப்பிரிவின் 1 ன் முதல் நிபந்தனையின்படி நிறுவனத்தை வாங்குவது என்று தீர்மானித்தால் உரிமத்துக்குக் கொடுக்கப்பட வேண்டிய விலை, வாங்கும் நாளன்று நடுவர்களால் தீர்மானிக்கப்படும், நியாயமான சந்தை விலை ஆகும். தொகையைப் பற்றிச் சரியான முடிவு தெரியாதவரையில் கேள்வியின் இரண்டாம் பகுதிக்கு விடை அளிக்க இயலாது.*

## தகவல் அறிக்கை

*டில்லி மத்திய மின்விசை ஆணையம் டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட்டுக்கு அளிக்கும் மின்சக்திக்கு யூனிட்டுக்கு 69 அணா விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளது.*

*டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட் நிர்ணயித்துள்ள கட்டண விவரம்:*

விளக்குகளுக்கும், விசிறிகளுக்கும் - ஒரு யூனிட்டுக்கு 3 அணாக்கள், உரிய காலத்தில் கட்டணத்தை செலுத்துபவர்களுக்கு ஒரு யூனிட்டுக்கு 3 பைசா தள்ளுபடி உண்டு.

வீட்டு உபயோகத்திற்கு (குளிர்சாதனங்கள், தண்ணீர் சூடாக்கும் சாதனங்கள், குளிர்சாதனப் பெட்டி, ரேடியேட்டர்கள், ஏர் கண்டிஷனர்கள், (காற்றுப் பதனச் சாதனம்) - ஒரு யூனிட்டுக்கு 1 அணா மட்டும்.

மின்கலங்களுக்கு மின்சக்தி செலுத்துவது - யூனிட்டுக்கு 2 அணா, உரிய காலத்தில் கட்டணம் செலுத்துபவர்களுக்கு ஒரு யூனிட்டுக்கு பத்து சதவிகிதம் தள்ளுபடி.

**தொழில் நிறுவனங்கள்:**

75 கே வி எ திறன் கொண்ட இணைப்புகளுள்ள நிறுவனத்திற்கு குறிப்பிட்ட நேரங்களில் மட்டும் வினியோகம் - ஒரு யூனிட்டுக்கு 1.1. அணா. உரியகாலத்தில் கட்டணம் செலுத்துபவர்களுக்கு ஒரு யூனிட்டுக்கு 0.1 அணா தள்ளுபடி.

கட்டுபாடற்று எந்த நேரங்களிலும் வினியோகம் - குறிப்பிட்ட நேரங்களில் மட்டும் வினியோகம் செய்வதற்குள்ள கட்டணத்தைப் போன்றதுதான். அத்துடன் ஒரு குதிரை சக்திக்கு மாதம் ரூ.5 அதிகக் கட்டணம். உரியகாலத்தில் கட்டணம் செலுத்துபவர்களுக்கு பத்து சதவிகிதம் தள்ளுபடி.

சிறப்புக் கட்டணங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

திரு. கே.சி.நியோகி: சில ஆண்டுகளுக்கு முன்பு டில்லி நகரசபை அதன் அதிகாரத்துக்கு உட்பட்ட பகுதிகளில் அல்லது பாதிப்பகுதியிலாவது மின்சக்தி வினியோகிக்க உரிமம் வேண்டி விண்ணப்பித்திருந்தது. இந்த விண்ணப்பத்தின் விளைவாக மேற்படி நிறுவனத்தின் நிலையை ஆராய சர் ஜேம்ஸ் பித்கீத்லியின் தலைமையிலோ அல்லது வங்காள அரசின் மின்துறை ஆலோசகர் தலைமையிலோ கமிட்டி அமைக்கப்பட்டுள்ளதா? இந்த நிறுவனத்தின் நடவடிக்கைகளைப் பற்றி அந்தக் கமிட்டியோ அல்லது தனி நபர்களோ தெரிவித்த கருத்துகளை மாண்புமிகு உறுப்பினர் இந்த அவைக்குத் தெரிவிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர், ஒரு குறிப்பிட்ட கேள்வியை எழுப்பினால் அதற்கு நிச்சயமாக மகிழ்ச்சியுடன் தகவல்கள் அளிப்பேன்.

திரு. கே.சி. நியோகி: இந்த நிறுவனம் ஈட்டிய மொத்த லாபத்தொகையை அறிந்துகொள்ள மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் முயன்றிருக்கிறாரா? இந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகையில், அண்மையில் வந்த கட்டுரையில், இந்த நிறுவனம் ஈட்டிய லாபம் அதனுடைய மூலதனத்தை விட ஐந்து மடங்கு அதிகம் என்று தெரிவிக்கப்பட்டிருப்பது மாண்புமிகு உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டுள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். நான் கவனித் துள்ளேன், ஐயா.

திரு. கே.சி. நியோகி: இது உண்மையா, இல்லையா என்பதை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இப்பொழுது அதைப்பற்றி எதுவும் கூறஇயலாது. தகவல் வேண்டுமென்றால் மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்தக் கேள்விக்கான பிரிவைப் பொறுத்த வரையில், முன்னறிவிப்பைக் கொடுக்க வேண்டும்.

திரு. கே.சி. நியோகி: (ஆ) பிரிவைப் பொறுத்த வரையில், இந்த நிறுவனம் உண்மையாகவே உற்பத்தி செய்த யூனிட்டின் அளவு, அது அரசு அமைப்புகளிலிருந்து அடக்கவிலையில் வாங்கிய யூனிட்டுகளில் எத்தனை சதவிகிதமாக உள்ளது என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: யுத்த காலத் தில் இந்தத் தகவல்களை அளிப்பது பொதுமக்கள் நலனுக்கு உகந்த தல்ல என்பதை ஏற்கனவே கூறியுள்ளேன்.

திரு. கே.சி. நியோகி: எனக்குத் தெரியும். உற்பத்திசெய்யும் மின்சக்தியில் குறைந்த அளவு யூனிட்டுகளையே உண்மையாக அது வினியோகிக்கிறது என்பதை மாண்புமிகு உறுப்பினர் மறுக்க முடியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இத்தகவல்

கொடுப்பது தகவல் அமைப்பைத் தடை செய்யும் சட்டத்தை ஏமாற்றுவதாகும் என அஞ்சுகிறேன்.

*திரு. கே.சி. நியோகி:* விகிதாசாரத்தைக் கூடத் தர முடியாமல் மாண்புமிகு உறுப்பினர் தடை செய்யப்பட்டிருக்கிறார் என்பது எனக்குத் தெரியாது. இது எப்படியாயினும் இந்தப் பிரச்சினையை விட்டுவிடுவோம். தலைமை ஆணையரின் பரிசீலனையில் இந்த விஷயம் உள்ளது என்பதைப் பொறுத்த வரையில், முக்கியமான கொள்கை சம்பந்தப்பட்ட விஷயமாகையால் ஒரு குறிப்பிட்ட முடிவுக்குவர ஆணையருக்கு வழிகாட்ட அரசு உத்தேசித்துள்ளதா அல்லது இதைப் பற்றி ஆணையர் எடுக்கும் முடிவை இந்திய அரசு நிறைவேற்ற அல்லது ஆதரிக்க முடிவு செய்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்திய அரசே இந்த விஷயத்தை பரிசீலித்து வருகிறது.

*திரு.கே.சி. நியோகி:* (ஊ) பிரிவை பொறுத்தவரையில், முன்னறிவிப்புக் கொடுப்பது என்று தீர்மானித்தால், அதற்கான காலம் குறைவாகவே இருப்பதால் இந்த விஷயத்தைப் பற்றி அரசு விரைவான முடிவுக்கு வருமா? இந்த விவகாரத்தைப் பற்றி அரசு இந்த அவையைக் கலந்தாலோசிக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* குறிப்பிடப்பட்டுள்ள காலம் முடிவடைவதற்குள் அரசு நிச்சயமாகத் தன் சொந்த முடிவுக்கு வருமென்று எனது மதிப்பிற்குரிய நண்பருக்கு உறுதி கூறுகிறேன்.

*திரு. கே.சி. நியோகி:* டில்லி மாகாணத்தைப் பொறுத்த வரையில் இந்த அவை நடைமுறையில் மாகாண சட்டமன்றமாக இருப்பதால் இந்த விஷயத்தை விவாதித்துப் பரிசீலிக்க அவைக்கு வாய்ப்பளிக்க மாண்புமிகு உறுப்பினர் தீர்மானிப்பாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மரியாதைக்குரிய உறுப்பினரின் ஆலோசனையை மனதில் கொண்டுள்ளேன்.

*திரு. ஆர்.ஆர். குப்தா:* அரசின் கட்டுப்பாட்டில் உள்ள புதுடில்லி மின் உற்பத்தி நிலையத்தின் திறனை அதிகரிக்க அரசு உத்தேசித்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அந்தக் கேள்வி எழவில்லை. நான் பதில் அளிக்க இயலாது.

# 234

## *நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்களின் நிலைமையை ஆய்வு செய்ய அகில இந்தியப் பெண்கள் மாநாட்டுக்கு உதவி செய்ய மறுப்பு

579. திருமதி ரேணுகா ரே : மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்களைப் பற்றித் தெரிவிப் பாரா:

(அ) நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்களின் நிலைமைப் பற்றி ஆய்வு செய்ய, ஒரு பாரபட்சமற்ற விசாரணைக் குழுவை அனுப்புவதற்கு வேண்டிய வசதிகளைச் செய்துதருமாறு, அகில இந்தியப்பெண்கள் மாநாடு அரசை அணுகியபோது, இந்த மாதிரி யான விசாரணைக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை என்று மேற் குறிப்பிட்ட அமைப்பிற்கு மே மாதம் 3 ஆம் தேதி அரசு முதலில் கூறிவிட்டு, ஆனால் பின்னர் நேரம் சரியில்லை என்று அப்பொழுது அறிவித்தது உண்மையா?

(ஆ) இது உண்மையென்றால், பிறகு மே மாதம் 26ல் அகில இந்தியப் பெண்கள் மாநாட்டின் வேண்டுகோளுக்கு இந்திய அரசு உதவி அளிக்க மறுத்ததுடன் எப்பொழுது சரியான நேரம் வரு கிறதோ அப்பொழுது அவர்களுக்குத் தெரிவிப்பதாக அரசு கூறி யுள்ளது. ஆனால் இதுவரை அரசிடமிருந்து எந்தத் தகவலும் வர வில்லை. இந்த மாதிரியான போக்கிற்கு காரணம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.**

(ஆ) கேள்வியின் முதல் பகுதிக்கான பதில் 'ஆம்' என்பது தான். மாநாட்டின் தலைவருக்கு அரசு அனுப்பிய பதில் கடிதத்தில் காரணங்கள் விளக்கப்பட்டுள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1000-1001

**திரு.கே.சி.நியோகி:** 'ஆ' பிரிவில் குறிப்பிட்ட உத்தரவை அரசு அனுப்பியதற்கான காரணத்தை நான் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்கு உரிய நேரம் இதுவல்ல.

**திரு. என்.எம். ஜோஷி:** அரசு என்ன பொருளில் நேரம் பொருத்தமாக இல்லை என்று கூறுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பொருத்தமான என்ற சொல் மிக எளிமையான சொல் என நினைக்கிறேன். அதை யார் வேண்டுமென்றாலும் புரிந்து கொள்ள முடியும். இதை என்னால் மேலும் எளிதாக்க முடியாது.

**திருமதி ரேணுகா ரே:** அதே நேரத்தில் ரெக்கே மற்றும் சுகாதார ஆய்வுக்குழுக்களை அரசு அனுமதித்துள்ளது உண்மையா? ஆனால் அகில இந்திய பெண்கள் அமைப்புக்கு இதுவரை அது போன்ற அனுமதி வழங்கப்படாதது உண்மையா? அப்படியென்றால் இந்த மாறுபட்ட அணுகுமுறைக்கு என்ன காரணம்? பெண்கள் நலன்களில் அக்கறையுள்ள அகில இந்திய பெண்கள் மாநாடு போன்ற ஒரு பொறுப்பான அமைப்புக்கு ஏன் அனுமதி வழங்கப் படவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைகள் அரசு அமைப்புகள் என்பதால் அனுமதிக்கப்பட்டன.

**திருமதி ரேணுகா ரே:** அந்தக் குழுவில் சட்டமன்ற உறுப் பினர்கள் இல்லையா?

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):** மரியாதைக் குரிய உறுப்பினர் வீண்வாதம் செய்கிறார்.

**திரு. டி.எஸ்.அவினாசிலிங்கம் செட்டியார்:** சுரங்கங்களுக் குள் சென்று விசாரணை செய்வதிலிருந்து பெண்களை ஏன் தடுக்

கிறார்கள்? பெண்கள் அமைப்புகளுக்கு மட்டும் நேரம் பொருத்தமாக இல்லை என்று அரசு கருதுகிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் தனது சொந்த முடிவுக்கு வரலாம்.

திரு. என்.எம். ஜோஷி: ஒரு பாரபட்சமற்ற அமைப்பால் விசாரணை செய்யத் தகுதியில்லாத அளவுக்கு மோசமான நிலையில் சுரங்கத்தின் நிலைமை இருப்பதனாலேயே நேரம் பொருத்தமாக இல்லை என்று அரசு கருதுவது உண்மையா என்று நான் கேட்கலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மரியாதைக்குரிய உறுப்பினர் தனது சொந்த முடிவுக்கு வருவது அவரது சுதந்திரம்.

தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அடுத்த கேள்வி.

# 235

## *மலேரியா நோயினால் நிலக்கரிச் சுரங்கங்களில் தொழிலாளர் பற்றாக்குறை

580. திருமதி ரேணுகா ரே: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்களை விளக்குவாரா:

(அ) பெரும் பகுதி சுரங்கத் தொழிலாளிகள் மலேரியா நோயினால் அவதிப்பட்டதுடன், போதுமான கொய்னா மருந்து இல்லாததால் சரியான சிகிச்சை அளிக்க முடியாமல் போனதும், நிலக்கரிச் சுரங்கங்களில், குறிப்பாக ஆகஸ்டு செப்டம்பர் மாதங்களில், தொழிலாளர் பற்றாக்குறைக்குக் காரணங்கள் என்பது உண்மையா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1001 - 1002

(ஆ) நோயினால் தாக்கப்பட்டு ஊட்டச் சத்துக் குறைவினால் சுரங்கத் தொழிலாளர்கள் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளது உண்மையா என்பதை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா? இதனால் அவர்கள் திறமை பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளதா? அப்படி யென்றால் இதை சரிசெய்ய என்ன நடவடிக்கைகள் எடுக்கப் பட்டுள்ளன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) வழக்கமான பருவங்களில் தாக்கும் மலேரியா நோயினால் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களும் பாதிக்கப்படுகிறார்கள். ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் இந்த நோயினால் தொழிலாளர்கள் அதிக அளவில் பாதிக்கப்படுகிறார்கள் என்று கூறுவது சரியல்ல. ஜாரியா நிலக்கரிச் சுரங்கத்தில் பணியாற்றும் தினசரிப் பணியாளர் சராசரி ஆயிரம் பேரில், ஆகஸ்டு மாதத்தில் இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்கள் 1943, 1944 ஆம், ஆண்டுகளுக்கு முறையே 81 மற்றும் 80 ஆகும். செப்டம்பர் மாதத்தில் 1943, 1944 ஆம் ஆண்டுகளுக்கு முறையே 111 மற்றும் 74 ஆகும். சிகிச்சைக்கு வேண்டிய போதுமான வசதிகளுக்கும், போதுமான கொய்னா மற்றும் அதன் மாற்று மருந்துகளின் வினியோகத்துக்கும் எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டுள்ளன.

(ஆ) சுரங்கத் தொழிலாளர்கள் ஊட்டச் சத்து குறைவால் மிகவும் பாதிக்கபட்டுள்ளனர் என்று கூறமுடியாது. அவர்களுடைய ஆரோக்கியத்தைப் பொருத்தமட்டில் முப்பது தொழிலாளர்கள் அல்லது அதற்கும் அதிகமான தொழிலாளர்கள் பணியாற்றும் நிலக்கரிச் சுரங்கங்கள் ஒரு மருந்தகம் வைத்திருக்கவேண்டுமென்பதுடன் தங்கள் மருத்துவர்கள் மூலம் மருந்துகளை வினியோகம் செய்ய வேண்டும் என்ற கட்டாயம் உள்ளது. அண்மையில் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளரின் நல்வாழ்வு நிதி ஒன்று துவக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் சுரங்கத் தொழிலாளர்கள் நோய்த் தடுப்புத் திட்டம் மற்றும் மருத்துவ வசதிக்கான செலவுகளுக்கு வகை செய்யப்படும்.

**திரு. கே.சி. நியோகி:** ஊட்டச்சத்துக் குறைவு காரணமாக சுரங்கங்களில் தொழிலாளர் பற்றாக்குறை இருப்பதுடன், ஊட்டச் சத்துக் குறைவினால் தொழிலாளரின் தனி நபர் உற்பத்தித் திறனும்

குறைந்துள்ளது என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மையா என் பதை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய நண்பர் கூறிய தகவல்கள் எவ்வளவு தூரம் சரியானது என்று என் னால் கூற முடியாது.

திரு. கே.சி. நியோகி: அண்மையில் ஒரு வர்த்தக அவைக் கூட்டத்தில் மாண்புமிகு வழங்கீட்டுத்துறை உறுப்பினர் இந்தக் கருத்தின் அடிப்படையில் ஓர் அறிக்கை கொடுத்ததாக அறிகிறேன். அவரிடம் மாண்புமிகு உறுப்பினர் விவரம் தெரிந்து கொள்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினரிடம் விவரங்கள் இருப்பதாகத் தெரிவதால், இந்த விசா ரணைக்கு அவசியம் இல்லை என நினைக்கிறேன்.

திரு.கே.சி. நியோகி: நிலைமையின் உண்மையை மாண்பு மிகு உறுப்பினர் புரிந்து கொள்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். உற்பத்தி யில் கொஞ்சம் சரிவு ஏற்பட்டுள்ளதை நான் அறிவேன். இயந்திர சாதனங்களின் பற்றாக்குறையே இதற்கான முழுக்காரணம் என்று எனக்குத் தெரிகிறது.

திருமதி ரேணுகா ரே: பல்வேறு சுரங்கங்களில் உள்ள மருந் தகங்களைப்பற்றி மாண்புமிகு உறுப்பினர் குறிப்பிட்டபடி, அங்கு கிடைக்கும் மருத்துவ வசதிகள் மற்றும் இந்த மருந்தகங் களின் பணி களைப் பற்றியும் ஜாரியா, ராணிகஞ்ச் சுரங்கங்களில் மருந்துகள் வினியோகத்தைப் பற்றியும் தயவு செய்து விசாரணை செய்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூறியபடி, வசதிகள் போதுமான அளவுக்கு இல்லை என்று அரசு கருதியதால், நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நல்வாழ்வு நிதியை அரசு நிறுவி யுள்ளது.

# 236

## *சுரங்கங்களில் நிலத்தடியில் சிறுவர்கள் பணிபுரியும் விஷயம்

581. திருமதி ரேணுகா ரே: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருவனவற்றைப் பற்றி தெரிவிப்பாரா:

(அ) சுரங்கங்களில் நிலத்தடியில் சிறார்கள் பணி செய்வதை தடை செய்யும் சட்டம் அதிக அளவில் மீறப்படும் உண்மையை அவர் அறிவாரா?

(ஆ) பதில் 'ஆம்' என்றால், சட்டத்தை சரியான முறையில் அமல்படுத்த என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

(இ) பதில் எதிர்மறையாக இருந்தால் இந்த விஷயத்தை நன்கு விசாரணைசெய்து வழக்கத்திலிருக்கும் சட்டத்துக்குப் புறம் பான செயல்பாடுகளை முடிவுக்குக் கொண்டுவர என்ன பயனுள்ள நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இல்லை.

(ஆ) கேள்வி எழவில்லை.

(இ) சுரங்கங்களில் சிறார்கள் பணி செய்வதை தடை செய்யும் இந்தியச் சுரங்கச் சட்டத்தின் விதிகளை அமல்படுத்த வழக்கமாக சுரங்க அதிகாரிகள் சுரங்கங்களை பார்வையிடுகிறார் கள். எங்கேயாவது சட்டவிரோதமான செயல்பாடுகள் வழக்கத்தி லிருந்தால் சரியான நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1003.

**திருமதி ரேணுகா ரே:** ஜாரியா மற்றும் ராணிகஞ்சிலுள்ள சில நிலக்கரிச் சுரங்கங்களில் அதிக அளவில் சட்ட மீறல்கள் நடைபெற்றுள்ளதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா? 14 மற்றும் 15 வயதான சிறுவர்கள் பெரியவர்கள் போன்று கையெழுத்திட்டு உண்மையிலேயே சுரங்கத்திற்குள் சென்று பணிபுரிகிறார்களா? இது குறித்து மாண்புமிகு உறுப்பினர் என்ன தீர்மானித்துள்ளார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏதாவது குறிப்பிட்ட சுரங்கங்கள் சம்பந்தப்பட்ட குறிப்பிட்ட சட்ட மீறல்களைப் பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் எனது கவனத்திற்குக் கொண்டு வந்தால் அந்த விஷயத்தை நான் நிச்சயமாகக் கவனிக்க முடியும்.

# 237

## *சுரங்கங்களில் நிலத்தடிப் பணியில் கர்ப்பிணிப் பெண்கள்

582. திருமதி ரேணுகா ரே: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்களைப் பற்றித் தெரிவிப்பாரா?

(அ) கருவுற்ற பெண்கள் சுரங்கங்களில் 9 மாதம் வரை நிலத்தடியில் பணிபுரிவதுடன் குழந்தை பிறந்த 15 நாட்களில் பணிக்குத் திரும்புகிறார்கள் என்ற உண்மையை அவர் அறிவாரா? மேலும் பேறுகாலச் சலுகைகள் அளிக்காத சுரங்கங்களில் இதை விட அதிக நேரம் அவர்கள் பணி செய்கிறார்களா?

(ஆ) கர்ப்பிணிப் பெண்கள் நிலத்தடியில் பணி செய்வதைத் தடுக்க அரசு எடுத்த நடவடிக்கைகள் என்ன?

(இ) கடந்த ஆண்டில் நிலத்தடியில் பணிபுரியும் பல பெண்கள் விபத்துக்குள்ளானது உண்மையா? அதில் எத்தனை

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1003.

கர்ப்பிணிப் பெண்கள் விபத்துக்குள்ளானார்கள் என்பதை அறிய வழியில்லை என்பது உண்மையா?

(ஈ) சில சுரங்கங்களில் மட்டுமே பேறுகால உதவிகள் அளிக்கப்படுவது உண்மையா? சுரங்கப் பகுதிகளில் வேலை செய்யும் எல்லாக் கர்ப்பிணிப் பெண்களுக்கும் பேறுகால உதவிகள் கட்டாயமாக அளிக்க என்ன நடவடிக்கைகள் எடுக்க அரசு உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இந்தக் குற்றச்சாட்டுக்கான ஆதாரம் என்னவென்று தெரியவில்லை. சுரங்கங்களில் பேறுகால உதவிகள் சட்டத்தின் 3வது பிரிவின்படி ஒரு பெண் பிரசவித்த பின்பு நான்கு வாரங்களுக்கு வேலைக்குச் செல்ல தடையுள்ளது. குழந்தை பிறப்புக்கு முன்பு ஒரு மாதம் விடுப்பு எடுத்துக்கொள்ள ஒரு பெண்ணுக்கு உரிமையுள்ளது. இந்தச் சட்டத்தின் விதிகளைச் சரியான முறையில் செயல்படுத்த சுரங்கத் தலைமை ஆய்வாளரின் கீழ் பணிபுரியும் மருத்துவர்களான ஆய்வாளர்கள் சுரங்கங்களை பார்வையிடுகிறார்கள்.

(ஆ) ஏற்கனவே அறிவித்தபடி, கர்ப்பிணிப் பெண்கள் பிரசவத்துக்கு முன்பு ஒரு மாத விடுப்பு எடுக்க உரிமையுள்ளது. இந்தச் சட்டத்தின்படி பெண்களுக்குள்ள உரிமைகளை அவர்களுக்கு உணர்த்தும் நோக்கத்துடன், இந்தச் சட்டத்தின் சலுகைகளை அவர்கள் அடைய உதவிசெய்ய, சுரங்கத் தலைமை ஆய்வாளரின் கீழ் தொழிலாள ஆய்வாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

(இ) ஆம். இந்தப் பெண்களில் யாரும் கர்ப்பிணிப் பெண் என்ற தகவல் இல்லை. விபத்துகளுக்கு பின்பு நடந்த விசாரணைகளில் சுரங்கத்தில் பணிபுரியும் மருத்துவரின் சாட்சியம் தவறாமல் பதிவு செய்யப்படுகிறது. ஒரு பெண் கருவுற்றிருந்தால் அவளுடைய நிலைமை தெரிவிக்கப்பட்டிருப்பதுடன் பதிவு செய்யப்பட்டிருக்கும்.

(ஈ) 1941 ஆம் ஆண்டு சுரங்கப் பேறுகால உதவிச் சட்டம் பின்வரும் அமைப்புகளைத் தவிர பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள எல்லாச் சுரங்கங்களுக்கும் பொருந்தும்:

i. பம்பாய் மாகாணத்திலுள்ள சுரங்கங்களின் சில கல் உடைக்கும் நிலையங்கள்;

ii. வேலை செய்யும் இரும்புத் தாது சுரங்கங்கள், இவற்றின் மொத்த இரும்பு தாதுவும் உள்ளூர் இரும்பு உருக்குபவர்களுக்கும் கிராம கொல்லர்களுக்கும் அளிக்கப்படுகிறது. இயந்திர சக்தியின்றி வேலை செய்யும் இரும்புத்தாது சுரங்கங்கள்.

iii. சில நிபந்தனைகளுக்குட்பட்டு, இருபது நபர்களுக்கு மேல் பணிபுரியாத, ஆய்வுப் பணிகளுக்காக மட்டும் தோண்டி எடுக்கும் பணிகள் நடைபெறும் சுரங்கங்கள்.

இந்தச் சிறிய சுரங்கங்களில் பேறுகால உதவிகள் கட்டாயமாக அளிக்கப்பட வேண்டுமென்று கருதப்படவில்லை.

திரு. லால்சந்த் நாவல்ராய்: கர்ப்பிணிப் பெண்கள் உண்மையிலேயே பாதிக்கப்பட்ட சம்பவங்கள் உள்ளனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், சில உள்ளன.

திரு. லால்சந்த் நாவல்ராய்: எப்பொழுது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்கள் வேலைக்குச் சேர்ந்ததிலிருந்து. நிலக்கரிச் சுரங்களில் அடிக்கடி விபத்துகள் நடைபெறுகின்றன.

திருமதி ரேணுகா ரே: நிலத்தடியில் பெண்களின் பணிக்கான தடையை மீண்டும் கொண்டு வருவதே கர்ப்பிணிப் பெண்கள் சுரங்கத்தினுள் நுழைவதைத் தடுக்க சிறப்பான வழி என்று மாண்புமிகு உறுப்பினர் கருதுகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சூழ்நிலைகள் சாதகமாக இருக்கும் பட்சத்தில் இதை முற்றிலும் ஆமோதிக்கிறேன்.

# 238

## *நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்களின் பணிக்கான தடையை மீண்டும் கொண்டு வருதல்

*583. திருமதி ரேணுகா ரே: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருபனவற்றைப் பற்றி தெரிவிப்பாரா:*

*(அ) அரசாங்கம் முன்பு அளித்த வாக்குறுதியின்படி நிலக் கரிச் சுரங்கங்களில் பெண்களின் பணிக்கான தடையை மீண்டும் எப்பொழுது கொண்டுவர உத்தேசித்துள்ளது?*

*(ஆ) நிலத்தடியில் பெண்கள் பணி செய்வதால் நிலக்கரி உற்பத்தி எவ்வளவு தூரம் அதிகரித்துள்ளது?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (அ) மீண்டும் இந்தத் தடையைக் கொண்டு வரத் தேவைப்படும் அளவு நிலக்கரி உற்பத்தியை எட்டியவுடன் அரசு தடையை விதிக்க ஆவலாக உள்ளது.*

*(ஆ) பெண்கள் நிலத்தடியில் பணிபுரிய தொடங்கிய பிறகு நிலக்கரி உற்பத்தி கணிசமான அளவு அதிகரித்துள்ளது. வேறுபல காரணங்களும் இதற்கு இருப்பதால் நிலக்கரி உற்பத்தி எந்த அள வுக்கு அதிகரித்தது என்பதை சரியாகக் கூறுவது சாத்தியமில்லை.*

*திருமதி ரேணுகா ரே: நிலத்தடியில் பெண்களின் பணி உற்பத்தியின் அளவை உயர்த்தியதில் மிகச் சிறிதளவே உதவி யிருக்கிறது என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறியமாட்டாரா? சர்வதேச நியதி மற்றும் அறநெறியை மீறுவது பெண்கள் நிலத்*

---

*★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1004.*

தடியில் வேலை செய்து பெறப்படும் அதிகமான நிலக்கரி உற்பத்தியை ஈடு செய்யும் என்று அவர் கருதுகிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனக்குக் கிடைத்த தகவல் மாறுபட்டுள்ளது.

திரு. கோவிந்த் வி.தேஷ்முக்: இந்தத் தடையை மீண்டும் கொண்டு வருவதற்கு அரசு நிர்ணயித்துள்ள உற்பத்தி இலக்கு எவ்வளவு என்பதை தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னால் கூற இயலாது.

திருமதி ரேணுகா ரே: நிலத்தடிப் பணியில் ஆண்கள் வெட்டி எடுப்பவர்களாகவும் பெண்கள் நிலக்கரி சுமக்கும் பணிபுரிவதால் ஒவ்வொரு தொட்டி நிரம்பவும் நேரம் அதிகம் எடுத்துக் கொள் கிறது. ஏனெனில் பெண்கள் வெட்டுபவர்களாக இருக்கமுடியாது. எனவே ஆண்கள் ஓய்வெடுக்கிறார்கள். ஆனால் வேகம் அதிகமாகும். எப்படியென்றால் ....

திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மரியாதைக் குரிய உறுப்பினர் சொற்பொழிவாற்றுகிறார்.

திருமதி ரேணுகா ரே: தொட்டியில் நிரப்பும் பணி மிகவும் மெதுவாக இருப்பதன் காரணம் பெண்கள் சுமை கூலிகளாக பணி புரிகிறார்களே தவிர அவர்கள் வெட்டுபவர்களாக பணி செய்ய முடியாது என்பதால்தான் என மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் கருதவில்லையா என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இத்தத் தகவலைத் தெரிந்து கொள்வதில் நான் மகிழ்ச்சியடைகிறேன். இந்தத் தகவலின் நம்பகத் தன்மையைப் பற்றியோ அல்லது ஆலோசனையின் சாத்தியக் கூறுகளைப் பற்றியோ எந்தக் கருத்தும் கூற நான் தயா ரில்லை.

# 239

## *இந்திய அரசு அச்சகங்களில் தொழிலாளர் நல அதிகாரி பணியிடம்

586. மௌல்வி முகமது அப்துல் கனி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) இந்திய அரசு அச்சகங்களுக்கான தொழிலாளர் நல அதிகாரியின் பணியிடத்துக்கு விளம்பரம் வெளியிடப்பட்டிருந்ததா? அப்படியென்றால், எப்பொழுது? எப்படி?

(ஆ) ஏதாவது தெரிவு நடந்துள்ளதா?

(இ) அந்தப் பதவி முஸ்லீம் இனத்துக்கு ஒதுக்கப்பட்ட பதவியா?

(ஈ) கடந்த இரண்டு ஆண்டுகளில் உதவித் தொழிலாளர் நல அதிகாரிகளாக நியமிக்கப்பட்டவர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(உ) அவர்களுடைய கல்வித்தகுதிகள் யாவை? அவர்களில் எத்தனை பேர் முஸ்லீம்கள்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்திய அரசு அச்சகங்களுக்கான ஒரு தொழிலாளர் நல அதிகாரிப் பணியிடத்துக்கு ஒப்புதல் வழங்கப்பட்டிருந்தது. கடந்த ஜூன்மாதம் மத்திய அரசுப்பணிதேர்வாணையம் அங்கீகரிக்கப்பட்ட பத்திரிகைகளில் விளம்பரம் கொடுத்தது. ஆணைய அலுவலகத்துக்கு விண்ணப்பங்கள் வந்து சேரவேண்டிய தேதி ஜூலை 10 ஆகும்.

(ஆ) மற்றும் (இ) ஆம்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கங்கள் 1005- 1006.

(இ) ஒரு பெண் உதவித் தொழிலாளர் நல அதிகாரி நேரடியாக தொழிலாளர் துறையில் நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

(ஈ.) இந்து மதத்தைச் சேர்ந்த அவர் எம்.ஏ. எம்.லிட், பட்டம் பெற்றவர்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மத்திய அரசின் அச்சகங்களுக்கு மட்டுமா அல்லது மாகாண அரசின் அச்சகங்களுக்கும் இந்த அதிகாரிகள் நியமிக்கப்படுகின்றனரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மத்திய அரசின் அச்சகங்களுக்கு மட்டும்.

# 240

## *தனியார் செய்திப் பத்திரிகைகளின் உரிமையாளர்கள் மற்றும் அந்தப் பத்திரிகைகளில் பணிபுரிபவர்களைப் பற்றிய புள்ளிவிவரங்கள்

600. திரு. கைலாஷ் பீகாரி லால்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருவனவற்றைப் பற்றித் தெரிவிப்பாரா:

(அ) தனியார் செய்திப் பத்திரிகை உரிமையாளர்களின் எண்ணிக்கை மற்றும் அந்தப் பத்திரிகைகளில் பணிபுரிபவர்களைப் பற்றிய ஏதாவது புள்ளிவிவரங்களை அரசு பெற்றுள்ளதா?

(ஆ) 'அ' பிரிவுக்குப் பதில், 'இல்லை' என்றால் பணியாளர்களுக்கு (i) விடுப்பு விதிகள் (ii) விடுமுறைகள் (iii) ஊதிய விகிதங்கள் (iv) மற்றும் அகவிலைப்படி ஆகியவைகளைத் தீர்மானிப்பதில் உதவ, அவைபற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரிக்க அரசு தீர்மானித்துள்ளதா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1013.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை.

(ஆ) அச்சகங்களில் பணியாளர்களின் வேலை நிலைமைகளையும் விதிமுறைகளையும் பற்றிய பொதுவான தகவல்களை தொழிலாளர் விசாரணைக் குழு சேகரித்து வருகிறது. செய்திப் பத்திரிகை அமைப்புகளில் பணியாளர்களின் வேலை நிலைமையை முறைப்படுத்துவதற்கு எப்படிப்பட்ட அதிகப்படியான தகவல்கள் சேகரிக்கப்பட வேண்டுமென்பதே பிரச்சினை.

திரு. கைலாஷ் பீகாரி லால் : டில்லி அச்சகங்கள் சம்பந்தமான புள்ளிவிவரங்களையாவது அரசு சேகரிக்குமா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்த விஷயத்தில் தொழிலாளர் விசாரணைக்குழு என்ன செய்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள காத்திருப்பதே சிறந்தது என்று நினைக்கிறேன்.

திரு. கைலாஷ் பீகாரி லால்: டில்லி ஒரு சிறிய பிரதேசம். அதில் மாண்புமிகு உறுப்பினர் பெற முடியும்....

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : மதிப்பிற்குரிய உறுப்பினர் வாதம் செய்கிறார். அடுத்த கேள்வி.

# 241

## *அலிகார் இந்திய அரசு அச்சகத்தில் பணிநீட்டிப்பு

601. குவாஜி முகமது அகமது காஸ்மி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருபவனவற்றைப் பற்றித் தெரிவிப்பாரா:

(அ) அலிகார் இந்திய அரசு அச்சகத்தில் ஓய்வு பெற வேண்டியவர்களுக்குப் பணி நீட்டிப்பு பலமுறை அளிக்கப்பட்டுள்ளது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1013.

*(ஆ) ஆண்டுதோறும் பலருக்கு பணி நீட்டிப்புக்கு இந்திய அச்சக மற்றும் எழுதுபொருள் கட்டுப்பாட்டு அலுவலருக்கு அச்சக மேலாளர் பரிந்துரை செய்தது உண்மையா?*

*(இ) மேலாளர் பணிநீட்டிப்புக்கு பரிந்துரை செய்துள்ள ஓய்வு பெறவேண்டிய நிலையில் உள்ள அந்த அச்சக ஊழியர்களின் இடங்களில் பணிசெய்வதற்கு முழுப் பயிற்சிபெற்ற தகுதி வாய்ந்த ஊழியர்கள் இருப்பது உண்மையா?*

*(ஈ) இம்மாதிரி பணிநீட்டிப்புக்கு பரிந்துரை செய்வதால் ஓய்வுபெறும் நிலையில் உள்ளவர்களின் இடத்துக்கு வர வேண்டிய சில தகுதிவாய்ந்த ஊழியர்களின் கோரிக்கைகள் தடைப்பட்டுக் கிடக்கின்றன என்பது உண்மையா?*

*(உ) ''அ'' மற்றும் ''ஈ'' பிரிவுகளுக்கான பதில் 'ஆம்' என்றால் எந்தச் சூழ்நிலையிலும் எதிர்காலத்தில் பணி நீட்டிப்பு அளிக்கக் கூடாது என்ற வகையில் ஆணையனுப்பும் யோசனையை மாண்புமிகு உறுப்பினர் கவனத்தில் எடுத்துக்கொள்வாரா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) மற்றும் (ஆ) இல்லை. ஒரு சிலருக்கு மட்டுமே பரிந்துரை செய்யப்பட்டுள்ளது.*

*(இ) சில பதவிகளுக்குக் கல்வித் தகுதி பெற்றவர்கள் உள்ளனர். சில பதவிகளுக்கு இல்லை.*

*(ஈ) இல்லை.*

*(உ) கேள்வி எழவில்லை.*

*குவாஜி முகமது அகமது காஸ்மி: ''அ'' பிரிவுக்கான பதில், 'இல்லை' என்று நான் புரிந்து கொண்டுள்ளேன், அவர் பணி நீட்டிப்புக்கு எந்தவிதப் பரிந்துரையும் செய்யவில்லையா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஒரு சிலருக்கு மட்டும் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது என்று கூறியுள்ளேன்.*

*குவாஜி முகமது அகமது காஸ்மி : பணி நீட்டிப்புக்கு பொது மேலாளர் பரிந்துரை செய்துள்ளாரா, இல்லையா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* மேலாளர் பணி நீட்டிப்பு அளித்துள்ளார்.

*குவாஜி முகமது அகமது காஸ்மி :* கல்வித் தகுதி பெற்றவர்கள் இருந்தபோதிலும் ஏன் இந்த பணி நீட்டிப்பு அளிக்கப்பட்டது என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தகுதிவாய்ந்த ஊழியர்கள் இருந்தாலும் பணி நீட்டிப்புக்கு பரிந்துரை செய்யப்பட்டது என்பதை ஏற்றுக் கொள்ள முடியாது.

*குவாஜி முகமது அகமது காஸ்மி :* சில நேரங்களில் தகுதி வாய்ந்த ஊழியர்கள் இருந்தாலும் பணிநீட்டிப்பு அளிக்கப்பட்டது என்று மாண்புமிகு உறுப்பினர் கூறியதாக நான் புரிந்து கொண்டுள்ளேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* ஆம், சில சந்தர்ப்பங்களில் மட்டும்.

*குவாஜி முகமது அகமது காஸ்மி :* அந்தச் சூழ்நிலையில் கூட ஊழியர்களுக்கு பணிநீட்டிப்பு அளிக்கப்படும் காரணத்தைத் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எனது மதிப்பிற்குரிய நண்பர் குறிப்பிட்ட பணிநீட்டிப்பிற்கான பொதுவான காரணம், ஒன்று அல்லது இரண்டாண்டு பணிநீட்டிப்பு அளிக்கவில்லையென்றால் சில ஊழியர்கள் தங்கள் ஓய்வூதியத்தை இழக்க நேரிடும் என்பதே என அறிகிறேன்.

*குவாஜி முகமது அகமது காஸ்மி:* இந்த ஒரே காரணம் மட்டுந்தானா வேறு ஏதாவது காரணம் உள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எனக்குத் தெரிந்த வரை வேறு எந்தக் காரணமும் இல்லை.

*குவாஜி முகமது அகமது காஸ்மி :* பணிநீட்டிப்பு அளிக்கப்பட்ட நடவடிக்கைகள் இந்தக் காரணத்துக்காக மட்டுமே அளிக்கப்

பட்டதா அல்லது வேறு ஏதாவது காரணம் உண்டா என்பது குறித்து மாண்புமிகு உறுப்பினர் விசாரணை நடத்துவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : நான் விசாரித்ததில் இந்தத் தகவலே கிடைத்தது.

மௌல்வி முகமது அப்துல் கனி : ''அந்த சில பேர்கள்'' என்பதில் அடங்கிய ஊழியர்களின் பெயர்களை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அந்த ஊழியர்களின் பெயர்கள் என்னிடம் இல்லை. ஆனால் சில நடவடிக்கைகள் பற்றிய தகவல்களே என்னிடமுள்ளன.

மௌல்வி முகமது அப்துல் கனி : அவர்கள் எந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள்?

(பதில் இல்லை)

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : அடுத்த கேள்வி.

# 242

## *புதுடில்லி இந்திய அரசு அச்சகத்தில் புத்தகக் கட்டுனர்கள் மற்றும் கிடங்குப் பணியாளர்களுக்கு வேலை நேர அடிப்படையிலான ஊதியம்

602. குவாஜி முகமது அகமது காஸ்மி : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்களைப் பற்றித் தெரிவிப்பாரா:

(அ) புத்தகக் கட்டுனர்களும் கிடங்குப் பணியாளர்களும் கோரிவந்த வேலை நேர அடிப்படையிலான ஊதியத்தை அரசு அனுமதித்துள்ளது உண்மையா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கங்கள் 1014-15

(ஆ) இதற்காக இவர்கள் கடந்த பதினைந்து ஆண்டுகளாக தங்கள் கோரிக்கையை வலியுறுத்தி வந்தது உண்மையா?

(இ) தற்பொழுது 25 ரூபாய் மட்டுமே ஊதியம் பெறும் சில கிடங்குப் பணியாளர்கள் கடந்த பதினைந்து இருபது ஆண்டு களாக பணியில் இருப்பினும், வேலை நேர அடிப்படையிலான ஊதியம் அறிமுகப்படுத்தப்பட்டதால் எந்தவித பயனும் அடைய வில்லை என்பது உண்மையா?

(ஈ) உடனடியாக யாருக்கும் ஒரு ஊதிய உயர்வு கூட அளிக்கப்படவில்லை என்பது உண்மையா?

(உ) ''அ''விலிருந்து ''ஈ'' பிரிவுகளுக்கான பதில்கள் 'ஆம்' என்றால் வேலை நேர அடிப்படையிலான ஊதியம் அறிமுகப் படுத்தப்படும்போது புத்தக கட்டுனர்களுக்கும் கிடங்குப் பணியாளர் களுக்கும் ஒரு சம்பள உயர்வு அளிப்பதை மாண்புமிகு உறுப்பினர் பரிசீலனை செய்வாரா? நீண்ட நாள்களாக காத்திருக்கும் இவர் களுக்கு உடனடியாக சிறிது ஆறுதல் கிடைக்குமல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆம்.

(ஆ) ஆம். சில காலத்துக்கு முன்பு.

(இ) ஆம். அடுத்த ஊதிய உயர்வு பெற்றவுடன் அவர்களுக் குப் பலன் கிடைக்கும்.

(ஈ) ஆம். ஏன் எனில் வேலை நேர அடிப்படையிலான ஊதிய முறை அமலுக்கு வந்த 1944 ஜுன் 23 லிருந்து ஊதிய உயர்வு பெறாததால், இந்த நிலைமை.

(உ) மதிப்பிற்குரிய உறுப்பினர் எடுத்துக் கூறியது போன்ற நடவடிக்கை எதுவும் தேவையில்லை. அடுத்த ஆண்டு ஊழியர் கள் ஊதிய உயர்வு பெறுவார்கள்.

**குவாஜி முகமது அகமது காஸ்மி:** சில ஊழியர்கள் ஓய்வு பெறும் நிலையில் இருப்பார்கள். அவர்களுக்கு இந்த ஊதிய முறையால் பலன் எதுவும் கிட்டாது. இவ்வளவு ஆண்டுகளாக

பணிபுரிந்ததற்காக அவர்களுக்கு சில ஊதிய உயர்வுகள் அளிப்பது சரியென்று மாண்புமிகு உறுப்பினர் கருதுகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த மாதிரி யான சந்தர்ப்பங்களுக்காக சட்டத்தை மாற்றுவது சரியல்ல என்று கருதுகிறேன்.

# 243

## *ஒரிசாவில் மகாநதி திட்டங்களின் வளர்ச்சி

607. **பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) ஒரிசாவில் வெள்ளத்தால் ஏற்படும் நாசங்களைத் தடுக்க மகாநதி பற்றி சர் எம். விஸ்வேஸ்வரய்யாவின் தலைமையில் அமைந்த கமிட்டியின் அறிக்கை மகாநதி திட்டங்களின் வளர்ச்சி பற்றியும் கட்டாக், சம்பல்பூர், பூரி மற்றும் பாலசோர் மாவட்டங் களில் பெரும்பகுதி நிலங்களுக்கு விவசாயப் பணிகளுக்காகக் கால்வாய்கள் அமைக்கும் திட்டம் பற்றியும் எடுத்துக் கூறியுள்ளதை அவர் அறிவாரா?

(ஆ) இந்தத் திட்டத்திற்கு 1938-39ஆம் ஆண்டுகளில் சுமார் நான்கு கோடி ரூபாய் ஆகும் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருந்ததா?

(இ) உதவி அளிக்கவேண்டிய ஒரிசா மாகாணத்தின் பொரு ளாதார நெருக்கடியை கருத்தில் கொண்டும், இந்தியாவிற்கு அதிக அளவில் அரிசி உற்பத்தி மிக அவசியம் என்பதையும் கணக்கில் எடுத்துக்கொண்டு, இந்தத் திட்டத்தை தானே முன்வந்து ஏற்று நடத்தும் யோசனையை இந்திய அரசு பரிசீலிக்குமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1018.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) மற்றும் (ஆ) இல்லை. இவை பற்றிய தகவல்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன.

(இ) இந்தத் திட்டத்தைப் பற்றி ஆழ்ந்த பரிசீலனை செய்யாமல் இந்தக் கூட்டத்தில், அரசு எந்தவிதமான உறுதியும் அளிக்க முடியாது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : இந்தத் திட்டத்தை கவனமாக ஆய்வு செய்ய அரசு தயாராக உள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஆம்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : பல்வேறு துணைக் குழுக்களில் ஏதாவது ஒன்றின் விசாரணையின் பகுதியாக இது இருக்குமா அல்லது தேசிய திட்டக்குழுக்கள் அமைப்பின் விசாரணையின் பகுதியாக இது இருக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அரசு பின்பற்றும் நடைமுறையைப் பற்றி நான் கூற முடியாது. ஆனால் இதைப் பரிசீலிக்கிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : நன்றி.

# 244

## *பீகாரில் சுரங்கத் தொழிலாளர்களுக்கு அரிசி வினியோக ஏற்பாடுகள்

611. திரு. கே.சி நியோகி : (அ) சுரங்கத் தொழிலாளர்களுக்கு அரிசி வினியோகிப்பது சம்பந்தமாக பீகார் மாகாணத்தில் நடைமுறையிலுள்ள ஏற்பாடுகள் குறித்து மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து விவரமாக விளக்கம் அளிப்பாரா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1018.

*(ஆ) பீகார் அதிகாரிகள் சில நிலக்கரிச் சுரங்கங்களுக்கு வழங்குவதற்கான அரிசியை, கட்டுப்பாட்டு விலையை விட அதிக விலைக்கு விற்றதாக மாண்புமிகு உறுப்பினருக்குப் புகார் வந்துள்ளதா? வழங்கப்பட்ட அரிசியின் தரமும் மோசமானதா? அப்படியென்றால், இந்தப் புகாரில் எழுப்பப்பட்டுள்ள பிரச்சினைகள் என்ன? இதைப் பற்றி அறியப்பட்டுள்ள தகவல்கள் என்ன?*

*(இ) இந்த விஷயத்தில் பீகாரிலுள்ள நடைமுறை, வங்காளச் சுரங்கங்களில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள நடைமுறையிலிருந்து எவ்வகையில் மாறுபட்டுள்ளது?*

*(ஈ) இந்த விஷயத்தில் பீகார் நிலக்கரிச் சுரங்கங்கள் சிலவற்றின் சார்பாக எழுப்பப்பட்டுள்ள புகார்களுக்கு தீர்வுகாண என்ன நடவடிக்கைகளை எடுக்க அரசு உத்தேசித்துள்ளது?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *1944 ஏப்ரில் 20 அன்று இந்தியப் பாதுகாப்புச் சட்ட விதிகளின் பிரகாரம் தான்பாத்திலுள்ள கூடுதல் உதவி ஆணையர் அளித்த உத்தரவின்படி, சுரங்க அங்காடியிலிருந்து வாரந்தோறும் நான்கு சேர் உணவு தானியங்கள் தனக்கும் (அதில் இரண்டு சேர்கள் அரிசியாக இருக்கலாம்) தன்னைச் சார்ந்துள்ள வயதுவந்த ஒவ்வொருவருக்கும், மேலும் இரண்டு சேர்கள் தன்னைச் சார்ந்துள்ள வயதுக்குவராதவர்களுக்ும் (அதில் ஒரு சேருக்குள் அரிசியாக இருக்கலாம்) கூடுதல் உதவி ஆணையர் நிர்ணயித்துள்ள கட்டுப்பாட்டு விலைக்குச் சமமான விலையில் ஒவ்வொரு சுரங்கத் தொழிலாளரும் வாங்க உரிமை பெற்றுள்ளனர். மேலும் ஒவ்வொரு தடவை பணிக்குவருகை தருவதற்கும், கடினப் பணியாளருக்கு அரை சேர் இலவச ரேஷன் அரிசி பெற உரிமை உண்டு. இந்த இலவச ரேஷனை சுரங்கத் தொழிலாளர்களின் விருப்பப்படி மற்ற தானியங்களில் முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ பெற்றுக் கொள்ளலாம்.*

*(ஆ) முதல் பகுதிக்கான பதில் 'ஆம்' என்பதுதான். 1944 நவம்பர் 1 ஆம் தேதி வரை சுரங்க அமைப்புகளுக்கு வினியோகிக்கப்பட்டுள்ள அரிசிக்கு, பீகார் அரசு கொள்முதல் விலையையே பெற்றுக்கொண்டது. இதில் பெரும்பகுதி தங்களுடைய கட்டுப்பாட்டு விலையைவிட அதிகம் கொடுத்து நேப்பாளத்திலிருந்து பீகார் அரசு வாங்கவேண்டியிருந்தது. இதன் விளைவாக சுரங்க அமைப்புகளுக்கு வினியோகிக்கப்பட்ட நேபாள அரிசி உள்ளூர்*

கட்டுப்பாட்டு விலையைவிட ரூ. 1.8-0 அதிகமாக இருந்தது. 1944 நவம்பர் 1 தேதியிலிருந்து உள்ளூர் மொத்த கட்டுப்பாட்டு விலையுடன் நிர்வாகச் செலவுக்கு 4 அணா சேர்த்து பீகார் அரசு அரிசி விற்கத் தீர்மானித்துள்ளது. இதனால் ஏற்படும் இழப்பை தானே ஏற்றுக்கொள்வது என்று முடிவு செய்துள்ளது. தரத்தைப் பற்றிய புகாரின் உண்மையை அறிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன.

(இ) வங்காள நிலக்கரிச் சுரங்கங்களில் ரேஷன் முறை நடப்பில் இல்லை. 1000 தொழிலாளர்களுக்கு மேல் உள்ள சுரங்கங்களின் உரிமையாளர்கள், தங்களுடைய வினியோகத்திற்கான தானியங்களை அரசின் சிவில் வினியோகத் துறையிலிருந்து வாங்க வேண்டும். பீகாரில் ஒவ்வொரு சுரங்கமும் இந்திய சுரங்க அமைப்பின் அரிசி நிர்வாகி அல்லது கூட்டு வினியோக அமைப்பின் செயலரிடமிருந்து வாங்கவேண்டும்.

(ஈ) கேள்வியின் (ஆ) பிரிவுக்கு அளிக்கப்பட்டுள்ள பதிலை மரியாதைக்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

# 245

## *டில்லியில் லோடிச் சாலையில் எழுத்தர்களுக்கான குடியிருப்புகள் கட்டுவதற்கான ஒப்பந்தம்

612. திரு கே.பி. ஜீனராஜ ஹெக்டே : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) லோடிச் சாலையிலுள்ள ரூ. 28,60,000 மதிப்பிலான எழுத்தர்கள் குடியிருப்புகள் கட்டுவதற்கான ஒப்பந்தம், பட்டியல்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கங்கள் 1021-22.

*கட்டணத்தை விட 11,25 குறைவாக கேட்டிருந்த ஒப்பந்தப் புள்ளிதாரருக்கு கொடுக்கப்படாமல் அதிகக் கட்டணம் கேட்டிருந்த ஒப்பந்த புள்ளிதாரருக்குக் கொடுக்கப்பட்டதா?*

*(ஆ) ''அ'' பிரிவுக்கான பதில் 'ஆம்' என்றால் குறைந்த ஒப்பந்த புள்ளித் தொகையை விட அரசு கொடுக்கப்பட வேண்டிய அதிகப்படியான தொகை எவ்வளவு?*

*(இ) அதே இடத்தில் இதே போன்ற ரூ. 50,00,000 மதிப்புள்ள ஒரு கட்டுமானத்திற்கு, குறைந்த ஒப்பந்தப் புள்ளிதாரரை ஒதுக்கிவிட்டு, பட்டியல் கட்டணத்தைவிட 5 சதவிகிதம் அதிகமான மதிப்பில் அதே நிறுவனத்துக்கு அளிக்கப்பட்டது உண்மையா?*

*(ஈ) இவை ஏற்றுக் கொள்ளப்படுமுன் சம்பந்தப்பட்ட துறையினால் மேற்குறிப்பிட்ட ஒப்பந்த புள்ளிகள் பரிசீலிக்கப்பட்டனவா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) இல்லை.

(ஆ) கேள்வி எழவில்லை.

(இ) இல்லை. மற்றவர்களுடைய ஒப்பந்த புள்ளித் தொகையை ஒப்பிடுகையில் இவர்கள் கேட்ட தொகை குறைவாக இருந்ததால் லோடிச் சாலையிலுள்ள திட்டத்தின் ஒரு பகுதி வேலை, இந்த நிறுவனத்துக்கு அளிக்கப்பட்டது.

(ஈ) இந்த மாதிரி விஷயங்களில் தகுதிபெற்ற அதிகாரியாக உள்ள மத்தியப் பொதுப்பணித்துறையின் தலைமைப் பொறியாளர் இந்த ஒப்பந்த புள்ளிகளை பரிசீலனை செய்து ஏற்றுக் கொள்கிறார்.

# 246

## *டில்லி வாடகை கட்டுப்பாட்டுச் சட்டத்தின்கீழ் வாடகை ரசீதுகளுக்கான படிவங்கள்

625. திரு. கைலாஷ் பீகாரிலால்: 1944 ஆம் ஆண்டு டில்லி வாடகைக் கட்டுப்பாடுச் சட்டத்தின் கீழ் வீட்டுடைமையாளர்கள் குடியிருப்பவர்களுக்குக் கட்டாயமாக கொடுக்கவேண்டிய ரசீதுக் கான மாதிரிப் படிவத்தை அரசு கொண்டுவர உத்தேசித்துள்ளதா, என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரி விப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்த விஷயம் அரசின் பரிசீலனையில் உள்ளது.

# 247

## +சில நகரங்களில் வாழ்க்கைச் செலவு அதிகரிப்பு

100. திரு. பத்ரி தத் பாண்டே : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து பின் கண்ட விஷயங்களை விளக்குவாரா:

(அ) சில நகரங்களில் வாழ்க்கைச் செலவு 182 சதவிகிதம் உயர்ந்துள்ளதாக வாழ்க்கைக் குறியீட்டெண் காட்டுவது உண்மையா?

(ஆ) அது உண்மையென்றால் அந்த நகரங்களில் பணி புரியும் ரயில்வே ஊழியர்களின் ஊதியம் 182 சதவிகிதம் உயர்த்தப் படவில்லை என்பது உண்மையா? இல்லையென்றால் உண்மை யான நிலைதான் என்ன?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1027.

+ அதே தொகுதி, நவம்பர் 20, 1944, பக். 1038.

(இ) வாழ்க்கைச் செலவு 182 சதவிகிதம் அதிகரித்துள்ள நகரங்களில் பணிபுரியும் ஊழியர்களின் ஊதியத்தை உயர்த்த அரசு தீர்மானித்துள்ளதா? இல்லை என்றால் ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆகஸ்டு குறியீட்டு எண்ணை விட சில நகரங்களில் பிரசுரிக்கப்பட்ட வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண் 182 சதவிகிதம் உயர்ந்துள் ளது என்பது அரசுக்குத் தெரியும்.

(ஆ) முதல் பகுதிக்கான பதில் 'ஆம்' என்பதுதான். இரண் டாவது பகுதியைப் பொறுத்தவரையில், வாழ்க்கைச் செலவு உயர்ந்துள்ளதை சரிக்கட்டுவதற்கு ரயில்வே ஊழியர்களுக்கு பணமாகவும் பொருளாகவும் உதவி அளிக்கப்படுகின்றன. இவை இரண்டும் சேர்ந்து அவர்களின் தேவைக்குப் போதுமானது. நிலை மைக்குத் தகுந்தபடி அடிக்கடி இதில் மாற்றம் செய்யப்படுகிறது.

(இ) இல்லை என்பதே கேள்வியின் முதல் பகுதிக்கான பதில். இரண்டாவது பகுதியைப் பொறுத்தவரையில் இன்றைய நிலை யற்ற பொருளாதாரச் சூழ்நிலையில், விரிவான சம்பள விகித மாற்றங்களைக் கொண்டு வருவது அரசின் கொள்கையல்ல. வாழ்க்கைத் தர உயர்வை அகவிலைப்படியின் மூலமோ பொருள் கள் அளிப்பதன் மூலமோ அல்லது இரண்டின் மூலமோ சரிக்கட்டு வதே அரசின் கொள்கை.

# 248

## *ரயில்வே தொழில் தகராறுகளை நடுவர் தீர்ப்புக்கு விட வேண்டுகோள்கள்

101. திரு. பத்ரி தத் பாண்டே : மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் கீழ்க்கண்ட விவரங்களை அளிப்பாரா:

(அ) ரயில்வே நிர்வாகத்தினருக்கும் அதன் ஊழியர்களுக்கு மிடையேயான தொழில் தகராறுகளை நடுவர் தீர்ப்புக்கு விட கடந்த ஐந்தாண்டுகளில் பதிவு செய்யப்பட்ட விண்ணப்பங்கள் எத்தனை?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1038.

(ஆ) அந்த வேண்டுகோள்கள் எப்படி தீர்வு செய்யப் பட்டன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) மற்றும் (ஆ) தொழில் தகராறுகள் சட்டம் அல்லது இந்தியப்பாதுகாப்பு விதிகளின் விதி 81 ஏவின் கீழ் கடந்த ஐந்தாண்டுகளில் ரயில்வே நிர்வாகத்தினருக்கும் அதன் ஊழியர்களுக்கும் இடையேயான தொழில் தகராறுகளை தீர்க்க, பெறப்பட்ட வேண்டுகோள்களின் எண்ணிக் கையையும் அவைமீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை யும் அவையில் சமர்ப்பித்துள்ள அறிக்கையில் கொடுத்துள்ளேன்.

# 249

## *தொழில் தகராறுகளைத் தீர்ப்பதற்கான நடுவர்களை நியமிப்பது சம்பந்தமான நடைமுறைகள்

102. **திரு. பத்ரி தத் பாண்டே :** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களைத் தெரிவிப்பாரா:

(அ) இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் விதி 81-ன் படி ஒரு நடுவர் நியமிப்பதற்கு முன்பு மேற்கொள்ளப்பட வேண்டிய நட வடிக்கைகள் சம்பந்தமான விதிகள் யாவை?

(ஆ) தொழிலதிபருக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே யான தொழில் தகராறுகளைத் தீர்க்க நடுவரை நியமிப்பதற்கான தகுதிகள் என்ன?

(இ) இந்தியப் பாதுகாப்புச் சட்டம் விதி 81ன் கீழ் நியமிக்கப் படும் நடுவர் யாருடைய அறிக்கையினால் அல்லது விண்ணப்பத் தினால் நியமிக்கப்படுகிறார்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1040.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் விதி 81-ஏ-வைக் குறிப்பிடுகிறார் என்று கருதுகிறேன். ஒரு நடுவர் நியமிக்கும் முன்பு கடைப்பிடிக்கவேண்டிய முறைகள் பற்றி விதிகள் ஏதும் இல்லை.

(ஆ) நியமிப்பதற்கான எந்தவிதமான தகுதியும் நிர்ணயிக்கப் படவில்லை, ஏனெனில் விதி 81 'ஏ'வின் கீழ் வருபவை விரைவாக முடிக்கப்பட வேண்டிய நடவடிக்கைகள். ஆகையால் நாட்டின் பல்வேறு பாகங்களில் குறிப்பிட்ட தகுதியுள்ள நபர்களை உடனடியாக பெறுவது சாத்தியமல்ல. எல்லா விதத்திலும் கிடைக்கப் பெறும் பொருத்தமான நபரை அந்த வழக்குக்கு நியமிப்பதே பொதுவான நியதியாக உள்ளது. உயர்நீதிமன்ற நீதிபதிகள், மாவட்ட நீதிபதிகள், அமர்வு நீதிமன்ற நீதிபதிகள், தலைமை ராஜதானி குற்றவியல் நடுவர்கள், தொழிலாளர் ஆணையர்கள், அவர்களின் உதவியாளர்கள், பணியாளர்களுக்கு இழப்பீடு அளிக்கும் ஆணையர்கள், போர்க்காயங்கள் அடைந்தவர்களுக்கு இழப்பீடு வழங்கும் அதிகாரிகள் இதில் பணியாற்றியுள்ளனர்.

(இ) யாராவது ஒரு தரப்பினரோ, இரு தரப்பினரோ கேட்டுக் கொண்டாலும் அல்லது அரசின் முன்முயற்சியாலும் ஒரு நடுவரை நியமிக்கலாம்.

# 250

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் பிரசாரப் பலன்கள்

103. திரு. பத்ரி தத் பாண்டே: மாதம் ரூ. 13,000 உதவித் தொகை பெற்றுவரும் தொழிலாளர் சம்மேளனத்தின் பிரசாரத்தால் அடைந்த பலன்களை, மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1040.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : 1944 நவம்பர் 7ல் பேராசிரியர் ரங்காவின் கேள்வி எண் 158 பிரிவு (இ)க்கு நான் அளித்த பதிலை, எனது மதிப்பிற்குரிய நண்பரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

# 251

## *இந்தியாவின் மைக்கா தொழில் பற்றிய விசாரணைக்குழு அமைத்தல்

திரு. சத்திய நாராயண சின்ஹா: (அ) பீகாரின் மைக்காத் தொழிலைப் பற்றி ஆய்வு செய்ய மத்திய அரசால் ஆய்வுக்குழு அமைக்கப்பட்டுள்ளதா அல்லது அமைக்கப்பட உள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து தெரிவிப்பாரா?

(ஆ) மேற்குறிப்பிட்ட ஆய்வுக்கான ஏற்பாடு, பெடரல் சட்ட பட்டியல் அதிகார எல்லைக்கு அப்பாற்பட்டது என்பதை மாண்பு மிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) இதற்கான பதில் 'ஆம்' என்றால் 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் ஏழாவது பட்டியலில் கொடுத்துள்ள மாகாண சட்டப் பட்டியல் அதிகார எல்லையில் தலையீடு செய்வதற்கான காரணத்தை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம், ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது.

(ஆ) மற்றும் (இ) எந்த விதமான தலையீடும் இல்லை என்ற நோக்கில்தான் மத்திய அரசு இந்தக் குழுவை அமைத்துள்ளது. ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினர் தன்னுடைய சொந்தக் கருத்தை வைத்துக் கொள்ள உரிமையிருக்கிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1041.

திரு. சத்திய நாராயண சின்ஹா: இந்திய அரசாங்கச் சட்டத்தின் எந்தப் பிரிவின்படி இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது என்பதை தயவு செய்து மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : தங்களுடைய பொறுப்பின் அடிப்படையில் அரசு நடவடிக்கை எடுத்துள்ளதாகத் தெரிகிறது.

# 252

## *ஐந்தாவது தொழிலாளர் மாநாடு மற்றும் தொழிலாளர் நிலைக்குழுவின் நான்காவது கூட்டத்தின் நடவடிக்கைகளின் சுருக்கங்கள்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) : ஐயா, 1943 செப்டம்பர் மாதம் 6 மற்றும் 7 ஆம் தேதிகளில் நடைபெற்ற ஐந்தாவது தொழிலாளர் மாநாட்டின் நடவடிக்கைகளின் சுருக்கத்தையும் 1944 ஜனவரி மாதம் 25 மற்றும் 26ஆம் தேதிகளில் லக்னௌ நகரில் நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழுவின் நான்காவது கூட்ட நடவடிக்கைகளின் சுருக்கத்தையும் கொண்ட நகல்கள் ஒவ்வொன்றையும் அவை முன்வைக்கிறேன்.

# 253

## +இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு அரசின் உதவி

35. திரு. லால்சந்த் நாவல்ராய் : (அ) 1944 டிசம்பர் 17ம் தேதி சிந்த் அப்சர்வர் பத்திரிகையில் ''13,000 ரூபாய்க்காக ராயும் மேதாவும் ஒருவர்மீது ஒருவர் சேற்றை வாரி இறைக்கின்றனர்''

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 20, 1944, பக்கம் 1041.
\+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, பிப்ரவரி 9, 1945, பக்கங்கள் 87-88.

என்ற தலைப்பில் யுனைடெட் பிரெஸ்ஸின் செய்தி வெளியாகியுள்ளது. இதில் தற்பொழுது இந்திய அரசின் அதிகாரியாக இருக்கும் திரு. ஜம்னாதாஸ் மேத்தா எம்.எல்.ஏ. மேற்குறித்த விஷயத்தைப்பற்றி தன்னிடம் ஒரு அதிகாரபூர்வமான கடிதம் இருப்பதாகவும், அதன்படி தொழிலாளர் சம்மேளனத்தின் பெயர் உபயோகப்படுத்தப்பட்டு அதன் தலைவர் அல்லது நிர்வாகக் குழுவின் கவனத்துக்குக் கொண்டு வராமல், திரு ராய் தன் விருப்புப்படி செலவு செய்ய ரூபாய் 13000 மாதந்தோறும் பெற்று வருகிறார் என்றும் கூறியுள்ளார்.

(ஆ) மேற்குறித்த தகவல்களின்படி இந்தப் பொதுப் பணத்தைப் பொருத்த வரையில், அது யாருக்கு, எந்த நோக்கத்துக்காக கொடுக்கப்படுகிறது? அது எப்படி உபயோகப்படுத்தப்படுகிறது? தன் விருப்பப்படி திரு. ராய் தனக்கே பணத்தை உபயோகப்படுத்துகிறாரா? சொந்தக் காரியங்களுக்காக அதை உபயோகப்படுத்துகிறாரா? அல்லது திரு ஜம்னாதாஸ் மேத்தாவுடன் பகிர்ந்து கொள்கிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம். மாண்புமிகு உறுப்பினரே பெற்று வருகிறார்.

(ஆ) 1944 நவம்பர் 2ல் மதிப்பிற்குரிய உறுப்பினரின் கேள்வி எண் 31ஐ கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

திரு. லால்சந்த் நாவல்ராய்: என்னுடைய கேள்விகளுக்கு திட்டவட்டமான பதில்களை அளிக்கவில்லை. பகுதி (ஆ)வை பொருத்தவரையில் திரு. ஜம்னாதாஸ் மேத்தா அந்தக் கட்டுரையில் கூறியது உண்மையா என்பதை தெரிந்துகொள்ளவிரும்புகிறேன். அல்லது இந்தக் கேள்விக்கு கடந்த தடவை மாண்புமிகு உறுப்பினர் கூறியது சரியா? இந்தப் பணம் திரு. ஜம்னாதாஸுக்கா அல்லது திரு. ராய்க்கா அல்லது இருவருக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் கொடுத்த பதிலுடன் அதிகமாக எதுவும் கூற விரும்பவில்லை.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* என்னுடைய கேள்விகளுக்கு மாண்புமிகு உறுப்பினர் பதிலளிக்க வேண்டும் என்று விரும்பு கிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு அப்துல் ரகீம்):* மாண்புமிகு உறுப்பினர் பதிலளித்து விட்டார்.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* மாண்புமிகு உறுப்பினர் இந்தக் கேள்வியைத் தவிர்க்க விரும்புகிறார் என நினைக்கிறேன். ஏனெனில் அவர் அறிக்கை அளித்தால், அது அவர் முன்பு அளித்த பதிலுக்கு எதிராக ஆகிவிடும். என்னுடைய கேள்விகளுக்கு மாண்புமிகு உறுப்பினர் பதிலளிக்க கேட்டுக் கொள்கிறேன். இல்லையென்றால் இந்த விஷயத்தைக் குறித்து ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வரப்படும்.

*டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:* இது ஒரு தனி நபருக்கு அளிக்கப்படும் கொடையா அல்லது சம்மேளனம் பயன்படுத்திக் கொள்வதற்காக இது அளிக்கப்படுகிறதா என்பதைத் தெரிந்து கெள்ள இந்த அவைக்கு உரிமையுள்ளது என்று நினைக்கிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அது சம்மேளனத்துக்கு அளிக்கப்பட்டது.

*திரு. அவினாசிலிங்கம் செட்டியார்:* இந்தத் தொகை சம்மேளனத்தின் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருக்கிறது என்பது குறித்தும், அது சம்மேளனத்தின் மூலம் செலவிடப்பட்டிருக்கிறது என்பது குறித்தும் அரசாங்கம் திருப்தியடைந்துள்ளதா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம், திருப்தியடைந்துள்ளது.

*திரு. அவினாசிலிங்கம் செட்டியார்:* மேற்கொண்டும் பணம் தருவதற்கு அரசாங்கம் உத்தேசித்துள்ளதா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை.

திரு. அவினாசிலிங்கம் செட்டியார்: தற்போதைக்கு எவ்வளவு காலத்துக்கு இந்தத் தொகை அனுமதிக்கப்பட்டிருக்கிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஓராண்டுக்கு அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: இது எப்போது முடிவடையும் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: வரவு செலவுத் திட்டம் (பட்ஜெட்) முடிவடையும்போது.

திரு. பத்ரி தத் பாண்டே: தணிக்கை செய்யப்பட்ட கணக்குகளின் நகல்கள் அவையில் சமர்ப்பிக்கப்படும் என்று சில நாட்களுக்கு முன்பு மாண்புமிகு உறுப்பினர் கூறினார். அவ்வாறு அவர் செய்தாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இன்னமும் அந்தக் கணக்குகளின் நகல்கள் கிடைக்கவில்லை.

திரு. கோவிந்த் வி. தேஷ்முக்: இந்தக் கணக்குகளின் முழு விவரங்களையும் மாண்புமிகு உறுப்பினர் பார்த்தாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அரசாங்கத்தின் சார்பில் நியமிக்கப்பட்ட ஒரு தனி அதிகாரி அவற்றைப் பரிசோதனை செய்ததாக எனக்குத் தகவல் கிடைத்திருக்கிறது.

திரு. லால்சந்த் நாவல்ராய்: மாண்புமிகு உறுப்பினர் ஏற்கெனவே பார்த்த கணக்குகளிலிருந்து இந்தப் பணம் திரு. ராயால் தனது சொந்த நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்று தெரியவந்துள்ளதா அல்லது இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நீங்கள் கூறுவர் சரியல்ல.

திரு. லால்சந்த் நாவல்ராய்: அப்படியானால் எதுதான் சரியானது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தப் பணம் எந்த நோக்கத்திற்காக வழங்கப்பட்டதோ அந்த நோக்கத்திற்காகவே செலவிடப்பட்டுள்ளது.

*திரு. பத்ரி தத் பாண்டே:* இந்தப் பணம் யாரிடம் வழங்கப் பட்டது, திரு. ராயிடமா, திரு. ஜம்னாதாஸ் மேத்தாவிடமா அல்லது சம்மேளனத்தின் செயலாளரிடமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* சம்மேளனத்தின் செயலாளர்தான் அதைப் பெற்றுக் கொண்டிருக்கிறார்.

*திரு. ஜம்னாதாஸ் எம். மேத்தா:* அரசாங்கத்திடமிருந்து சம்மேளனம் பணம் எதுவும் பெற்றுக் கொள்ளவில்லை. சம்மேள னத்தின் பெயர் நிர்வாகக் குழுவுக்கோ அல்லது அதன் தலைவருக்கோ தெரியாமல் திருட்டுத்தனமாகப் பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக் கிறது. அரசாங்கம் ஏமாற்றப்பட்டிருக்கிறது. சம்மேளனத்திற்குத் தெரியாமல் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதுபற்றி எனக்குத் தகவல் ஏதும் இல்லை.

*திரு. ஜம்னாதாஸ் எம். மேத்தா:* அரசாங்கம் ஏமாற்றப்பட் டிருக்கிறது.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* அரசாங்கம் ஏமாற்றப்பட்டிருக் கிறது என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் குற்றம் சாட்டியுள்ள நிலைமையில் அரசாங்கம் இதன் மீது ஏதேனும் நடவடிக்கை எடுக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தான் ஏமாற்றப் பட்டிருப்பதாக அரசாங்கம் கருதவில்லை.

# 254

## *நிலத்தடிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்வதற்குள்ள தடையை மீண்டும் விதித்தல்

48. *திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) சுரங்கங்களுக்குள் பெண்கள் வேலை செய்வதைத் தொடர்ந்து அனுமதிக்கும் விஷயம் மறுபரிசீலனை செய்யப் பட்டதா?

(ஆ) தற்போது நிலத்தடியில் எத்தனைப் பெண்கள் வேலை செய்து வருகிறார்கள்?

(இ) நிலத்தடியில் வேலை செய்யும் பெண்கள் முறையாக உடை உடுத்த முடியாத தற்போதைய சூழ்நிலையில், இவ்வாறு பெண்கள் நிலத்தடியில் வேலை செய்யும் நடைமுறையை முற்றிலுமாக ஒழித்துக் கட்டுவது உசிதமானது என்பதை அவர் பரிசீலிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்களை வேலைக்கமர்த்துவதற்கு மீண்டும் தடைவிதிப்பது பற்றியே மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப் பிடுகிறார் என்று நினைக்கிறேன். இந்த விஷயம் மறுபரிசீலனை செய்யப்பட்டுள்ளது.

(ஆ) இந்த எண்ணிக்கை பெரிதும் வேறுபடுகிறது. தற்போது நிலக்கரிச் சுரங்கங்களில் 15,000 முதல் 16,000 பெண்கள் நிலத்தடியில் பணிக்கமர்த்தப்பட்டுள்ளனர்.

(இ) இந்தத் தடை ஒரு தற்காலிக நடவடிக்கையாகவே விலக்கிக் கொள்ளப்பட்டிருக்கிறது. சூழ்நிலைமைகள் மாறியதும் மீண்டும் தடை விதிக்கப்படும்.

மற்றொரு விஷயத்தையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நிலக்கரிச் சுரங்கங்களில் மேற்பரப்போ அல்லது நிலத்தடியிலோ வேலை செய்யும் எல்லாப் பெண்களுக்கும் பல்வேறு சுரங்க அமைப்புகளின் ஏற்பாட்டின்படி வருடத்துக்கு இரண்டு புடவை கள் குறைந்த விலையில் வழங்கப்படுகின்றன; சில சுரங்கங்களில் இந்தப் புடவைகள் இலவசமாகவும் வேறு சில சுரங்கங்களில் பாதி விலைக்கும் தரப்படுகின்றன.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** அவர்கள் உடுத்திக் கொள்வதற்கு புடவைகள் அளிக்கப்படுகின்றனவா என்ப

தல்ல இங்குள்ள பிரச்சினை. சுரங்கங்களில் வேலை செய்யும்போது அவர்கள் புடவைகள் உடுத்துவது சாத்தியமல்ல. எனவே, அவர் களுக்குப் புடவைகளை இலவசமாக வழங்கப்படுவதோ அல்லது சலுகை விலையில் அளிப்பதோ இங்கு அறவே சம்பந்தப்படாத விஷயம். சுரங்கங்களில் வேலை செய்யும்போது அவர்கள் புடவை களை உடுத்திக் கொள்ள முடியாது என்று அறிகிறேன்; ஏனென்றால் அவ்வாறு செய்வது மிகவும் கடினமாக இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், மிகவும் கடினமானதுதான்.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** இப்போது மீண்டும் தடைவிதிக்கப்படும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உரிய சந்தர்ப்ப சூழ்நிலைமையில் அனுமதிக்கும்போது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** எவற்றை உரிய சந்தர்ப்ப சூழ்நிலைகள் என்று நீங்கள் கூறுகிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவை என் கட்டுப்பாட்டில் இல்லை என்பதோடு, அத்தகைய உரிய சந்தர்ப்ப சூழ்நிலைமைகள் எப்போது உருவாகும் என்பதையும் என்னால் முன்கூட்டியே கூற இயலாது.



**ரயில்வே நிர்வாகத்துக்கும் அதன் ஊழியர்களுக்கும் இடையேயான தகராறுகளைத் தீர்ப்பதற்கு தொழிற்சங்கத் தகராறுகள் சட்டப் படி சமரச குழுமங்களை அமைக்கும்படியோ அல்லது இந்தியப் பாதுகாப்புச் சட்டம் 81-ஏயின்படி நடுவர் தீர்ப்புக்கு விடும்படியோ வந்துள்ள வேண்டுகோளின் விவரம்**

| வ. எண் | வருடம் | யாரிடமிருந்து வேண்டுகோள் | வேண்டுகேளின் தன்மை | எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | 1939 | கிழக்கிந்திய ரயில்வேயைச் சேர்ந்த சில பயணச் சீட்டுப் பரிசோதகர்கள். | மேதகு வைஸ்ராய் அவர்களுக்கு அனுப்பப்பட்ட விண்ணப்பத்தை தடுத்து நிறுத்திய செயலை பரிசீலிக்க தொழில் தகராறு சட்டத்தின் விதி 3ன் கீழ் விசாரணை மன்றம் நியமிக்க வேண்டும். | நிராகரிக்கப்பட்டது (இந்தச் சட்டத்தின் படி இந்த விஷயம் தொழில் தகராறு இல்லையாதலால் இந்தச்சட்டம் செயல் படாது). |
| 2. | 1940 | ஜி.ஐ.பி. ரயில்வேயின் ஊழியர்கள். | யுத்தகால அகவிலைப்படி அளிக்கும் பிரச்சினையை ஆய்வுசெய்ய தொழில் தகராறு சட்டத்தின் விதி 3ன் கீழ் விசாரணை மன்றம் நியமிக்க வேண்டும். | ஏற்றுக்கொள்ளப் பட்டது. |

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 3. | 1943 | அகில இந்திய ரயில்வே ஊழியர்களின் சம்மேளனம், மைலாப்பூர், சென்னை. | ரயில்வேயில் அகவிலைப்படி சம்பந்தமாக இந்திய பாதுகாப்புச் சட்டத்தின் 81 அ விதியின் கீழ் ஒரு நடுவரை நியமிக்க வேண்டும். | மறுக்கப்பட்டது. |
| 4. | 1943 | ஜி.ஐ.பி. ரயில்வே ஊழியர்களின் யூனியன், பம்பாய் | ,, ,, | ,, |
| 5. | 1944 | வடமேற்கு ரயில்வே ஊழியர்களின் யூனியன். கராச்சி | ,, ,, | ,, |
| 6. | 1944 | ஜி.ஐ.பி. ரயில்வே ஊழியர்களின் யூனியன் | ,, ,, | ,, |
| 7. | 1944 | பி.பி.அண்ட் சி.ஐ. ரயில்வே ஊழியர்களின் யூனியன், பம்பாய். | ,, ,, | அரசின் பரிசீலனையில் உள்ளது. |

□□□

